# சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

**அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு**


ஆய்வாளர்

**சா.மங்களேஸ்வரி**

(பதிவு எண்: 0388)

நெறியாளர்

**முனைவர் சு.இராசாராம்**






**தமிழ்த்துறை**

**அழகப்பா பல்கலைக்கழகம்**

**(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் A+ தகுதி மற்றும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)**

**காரைக்குடி - 3**

தமிழ்நாடு

இந்தியா


செப்டம்பர் 2018

**முனைவர் சு.இராசாராம்**

பேராசிரியர்,

தமிழ்த்துறை,

அழகப்பா பல்கலைக்கழகம்,

காரைக்குடி - 3

நாள் :

## நெறியாளர் சான்றிதழ்

**"சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை "** என்னும் தலைப்பில் சா.மங்களேஸ்வரி அவர்கள் முழுநேர முனைவர் பட்டத்திற்காகச் செய்த இந்த ஆய்வு, அவர் அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப் பெற்றது என்றும் இந்த ஆய்விற்காக இதற்கு முன்வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

**(சு.இராசாராம்)**

நெறியாளர்

**சா.மங்களேஸ்வரி,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி - 3

நாள் :

**ஆய்வாளர் உறுதிமொழி**

**"சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை"** என்னும் தலைப்பில் அழகப்பா பல்கலைக்கழகத்தில் எழுதப்பெற்ற இவ்வாய்வேடு எனது சொந்த முயற்சியால் உருவானதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கின்றேன்.

**(சா.மங்களேஸ்வரி)**
ஆய்வாளர்

உறுதிக் கையொப்பம்

**முனைவர் சு.இராசாராம்**
பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 3

## நன்றியுரை

**"சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை"** என்னும் தலைப்பில் முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்கு ஆய்வு செய்ய வாய்ப்பாக அமைந்த அழகப்பா பல்கலைக் கழகத்திற்கும் வள்ளல் அழகப்பருக்கும், இவ்வாய்விற்கு அனுமதி அளித்த, துறைத்தலைவர் **முனைவர் மு.பாண்டி**அவர்களுக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

என் ஆய்வுக்கு வழிகாட்டியாக இருந்து, இவ்வாய்வேடு சிறப்பாக அமையத் துணை புரிந்து ஆய்வு நெறிகளை வழிப்படுத்தி உதவிய எனது ஆய்வு நெறியாளர்**முனைவர் சு.இராசாராம்** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வுத் தொடர்பாக எனக்குப் பல நூல்களையும் தந்து சிறப்பான வழிமுறைகளைக் காட்டிய அனைத்துப் பேராசிரியர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இந்த ஆய்விற்குத் தேவையான நூல்களை வழங்கிய நம் பல்கலைக்கழக நூலகத்திற்கும் என் நன்றி.

இவ்வாய்வு காலங்களில் எனக்கு உறுதுணையாக நின்ற எனது பாசமிகு பெற்றோர் கா.சாத்தையா - சா.சுந்தரவள்ளி மற்றும்எனது சகோதர சகோதரிகளாகிய சா.செல்வக்குமார் -முருக ஜோதி,கா.நவின் குமார் - செல்வி,கா.புகழேந்திரன் சா.இராஜேஸ்வரி -முத்துவேல்,சா.பரமேஸ்வரி-கமலஹாசன் ஆகியோருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்விற்குப் பல்வேறு வகையில் உதவி புரிந்த சகோதரர்கள் மணி, தமிழரசன்,ஆறு.செல்வமணி மற்றும்சகோதரி அ.ஆனந்திஆகியோருக்கும்,என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகநா | - | அகநானூறு |
| இலக்.விளக் | - | இலக்கண விளக்கம் |
| இறையகப் | - | இறையனார் அகப்பொருள் |
| ஐங்குறு | - | ஐங்குறுநூறு |
| கலித் | - | கலித்தொகை |
| குறிஞ்சிப்பா | - | குறிஞ்சிப்பாட்டு |
| சிலம்பு | - | சிலப்பதிகாரம் |
| தொல் | - | தொல்காப்பியம் |
| நம்பியகப் | - | நம்பியகப் பொருள் விளக்கம் |
| நற் | - | நற்றிணை |
| நெடுநல்.வா | - | நெடுநெல்வாடை |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பட்டினப் | - | பட்டினப்பாலை |
| பத்துப்பா | - | பத்துப்பாட்டு |
| மாறனகப் | - | மாறனகப்பொருள் விளக்கம் |
| முல்லைப் | - | முல்லைப்பாட்டு |
| மேலது | - | மேலே குறிப்பிடப்பட்டது |

# பொருளடக்கம்

## முன்னுரை

சங்க அக இலக்கியங்கள் கூற்றுவாயிலாக மொழியப்படுகின்றன. இதில் தலைவன், தலைவி, தோழி போன்ற மாந்தர்கள் அவ்வச் சூழல்களுக்கு ஏற்ப கூற்று நிகழ்த்துகின்றனர். அவ்வாறு அக மாந்தர்கள் நிகழ்த்தும் தனித்தனிக் கூற்றுகளைத் தொகுத்து ஒரு வரைமுறைக்கு உட்படுத்தும்போது அம்மாந்தர்கள் வாழ்வின் முழுநிகழ்வையும் அறிந்துகொள்ள முடிகின்றது. முழுநிகழ்வுக்குள் அடங்கும் ஒவ்வொரு தனித்தனிச் சிறுசிறு நிகழ்வுகளைத் துறையென மொழிவர். ஒரு தனி சிறு நிகழ்விலும் ஒன்றிற்கு மேற்பட்ட அகமாந்தர்களின் உணர்வுகள் பொதிந்திருக்கும். அவ்வகையில் அம்மாந்தர்களின் கூற்றுகளைத் துறைகளாக வகைப்படுத்தி, அத்துறைகளின் அடிப்படையில் பாடற்பொருண்மையை ஆய்வது இன்றியமையாததாகும்.

### ஆய்வுத் தலைப்பு

**‘சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை’** என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

### ஆய்வுக் கருதுகோள்

சங்க அக இலக்கியங்கள் வெவ்வேறு சூழல்கள் குறித்து, வெவ்வேறு காலகட்டங்களில் பல புலவர்களால் பாடப்பட்டிருக்கின்றன. எனினும் ஒட்டுமொத்தமாக நோக்கின் ஒரு முழுமையான சமூக வாழ்வியலின் சூழல்கள் மொழியப்பட்டிருக்கின்றன. இவ்வாழ்வியல் சூழல்களின் சிறுசிறு நிகழ்வுகளையும் துறைக்குறிப்புகள்வழி அறியமுடியும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வு நோக்கம்

சங்க அகப்பாடல்கள் அனைத்தும் ஏதேனும் ஒரு சூழலை மையமிட்டு எழுந்தவையாகும். இப்பாடல்களில் இடம்பெற்றுள்ள தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் முதலிய அகமாந்தர் கூற்றுகளை நிகழ்வுகளின் அடிப்படையில் நிரல்படுத்தின், அம்மாந்தர்தம் படைப்பாக்க நிலையை அறிந்துகொள்ள முடியும். மேலும் மாந்தர்கள் கூற்று நிகழ்த்தும் சூழல்களையும், அதற்கான காரணங்களையும், எந்தெந்த மாந்தர்கள் எந்தெந்தச் சூழல்களில் எவ்வாறெல்லாம்

கூற்று நிகழ்த்துவார்கள் என்பதையும், யார் யார் கூற்றுகளில் எந்தெந்தச் சூழல்கள் மிகுதியாக உள்ளன என்பதையும், அதற்குரிய காரணத்தையும் ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு முன்னோடிகள்**

வ.சுப.மாணிக்கத்தின் ‘தமிழ்க் காதல்’, ந.சுப்புரெட்டியாரின் ‘அகத்திணைக் கொள்கைகள்’, ந.செயராமனின் ‘முல்லைப் பாடல்கள்’, தமிழண்ணலின் ‘சங்க மரபு’, ஆ.இராமகிருட்டினின் ‘அகத்திணைமாந்தர் ஓர் ஆய்வு’, சரளா ராசகோபாலனின் ‘சங்க இலக்கியத்தில் தோழி’, இராம.சண்முகத்தின் ‘வரைவு கடாவலும் அறத்தொடுநிற்றலும்’, செ.சாரதாம்பாளின் ‘சங்கச் செவ்வியல்’, சு.இராசாராமின்,‘அகமாந்தர்களில் கண்டோர்’ முதலிய சங்க அக இலக்கியத் திறனாய்வு நூல்கள் இவ்வாய்வின் முன்னோடிகளாக அமைகின்றன.

**ஆய்வு எல்லை**

சங்க அக இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் கலித்தொகை நீங்கலாக நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களும், அகப்புற நூலான பரிபாடலில் வையை பாடல்களும், பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய நான்கு நெடும்பாடல்களும் இவ்வாய்வின் எல்லையாகும். கலித்தொகையின் பின்னாலில் பாடல்களுக்கு தொல்காப்பிய நூற்பாவினையே நெடுந்துறைக்குறிப்புகளாகச் சுட்டி துறைக்குறிப்பு எழுதபட்டிருப்பதாலும் அது பிற தொகை நூல்களின் துணைக்குறிப்புகளிலிருந்து முற்றிலும் வேறுபடுவதாலும் கலித்தொகை ஆய்வுக்கு உட்படுத்தப்படவில்லை.

**ஆய்வு மூலங்கள்**

நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, பரிபாடலில் வையை பாடல்கள், முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய நூல்கள் ஆய்வு மூலங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**சான்றாதாரங்கள்**

சங்க அக இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் கலித்தொகை நீங்கலாக நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு ஆகிய நான்கு நூல்களும்,

அகப்புற நூலான பரிபாடலில் வையை பாடல்களும், பத்துப்பாட்டில் முல்லைப்பாட்டு, குறிஞ்சிப்பாட்டு, நெடுநல்வாடை, பட்டினப்பாலை ஆகிய நான்கு நெடும்பாடல்களும் இவ்வாய்வுக்கு முதன்மைச் சான்றாதாரங்களாக அமைகின்றன. சங்க இலக்கியங்கள் குறித்த திறனாய்வு நூல்களும், கட்டுரைகளும், ஆய்வேடுகளும், அகராதிகளும், அக இலக்கண நூல்களும் துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன.

**ஆய்வு அணுகுமுறை**

இவ்வாய்வில் அகப்பாடல்களில் அமையும் ‘துறை’ என்னும் உறுப்பைப் பகுத்தும், தொகுத்தும், வகைப்படுத்தியும் ஆய்வதில் பகுப்பாய்வு அணுகுமுறையும், துறைகளையும் அகமாந்தர்களின் வாழ்வியலமைந்த சிறுசிறு நிகழ்வுகளையும் விளக்கும் நிலையில் விளக்கவியல் அணுகுமுறையும், அகமாந்தர்களின் வாழ்வியல் ஒழுங்கமைதிகளைக் காணும் நிலையில் அழகியல் அணுகுமுறையும், அகமாந்தர்களின் அகவுணர்வுகளையும் அவற்றின் உள்ளார்ந்த நோக்கங்களையும் உற்று நோக்குமிடத்து உளவியல் அணுகுமுறையும், அகமாந்தர்களின் சமூக வாழ்வியல் வாழிடங்களை அறிய முற்பட்டவிடத்து சமுதாயவியல் அணுகுமுறையும், ஆய்வின் பொருண்மைக்காக உரையாசிரியர்களின் உரைகளை ஒப்பு நோக்கியவிடத்து ஒப்பீட்டு அணுகுமுறையும் ஆய்வு அணுகுமுறைகளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வுப்பகுப்பு**

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக,

1. சங்க அகஇலக்கியத் துறைக்குறிப்புகள் வகைப்பாடு
2. தலைவன் கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை
3. தலைவி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை
4. தோழி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

என நான்கு இயல்களாகப் பகுக்கப்பெற்றுள்ளன.

**இயல் விளக்கங்கள்**

**‘சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புகள்வகைப்பாடு’** என்பது முதலாமியலாகும். இவ்வியலில் ‘துறை’ என்னும் கலைச்சொல் குறித்து இலக்கணங்கள் மொழியும் கருத்துக்களும், உரையாசிரியர்கள், திறனாய்வாளர்கள்

விளம்பும் விளக்கங்களும் வரையறைகளும் எடுத்துரைக்கப்பெற்றுள்ளன. அதன்வழி வாழ்வியலில் நிகழும் நிகழ்வுகளில் அமைந்த சிறுசிறு நிகழ்ச்சிகளைத் ‘துறை’ என்பரென்பதும், அவை வாழ்வியல் நிகழ்வியலின் அடிப்படையில் ஒவ்வொரு நிகழ்வாகவும், அகமாந்தர்களின் கூற்றுகளின்வழி கூற்றுகளாகவும் உணர்வுகள் வெளிப்படும்விதமாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**‘தலைவன் கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை’** என்பது இரண்டாமியலாகும். இவ்வியலில் தலைவன் கூற்றுப்பாடல்களில் அமைந்த இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், மதியுடன்பாடு, பின்னிற்றல், தோழியிற் கூட்டப் புணர்ச்சியில் மகிழ்தல், சேட்படுத்துதல், மடல், இருவகைக்குறி (பகல், இரவு), அல்லகுறி, இற்செறிப்பு, வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு, உடன்போக்கு, வரைவு, மலிவு, ஊடல், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயிற்புகுதல், செலவழுங்கல், பிரிவு என்ற 22 முதன்மை துறைகளும், அவற்றின் வழிநிலைத் துறைகளும், உட்துறைகளும், சிற்சில இடங்களில் வருவித்துக் கொள்ளப்பட்ட துறைகளும் ஆராயப்பெற்றுள்ளன.

**‘தலைவி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை’** என்பது மூன்றாம் இயலாகும். இவ்வியலில் பின்னிற்றல், சேட்படுத்துதல், இருவகைக்குறி(பகல், இரவு), அல்லகுறி, இற்செறிப்பு, சிறைப்புறம், ஒருவழித்தணத்தல், வரைவுநீடல், அலர், நொதுமலர் வரைவு, வெறியாடல், வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு, அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவு, மலிவு, ஊடல், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயிற்புகுதல், பிரிவு, தூது போன்ற 23 முதன்மைத் துறைகளும், அவற்றின் வழிநிலைத் துறைகளும், உட்துறைகளும், பாடலின் பொருண்மைக்கேற்ப புதிதாக வருவித்துக் கொள்ளபட்ட துறைகளும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

**‘தோழி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை**’ என்பது நான்காம் இயலாகும். இவ்வியலில் மதியுடன்பாடு, தோழியிற் கூட்டம் வேண்டல், கையுறை, பின்னிற்றல், களவு அறிதல், சேட்படுத்துதல், இருவகைக்குறி(பகல், இரவு), அல்லகுறி, இற்செறிப்பு, சிறைப்புறம், ஒருவழித்தணத்தல், வரைவுநீடல், அலர், நொதுமலர் வரைவு, வெறியாடல், வரைவுகடாதல், வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு, அறத்தொடு நிற்றல், உடன்போக்கு, வரைவு, மலிவு, ஊடல், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயில்

நோ்வித்தல்,வாயிற்புகுதல், செலவழுங்குவித்தல், பிரிவு போன்ற 29 முதன்மைத் துறைகளும், அவற்றின் வழிநிலைத் துறைகளும், உட்துறைகளும், பாடலின் பொருண்மைக்கேற்ப புதிதாக வருவித்துக் கொள்ளபட்ட துறைகளும் ஆய்வுக்கு உட்படுத்தபட்டுள்ளன.

ஒவ்வொரு இயலின் முடிவிலும் அந்தந்த இயலில் கண்டறிந்தவை தொகுப்புரையாகத் தரப்பட்டுள்ளன. ஆய்வில் கண்டமுடிவுகள் தொகுக்கப்பெற்று அவை முடிவுரையாக இடம்பெற்றுள்ளன. இறுதியாக ஆய்விற்குத் துணைநின்ற நூல்களின் பட்டியல் இடம்பெற்றுள்ளது. துறைகள் அடிப்படையில் பாக்கள் பற்றிய விவரங்கள் பின்னிணைப்பாக அமைக்கப்பட்டுள்ளன.

## இயல் - 1

## சங்கஅக இலக்கியத் துறைக்குறிப்புகள் வகைப்பாடு

சங்க அக இலக்கியங்கள் அக்கால மக்களின் அகவாழ்வினைப் புலப்படுத்துகின்றன. அகவாழ்வானது பல்வேறு சிறு நிகழ்வுகளைக் கொண்டது. அந்நிகழ்வுகள் நிகழும் சூழலுக்கேற்ப அங்கு உரையாடல்கள் அல்லது கூற்றுகள் நடைபெறும். இக்கூற்றுகள் நிறைந்த பாடல்களில் கூறுவோரின் எண்ணங்கள், உணர்வுகள், எதிர்பார்ப்புகள் போன்றவை வெளிப்பட்டும், எச்சூழல் என்பது புலப்படாமல் இருக்கும். அந்நிலையில் பாடலின் பொருண்மையை விளக்கும்விதமாக துறைக்குறிப்புகள் அமைந்து, பாடலின் சூழலையும், பொருண்மையையும் எளிதில் தெளிவாக்குகின்றன. சில பாடல்களின் பொருண்மையில் ஒன்றிற்கு மேற்பட்ட சூழல்கள் அமையும். இச்சூழல்களுக்கேற்ற துறைக்குறிப்புகளும் குறிப்பிடப்பட்டிருக்கும். அவ்வகையில் சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புகளை அவற்றின் சூழல், பாடலின் பொருண்மை கொண்டு வகைப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாக அமைகின்றது.

**இலக்கணங்களில் துறை**

பண்டைய மக்களின் வாழ்வியல் கூறுகளை எடுத்துரைப்பதில் சங்க இலக்கியங்கள் மட்டுமல்லாமல் அதற்கு முற்பட்ட இலக்கண நூல்களும் பெரும்பங்கு வகிக்கின்றன. இவ்வாழ்வியல் கூறுகள் சூழல்களால் ஆனவை. இச்சூழல்களைத் ‘துறை’யாகச் சுட்டுவது மரபு. தொல்காப்பியர் செய்யுளியலில் துறை என்பதற்கு,

*“அவ்வவ மாக்களும் விலங்கும் அன்றிப்*
*பிறவவண் வரினுந் திறவதின் நாடித்*
*தத்தம் இயலான் மரபொடு முடியின்*
*அத்திறந் தானே துறையெனப் படுமே”*[1]

என ‘முதல், கருப்பொருட்களின்வழி உரிப்பொருளை நுதல்வது துறை’ என்பர். இவ்வாறே பிற இலக்கண நூல்கள்,

*“சொல்லிய அல்ல ஒன்றினும், அவற்றொடு*
*ஒல்லும் வகைதேர்ந்து உணர்ந்து இயல்வழாமல்*
*உரைப்போர் கேட்போர் உண்மை இன்றி,*

*உரைக்கும் கருவியே உரைப்பது துறையே''*[2]

என்று 'புலவர்கள் தான் உரைக்க நினைத்ததை முறைப்பட ஏற்புடையதாய் இயம்புவது துறை' எனவும்,

*''இருட்டற வுரைப்போர் கேட்போ ரின்றி*

*பொருட் டொடர் நிலைபெற புலவன் குறிப்பிற்*

*சொல்லுவ தாகும் துறைவகை தானே''* [3]

எனச் 'செய்யுளின் பொருண்மைத் தொடர்புடையத்தாய்ப் புலவன் உரைப்பது துறை' எனவும்,

*''.......... ......... பொருட்கூறு பாடாற்*

*துறைஐந்து நிலத்தினுக்கும் உரியகருப் பொருளும்*

*தன்னதன்றிப் பிறழாமல் பொருட்டுறுத்த வாகுஞ்''*[4]

என 'அவ்வவ் நிலத்துக்குரிய கருப்பொருட்களைக் கொண்டு, பொருட்கூறு பிறழாமல் விளம்புவது துறை' யெனவும்

*''இன்ப வெள்ளத்து இசைவுறும் ஒவ்வோர்*

*நிகழ்ச்சியும் துறைகள் ஆம்எனல் நெறியே''*[5]

என்று 'புலவன் கூறும் ஒவ்வோர் இன்ப நிகழ்ச்சியும் துறை'கள் எனவும் இயம்புகின்றன.

**இலக்கண உரையாசிரியர்கள்வழி துறை**

உரையாசிரியர்கள் இல்லையெனில் பண்டை இலக்கண நூற்பாக்களின் பொருட் புலப்படாதிருக்கும். சில நூற்பாக்களின் பொருளை மாறுபட உணர நேர்ந்திருக்கும். 'துறை'யை வரையறுக்கும் நூற்பாவிற்கும் அந்நிலையே. தொல்காப்பியம் கூறும் 'துறை' என்பதற்கு உரைகூறும் உரையாசிரியர்கள் உரை கூறுவதில் வேறுபடுகின்றனர். எனினும் தெளிவுபடுத்துகின்றனர். உரையாசிரியர் என்றழைக்கப்படும் இளம்பூரணர் ''*அகப்பொருளாகிய ஏழு பெருந்திணைக்கும், புறப்பொருளாகிய ஏழு பெருந்திணைக்குமுரிய மாந்தரும், பரந்துபட்ட மாவும், புள்ளும், உம்மையால் மர முதலாயினவும், பிறவவண் வரினும் என்றதனால் நிலம், நீர், தீ, வளி முதலாயினவும் செய்யுட்கண் வருமிடத்துத் திறம்பாடுடைத்தாய் ஆராய்ந்து தத்தமக்கேற்ப பண்போடும், பொருந்திய மரபோடும் முடியின், அவ்வாறு*

*திறம்பாடுடைத்தாய் வருவது துறையென்று கூறப்படும் என்றவாறு''*[6] எனப் பொருளுரைப்பர். பின்னை வந்த நச்சினார்க்கினியர் *''ஐவகை நிலத்திற்கு முரியவெனப்படும் பல்வேறுவகைப்பட்ட மாக்களும், மாவும், புள்ளும் ஓதிவந்தவாறன்றி, பிறவற்றை திறவதாக ஆராய்ந்து செய்யுட்கண்ணே புலவர் படைத்துச் செய்யினும் ஒக்கும்.''*[7]என்றுரைப்பர். இவ்விருவரின் கூற்றுக்களை நோக்குமிடத்து, புலவர்கள் முதற்-கருப்பொருட்களைப் பயன்படுத்திச் செய்யுள் யாக்க உதவுவதைத் துறையெனக் கொண்டுள்ளனர் என்பது அறியமுடிகிறது.

மற்றுமொரு உரையாசிரியரான பேராசிரியர் *''துறைவகையென்பது முதலும் கருவும் முறைபிறழ வந்தாலும், இ∴து அதன்பாற்படுமென்று ஒரு துறைப்படுத்தற்கு ஏதுவாகியதோர் கருவி. அச்செய்யுட்குளதாகச் செய்தல், அவையும் பலவாதலின் 'வகை' என்றாரென்பது''*[8] எனவும், அதன்பின் வந்த க.வெள்ளைவாரணன் *''முதலும் கருவும் முறைபிறழ வந்தாலும், இ∴து இதன்பாற்படும் என்று ஒரு துறைப்பட வகுத்தற்கு ஏதுவாகியதோர் கருவி அச்செய்யுட்கு உளதாக அமைத்தல் துறை எனப்படும்.''*[9] எனவும், கு.சுந்தரமூர்த்தி *''துறைவகை யென்றது முதலும் கருவும் முறைபிறழ்ந்தாலும் இ∴து இதன்பாற்படுமென்று ஒருதுறைப்படுத்தற் கேதுவாயதோர் கருவியுளதாகச் செய்தலை''*[10] எனவும் பொருளுரைப்பர். அ∴தாவது,'செய்யுளின்கண் பொருள் இதுவெனவும், இப்பொருள் இதன்பாற்படுமென மொழிய பயன்படும் கருவி'எனத் தெளிவுபடுத்துகின்றனர்.

**அகராதிகள் சுட்டும் துறை**

பொருள் புரியாச் சொற்களுக்கும், புரிந்த பொருட்கு அரண் சேர்ப்பதற்கும் துணை நிற்பது அகராதி. இவ்வகராதிகள், சொற்களின் பொருளைச் சுருக்கமாகவும், தேவைப்படின் விரிவாகவும் தெள்ளிதின் புலப்படுத்தும் தன்மை கொண்டன. அவ்வகையில் துறை என்னும் சொல்லுக்கு அகராதிகள் சுட்டும் பொருண்மைகளாக,*''மக்களும் மாவுமின்றிப் பிற தோன்றினவாயினும் அவற்றை முன் சொல்லியவற்றோடு பொருந்தும்வண்ணம் ஆராய்ந்து இலக்கணம் வழுவாதபடி தன்னையன்றி உரைப்போருங் கேட்போருமுண்டாதலன்றிக் கவியால் கூறப்பெறுவது ஆகும்''*[11] எனத் தொல்காப்பியத்தை அடியொற்றி அ.சிங்காரவேலு முதலியாரும்,*''அகப்பொருள் புறப்பொருள் துறைகளைக் குறித்து வரும் செய்யுள், தாம் சொல்ல விரும்பும் கருத்தை நேரிடையாகக் கூறாமல், அகப்பொருள் புறப்பொருள் செய்திகள் அமைந்த பாடல்களாக இயற்றி அவற்றின் வாயிலாகத்*

*தாம் தருவதைக் கவிஞர்கள் பெறப்பட வைக்கும் வகையில் அமையும் பாடல்கள்''*[12]எனச் சங்கச் செய்யுள் இயற்றிய புலவர்களின் கருத்துக்களே 'துறை'யெனத் தி.வே.கோபாலையரும் கூறியுள்ளனர்.

ரா.பி.சேதுபிள்ளையும், மாருதிதாசனும் ''*'துறை' என்பதற்கு  ீடயஉந - இடம்,றுயல - நெறி,ளுநஉவழைெ - பகுதி,ளுநய ிழசவ - கடற்றுறை, ளுநய - கடல்,புாயவ -நீர்த்துறை Branch of knowledge - fiy Theme in akam and Puram - அகமும் புறமும் பற்றிய தமிழ்ப் பொருட்கூறு>Proper arrangement - xOq;F>Kind of Verse - பாவகை''*[13] எனத் தம் அகராதிகளில் குறிப்பிட்டுள்ளனர். ''*வழி, நீர் நிலையில் இறங்கு துறை, இடம், பகுதி, அகப்பொருள், புறப்பொருட் கூறுபாடுகள், வரலாறு, ஒழுங்கு, உபாயம்''*[14] என ஐயன்பெருமாள் கோனாரும்,''*ஆறு, இடம், நெருங்குதல், எல்லை, கலித்துறை, காரியம், தங்குமிடம், நீர்த்துறை, நூல், பாவினத்தொன்று, வழி, அகப்பொருள் புறப்பொருட்டுறை மரபு''*[15]எனச் சங்கரலிங்க முதலியாரும் குறிப்பிடுகின்றனர். இவ்வகராதிகளில் 'அகமும் புறமும் பற்றியவை' எனத்தரும் விளக்கம் சங்க செய்யுட்களில் பயின்றுவரும் துறை பற்றியதாகும்.

பா.ரா.சுப்பிரமணியன்,''*வகைப்படுத்தப்பட்ட பகுப்பு அல்லது பிரிவு''*[16] எனச் செறிவு மிகுந்த எச்சூழலுக்கும் பொருந்துமாறு குறிப்பிட்டுள்ளதை நோக்கின், சங்கச் செய்யுளுள் குறிப்பிடும் துறையெனக் கூறுவதும் சாலப்பொருந்தும். நா.கதிரைவேற் பிள்ளை,எஸ்.கௌமாரீஸ்வரி, பி.இராமநாதன் போன்றோர். ''*ஆறு, இடம், இறங்கு துறை, எல்லை, கலித்துறை, காரியம், தங்குமிடம், நீர்த்துறை, நூல், பாவினத்தொன்று, வழி''*[17] எனக் கூறுகின்றனர். ''*முறைமை, சான்றோரின் சொல்வழக்குமுறை, பழமை, வம்சம், பாரம்பரியம், இயல்பு, இலக்கணம், நல்லொழுக்கம், பெருமை, மேம்பாடு, நியாயம், வழிபாடு, பருவம் எனப் பதின்மூன்று பொருள்களைத் தருகின்றது.''*[18] எனவும் பொருள் சுட்டுகின்றன. இந்நான்கும் 'துறை' பற்றிய பொதுவான பொருண்மைகளைச் சுட்டுகின்றன.

**திறனாய்வாளர்கள்வழி துறை**

தொல்காப்பியர் கூறும் துறையிலக்கணத்திலிருந்து தற்போதுள்ள துறை இலக்கணம் வேறுபாடுடையதாக அமைகின்றது. அதாவது தொல்காப்பியர், முதற்கருப்பொருட்கள் செய்யுட்களில் பயன்படுமாற்றைக் குறிப்பிடுகிறார். ஆனால்,பின்னால் வந்த திறனாய்வாளர்கள். ''*பொருள் நிகழ்ச்சியால் இச்செய்யுளின்*

*உரிப்பொருள் இதுவே எனத் தெளியும்வண்ணம் மரபு பிறழாமல் அமைப்பது துறை என்னும் உறுப்பாம்''*[19] என பாலசுந்தரமும்,*''எதுவரினும் அதன் மரபுடனே முடிவது துறை. பண்பொடும் முடிவது துறை. இதனுள் முதல் கருவும் அடங்கும். பொருளில் உரிப்பொருளே பொருந்தும்.''*[20] என மு.இராமலிங்கனாரும்,*''இத்திணைக்கு இது பொருளென்று ஆசிரியன் ஓதிய பொருளன்றி அவற்றுக்கெல்லாம் பொதுவாகப் புலவனாற் செய்யப்படுவது.''*[21] எனக் கு.பகவதியும் பலவாறு பொருளுரைக்குமிடத்து,'உரிப்பொருளைத் தெளிவுபடுத்துவதுவே துறை. இது கூற்றுகளின் ஒருமுகப்படுத்தப்பட்ட தன்மையைக் குறித்து நிற்கிறது' எனப் பதிவுசெய்கின்றனர்.

இலக்கண ஆசிரியர்கள் நுதலிய துறையிலக்கணத்தையும், அதற்கு உரை வரைந்த உரையாசிரியர்களின் உரைபொருளையும் நுணுகித் திறனறிந்து எளிமையாகக் கூறியுள்ளனர் திறனாய்வாளர்கள். இத்திறனாய்வாளர்களின் கூற்றுக்கள் சிற்சில இடங்களில் வேறுபட்டாலும், தெளிவுபடுத்தும் தன்மை கொண்டனவாக அமைகின்றன. இந்நிலை கொண்டனவாக க.கைலாசபதி, தமிழண்ணல் ஆகியோரின் கூற்றுக்களை ஒப்பு நோக்க முடிகிறது. அகப்பாட்டுக்குத் திணை, துறை, கூற்று என்பன அடிப்படை உறுப்புக்கள். இத்*''திணை என்பது பாட்டிற் கூறப்படும் கருத்துப் பற்றிய 'சூழல்'(ீழநவைஉ ளுவைரயவழைெ) என்றும், துறை என்பது பாட்டின் அடிக்கருத்து (ீழநவைஉ வுாநஅந)என்றும்''*[22] க.கைலாசபதி விளக்குவர். ஆனால், தமிழண்ணல்,*''திணை என்பது வகைமை பற்றியது (ஊடயளளகைஉயவழைெ) என்றும், துறை என்பதுதான் 'சூழல்'(ீழநவைஉ ளுவைரயவழைெ) என்றும், கூற்று என்பதுதான் அடிக்கருத்து (வுாநஅந) என்றும் கூற வேண்டும்.''*[23] எனக் கைலாசபதியின் கருத்தை மறுத்து, தெளிவுபடுத்துவர். இங்கு பின்னவரின் கருத்து ஏற்புடையதாக அமைகின்றது. இக்கூற்றை அரண் செய்யும்விதமாக *''ஐந்து வகையாகப் பிரித்தாலும் கதைபோலத் தொடர்ந்துவரும் காதல் வாழ்க்கையில் பல கட்டங்கள் இருக்கும், ஒவ்வொரு கட்டத்திலும் பல சிறு நிகழ்ச்சிகள் நிகழக்கூடும். அவற்றைத் 'துறை' என்று கூறுவர் இலக்கண நூலார்''*[24] என மொழிவர் ந.சுப்புரெட்டியா. *''அகமாந்தர்களின் கூற்றுக்கள் சில சூழல்களில் கூறப்படுகின்றன. அச்சூழல்களைச் சுட்டுமிடத்து 'துறை' எனக் குறிப்பார்.''*[25] என்று செ.சாரதாம்பாள் கூறுவதும் நினைவுகூரத் தக்கது.

துறை என்பது புறத்திற்கே சார்பு என்று வாதிடுவாரும் உளர். தொல்காப்பியரும் புறத்திணையில் சூழல்களைக் குறிக்குமிடத்து,*''ஈரேழ் துறைத்தே','மூன்று துறைத்தே','துறை பதின்மூன்றே','துறையென மொழிப','பன்னிரு துறைத்தே''*[26]என்பன உட்பட ஏழு இடங்களில் துறை என்ற சொல்லையே கையாள்கிறார். ஆனால், அகச் சூழல்களைச் சுட்டுமிடத்து,*''கிளவி','கண்டோர் மொழிதல்','உரைத்திற நாட்டம்''*[27],*'''தொகைஇ','வகைபட வந்த கிளவி எல்லாம்','பதின்மூன்று கிளவி''*[28]எனக் கிளவி, மொழிதல், உரை, கூற்று என்றே குறிப்பிடுவதை அறிய முடிகிறது. அவ்வாறெனின் துறை வேறு, கூற்று வேறா?. அகத்திற்குக் கூற்று என்னும் பதத்தையும், புறத்திற்குத் துறை என்னும் பதத்தையும் சுட்டுவானேன்? என்பன போன்ற ஐயங்கள் ஏற்படுதல் இயற்கையே. இதற்கான விடையைத் தொல்காப்பியர் வழிநின்றே உய்த்துணர முடியும்.

*''பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழி கலங்கலும்*
*நிற்பவை நினை நிகழ்பவை உரைப்பினும்''*[29]

என்பன தலைவன் கூற்றுக்களாக அமைவன. இங்கு, பெற்றவழி மகிழ்தல், பிரிந்தவழி கலங்கல், நிலையானதை நினைத்து நிகழ்பவை உரைத்தல் போன்றவை சூழல்கள்(துறை). இச்சூழல்களில் தலைவன் கூற்றுகள் நிகழுமென்பது அறியமுடிகிறது. மற்றொன்றும் இங்குச் சிந்திக்கத் தக்கது. அதாவது ஒரே சூழலில் ஒத்தப் பொருண்மை கொண்ட பல கூற்றுக்கள் நிகழ்கின்றன. இதற்குச் சான்றாக,'கழற்றெதிர் மறை, கழறிய பாங்கற்குக் கிழவன் உரைத்தது' என்பன தலைவன் கூற்றாக அமைந்த 'கழற்றெதிர்மறை' துறையின் ஒத்தப் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகள் ஆகும்.

**சங்கச் செய்யுட்களின் தெளிவில் துறைக்குறிப்பின் பங்கு**

சங்கச் செய்யுட்களில் அகச்செய்யுட்களாக 1862 தொகுக்கப்பட்டுள்ளன. இச்செய்யுட்கள் அடிகளால் குறைந்தும் மிகுந்தும் காணப்பட்டாலும், எல்லாச் செய்யுட்களும் ஒரு காதல் நிகழ்ச்சி மட்டுமல்ல, தனித்தனி இலக்கியமுங்கூட. இன்பக் காதலை, சில இலக்கண வரம்புடன் கூறுவது தமிழ்மரபு. இவற்றில் *''திணை, துறை முதலிய ஒழுங்குகள் தமிழர் காதலில் உண்டு''*[30] என்பர் கி.வா.ஜகந்நாதன். இவை அகப்பாடல்கள் உருவாக்கத்திற்கு இன்றியமையாதது. இச்சங்க அகப்பாடல்களைப் புரிந்துகொள்ள இப்பாடலின் பின்னணியை அறிந்துகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். *''பாடலினைக் கூறுவோர்,*

*கேட்போர், இடம், காலம், கூற்று, பயன் ஆகிய செய்திகளை அறிந்து கொண்டால்தான் பாடலை நன்கு புரிந்து கொள்ளவும், சுவைக்கவும் முடியும். அச்செய்திகளை விளக்கும்வகையில் ஒவ்வொரு பாடலுக்கும் துறைக்குறிப்புக்கள் கூறப்பட்டுள்ளன.''*[31]இவை *''கவிதையில் கூறியுள்ள பொருளைத் தெளிவாக உணர்த்துக்கொள்ள உதவும் கவிதையில் பெரிதும் கூறப்படாத திட்டம்''*[32] என விளக்குவர் குளோறியா சுந்தரமதி. துறைக்குறிப்புப் பற்றிய தெளிவு இருந்தால், சங்கச் செய்யுட்களின் நுதல்பொருண்மை எளிதில் புலப்படும், உற்றுநோக்கின் இச்செய்யுட்களில் காணப்படும் உரிப்பொருட்கள் கொண்டே அதன் துறைக்குறிப்புகள் வரையறுக்கப்பட்டிருக்கும் என்பது தெளிவு. ஏனெனில், துறைகள் அகத்திணை உரிப்பொருள்களின் ஒவ்வொரு பகுதியையும் உள்ளடக்கியது.

அகவாழ்வில் குறிப்பிடப்படும் துறைகள், சூழல்களாகவும், கூற்றுக்களாகவும், முதன்மை நோக்கங்களாகவும் அமைகின்றன. சான்றாக,'வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிதல்,'வினைமுற்றி மீண்டான் கூறியது' போன்ற துறைகள் இத்தன்மைத்து. *''இத்துறைகள் அனைத்தும் இயற்கை நிகழ்ச்சிகளாகவும், இயற்கை நிகழ்ச்சியை எதிரொலிக்கும் மனிதனின் செயல்களாகவும் அமைந்துள்ளன. வாழ்வின் மாறாத உண்மைகளாகவும் உள்ளன. மனித நடத்தையினை அமைப்புக்களாகக் காணப்படுகின்றன. ..... அகவாழ்வின் சட்டக்கூறுகளாய் அமைந்து சுவை பயக்கின்றன.''*[33] என விளக்குவர் வி.ஆனிலெட் பாமி. அகச்செய்திகளை மறைத்துக் கூறுவது நாகரிகத்தின் அடையாளம். துறைகள் அதனைக் குறிப்பாக வெளிப்படுத்திக் காட்டுகின்றன.

**துறைக்குறிப்புகள் வகைப்பாடு**

சங்கச் செய்யுட்கள் அனைத்திற்கும் துறைக்குறிப்புக்கள் சுட்டப்பட்டிருத்தல் மரபு. ஒவ்வொரு செய்யுட்கும் தனித்தனித் துறைக்குறிப்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன. இத்துறைக்குறிப்புகள் ஒன்றுபட்ட அல்லது வேறுபட்ட பொருண்மை, சூழல்களைக் கொண்டமைகின்றன. இதன் அடிப்படையில் கூறுவோர், கேட்போர், நிகழ்வு, செய்யுட்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மை, பயன் ஆகியவற்றின் அடிப்படையில் துறைக்குறிப்புக்கள் வகைப்படுத்தப்படுகின்றன.

**இயற்கைப்புணர்ச்சி**

காதலர் இருவர் பெற்றோரும் மற்றையோரும் அறியாவகையில் மறைவொழுக்கம் புரிதலைக் களவெனக் கொள்வர். இக்களவொழுக்கத்தைக் ‘காமக்கூட்டம்’ என்றுரைக்கும் தொல்காப்பியர், களவின் முதல் நிகழ்வைக் ‘காமப்புணர்ச்சி’ என்பர். இக்காமக்கூட்டத்தினை,

*“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்*
*காமக் கூட்டங் காணுங் காலை”*[34]

என வரையறுப்பதொடு,

*“காமப் புணர்ச்சியும் இடந்தலைப் படலும்*
*பாங்கொடு தழாஅலுங் தோழியிற் புணர்வுமென்று”*[35]

நால்வகைத்தென மொழிவர். இவ்விரு நூற்பாக்களும், களவையும் அவற்றின் நால்வகையினையும் எடுத்துரைத்து, காமக்கூட்டத்தின் முதல் நிகழ்வு காமப்புணர்ச்சியெனக் குறிப்பிடுகின்றன. இயற்கைப்புணர்ச்சி என்று குறிப்பிடும் இலக்கண விளக்க ஆசிரியர்,

*“தெய்வந் தன்னி னெய்தவுங் கிழத்தியி*
*னெய்தவுந் படூஉ மியற்கைப் புணர்ச்சி”*[36]

என இருவகைப்படுத்துவர். முன்னது முயற்சியின்றித் தானே முடியும். பின்னது முயற்சியினால் முடியும். தெய்வப் புணர்ச்சியில் கண்கள் மட்டும் பேசினால் போதுமாதலால் ‘முன் சொல்லிலாப் புணர்ச்சி’ எனவும், கிழத்தியால் எய்தும் புணர்ச்சியில் தலைவி உரையாட வேண்டுமாதலால் ‘முன் சொல்லுள்ள புணர்ச்சி’ எனவும் வகைப்படுத்தமுடிகிறது. சங்க அக இலக்கியங்களில் முதல்வகைப் புணர்ச்சியே நிகழ்ந்துள்ளதை அறிய முடிகிறது.

**இயற்கைப்புணர்ச்சிக்கு முன்நிகழ்வும் துறைகளும்**

இயற்கைப்புணர்ச்சிக்கு முன் கைக்கிளை அமைய பெறுந் தன்மையைத் தொல்காப்பியமும், இறையனார் களவியலும் சுட்டுகின்றன. இக்கைக்கிளை,காட்சி(நூ-90) ஐயம்(நூ-91), துணிவு(நூ-92) குறிப்புணர்தல்(நூ-93)

எனும் நிகழ்வுகளைக் கொண்டது. இந்நிகழ்வுகள் முற்றுப்பெறும் நிலையில்தான் ஐந்திணையாகிறது. இதனை வ.சுப.மாணிக்கணார், *''அகத்திணையின் இயல்பான வளர் கரு''*[37]என்பர்.

கைக்கிளையின் நிகழ்வுகளைக் களவியலில் குறிப்பிடும் தொல்காப்பியர், இயற்கைப்புணர்ச்சி முதலான நால்வகைக் காதற்கூட்டத்தையும் செய்யுளியலில் உரைக்கிறார். ஏனெனில், கைக்கிளை நிகழ்வுகளில் தலைவனுக்கு ஐயமிருப்பின், காமப்புணர்ச்சி நிகழாது. இக்கைக்கிளையின் துறைகளாக.

*''முன்னைய நான்கு முன்னதற் கென்ப''*[38]

என்ற நூற்பா உரையில் இளம்பூரணர்,'வெளிப்பட இரத்தல், நலம் பாராட்டல், புணராத இரக்கம், நயப்புறுத்தல்' ஆகிய நான்கும் கைக்கிளைக்குரிய துறையெனக் கொள்வதொடு, அதன் நான்கு நிழ்வுகளான காட்சி, ஐயம், துணிவு, குறிப்புணர்தல் என்பனவற்றையும் அவற்றொடு தொடர்புடைய துறையாக எண்ணமுடிகிறது என்பர்.

**இயற்கைப்புணர்ச்சித் துறைகள்:**

இயற்கைப்புணர்ச்சி, காதலின் முதல் நிகழ்வு. தாமாகவோ, தெய்வத்தாலோ கூட்டப்பெறும் நிகழ்வு. காதலர் இருவர் கருத்தொருமித்துக் காணும் உணர்வுக் கூட்டம். இக்கூட்டத்தில் காதற்குறிப்புத் தோன்றுதல் இயற்கைப் புணர்ச்சியாகும். சங்க அகப் பாடல்களில் இயற்கைப்புணர்ச்சிப் பொருண்மை துறைக்குறிப்புக்களைக் கொண்டவைகளாகப் பத்துப் பாடல்கள் (நற் -8: குறுந் -2, 40, 116, 137, 142, 300: ஐங்குறு -177, 299: அகநா -230:) காணக்கிடக்கின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**நலம் பாராட்டல்** என்னும் துறையிலமைந்த பாடல்களுக்கு, *''இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழித் தலைமகன் தலைமகளை, ...... தனது அன்பு தோன்ற நலம்பாராட்டாடியது.''*[39]எனவும், புணர்ந்து நீங்கும் தலைவன்(குறுந் -116) துறைக்குறிப்பும் இத்துறையில் அமைகிறது. **பிரிவச்சம்** துறையில் தலைவியின் பிரிவச்சம் கூறும் பொருண்மையில் அமைந்த துறைக்குறிப்புகளைக் கொண்ட குறுந் -40, 137ஆம் பாடல்கள் இத்துறையில் அமைகின்றன. **வன்புறைத்** துறையில் தலைவியின் பிரிவச்சம் போக்க முற்படும் தலைவனின் உணர்வமைந்த துறைக்குறிப்பு (குறுந் -300) அமைந்துள்ளது. **அருமையறிதல்** துறையில் *''இயற்கைப்புணர்ச்சி புணர்ந்துநீங்கும் தலைமகன்*

*ஆயத்தோடு செல்லும் தலைமகளைக் கண்டு சொல்லியது.''*[40] எனவும், புணர்ந்த தலைவி, தன் தோழியர்களோடு சேர்ந்து நிற்கும் எழில் கண்டு தலைவன் மகிழ்வு கொள்ளும் துறைக்குறிப்புகளும் (ஐங்குறு -299: நற் -8:) இத்துறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **பிரிவுழிக் கலங்கல்** துறையில் புணர்ந்து நீங்கும் தலைவன், தன்னுள் கலங்கும் துறைக்குறிப்புகள் (குறுந் -142: அகநா -230:) அமைந்துள்ளன. இங்கு அகநா -230ஆம் பாடலின் துறைக்குறிப்பில் 'இயற்கைப்புணர்ச்சியில் கண்ணுற்று நீங்கும் தலைவன்' என்ற குறிப்பு இல்லை. எனினும், இத்துறைக்குறிப்பிற்கான பாடலின் பொருண்மை இயற்கைப்புணர்ச்சியில் அமைந்துள்ளமையால் இத்துறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**இடந்தலைப்பாடு**

இடந்தலைப்பாடென்பது இரண்டாம் நாள் கூட்டமாகும். இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் மறுநாளும் அதே இடத்தில் காதலுடன் காத்திருக்க, அன்புடைக் காதலியும் அதே வேட்கையுடன் அங்கு வந்து நின்றிருந்தது கண்டு மகிழல் இடத்தலைப்பாடாகும். தொல்காப்பியர் இடந்தலைப்பாட்டினைத் தனியாகக் கூறாமல்,

> *''சொல்லிய நுகர்ச்சி வல்லே பெற்றுழித்*
> *தீராத் தேற்றம் உளம்படத் தொகைஇப்*
> *பேராச் சிறப்பின் இருநான்கு கிளவியும்''*[41]

என இயற்கைப்புணர்ச்சியைக் கூறுமிடத்து கூறுவர். இவற்றுக்குப் இளம்பூரணர்,*''இயற்கைப்புணர்ச்சிக்குக் களனாக மேற்கூறப்பட்டவற்றுடன் அவ்வின்பந் திளைத்தலையும் விரைவாக ஒன்றாய்ப் பெற்றவிடத்து''*[42] என்று கூறுவதோடு இறுதியாகக் கூறப்படும் இரண்டும் எவ்வாறு இடந்தலைப்பாட்டிற்குள் அடங்கும் என்பதை வினாவிடைப் போக்கில் 'சொல்லிய நுகர்ச்சி' முதல் 'இருநான்கு கிளவி' வரை இடந்தலைப்பாடும் சேர்த்து உணர்த்தினார். *''அற்றாயின், நுகர்ச்சியும் தேற்றமும் இயற்கைப்புணர்ச்சியன்றோ, இடத்தலைப்பாடாமாறு என்னையெனின் நன்கு கடாயினாய், மெய்யுறு புணர்ச்சியினைப் பால்கூட்டும் நெறிவழிப்பட்டுப் பெற்றார்க்கு மெய்தொட்டுப் பயிறல் முதல் அறுதுறையே இன்றியமையாத் துறையாக, ஏனைய இரண்டும் இடந்தலைப்பாட்டிற்கும் சேர்ந்த துறையாகலின்,பொதுப்பட இரண்டிற்கும் நடுவே வைத்துச் செப்பம் ஆக்கினாரென்க.*

*நுகர்ச்சியும் தேற்றமும் எனப் பிரித்துக் கூட்டுக.''*[43]என்பர். *''தீராத் தேற்றம் என்பதற்கு - இயற்கைப்புணர்ச்சியுடன் முடியாத தெளிவு''*[44]எனவும் உரைப்பர். க.சுந்தரபாண்டியன் *''இடந்தலைப்பாடு என்னும் துறை, தொல்காப்பியம், தமிழ்நெறி விளக்கம் ஆகிய நூல்களில் இல்லை''*[45] என்பர். தொல்காப்பியத்தில் எல்லாத் துறைகளும் வெளிப்படையாக கூறப்படவில்லையெனினும் கூற்றுக்களில் அடங்கியுள்ளன.

அகப்பாடல்களில் இடந்தலைப்பாடு பொருண்மைத் துறைக்குறிப்புகளைக் கொண்டவைகளாக ஏழு பாடல்கள் (நற் -39, 155: குறுந் -62, 70: ஐங்குறு -197, 281, 288:) காணக்கிடக்கின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புகளை ஆராயின் தொல்காப்பியர் கூறும் 'நுகர்ச்சி, தேற்றம்' என்னுந் துறைகளாக அமைகின்றன. இவற்றைத் 'தெய்வத் தெளிதல், கூடல், விடுத்தல்' எனவும்,'தந்ததெய்வம் தருமெனச் சேறலும், முந்துறக் காண்டலும், முயங்கலும், புகழ்தலும், உடன் புணர் ஆயத்து உய்த்தலும்' எனவும் வகைப்படுத்தி மற்ற இலக்கண நூல்கள் விரித்துரைக்கின்றன. இவற்றுள்,**நுகர்ச்சி** என்னுந்துறையில், இடந்தலைப்பாட்டில் தலைவியின் நிலை கண்டும், கூடலுறும் நெஞ்சிற்கும் தலைவன் கூறும் பொருண்மையிலமைந்த துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள் (நற் -39: குறுந் -62, 70: ஐங்குறு -197:) அமைகின்றன. இவற்றில் நற்-39 ஆம் பாடலுக்கு ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை இரு துறைக்குறிப்புகளையும், பொ.வே.சோமசுந்தரனாரும் கு.வெ.பாலசுப்பிரமணியனும் இரண்டாம் துறைக்குறிப்பையும் சுட்டுகின்றனர். இவற்றுள்,**முயங்கல்** பொருண்மையில் இரு பாடல்களும்(குறுந் -62: ஐங்குறு -197:),**புகழ்தல்** பொருண்மையில் இரு பாடல்களும்(குறுந் -70: நற் -39:) அமைகின்றன.

**தீராத் தேற்றம்** என்னும் துறையில்,''இரண்டாம் கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன் சொல்லியது. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் சொற்றதூஉம்ஆம்''[46] என்ற துறைக்குறிப்பு அமைகிறது. **அஃறிணை உயிரினை வாழ்த்தல்** என்னும் பொருண்மையில் **மகிழ்தல்** துறையில், தலைவியின் புனக்காவல் கண்டு மகிழும் தலைவனின் கூற்றுகள் அமைந்த துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள் (ஐங்குறு -281, 288:) வகைப்படுத்தப்பட்டுள்ளன. இத்துறை, இலக்கண நூல்களில் கூறப்படாதது, துறைக்குறிப்பிலும் இடந்தலைப்பாடு என்ற குறிப்பில்லை. எனினும் பாடலின் பொருண்மை இடந்தலைப்பாட்டுச் சூழலில் அமைந்துள்ளது.

**பாங்கற் கூட்டம்**

தலைவன், பாங்கன் மூலம் தலைவியைக் கூடும் நிகழ்வுகளைக் கூறுவது பாங்கற்கூட்டம் ஆகும். இதனை இடந்தலைப்பாட்டிற்குப் பின் நிகழும் மூன்றாம் நாள் நிகழ்வாகக் கொள்வர். இவ்வரிசைப்படியே தொல்காப்பியமும்,

*“பெற்றவழி மகிழ்ச்சியும் பிரிந்தவழிக் கலங்கலும்*
*நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைப்பினும்*
*குற்றங் காட்டிய வாயில் பெட்பினும்”*[47]

என்கிறது இங்குப் ‘பெற்றவழி மகிழ்ச்சி, பிரிந்தவழிக் கலங்கல் என்னும் இரண்டு துறைகளும் களவுக்கூட்டம் நான்கிலும் நிகழக் கூடியன. ‘நிற்பவை’ என்பதற்கு இளம்பூரணர்,*“காமப்புணர்ச்சி யொன்றனையும் நினையாது, இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்குமென்று உட்கோடலும், நிற்பவை - இல்லறவினை”*[48] எனவும், க.பாலசுந்தரம்,*“…….. தலைவி ஆயத்தால் சூழப் பெற்றனள் கொல்? தாயர் காவல் கொண்டனர்கொல்? என்றாற் போல எண்ணுதல் நிற்பவை நினைதலாம்”*[49] எனவும் பொருளுரைக்கின்றனர். இவ்விருவரின் உரைகளும் ஒப்பக் கூடியதாகவே அமைகின்றன. தொல்காப்பியர், இடந்தலைப்பாட்டிற்குப் பின் பாங்கற்கூட்டம் நிகழும் என்றுரைக்க, இறையனாரோ(நூ.எ-3) பாங்கன் மூலமும், அவனல்லாமலும் இடந்தலைப்படல் நிகழும் எனவும், பன்னிரு துறைகளையும் குறிப்பிடுவர். தொல்காப்பியம், நம்பியகப்பொருள், அகப்பொருள் விளக்கம், மாறனகப்பொருள், இலக்கணவிளக்கம், சுவாமிநாதம் போன்ற இலக்கண நூல்கள் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்னும் வரிசை முறையிலும், தமிழ்நெறி விளக்கம், களவியற்காரிகை ஆகிய இலக்கண நூல்கள் இயற்கைப்புணர்ச்சிக்குப் பின் பாங்கற் கூட்டத்தைக் குறிப்பிட்டு, இடந்தலைப்பாடைச் சுட்ட வில்லை. முத்துவீரியம் என்னும் இலக்கண நூல் இயற்கைப்புணர்ச்சி, பாங்கற்கூட்டம், இடந்தலைப்பாடு என்னும் வரிசை முறையில் குறிப்பிடுகின்றது.

சங்க அகப் பாடல்கள் பாங்கற்கூட்டத்தின் பொருண்மையில் முப்பத்தொரு பாடல்கள் (நற் -95, 160, 185, 201, 324: குறுந் -58, 72, 78, 95, 100, 119, 129, 132, 136, 156, 184, 204, 206, 222, 272, 280, 291: ஐங்குறு -172, 173, 174, 175,191, 255: அகநா -130, 140, 390:) உள்ளன. இப்பாடல்களைத் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், தொல்காப்பியர் கூறும் *‘பெற்றவழி மகிழ்ச்சி(குறுந் -95, 129, 132, 136, 184, 206, 280), பிரிந்தவழிக்*

*கலங்கல்(நற் -185: குறுந் -100, 119, 156: ஐங்குறு -172, 173, 174:), நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைத்தல்(அகநா -390), குற்றங்காட்டிய வாயில் (நற் -160, 201: குறுந் -58, 72, 78, 204, 272: அகநா -130, 140:), பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுத்தல்(குறுந் -222: ஐங்குறு -175:), பெட்புதல்(நற் -95, 324: குறுந் -129, 291: ஐங்குறு -173, 174, 255:)* என்ற துறைகளில் அமைவதை வகைப்படுத்தமுடிகின்றது.

இத்துறைகளுள் அமைந்த பாடல்களைப் பின்னை வந்த இலக்கண நூலார் குறிப்பிடும் **உற்றது கூறல்** என்னுந் துறையில், தலைவனின் செயல் வேறுபாடு கண்டு, அவற்றுக்கு காரணம் வினவிய பாங்கற்குத் தலைவன் பதிலுரைக்கும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகளும் (குறுந்-72, 129: ஐங்குறு -172: அகநா -130:),“இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குந் தலைமகன் பாங்கற்கு உரைத்தது.”[50] என்னும் துறைக்குறிப்பையும் வகைப்படுத்தமுடிகிறது. **இயலிடம் கூறல்** துறையில், தலைவன் தன் காதலுக்கு உதவும் பாங்கனிடம் தலைவியின் இருப்பிடம் கூறுவதும், பாங்கன் வினவ உரைக்கும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகளும்(நற் -95, 324: குறுந் -95, 291: ஐங்குறு -255:) வகைப்படுத்தப்படுகின்றன. **குறைமுடிக்கக் கூறல்** என்னுந் துறையில்,“பாங்கற்கு உரைத்தது. .....”[51]என்னுந் துறைக்குறிப்பு அமைகிறது. **கழறல்** துறையில் தலைவனின் நிலைகண்டு பாங்கன் விதந்து இடித்துரைக்கும் துறைக்குறிப்புகள் (குறுந் -78, 204) அமைவதையும்,**கழற்றெதிர்மறை** என்னுந் துறையில் ‘கழற்றெதிர்மறை’(நற் -160 குறுந் -58, 132, 280) என்று நேரடியாக துறையின் பொருண்மையைச் சுட்டும் துறைக்குறிப்பும்,‘கழறிய பாங்கற்கு’ எனவமையும் துறைக்குறிப்பு அமைந்த பாடல்களும் (நற் -201: குறுந் -136, 156, 184, 206, 272: அகநா -130:) இத்துறையில் அமைந்துள்ளன. **விதியொடு வெறுத்தல்** துறையில் “பாங்கற்குத் தலைவன் சொல்லியது.”[52] எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. **அவயம் தேறுதல்** துறையில் ‘குறிவழிச் சென்று வந்த பாங்கன்,‘அவள் நின்றுழி நின்றாள்’ எனக் கூற’, தலைமகன் தன்னுள்ளே கூறும் துறைக்குறிப்பும் (ஐங்குறு -174),**வியந்துரைத்தல்** துறையில் தலைமகளைக் கண்ட பாங்கன் தன்னுள்ளே வியந்துரைக்கும் துறைக்குறிப்பையும் (ஐங்குறு -173) வகைப்படுத்தமுடிகிறது.

**பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்**

இத்துறை, பாங்கற்கூட்டம் முடிவுறு நிலையில் தோழியின் கூட்டம் பெறல் வேண்டுமென்ற தலைவனின் எண்ணத்தைப் பிரதிபலிக்கிறது. இதனை இளம்பூரணர், *“இதற்குமுன் சொல்லப்பட்டவற்றான், உடம்பட்ட பாங்கனால் தலைமகளைப் பெற்றுப் பின்னும் வரைந்தெய்தலாற்றாது களவிற்புணர்ச்சி வேண்டித் தோழியை இரந்து பின்நின்று கூட்டக் கூடுவன் என்னும் உள்ளத்தனாய் அவ்விரத்தலை வலியுறுத்தினும் என்றவாறு”*[53] என்பர். இப்பெட்ட வாயிலில் தலைமகளைக் கண்டு கூறுதலும், பின்னிரந்து குறையுற நினைப்பதும் என்ற இருநிலைகளிலும் உரைக்கிறார். இத்துறையை, இளம்பூரணர் பாங்கற் கூட்டமாகக் கொள்ள மற்ற இலக்கண நூலாசிரியர்கள் தோழியிற் கூட்ட முன்நிகழ்வாகக் கொள்கின்றனர். இத்துறையில், தலைவியிடம், நீ தோழியொடு வரல் வேண்டுமெனத் தலைவனுரைக்கும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள் (குறுந் -222: ஐங்குறு -175) வகைப்படுத்தப்படுகின்றன. இத்துறையில் அமையும் ஐங்குறு -175ஆம் பாடல் ‘தோழியுடன் வருக எனல்’ என்னுந் துறையிலும் வகைப்படுத்தமுடிகிறது.

**மதியுடன்பாடு**

இத்துறையும் தலைவனைச் சார்ந்தது. பாங்கற் கூட்டத்திற்குப்பின், தலைவியைக் கண்டு அலாவுதற்குத் தோழியின் உடன்பாடு தேவையாதலால், அவளின் எண்ணத்தினையும் தன் செயலுக்கு உடன்படச் செய்தல் தலைவனின் தலையாயத் தேவையாகிறது. ஆதலின் தோழியிடம் தலைவிமீது தான் கொண்ட காதலையும், தன்னிலையிலே தலைவியும் உள்ளாள் என்பதைக் கூறுகிறான். தோழியும் ‘முன்னுற உணர்தல், குறையுற உணர்தல், இருவருமுள்வழி அவன் வரவுணர்தல்’ என்ற மூன்று முறைகளில் அறிந்து களவொழுக்கத்திற்கு உடன்படுவாள். இந்நிகழ்வே ‘பாங்கி மதியுடன்பாடு’ என்னும் துறையாகும். இதனை க.சுந்தரபாண்டியன் *“தோழி, தலைவியின் சொல், செயல்களில் காணப்படுகின்ற வேறுபாடுகளைக் கண்டறிந்து உண்மைத் தெளிதலையும், காதலரின் களவொழுக்கத்திற்கு உடன்படுகின்ற நிகழ்ச்சியையும் ‘மதியுடன்பாடு’ என்பர்”*[54] என்றுரைக்கிறார்.

சங்க அக இலக்கியத்தில் ஒன்பது பாடல்கள் (நற் -213, 359: குறுந் -1: ஐங்குறு -176, 177, 185, 187, 211, 256:) உள்ளன. இப்பாடல்களில் **இருவருமுள்வழி அவன் வரவுணர்தல்** என்னுந்துறையில் மதியுடன்படுக்கும் தலைமகன் கூறுவதும் (நற்-213), தலைமகளுந் தோழியும் ஒருங்கு நின்றுழித்

தலைமகன் தோழியை வினாவும் துறைக்குறிப்பும் (ஐங்குறு -176) அமைகின்றன. இவ்விரு துறைக்குறிப்புகளும் தலைவன் கூறுவதாக அமைய, ஐங்குறு-177 ஆம் பாடலின் துறைக்குறிப்பு அத்தலைவனுக்குப் பதிலுரைப்பதாக அமைகிறது.

**தோழியிற் கூட்டம் வேண்டல்**

களவுத் தலைவன், தோழியை மதியுடம்படுத்தித் தலைவியைக் காண்பதற்கு முயல்வான். தோழியின் அனுமதியில்லாமல் அல்லது உடன்பாடில்லாமல் அவளைக் காண்பது அரிது என்பதறிந்து, தோழியிடம் தோழியிற் கூட்டம் வேண்டுவது இத்துறையாகும். இத்துறையில் இரு பாடல்கள் (ஐங்குறு -185,256) உள்ளன. இப்பாடல்கள் **நின்னால் நயக்கப்பட்டவள் யாவள் என்றாட்கு உரைத்தல்** துறையில் ‘ஆயமகளிருள் நின்னால் நயக்கப் பட்டாள் யாவள்?’என, வினவிய தோழிக்குத் தலைவன் கூறும் துறைக்குறிப்பும் (ஐங்குறு -185),**பருவத்தள் அல்லள் என்றாட்குக் கூறல்** துறையில் ‘தலைவி வருத்தும் பருவத்தள் அல்லள்’ என்ற தோழிக்குத் தலைமகன் கழறும் துறைக்குறிப்பும் (ஐங்குறு -256)வகைப்படுத்தப்படுகின்றன.

**கையுறை**

தோழியிற் கூட்டம் வேண்டிய தலைவன் தன் காதலைப் புலப்படுத்தும் விதமாகக் கையுறை கொணர்ந்து அதனைத் தலைவியிடம் கொடுக்குமாறு தோழியிடம் கொடுத்தனன். அக் கையுறையைத் தோழி ஏற்க மறுத்தல் **கையுறை மறுத்தல்** துறையாகும். இத்துறையில் “தோழி கையுறை மறுத்தது”[55] எனவும்,**கையுறை ஏற்றல்** துறையில் ‘தோழி தழையேற்றுக் கொண்டு ...’ எனத் தொடங்கும் துறைக்குறிப்பும் (நற் -359),**கையுறை ஏற்கக் கூறல்** துறையில் “.... தலைமகன் தழை ஏற்க வேண்டிக் கூறியது.”[56] என்னும் துறைக்குறிப்பும் வகைப்படுத்த முடிகிறது. இத்துறைகளில், தலைவன்மீது தலைவியும் காதல் கொண்டிருக்கிறாள் என்பதையும் தலைவன் தன் காதலை உறுதி செய்வதையும் அறியமுடிகிறது.

**தோழியிற் கூட்டம்**

தலைவன் தலைவியுடனான களவொழுக்கத்தைத் தொடர, தோழியின் உதவியை நாடலும், தோழி அதற்கு உடன்பட்டு உதவுதலும் தோழியிற் கூட்டமாகும். மதியுடன்பாட்டில் குறுநகையுடன் தொடங்கிய தோழியின் கூற்றுகளைக் கொண்டே, தலைவன் களவுக் கூட்டத்தில் கால்கொள்ள முயல்வான்.

இக்கூட்டத்தில் தோழியிடம் தலைவியின்மீது தான் கொண்ட காதலையும், தலைவி தன்மீது கொண்ட காதலையும், அதன் விளைவுகளையும் தலைவன், தலைவி தோழிக்கு உரைப்பர். தோழியும் அதற்குத் தீர்வு காணமுயலுவதும் இக்கூட்டத்திலே அமையும். இக்கூட்டத்தில் ‘1. களவு அறிதல், 2. தோழியிற் கூட்டப் புணர்ச்சியில் மகிழ்தல்,3. தினைப்புனம் காத்தல், 4. பின்னிற்றல், 5. சேட்படுத்துதல், 6. மடல், 7. இருவகைக் குறி, 8. அல்ல குறி, 9. இற்செறிப்பு, 10. சிறைப்புறம், 11. ஒருவழித் தணத்தல், 12. காமமிக்க கழிபடர் கிளவி, 13. வரைவு நீடல், 14. அலர், 15. நொதுமலர், 16. வெறியாடல், 17. வரைவு கடாதல், 18. வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிவு, 19. அறத்தொடு நிற்றல், 20. உடன்போக்கு, 21. வரைவு போன்ற பெருந்துறைகளில் அமைந்த பாடல்கள் ஆய்ந்து வகைப்படுத்தப்படுகின்றன.

### களவு அறிதல்

களவினை மறைத்த தலைவியிடம் அதனைத் தான் அறிந்துகொண்டதைத் தோழி அவளுக்கு உணர்த்துதல் இத்துறையாகும். இத்துறையில் நற் -13ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமைகிறது.

### தோழியிற் கூட்டப் புணர்ச்சியில் மகிழ்தல்

தலைவன், தோழியின் உதவியால் கூட்டம்பெற்றமையால் மகிழ்தல் இத்துறையாகும். இத்துறையில் தலைவியைக் கண்டமையை நினைந்து தலைவன் மகிழும்(நற் -82), தலைவியின் ஊரினைச் சுட்டிக் கூறும்(குறுந் -81) பொருண்மை கொண்ட துறைக்குறிப்புடைய பாடல்கள் இத்துறையில் வகைப்படுத்தப்படுகின்றன.

### தினைப்புனம் காத்தல்

தலைவனால் மதியுடன்பட்ட தோழியால் தோழியிற்கூட்டம் கூட்டப்பெறும். தோழியிற் கூட்டத்திற்கு ஏதுவாகத் தினைப்புனம் காத்தல் அமைகிறது. இத்தினைப்புனத்தில் கதிர்கள் செழித்து முதிர்ந்திருக்கும் காலங்களில் தலைமக்களின் காணுங் காலங்கள் மிகுந்திருக்கும். அல்லாத காலங்களில் வேறு ஏதுக்களை உருவாக்க வேண்டியிருக்கும். அக்காலங்களில் தலைவனைக் காண முடியாது போகுமோ எனத் தலைவி வருந்தியிருப்பாள். அவளைத் தோழி தேற்றுவதும் நிகழும். தலைவன் வந்து தலைவியுடன் அலாவிப் பிரியும் காலத்து தலைவி வேறுபடுதலும் உண்டு.

இப்பொருண்மையில் நான்கு (நற் -351: குறுந் -13: ஐங்குறு -207, 284:) பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மைகளை ஆராயின்,**தலைவனைக் காணாநிலை கண்டு வெறுத்திருந்த தலைவியை ஆற்றுவித்தல்** துறையில் வறட்சியால் தினைப்புனத்தில் தலைவனைக் காணமுடியுமா? எனத் தவித்த தலைவியைத் தோழி ஆற்றுவிக்கும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்பமைந்த ஐங்குறு -207ஆம் பாடலும்,**வேறுபாடுரைத்தல்** துறையில் தலைவன் தோழியிற் கூட்டங்கூடிப் பிரிய தலைவி தன் நிலையுரைக்கும் (குறுந் -13) துறைக்குறிப்பும்,**தினைப்புனத்திற்கு அனுமதித்தால் நலம்பெறுவளென்றுரைத்தல்** துறையில் ‘தோழி அருகு அடுத்தது’ துறைக்குறிப்பும் (நற் -351) வகைப்படுத்தப்படுகின்றன.

**பின்னிற்றல்**

தலைவன், தலைவியுடனான களவொழுக்கத்தைத் தொடர, தோழியிடம் தன் காதலைக் கூறி இரந்து நிற்றல் இத்துறையாகும். இத்துறையில் தலைவன், தோழியிடம் தலைவியின்மேல் தான் கொண்ட காதலையும், அதன் விளைவுகளையும் எடுத்துக்கூறுவான். இதனைத் தொல்காப்பியர்,

*“ஊரும் பேருங் கெடுதியும் பிறவும்*
*நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறி*
*தோழியைக் குறையுறும் பகுதியும் ...........*
*............ .............. .............. தோழி*
*நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி*
*மடல்மா கூறும் இடனுமா ருண்டே”*[57]

எனபர். ‘பண்பிற் பெயர்ப்பினும்’ (தொல்.பொருள். -100) என்னும் நூற்பாவில் பல்வேறு சூழல்களில் தலைவன் தன் காதலை வெளிப்படுத்துவதாகச் சுட்டும் தொல்காப்பியர்,‘குறையுறற் கெதிரிய கிழவனை மறையுறப் பெருமையிற் பெயர்ப்பினும் உலகுரைத் தொழிப்பினும்’ (தொல்.பொருள். -112) என்னும் நூற்பாவில் தோழி, அவற்குப் பதில் கூற்று நிகழ்த்துவதாகக் குறிப்பிடுகின்றார். இதன்வழி, தலைவியின்மேல் தான் கொண்ட காதலைப் புலப்படுத்திய பின்னும்.

களவுக்கூட்டம் தொடராத நிலையில் தலைவன் குறையுறுவதும், அதற்குத் தோழியின் பதிலுரைகளும் குறிப்பிடப்படுகின்றன. பின்னால் வந்த இறையனாரோ,

*"புணர்ந்த பின்றை யாங்ஙனம் ஒழுகாது*

*பணிந்த மொழியால் தோழி தேஎத்து*

*இரந்துகுறை யுறுதலும் கிழவோன் மேற்றே"*[58]

எனத் தலைவனும் தலைவியும் களவுப்புணர்ச்சி புணர்ந்த பின்னரே தலைவனின் குறையுறுதல் நிகழும். இக்குறையுறுதலும் 'முன்னுற உணரினும்'(இறையகப் -9) என்றுரைக்குமிடத்து, தோழி முன்னுற உணர்ந்தாலும். தலைவன் தானுற்ற குறையைக் கூறிய பின்னரே, தோழியின் கூற்று மொழிகள் நிகழும் என்கிறார். குறைநேரும் தோழி,'உள்ளத்து உணர்ச்சி தெள்ளிதின் கரந்து'(இறையகப் -10) என்னும் நூற்பாவழித் தலைவியைத் தலைமகனின் குறைநயந்ததைத் நயப்பிக்குமாறு கூறுவதும், இறையகப் -11ஆம் நூற்பாவில் தலைவி, குறைநயத்தைத் தோழியிடம் கூறுவதும் சுட்டப்படுகின்றன. இத்துறை தொல்காப்பியத்தில் இடம்பெறாதது குறிப்பிடத்தக்கதாகும்.

தலைவன், தன் காதலை உணர்த்தியபின், அதாவது இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், மதியுடன்பாடு இவற்றிற்குப் பின்னும் களவுக்கூட்டம் நிகழ்வதில் இடையூறு ஏற்படுமாயின் தோழியை இரந்து பின்னிற்றல் நிகழும். இந்நிகழ்வில் நாற்பத்து நான்கு பாடல்கள் (நற் -25, 32, 45, 77, 101, 128, 140, 146, 190, 204, 209, 220, 245, 253,265,342, 349: குறுந் -17, 32, 74, 165, 173, 176, 182, 212, 230, 276, 286, 298, 337: ஐங்குறு -91, 178, 196, 298: அகநா -32, 180, 200, 250, 268, 310, 330, 356, 380, 392:) காணப்படுகின்றன. இப்பாடல்களில் சேட்படுத்துதல் பொருண்மையில் இரு பாடல்கள் (நற் -45: ஐங்குறு -91) அமைகின்றன. இப்பாடல்கள் நீங்க நாற்பத்திரண்டு பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், தொல்காப்பியர் கூறும் 'ஊரும் பேரும் கூறித் தோழியைக் குறையுறுதல்' தொடங்கி 'மடல்மா கூறுதல்' வரை தலைவன் கூற்றுமொழிகளாகவும், 'பண்பிற் பெயர்த்தல்' முதலாக 'ஆற்றிடையுறுதல்'ஈறாகத் தோழியைக் குறையுறு பகுதிகளாகவும் என மடல்மா கூறுதற்கு நிமித்தமாகவும் கூறியுள்ளார்.

இத்துறைகளுள் **ஊரும் பேரும் கூறித் தோழியைக் குறையுறுதல்** துறையில் ‘பின்னின்ற தலைவன்’ எனத் தொடங்கி ... (நற் -146) தன்னுள்ளே சொல்லியது(நற் -349) எனவமையும் துறைக்குறிப்புகள் தலைவன் தன் குறையைக் கூறுவதுபோல் அமைந்துள்ளன. **தோழி குறையவட் சார்த்தி மெய்யுற கூறலும்** துறையில்,“பின்னின்ற தலைவன் நெஞ்சிற்குரைத்தது.”[59] எனவும், தோழி கேட்குமாறு தன் நெஞ்சுக்குக் கூறுவதாகவும்(நற் -101) துறைக்குறிப்புகள் அமைகின்றன. **தண்டாது இரத்தல்** துறையில் குறைமறுக்கப்பட்ட தலைவன் தன் நெஞ்சுக்குக் கூறும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகள்(குறுந் -165, 182) அமைகின்றன. **சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகை** துறையில் “இரந்து பின்னின்ற கிழவன் குறைமறாமற் கூறியது. ....”.[60] என்னும் துறைக்குறிப்பும்,**அறிந்தோள் அயர்ப்புக் கூறல்** துறையில் ‘தலைமகன் தோழியை இரந்து குறையுறுவான்’(ஐங்குறு -178) எனவமையும் துறைக்குறிப்பும்,**மடல்மா கூறல்** துறையில் ‘தோழியிற் கூட்டம் வேண்டி பின்னின்ற’(குறுந் -17) எனவமையும் துறைக்குறிப்பும் .தோழியின் உடன்பாட்டினைப் பெறுவதற்கு தலைவன் தான் மடலேற முயல்வதாகக் கூறும் துறைக்குறிப்பு வகைப்படுத்தப்படுகின்றன. **அவட்பெற்று மலிதல்** துறையில் ‘தலைமகற்குக் குறைநேர்ந்த தோழி ...(ஐங்குறு -298) கூற மகிழ்ந்த தலைவனின் மகிழ்மொழி துறைக்குறிப்பும்,**பண்பிற் பெயர்த்தல்** துறையில் கிழவன், தனது குறையறியக் கூறும்(குறுந் -337) துறைக்குறிப்பும் அமைகின்றன. இதுகாறும் கூறப்பட்ட துறைக்குறிப்புகள் யாவும், தலைவன் கூற்றுகளாக அமைந்தவை.

தலைவன் குறையுறுதலுக்குத் தோழி கூறிய மறுமொழியாக அமையும் **உலகுரைத்து ஒழித்தல்** துறையில்,**குறையுற உணர்தலின் வகை**யிலமையும் ஐங்குறு -196 பாடலின் இத்துறைக்குறிப்பு அமைகிறது. **குறைந்து அவட் படரினும்** துறையில் தோழி குறைநேர்ந்த பின்னும் தலைவி அதனை ஏற்காது கண்ட தலைவன் அவளை ஓம்படுத்துவதும் துறைக்குறிப்பும், தோழி ஆற்றாதொழுகும் துறைக்குறிப்பும் அமைகின்றன. **நன்னயம் பெற்றுழி நயம்புரி இடத்தினும்** துறையில் குறுந் -74ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**மறைந்தவளருகத் தன்னொடு மவளொடு முன்னை மூன்றளைஇப் பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும்** துறையில் குறைநேர்ந்த தோழி தலைவியைக் குறைநயக்குமாறு கூறும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகள்(நற் -32, 128, 245) அமைகின்றன. **மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது, பல்வேறு கவர்பொருள் நாட்டத்தானும்** துறையில்

‘தலைமகளைத் தோழி குறைநயப்புக் கூறியது.’ என நற் -25ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமைகிறது.

தோழி, தலைவி குறைநயத்தலை மறைமுகமாக அறிய முயல்வது, தலைவி குறைநயத்ததைத் தலைவனுக்குக் கூறுதல் போன்றவைகளைச் சுட்டிய தொல்காப்பியர், தலைவியைக் குறைநயக்கக் கூறியதைக் குறிப்பிடவில்லை. ஆனால் மேற்கூறியவற்றிலிருந்து ‘குறைநயக்கக் கூறியதைப்’ பெறமுடிகிறது. இக்**குறைநயப்பித்தல் -நயத்தல்** துறையில் ‘தோழி கிழத்தியைக் குறைநயப்பக் கூறியது’ (குறுந் -176, 212: அகநா -180, 268:) என்ற துறைக்குறிப்புகளையும்,**படைத்துமொழிதல்** துறையில் ‘தோழி படைத்து மொழிந்தது.’(நற்-254) எனவும் துறைக்குறிப்புகளை வகைப்படுத்தமுடிகிறது.

**சேட்படுத்துதல்**

காதல் கொண்ட தலைவன் தோழியிடம் இரந்து குறையுறும் நிலையில் தலைவியிடமிருந்து, தலைவனை சேய்மையில் இருக்கச்செய்தல் சேட்படுத்துதல் ஆகும். இந்நிகழ்வு, தலைவனின் காதலுறுதியை அறிந்து கொள்வதற்கும், தலைவியின்மேல் உள்ள காதலை அதிகப்படுத்தி, வரைவு முடுக்குவதற்காகவும் தோழி மேற்கொள்ளும் உத்தி என்றே எண்ண இடமளிக்கிறது. தொல்காப்பியர்,

*“நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி”*[61]

எனவும்

*“இரந்து குறையுற்ற கிழவனைத் தோழி*
*நிரம்ப நீக்கி நிறுத்தல் அன்றியும்”*[62]

எனவும் கூறுவர். களவியல் நூற்பாவிற்கு(99) நச்சினார்க்கினியர் *“தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற் றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து”*[63] எனவுரை பகர்வர். பொருளியல் நூற்பாவிற்கு(233) இளம்பூரணர் *“இரந்து குறையுற்ற தலைமகனைத் தோழி நிரம்ப நீக்கி நிறுத்தலன்றி....”*[64]எனவுரை கூறுவர். தமிழ்நெறி விளக்க ஆசிரியர் பகற்குறியிலேயே *“சேட்பட நிறுத்தலுஞ்”*[65]நிகழும் என்கிறார்.

**சேட்படுத்துதல்** நிகழ்வில் சங்க இலக்கியத்தில் ஏழு பாடல்கள் (நற் -45, 75, 80, 301, 377: ஐங்குறு -91: அகநா -58:) அமைந்துள்ளன. இப்பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், தொல்காப்பியர் குறிப்பிடும்

பின்னிற்றலுக்கான எட்டு சூழல்களும், மற்ற இலக்கண நூல்கள் குறிப்பிடும் சேட்படுத்துதலின் சூழலுக்கான எட்டு சூழல்களுடன் பெரும்பான்மை ஒத்துக் காணப்படுகின்றன. எனினும் நான்கு துறைகளிலே, சங்க இலக்கியப் பாடல்களின் பொருண்மைகள் அமைந்துள்ளன. அவ்வகையில் தோழி **பெருமையிற் பெயர்த்தல்** துறையில் "குறை வேண்டிய தலைமகனைச் சேட்படுத்தது"[66] என்னும் துறைக்குறிப்பும் **தலைவி அருமை சாற்றல்** துறையில் சேட்படுத்தப்பட்ட தலைவன் தன் ஆற்றாமையைத் தோழி கேட்குமாறு கூறும் துறைக்குறிப்பும்(நற்-75), தலைவன் அன்பு மிகுதியால் கொண்ட ஆற்றாமை கண்டு தோழி கூறும் நற் -301ஆம் பாடலின் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது. "அன்பின் இயல்பினால் தருவதோர் ஆற்றாமையினான் என்ற தோழி தன்னுள்ளே யாய் மறப்பருமை சொல்லிச் சேட்படுத்தியது."[67] எனத் தாயின் அன்பு மிகுதி கூறித் தோழி சேட்படுத்துவதாய் ஔவை.சு.துரைசாமிப் பிள்ளை துறைக்குறிப்பை வரைந்திருப்பர்.

**பேதைமையூட்டல்** துறைக்கு ".... தோழி இவள் இளையள், விளைவு இலள் எனச் சேட்படுத்தது"[68] எனவும்,**தையல் மறுத்தல்** துறையில் அகநா -58ஆம் பாடலின் துறைக்குறிப்பு வகைப்படுத்தப்படுகிறது. அகப் பாடல்களில் பிரிவுப் பாடல்களில் ஆற்றாமைப் பொருண்மைப் புலப்படுகின்றன. சேட்படுத்துதலுக்கான சூழலில் ஆற்றாமை சுட்டப்படவில்லை. ஆயினும்,**ஆற்றாமை** துறையில் தலைவனின் ஆற்றாமையைப் புலப்படுத்தும் நற் -80ஆம் பாடலின் துறைக்குறிப்பும், தலைவியின் ஆற்றாமையைத் தலைவன் புலப்படுத்தும் நற் -377ஆம் பாடலின் துறைக்குறிப்பும் அமைவதை வகைப்படுத்தமுடிகிறது.

**மடல்**

காதல் கொண்ட தலைவன், தோழியிற் கூட்டம் வாயிலாகத் தலைவியைப் பெறமுடியாத நிலையிலும், தன் ஆற்றாமை மிகும் தன்மையிலும், தோழியிடம் தன் தேவையை உரைக்குமிடத்தும் மடலூர்வதாகக் கூறுவான். மடலூர்வதாகக் கூறுதல் அன்பின் ஐந்திணையாகவும், மடலூர்தல் பெருந்திணையாகவும் கொள்ளப்பெறும். இம்மடலூர்தல் தோழியிடம் குறையுறுமிடத்தும், தோழியால் சேட்படுத்தப்படுமிடத்தும் தலைவன் தான் மேற்கொள்ளப்போவதாகக் கூறுகிறான். இதனைத் தொல்காப்பியர் தொல்.பொருள் நூ.எ -99:19-20 அடிகளில் மொழிவர். இவ்விடத்தில் இளம்பூரணர் *"புணர்ச்சி நிமித்தமாகத் தலைமகன் இரத்தலுங், குறையுறுதலும், மடலேறுவல் எனக் கூறுதலும் பெறுமென்றவாறு"*[69] எனவுரைக்க, நச்சினார்க்கினியர்

*''அச்சேட்படையான் மடலேறுவலெனக் கூறும் இடனும் உண்டு என்றவாறு''*[70] என உரை பகர்வர். நம்பியகப் பொருள்விளக்கம், மாறனகப்பொருள், இலக்கண விளக்கம் போன்ற இலக்கண நூல்கள்,'மடல் கூற்று, மடல் விலக்கல், மடல் கூற்று ஒழிதல்' என்பன போன்று பல்வேறு நிலைகளில் விளக்குகின்றன.

சங்க இலக்கியத்தில் மடலூர்தல் பொருண்மையிலமைந்த பத்துப் பாடல்கள் (நற் -146, 152, 342, 377: குறுந் -14, 17, 32, 173, 182, 276:) காணக்கிடக்கின்றன. இவற்றில் பின்னிற்றல் பொருண்மையில் (நற் -146, 342: குறுந் -17, 32, 173, 182, 276:) 7 பாடல்களும், சேட்படுத்துதல் பொருண்மையில் (நற் -377) ஒரு பாடலும் அமைகின்றன. இவற்றை நோக்கின், (நற் -162, குறுந் -14) இரு பாடல்கள் மட்டுமே இங்கு பகுக்கப்படுகின்றன. பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், நாற்கவிராசநம்பி குறிப்பிடும் **'இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன், மடலே பொருள் என மதித்தலும்'** என்னும் துறையில்,'தோழி குறை மறுத்துழி, தலைமகன் மடலேறுவேன் எனக் கூறும்வகையில் அமையும் துறைக்குறிப்பும், அதனைத் தோழி கேட்க புறமொழியாகக் கூறும் துறைக்குறிப்பும் அமைந்த பாடல்களை வகைப்படுத்தமுடிகிறது. இம்மடல் பற்றிய பாடல்களின் பொருண்மையில் தலைவன், தலைவியைப் பெறும் எண்ணம் புலப்படுகிறது.

**இருவகைக் குறி**

கருத்தொருமித்த காதலர், தம் வளர்காதலைப் பூர்த்தி செய்தற்கு குறியீடு கொண்டு காட்சியுற்று கூடுதலுறுவது குறியிடம் கூடுதலாகும். இக்குறியிடங் கூடுதல் பகற்பொழுதில் நிகழுமாயின் பகற்குறி எனவும், இரவுப் பொழுதில் நிகழுமாயின் இரவுக்குறி எனவும் பெயர்பெறும். இவ்விரு குறிகளிலும் கூடும்நிலை கிட்டாதாயின் அதனை அல்லகுறி என்பர். இதனைத் தொல்காப்பியர், தலைவன்(தொல்.பொருள். நூ.எ -105:1-8) தலைவி(தொல்.பொருள். நூ.எ -109:24-29) தோழி(தொல்.பொருள். நூ.எ -112:20-24, 37-38) கூற்றுகளில் நிகழுமெனச் சுட்டுவர். 'அல்லகுறி' என்று சுட்டாமல் 'இருவகைக் குறிபிழைப்பாகிய இடத்தும்'(தொல்.பொருள். நூ.எ -105:1) எனவும்,'புணர்ந்துழி யுணர்ந்த அறிமடச் சிறப்பினும்'(தொல்.பொருள். நூ.எ -112:24) எனவுமே குறிப்பிட்டுள்ளார். பின்வந்த இறையனார் *'அல்லகுறி படுதலு'* (இறையகப் நூ.எ-17) என முதன்முதலில் 'அல்லகுறி' என்னும் கலைச்சொல்லைக் குறிப்பிட்டு, இருவகைக் குறிகளைப்(இறையகப் நூ.எ-18) பின்னர் குறிப்பிடுகிறார். நக்கீரரோ, இக்குறிகள் எப்பொழுது நிகழுமென்பதைத் *''தலைமகன் தோழியை இரந்து*

*குறையுற்றுப் பின்னின்ற இடத்து அவனை ஆற்றுவிக்கும் சில சொற் சொல்லி ஆற்றுவித்துத் தலைமகனைக் குறைநயப்பித்தவாற்றான் நின்ற தோழியைப் பின்னுந் தலைமகன் எதிர்ப்படும்: எதிர்ப்பட்டானை இன்ன இடத்து வா என்று குறிப்பினான் உணர்த்தும்.''*[71] எனத் தெளிவுபடுத்துவர். பின்வரும் இலக்கண ஆசிரியர்கள், இப்பொருண்மையைப் பல்வேறு துறைகளாக விவரித்துரைக்கின்றதையும் அறியமுடிகிறது.

**சங்க இலக்கியத்துள் இருவகைக்குறி**

சங்க இலக்கியத்தில் இருவகைக் குறிப் பொருண்மையில் 153 பாடல்கள் உள்ளன. அவற்றுள் பகற்குறியில் 57 பாடல்கள் உள்ளன. அவற்றில் 34 பாடல்கள் வரைவுகடாதலைக் குறிப்பாகவும், 23 பாடல்கள் வரைவுகடாதலை வெளிப்படையாகவும் புலப்படுத்துகின்றன. இரவுக்குறியில் 96 பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றில் 81 பாடல்கள் வரைவுகடாதலைக் குறிப்பாகவும், 15 பாடல்கள் வரைவுகடாதலை வெளிப்படையாகவும் சுட்டுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின்,**தலைவன்** கூற்றுப் பாடல்களில் **அவட்பெற்று மலிதல்** என்னுந் துறையில் **"**பகற்குறியிடம் புக்க தலைமகன், தலைவி பின்னாக மறைய வந்து கண்புதைத்துழி சொல்லியது.''[72] என்னுந் துறைக்குறிப்புடன், இரவுக்குறி வந்து நீங்கும்(அகநா -142, 152), கண்ணுற்று நீங்கும்(அகநா -162), புணர்ந்து நீங்கும்(அகநா -198, 208, 262, 280) என அமையும் துறைக்குறிப்புகளும் அமைந்துள்ளன.

*''புகாஅக் காலை புக்கெதிர் பட்டுழிப்*
*பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும்''*[73]

என்னும் பொருண்மையில் அமைந்த, தோழி வரைவு கடாவிய பின்னும் **தலைவன் களவு வேண்டல்** துறையில் 'இரவுக்குறி மறுக்கப்பட்ட .... பின்னும் கூடுதற்கு அவாவுற்ற நெஞ்சின் நோக்கிக் கூறியது.' என்னும் குறுந் -29ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**வரைவிடை வேட்டல்** துறையில் 'இரவுக் குறிவந்து நீங்குகின்ற தலைமகன், தன் நெஞ்சிற்கு வரைவிடை வேட்பக் கூறியது.' என்னும் குறுந் -312ஆம் பாடலின் துறைக்குறிப்பும் அமைந்துள்ளன.

*''காட்சி யாசையிற் களம்புக்குக் கலங்கி*
*வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும்.''*[74]

என்னும் பொருண்மையில் **இரவுக்குறி வேண்டல்** துறையில் *“இ∴து அல்லகுறிப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தோழி கேட்பத் தன் நெஞ்சிற்குச் சொல்லியது.’ ‘இ∴து இரவுக்குறிப்பாற்பட்டு ஆற்றானாய தலைவன் தோழி கேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.’ ‘இரவுக்குறி விரும்பிச் சென்ற தலைமகன் ஆற்றானாய்த் தோழி கேட்பத் தன்னெஞ்சிற்குச் சொல்லியது.”*[75] என நற்றிணை ஆறாம் பாடலுக்கு உரையாசிரியர்கள் துறைக்குறிப்புகளைக் கூறியுள்ளனர். அவர்களில் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை ‘அல்லகுறி’ என்றும், நாராயணசாமி ஐயர், பொ.வே.சோமசுந்தரனார், கு.வெ.பாலசுப்பிரமணியன் ஆகியோர் ‘இரவுக்குறி’ என்றும், எச்.வேங்கடராமன் சிறிது மாறுபடக்கூறினும்,‘இரவுக்குறி’ என்னும் பொருண்மையிலேயே துறைக்குறிப்பு வரைந்துள்ளனர். **வேளாண் எதிரின் விரும்பின் கண்ணும்** என்பதன்கண் அமையும் **ஆற்றினது அருமை செப்பியாட்கு உரைத்தல்** துறையில் ‘இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் சொல்லியது.’ எனத் தலைவி ஆற்றினது அருமை கூறியதற்குப் பதிலுரைப்பதாக அமையும் நற் - 192ஆம் பாடலின் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**தலைவி** கூற்றுப் பாடல்களின் பொருண்மை அடிப்படையில், தொல்காப்பியர் குறிப்பிடும் ‘பிரிந்தவழி கலங்கினும்’ என்னும் பொருண்மையிலமையும் **இரவுக்குறி நயத்தல்** துறையில் ‘பகற்குறி வந்து மீள்வானது செலவு நோக்கித் தன்னுள்ளே சொல்லியது.’ எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடலுக்குக் கு.வெ.பாலசுப்பிரமணியன் (நற் -187) தலைவி கூற்றெனத் துறைக்குறிப்பின் மயக்கநிலையைத் தெளிவிப்பர். இதே துறையில் இரவுக்குறி நயந்த தலைமகள் தோழிக்கு சொல்லும் ஐங்குறு -215 ஆம் பாடலின் துறைக்குறிப்பும் அமைந்துள்ளது.

**சிறைப்புறமாக - தன் ஆற்றாமை கூறல்** துறையில் இரவுக்குறியில் சிறைப்புறமாக வரும் தலைவனுக்குத் தலைவி, தன் ஆற்றாமையைத் தோழிக்குக் கூறுவதுபோன்று தலைவனுக்குப் புலப்படுத்தும் துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்களும்(குறுந் -158, 261: அகநா -102, 128, 290), தோழி சொல்லெடுக்க,அதனைத் தலைவி தன் மொழியால் புலப்படுத்தும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்(அகநா -260, 328, 378) அமைந்துள்ளன. **சிறைப்புறமாக – காப்புமிகுதி கூறல்** துறையில் ‘இரவுக்குறிக்கண் வந்த தலைமகனைக் காப்பு மிகுதியான் எதிர்ப்படப் பெறாத தலைமகள், .....’(குறுந் -161) ‘சிறைப்புறம்.’(குறுந் -246) என்றமையும் துறைக்குறிப்புகள்

வகைப்படுத்தப்படுகின்றன. **சிறைப்புறமாக - வெறியாட்டயர்வர் எனக் கூறல்** துறையில் இரவுக்குறியின்போது சிறைப்புறமாகத் தலைமகள் தோழிக்கும், தோழி தலைமகட்கும் உரைக்கும் இரு துறைக்குறிப்புகளைக் கொண்ட அகநா -388ஆம் பாடல் அமைந்துள்ளது. **சிறைப்புறமாக - இயல்படமொழிதல்** துறையில் தலைவனின் இயல்பினைத் தலைவி தோழிக்கு உரைக்கும் துறைக்குறிப்பமைந்த அகநா -332ஆம் பாடல் அமைந்துள்ளது. **சிறைப்புறமாக - வரைந்தால் நலமெனக்கூறல்** துறையில் நற் -275ஆம் பாடலுடன் 'சிறைப்புறம்' என்னுந் துறைக்குறிப்பைக் கொண்ட குறுந் -326ஆம் பாடலும் அமைந்துள்ளது. **சிறைப்புறமாக - வரைவு வேட்கையைப் புலப்படுத்துதல்** துறையில் 'சிறைப்புறம்.'(குறுந் -219) என்னும் துறைக்குறிப்பும்,'கிழவன் கேட்கும் அண்மையனாக, அவன் மலையினின்றும் வரும் யாற்றோடு உரைப்பாளாய்க் கிழத்தி உரைத்தது' என அமையும் குறுந் -327ஆம் பாடலின் துறைக்குறிப்பும் அமைந்துள்ளன. இவ்விரு துறைகளும் தொல்காப்பியர் குறிப்பிடும் **வந்தவழிஎள்ளினும்** (தொல்.பொருள். -109:7) என்பதினொடு அமையும்.

**தோழியின் மாண்புகூறல்** துறையிலமையும் 'இரவுக்குறிக்கண் தலைமகற்குத் தலைமகள் சொல்லியது' என்னும் அகநா -298 ஆம் பாடலின் துறைக்குறிப்பு **கையறு தோழி கண்ணீர் துடைப்பினும்**(தொல்.பொருள். -109:22) துறையிலும் அமையும். **குறியின் ஒப்புமை மருடற்கண்ணும்** துறையில் 'இரவுக்குறி வரும் தலைமகன் செய்யும் குறி பிறிது ஒன்றனான் நிகழ்ந்து, .... தலைமகள் மயங்கியவழி, பின்னர் அவன் வரவு உணர்த்திய தோழிக்குத் தலைமகள் கூறியது.' என முன்நிகழ்வுகளைச் சுட்டும் குறுந் -121ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமையும் பாடல் **தோழி அவன் வரவு உணர்த்துதல்** துறைக்குத் தலைவி பதிலுரைப்பதுபோல் அமைந்துள்ளது. **அவனளி சிறப்பினும்** துறையில் 'தலைவன் வருகையால் அலர் எழுமென்ற அச்சம்' கொள்ளுதலை உரைக்கும் குறுந் -150ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. **உறுந்துயர் இகுளைக்கு உரைத்தல்** துறையில் மெலிந்த தலைவியிடம் தோழி இரவுக்குறியில் தலைவனின் வருகையை உரைத்தவிடத்து, தலைவி தன் துயர் கூறும் பொருண்மையில் அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -332: குறுந் -239, 340:) அமைந்துள்ளன. **வேட்கை மீதூர்தல்** துறையில் 'இது, வேட்கை பெருகத் தாங்ககிலளாய் ஆற்றாமை மீதூர்கின்றாள் சொல்லியது.'(நற் -348) என்னும்

துறைக்குறிப்பில், இரவுக்குறியில் தலைவன் வாராமையால் தன் வேட்கையைத் தன்னுள்ளே தலைவி கூறுவதாக அமைந்துள்ளது.

**தோழி** கூற்றாக அமைந்த இருவகைக் குறிப்பாடல்கள் அனைத்தும் வரைவு நோக்குப் பொருண்மை கொண்டது. சங்க இலக்கியத்தில் தோழி பாத்திரத்தின் நோக்கம் தலைவன்-தலைவியரின் வரைவினை நோக்கிய பயணத்தை முடுக்கிக் களவினைக் கற்பாக மாற்றியமைப்பதற்கேயாகும். அதனால் தலைவன் இருவகைக் குறிகளிலும் தலைவியைக் காண வரும்பொழுது, சிறைப்புறமாக நின்று அவனிடம் சொல்லாடுவாள். இப்பொருண்மை கொண்டே இப்பாடல்களுக்குத் துறைகளும் அமைந்துள்ளது. அவ்வகையில் **சிறைப்புறமாகப் படைத்து மொழிதல்** துறையில் சிறைப்புறமாகத் தோழி மொழியும் பொருண்மையிலமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -147: அகநா -358:) அமைகின்றன. **வேளாண் பெருநெறி வேண்டிய இடத்தினும்** துறையில் தலைவனின் உறவால் தன்னூரில் உண்டான அம்பலையும் அலரையும் தலைவிக்கு உரைப்பாளாய் தலைவனுக்கு உணர்த்தும் துறைக்குறிப்பைக் கொண்ட நற் -285ஆம் பாடல் அமைந்துள்ளது. **அலர் எழுந்ததால் - இற்செறிப்புத்** துறையில் பகற்குறி வந்த தலைமகற்கு உணர்த்தும்விதமாக, இற்செறிப்பிற்கான காரணத்தைத் தோழி தலைமகட்கு மொழியும் பொருண்மை கொண்ட பாடல்கள்(அகநா -20, 302, 370) அமைந்துள்ளன. **ஒருவழித்தணத்தலின்கண் தோழி, தலைமகட்குச் சொல்லியது** துறையில் நீண்ட காலந்தாழ்த்தி பகற்குறி வந்த தலைவன் சிறைப்புறமாக இருக்க, தலைமகட்கு உரைப்பதாக அமையும் துறைக்குறிப்பு கொண்ட குறுந் -123ஆம் பாடல் அமைந்துள்ளது. **படருறு கிளவித்** துறையில் 'பகற்குறி வந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.' எனவமையும் அகநா -30ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**இற்செறிப்பு அறிவுறுத்துதல்** துறையில் பகற்குறி வந்து நீங்கும் தலைமகனிடம் தோழி, தலைவியை இற்செறித்தமையை அறிவுறுத்தும் துறைக்குறிப்புகளும்(குறுந் -294: அகநா -90:) அமைகின்றன. இத்துறையில் அமைந்த மற்ற பாடல்கள் 'வரைவுகடாதல்' பொருண்மையை வெளிப்படையாகப் புலப்படுத்துவதால் அத்துறையிலேயே பகுக்கப்படுகிறது.

**இடத்துய்த்து நீங்கல்** துறையில் 'இடத்துய்த்து நீங்கும் தோழி'(குறுந்-114)எனவும்,**இடத்துய்த்து வருதல்** துறையில் 'தோழி பகற்குறிக்கண் தலைமகளை இடத்து உய்த்து வந்து ...' எனவும் அமைகிறது. இப்பாடல் (அகநா -120) தொல்காப்பியம் குறிப்பிடும் 'வேளாண் பெருநெறி வேண்டிக் கோடல்' என்னும்

கூற்றில் அடங்கும். இவ்விரு துறையிலமைந்த மற்ற பாடல்கள் 'வரைவு கடாவுதல்' துறையில் வகைப்படுத்தப்படுகிறது. **குறி பெயர்த்தல்** துறையில் பகல் வருவானை இரவு வருக எனத் தோழி கூறும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகள்(நற் -232: குறுந் -345: அகநா -148:) அமைகின்றன. **உலகியலாம்படி விருந்து விலக்கல்** துறையில் 'பகற்குறி வந்து பெயரும் தலைமகனை உலகியல் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பமைந்த பாடல்களும்(நற் -215, 276: அகநா -300, 340, 350:) அமைகின்றன. **வன்புறைத்** துறையில் குறிமறுக்கும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகள்(நற் -58: குறுந் -73:) அமையும் 'அன்புதலை யடுத்த வன்புறைக் கண்ணும்' என்ற துறைக்குள்ளும், தமிழ்நெறி விளக்கமும், முத்துவீரியமும் கூறும் தோழி சிறைப்புறத்தே ஏகிடு கிளவி துறைக்குள்ளும் அமைத்து ஆராயமுடிகிறது. **குறியிடம் பெயர்த்தல்** துறையில் 'குறிப்பினாற் குறியிடம் பெயர்த்துக் கூறும் துறைக்குறிப்பும் (குறுந் -113), களவியற் காரிகை குறிப்பிடும் 'வாய்விடு கிளவி' மொழிந்த தலைவியின் நிலைகண்டு தோழி கூறிய** துறையில் அ:.தாவது **வாய்விடு கிளவி மொழிந்தாட்குக் கூறல்** துறையில் வேறுபட்ட கிழத்தியது வேறுபாடு கண்டு தோழி சொல்லும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்பும்(குறுந் -48),**ஆற்றாத் தன்மை ஆற்றக் கூறல்** துறையில் தலைவியை ஆற்றுவி என மொழியும் தலைவனிடம் யான் ஆற்றுவிக்குமிடத்துக் கவன்றால் நீ ஆற்றுவி எனக் கூறும் துறைக்குறிப்புகளும்(நற் -363, 398) அமைந்துள்ளன. **இரவுக்குறி நேர்தல்** துறையில் இரவுக்குறி நேரும் துறைக்குறிப்புகளும ்(நற் -323, 331: அகநா -360:) **தினையோடு வெறுத்தல்** துறையில் 'பகற்குறி வந்து ஒழுகாநின்ற .....'(நற் -389) துறைக்குறிப்பும் அமைகிறது. இத்துறையிலமைந்த ஐங்குறு-260வது பாடல் வரைவு கடாவுதல் பொருண்மையுடையது.

**தோழி** கூற்று **இரவுக்குறிப்** பாடல்களில் **வரைவது கிளத்தல்** துறையில் 'இரவுக்குறி வந்து நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டுத் தோழி சொல்லியது' என அமையும் துறைக்குறிப்புகளும்(அகநா -10, 220, 238), தோழியிற்கூட்டம் கூடிப்பிரியும் தலைமகற்குத் தோழி விளம்பும்(குறுந் -81) துறைக்குறிப்பும் அமைகின்றன. இத்துறையிலமைந்த ஒரு பாடல்(குறுந்-18) வரைவுகடாதல் பொருண்மையுடைத்து. இத்துறைப் பாடல்களைப் 'புணர்ந்தபின் அவன்வயிற் வணங்கற் கண்ணும்' என்பதற்குள்ளும் பகுக்கமுடிகிறது. **பகல் வா எனல்** துறையில் 'தோழி இரவு வருவானைப் பகல் வா என்றது.'(அகநா -18, 182, 308) எனவும்,**பகற்குறி நேர்தல்** துறையில் 'தலைமகற்குப் பகற்குறி நேர்ந்தது.'(குறுந் -88: அகநா -240) எனவும்,

இரவுக்குறியில் **தலைவன் வரவு உரைத்தல்** துறையில் தலைமகன் இரவுக்குறி வந்தமையை தலைமகட்கு உரைக்கும் துறைக்குறிப்புகளும்(ஐங்குறு -206: அகநா -68:),**ஐயச் செய்கைத் தாய்க்கெதிர் மறுத்துப் பொய்யென மாற்றி மெய்வழிக் கொடுப்பினும்** துறையில் 'முயக்கம் பெற்றவழிப் பிறந்த வெறி நாற்றத்தால் .....' எனத் தொடங்கும் ஐங்குறு -93ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**உணர்வுடையது போல்... சொல்லா மரபினவற்றொடு கெழீஇச் செய்யா மரபின் தொழிற்படுத் தடக்கியும் (**தொல்.-194:4-7) துறையில் 'இரவுக்குறி வந்த தலைவன், சிறைப்புறத்தானாக .....'(மழைக்கு நற் -83: கூகைக்கு அகநா -188) எனவமையும் துறைக்குறிப்புகள் தலைவி உணர்வுகளைப் பிறன்மேல் வைத்துக் கூறுவதாக அமைகின்றன.

**ஆற்றது தீமை அறிவுறு கலக்கம் உரைத்தல்** துறையில்இரவுக்குறி நேர்ந்த தலைமகற்குத் தோழி நொந்து வழியின் அச்சங்கூறும் துறைக்குறிப்புகளும்(குறுந் -355: ஐங்குறு -282: அகநா -88, 362:), ஆறு பார்த்துற்றுச் சொல்லியது.' என அமையும் துறைக்குறிப்புகளும்(நற் -114, 158, 336, 353, 383) அமைந்துள்ளன. தலைமகன் இரவுக்குறியில் தலைவியைப் பார்க்க வரும்வழியின் ஏதங்களைக் கூறும் இத்துறையை **ஆறு பார்த்து உறும் அச்சம் உரைத்தல்** துறையாகவும் கொள்ளமுடிகிறது. **ஆற்றாத் தன்மைக்கு அருமருந்து உரைத்தல்** துறையில் நின் வரவைவிட, வரைவே சிறந்தது என சிறைப்புறமாக உரைக்கும்(அகநா -278) துறைக்குறிப்பும்,**அலர் எழும் எனல்** துறையில் அம்பலும் அலரும் ஆயிற்று என உரைக்கும் துறைக்குறிப்புகளும்(நற் -36, 285: குறுந் -372:),**வெறியாட்டயர்வர் எனல்** துறையில் 'இரவுக்குறிச் சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது.'(அகநா -382) என அமையும் துறைக்குறிப்பும்,**காப்புமிகுதி உரைத்தல்** துறையில் 'சிறைப்புறமாகக் காப்புமிகுதி சொல்லியது.'(குறுந் -292) **இரவுக்குறி மறுத்தல்** துறையில் 'தலைமகன் இரவுக்குறி நயந்தானைத் தோழி சொல்ல மறுத்தது.' எனவமையும் துறைக்குறிப்புகளும்(நற் -156, 168, 292: குறுந் -42, 69, 336: ஐங்குறு -296: அகநா -192:) உள்ளன. **தாய் உணர்ந்தமை நட்புற உணர்த்தல்** துறையில் தலைவியின் களவைத் தாய் அறிந்தமையைக் குறிப்பாக உணர்த்தும் துறைக்குறிப்புகளும்(அகநா -248, 272) **வரையும் நாள் உணர்த்தல்** துறையில் தலைமகனிடம் சிறைப்புறமாக தோழி வரையும் நாள் விரைவில் என்பதை உணர்த்தும் துறைக்குறிப்பும்(அகநா -282),**இரவுக்குறி நயக்கக் கூறல்** துறையில் 'தோழி கிழத்தியை இரவுக்குறி நயப்பக் கூறியது.'(குறுந் -346) எனவும்,**இரவுக்குறி**

**நயப்பித்தல்** துறையில் 'தோழி தலைமகளை இரவுக்குறி நயப்பித்தது: சிறைப்புறமாகத் தோழி ஆற்றாமை வியந்ததூஉம் ஆம்.'(நற் -49) எனத் தலைவனை ஏற்றுக் கோடல் நலம் எனக் கூறுவதும்,**முகம் புக்கல்** துறையில் 'தோழி இரவுக்குறி முகம் புக்கது.' எனவமையும் துறைக்குறிப்புகளும்(நற் -334, 392) தோழி, தலைவியின் உள்ளக் கருத்து அறிந்து, அவள் முகம் நோக்கியதாக அமைந்துள்ளன.

**அல்லகுறி**

பகல் இரவுக்குறிகளில் குறியொப்புமையால் மயங்கித் தலைவி வாராதொழிவாள். அவ்வாறு தலைவி வாராமலிருந்தாலும், அப்போது வந்த தலைவன் தலைவியைக் காணாது வருந்துதலும், அல்லகுறிப்பட்டு மீண்டும் வந்த தலைவனிடம் தலைவியின் ஆற்றாமையைத் தோழி கூறலும் இப்பகுதியில் அடங்கும். இப்பொருண்மையில் 11 பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின்,**குறிப்பிழைத்தவழித் தலைவன் உள்ளத்திற்குச் சொல்லியது** துறையில் 'அல்ல குறிப்பிட்டு மீளும் தலைவன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது.'(குறுந் -120, 128: எனவும்,'பதிப்பெயர்ந்த' (அகநா -258): 'போகின்ற'(அகநா -322): 'போகாநின்ற'(அகநா-372) எனச் சொற்களில் வேறுபட்டு, பொருண்மையில் ஒத்த தன்மைத்தாய் அமைந்துள்ளன. **தலைவி** கூற்றில் **என் பிழைப்பன்று என்று இறைவி நோதல்** துறையில் '... முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குச் சொல்லுவாள் போன்று, தலைமகள் சொல்லியது.' என்னும் ஐங்குறு - 272ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**தோழி** கூற்றில் **இறைவியின் ஆற்றாமை உரைத்தல்** துறையில் 'அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகனை'(ஐங்குறு -237, 261) எனத் தொடங்கும் துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்படுகின்றன.

**இற்செறிப்பு**

தலைவியின் களவொழுக்கம் அறிந்த தமர், அவளை இல்லின் புறத்துப் போகாமல் இருத்தி வைத்தல் இற்செறிப்பாகும். இதனைத் தொல்காப்பியர்,*''மனைப்பட்டுக் கலங்குதல்','காப்பின் கடுமை','தமர் தற்காத்தல்''*[76]எனவும், நக்கீரனார் *''காப்புச்சிறை''*[77] எனவும், மற்ற இலக்கண நூலார் 'இற்செறித்தல்' எனவும் குறிப்பிடுகின்றனர். *''இற்செறிப்பு என்பதற்குக் கன்னியை*

*வீட்டிலிருத்திக் காப்பாற்றுதல்''*[78] எனத் தமிழ்ப் பேரகராதியும்,*''தலைவனைச் சந்தித்தற் கிடப்பின்றிப் பெற்றோர் தலைவியை அவள் அகவை நோக்கி வீட்டினுள் இருத்தல்' (திருக்-134) வழ சநளவசயலை வாந ாநசழலைநெ றவைாலை வாந 'யசநவெயட ாழரளந லை எலைநற ழக ாநச யனழடநளஉநநெ யனெ வாரள லைெளைநஉவடல லைஅநனநற ாநச அநநவலைபெ ாநச டழஎநச''*[79] எனச் செந்தமிழ்ப் பேரகராதியும் இற்செறிப்புப் பற்றி வரையறுக்கின்றன. இப்பொருண்மையில் முப்பத்தேழு பாடல்கள் காணப்படுகின்றன.

இப்பாடல்களின் பொருண்மைகளைக் கொண்டு ஆராயின்,**தலைவன்** கூற்றில் **காப்புச் சிறைமிக்க கையறு கிளவித்** துறையில் 'காப்புமிகுதிக்கண் ஆற்றானாகிய தலைமகன் ....(நற் -132)' எனத் தலைவன், இற்செறிப்பு உணர்த்தியவழி தலைவியைக் காணாத நிலையில் ஆற்றாமைப் புலப்படுத்தும் துறைக்குறிப்புகள்(நற் -44: குறுந் -199:) அமைந்துள்ளன. **தலைவி** கூறும் கிளவிகளைக் **காப்பின் இடையீட்டின் கையறு கிளவித்** துறையில் 'காப்பின் மிகுதியான் நெஞ்சு மிக்கது வாய் சோர்ந்து கிழத்தி உரைத்தது'(குறுந் -306) எனவும், செறிப்பு அறிவுறுத்தும் துறைக்குறிப்பும்(நற் -194) அமைந்துள்ளன. **இற்செறித்தலில் தன்னிலை கூறல் (பிரிவச்சம்)** துறையில்**'**இற்செறிப்பு உணர்ந்த தலைமகள் ஆற்றாளாய்த் ...'(ஐங்குறு -224),**'**வேறுபாடு கண்டு இற்செறிக்கப்பட்ட தலைமகள் ....'(குறுந் -401: நற் -287:) எனவமையும் துறைக்குறிப்புகள் தலைவி இற்செறித்தலின்போது தோழிக்கும், தலைவனுக்கும், தன்னுள்ளும் கூறுவதாக (குறுந் -57, 141, 285) மூன்று பாடல்களின் துறைக்குறிப்புகளும் அமைந்துள்ளன. **இற்செறிப்பு முயன்றமை கூறல்** துறையில்'இற்செறிப்பார்' எனக் கேட்ட தலைமகள் வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லியது.' எனவமையும் ஐங்குறு -111ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**தலைவனின் திறம் உணர்த்துதல்** துறையில்'இற்செறிப்புண்ட பின்பும், வரைந்து கொள்ள நினையாது தலைமகன் வந்தானாக, ....' எனவமையும் (ஐங்குறு -115) துறைக்குறிப்பும் அமைந்துள்ளன. இப்பாடல்கள் அவற்றின் பொருண்மைக்கேற்ற துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தோழி** கூற்றுப் பாடல்களை **அலர் ஆயிற்று என்றாட்குக் கூறல்** துறையில் 'அலர் ஆயிற்று' என ஆற்றாளாய தலைமகட்குத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது.'(நற் -138, 63) எனவும்,**இற்செறிப்பர் என அஞ்சியாட்கு**

**உரைத்தல்** துறையில் ''இற்செறிப்பார்' என ஆற்றாளாய தலைவியை, ......' (நற் - 134, 251, 372) எனவும்,**இற்செறிப்பு உணர்த்துதல்** துறையில் 'தோழி தலைமகற்குச் செறிப்பு அறிவுறீஇயது.'(நற் -368, 27, 178, 191) எனவும்,**வினாவிய செவிலிக்கு மறைத்தமை கூறல்** துறையில் '............ இவ்வேறுபாடு எற்றினான் ஆயது? என்று செவிலி வினாவ, தோழி கூறியது.'(குறுந் -366) எனவும்,**நற்றாய் உணர்ந்தமை நட்புற உணர்த்தல்** துறையில்'சிறைப்புறம்.'(குறுந் -246),'தோழி செறிப்பு அறிவுறீஇயது.'(நற் -258, 373) என்ற துறைக்குறிப்புகளும்,**காப்பு இடையீட்டின் கையறு கிளவி** துறையில் 'காப்பு மிகுதிக்கண் இடையீடுபட்டு ஆற்றாளாய தலைமகட்கு ....'(நற் -11, 132: குறுந் -166:) எனவும், தலைவனிடம் தலைவியின் செறிப்பு அறிவுறுத்தும்(நற் -27, 60, 63, 68, 119, 306, 313, 376, 379: குறுந் -159:) என அமையும் துறைக்குறிப்புகளும், தோழி தலைவியின் உணர்வுகளைப் புலப்படுத்தும் பாடல்களாக வகைப்படுத்தமுடிகிறது.

**சிறைப்புறம்**

இரவுக்குறி, பகற்குறிப்பாடல்களின் துறைக்குறிப்புகளில் **'சிறைப்புறம்'** என்னும் சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் தொல்காப்பியத்தில் சுட்டப்படவில்லையென அறியமுடிகிறது. எனினும் இச்சொல்லை 'மனையகம் புகாஅக்' (தொல்.பொருள்.-129:3) என்னும் தொல்காப்பிய அடியுடன் ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வடிக்கு இளம்பூரணார் ''*மனைக்கும் எயிற்கும் நடுவணதோரிடம் என்று கொள்ளப்படும்*''[85] என உரை பகர்வர். நக்கீரனார்,''*பகற்குறிவந்து ஒழுகாநின்ற தலைமகனைக் காணும்பொழுதிற் காணாப்பொழுது பெரிதாகலான் தலைமகள் ஆற்றாளாயின் இடத்துத் தோழி அவளது ஆற்றாமைக்குப் பரிந்து உடனாயிருந்த புள்ளுநோக்கி இவை கண்டு ஆற்றிச் செல்வாட்கு இவையும் நீங்கின. இனி எங்ஙனம் ஆற்றுங்கொல்லோவெனத் தலைமகற்குச் சிறைப்புறனாகச் சொல்லும்*''[86] எனத் தோழி சிறைப்புறமாகத் தலைவனுக்குக் கூறுவதை மொழிவர். இதனடிப்படையில் 'சிறைப்புறம்' என்பதைக் களனாகக் கொண்டு, அக்களத்தில் நிகழும் நிகழ்ச்சிக் கூறுகளைத் துறைகளாகக் கொள்ள முடியும்.

களவுத் தலைவன், தலைவியைச் சந்திக்க சிறைப்புறமாக வந்து நிற்பான். அவ்வேளையில் தலைவி, அலர் குறித்து தலைவனுக்குத் தன் எண்ணங்களைத் தோழிக்குக் கூறுவதுபோன்று வெளிப்படுத்துவாள். தோழியும், தலைவிக்காகத் தலைவனிடம் அலர், வழியின் அச்சம், தாய் துஞ்சாமை, விரைவில் வரைந்து

கொள்ளச் சொல்லல் போன்ற நிலைகளில், தலைவனிடமோ, தலைவியை, செவிலியை இடைவைத்தோ கூற வேண்டியதைக் கூறுவாள். இப்பொருண்மையில் அமைந்த எழுபத்தொன்பது பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இப்பாடல்களில் பதினொரு பாடல்கள் அவ்வத் துறைகளில் வகைப்படுத்தப்படுகின்றன.

**தலைவி** கூற்றில் **சிறைப்புறம்** துறையில் தலைவன் சிறைப்புறமாக இருக்க, தலைவி தோழிக்குச் சொல்லுவாளாய் அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட இருபத்தி நான்கு பாடல்கள்(நற் -31, 51, 94, 136, 147, 175, 236, 275, 378: குறுந் -3, 269, 296, 299, 318, 327: ஐங்குறு -114, 116, 142, 222: அகநா -8, 122, 138, 252, 348:) இத்துறையில் அமைகின்றன. அந்நிலையில், தலைமகன் இரவுக்குறியில் தலைவியைப் பார்க்க வரும் வழியின் ஏதங்களைக் கூறும் **சிறைப்புறமாக - ஆறு பார்த்து உறும் அச்சம் உரைத்தல்** துறையில் **“***தலைமகன் இரவுக் குறிக்கண் சிறைப்புத்தானாகத் தலைமகள் தோழிக்குக் கூறியது. ...’’*[82] எனவும், தலைவி ஆறு பார்த்து உற்ற அச்சத்தால் உரைக்கும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும் (நற் -51, 104, 144, 255) அமைகின்றன.. இப்பாடல்களை **வழியின் ஏதம் கூறுதல்** துறையாகவும் கொள்ளமுடிகிறது.

**தோழி** கூற்றில் **சிறைப்புறம்** துறையில் தலைவன் சிறைப்புறமாகக் கேட்க, தலைவிக்குத் தோழி மொழியும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -36, 72, 88, 122, 123, 191, 206, 228, 239, 297, 299, 322, 339, 344, 365: குறுந் -89, 219, 227, 239, 246, 268, 326: ஐங்குறு -93, 261, 268: அகநா -98, 108, 158, 210, 222, 228, 232, 242, 272, 312:) அமைகின்றன.

**ஒருவழித்தணத்தல்**

களவுக் காதலில் திளைத்த தலைமகன், தோழி வரைவுகடாவும் நிலையில் சிறிது காலம் பிரிந்திருக்க முயல்வது ஒருவழித்தணத்தல் ஆகும். இப்பிரிவை ‘இட்டுப்பிரிவு’ என்றுரைப்பர் தொல்காப்பியர். களவினால் தோன்றிய அலர் சிறிது குறையுமளவு இப்பிரிவு அமையும். சிலபோது இப்பிரிவின் தொடர்ச்சியாக வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிவும் அமையும். இங்கு தலைவன் தன் பிரிவை உணர்த்துதலும், தோழி மறுத்தலும், தலைவி ஆற்றாமையும், தோழி ஆற்றுப்படுத்தலும், எதிர்மொழிதலும், ஆற்றுவித்தமையைத் தலைவனுக்கு உரைத்தலும் நிகழும். இதனைத் தொல்காப்பியர், *‘‘நாணுநெஞ் சலைப்ப விடுத்தற்*

*கண்ணும்*'*'இட்டுப்பிரி விரங்கினும்*'*'வேண்டாப் பிரிவினும்*''[83]என விளம்புவர். இந்நூற்பாவடிகளுக்கு உரை வரைந்த இளம்பூரணர்,''*நாணந் தலைவி நெஞ்சினை வருத்துதலானே நீக்கி நிறுத்துதற்கண்ணும், அ.்.து, அலராகும் என்றஞ்சி நீங்குதல். அவ்வழித் தலைவன் கூற்று நிகழும் என்றவாறு*''[84]எனவும்,''*தலைவன் இட்டு வைத்துப்பிரிவான் என அஞ்சியதற்கு இரக்கமுறினும்*''[85] எனவும்,''*புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டினும் என்றவாறு, இது தலைவன் நெஞ்சினாற் பிரியானென்பதனான் வேண்டாப் பிரிவென்றார். அது தாளா ....... வென்பது அலராகுமென்று அஞ்சி ஒருவழித்தணத்தலும் ஒன்று. அவ்வழித் தலைவிக்கு உரைத்தனவும், தலைவற்குரைத்தனவும் உளவாம்*''[86] எனத் தலைவன், தலைவி, தோழி மூவரும் பேசும் நிலைகளை உணர்த்துவர். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் 24 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை துறைக்குறிப்புகள் கொண்டு வகைப்படுத்தப்படுகின்றன.

**தலைவி** கூற்றில் **வன்புறை எதிர்மொழிதல்** துறையில் 'ஒருவழித்தணந்த காலை ஆற்றாத தலைமகள் வன்புறை எதிர்மொழிந்தது.' (நற் -338: குறுந் -243: ஐங்குறு -161, 162, 163:) எனத் துறைக்குறிப்புகள் அமைந்த பாடல்களும்,**தலைவி நெஞ்சோடு புலத்தல்** துறையில் 'ஒருவழித்தணந்த காலத்துப் பொழுதுபட ஆற்றாளாகி ….'(நற் -382) எனவமையும் துறைக்குறிப்பும்,**தலைவி கவன்றுரைத்தல்** துறையில் 'ஒருவழித்தணந்து வரைதற்கு வேண்டுவன முடித்து வருவல்' என்று தலைமகன் கூறக்கேட்ட ….'எனவமையும் ஐங்குறு -221ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**காமம்மிக்க கழிபடர் கிளவித்** துறையில் இதே துறைக்குறிப்பும்(நற் -54, 70, 102:),'வேட்கை தாங்ககில்லாளாய்'( நற் -303),'பிரிவிடை மெலிந்த .... காலத்து'(நற் -332) எனவும் துறைக்குறிப்புகள் அமைந்து தலைவியின் ஆற்றாமையைப் புலப்படுத்துகின்றன.

**தோழி** கூற்றில் **மென்சொல் பாங்கி விலக்கல்** துறையில் 'ஒருவழித்தணந்து வரைய வேண்டுமென்ற …..'(ஐங்குறு -253, 297) எனவமையும் துறைக்குறிப்பும்,**தலைவிக்கு அவன் செலவு உணர்த்துதல்** துறையில் 'தலைமகன் 'ஒருவழித்தணப்பில்' என்று கூறியவதனை அவன் ….'(ஐங்குறு -214) என்னும் துறைக்குறிப்பும்,**பாங்கி ஆற்றுவித்தல்** துறையில் 'மெலிவுகூறி வரைவுகடாவக் கேட்ட தலைமகன் தான் வரைதற் பொருட்டால் ஒருவழித்தணந்து நீட்டித்தானாக, ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி கூறியது.'(ஐங்குறு -225) எனவமையும்

துறைக்குறிப்புடன், இம்மூன்று பாடல்களின்(நற் -28: ஐங்குறு -199, 227:) துறைக்குறிப்பும் அமைந்துள்ளன. **வந்தோன் தன்னோடு நொந்து வினாதல்** துறையில் ‘ஒருவழித்தணந்து வந்த தலைமகற்கு’(ஐங்குறு -231, 285) எனவும்,‘களவுக் காலத்துப் பிரிந்து வந்த தலைமகற்கு’(அகநா -78) எனப் பொருண்மையை உணர்த்தும் துறைக்குறிப்புகளும்,**காமம்மிக்க கழிபடர் கிளவி** துறையில்‘பிரிவின்கண்ஆற்றாளாகிய ….’(நற் -28: குறுந் -92:)) எனவமையும் துறைக்குறிப்பும், **அன்னலும், நொந்தவள் தன்னோடும் வினாதல்** துறையில் ‘*ஒருவழித்தணந்து வந்த தலைமகன்,*‘நான் பிரிந்த நாட்கண் நீவீர் என் செய்தீர்’….’(ஐங்குறு -232) எனத் தலைவி, தோழியின் மொழிகளில் அமைந்த துறைக்குறிப்புகள், அவர்களின் உணர்வுகள்வழி வகைப்படுத்தப்படுகின்றன.

**வரைவுநீடல்**

தலைமக்களின் களவுக் காதல் கற்பாக மலர்தல் இன்றியமையாததாகும். சிற்சில சமயங்களில் வரைவு விரைவில் நிகழாதிருக்கும். அதற்குத் தலைவனின் களவு வேட்கையும், சிலபோது வரைவு பற்றிய எண்ணம் கொள்ளாமையும் அமையும். இவ்வரைவு நீடுங்காலங்களில் தலைவி ஆற்றாமை கொள்ளுதலும், தோழி ஆற்றுவித்தலும், தலைவியின் ஆற்றாமை கண்டு தோழி கழறுதலும், தோழிக்குத் தலைவி ஆறுதல் கூறலும் நிகழும். இந்நீடலில் இதயத்துடன் பிணைத்த தலைவன் தன்னை இல்லாளாக ஏற்க வேண்டுமென்ற தலைவியின் வேட்கை புலப்படும். இதனைத் தொல்காப்பியர் உள்ளிட்ட இலக்கண ஆசிரியர்கள் ‘வரைவுநீடல்’ என்ற சொல்லாட்சியையோ அல்லது இப்பொருண்மையில் வேறு சொல்லாட்சியையோ குறிப்பிடவில்லை. மாறாக, தொல்காப்பியப் பொருளியலில் அமைந்த,

*“வேட்கை மறுத்துக் கிளந்தாங் குரைத்தல்*
*மரீஇய மருங்கின் உரித்தென மொழிய”*[87]

என்னும் நூற்பாவிற்கு இளம்பூரணர்,“*வரைதல் வேட்கைப் பொருளாற் கூறுதலை மறுத்துப் பட்டாங்கு கூறிச்சொல்லுதல் மருவிய பக்கத்தின் உரித்தென்றவாறு. மருவிய பக்கமாவது களவொழுக்கம் நீட்டித்த இடம். அவ்வழிப் பட்டாங்கு கூறுதலும் ஆம் என்றவாறு”*[88] என உரை பகர்வர். ச.வே.சுப்பிரமணியன்,“*களவொழுக்கத்தில் தலைவனுக்குள்ள விருப்பத்தை மறுத்து, மணந்து கொள்ளும் விருப்பத்தை உரைத்தல் பொருந்திய நிலை எனக் கூறுவர்”*[89]

என மொழிவர். இவ்விருவரின் உரைகொண்டு ‘வரைவுநீடல்’ பொருண்மையை ஊகிக்கமுடிகிறது. தொல்காப்பியர் கூறும் வரைவு வேட்கைப் பொருண்மை கொண்ட நூற்பாவிற்குப்(நூ.201) பின் அமைந்திருப்பதும் இவ்வூகத்தை உறுதிப்படுத்துகிறது. இதற்கான மற்றொரு சூழலையும் அமைத்துத் தருகிறார் தொல்காப்பியர். உடன்போக்கும் வரைவு கடாதலும் தோன்றும் இடங்களைச் சுட்டுமிடத்து,*“ஒருதலை உரிமை வேண்டினும்”*[90] எனவுரைப்பர். இதற்கு இளம்பூரணர் *“ஒருதலையாகத் தலைகள் உரிமைப் பூண்டலை வேண்டியவிடத்து மென்றவாறு.”*[91] எனத் தெளிவு செய்வர். ச.வே.சுப்பிரமணியன்,*“மனையறம் நிகழ்த்தும் உரிமை வேண்டினும்”*[92] என விளம்புவர். இக்கூற்று மொழிகளைக் கொண்டும்,‘வரைவுநீடல்’ பொருண்மையை உய்த்துணர முடிகிறது. தலைவன் களவொழுக்கத்தை நீட்டிக்க நினைக்கும் நிலையில் தோழியோ, தலைவியோ ‘விரைந்து மணமுடிக்க வேண்டும்’ என விரும்புதலும் உரைத்தலும் நிகழும். இச்சூழலை ‘வரைவு நீடலாக’ உரைத்திருப்பர் என்பதை அறிய முடிகிறது. இச்சூழலில் அமைந்த சங்க இலக்கியப் பாடல்கள் தோழியரின் வரைவு குறித்த எண்ணங்களைப் பிரதிபலிக்கின்றன.

இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் **அறுபத்து நான்கு** பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு, அவற்றின் துறைகள் வகைப்படுத்தப்படுகின்றன. இவற்றில் பதினொரு பாடல்கள் வரைவு கடாதல்(நற் -15, 108, 183, 375: குறுந் -169: ஐங்குறு -180, 238, 264, 277:), வரைவு மலிவு (குறுந் -51), வெறியாடல் (குறுந் -111) போன்ற துறைகளில் வகைப’படுத்தப்படுகின்றன. **தலைவி** கூற்றாக அமைந்த 32 பாடல்களில் **தலைவி ஆற்றாமை கூறல்** துறையில் ‘வரைந்துகொள்ள நினைக்கிலன்’ என்று வேறுபட்ட தலைமகள்’ (ஐங்குறு -262),‘வரைவு நீடித்த இடத்து’(குறுந் -25, 38, 105, 112) எனத் துறைப் பொருண்மையைச் சுட்டும் துறைக்குறிப்புகளும்,**மாநலம் தொலைந்து எனல்** துறையில்**‘**வரையாது வந்தொழுகுந்’(ஐங்குறு -117, 278),‘வரைந்து கோடல் நினையாது’(ஐங்குறு -144),‘வரைவு நீட்டித்தவழி’(குறுந் -54, 97, 112, 125, 133, 399) தலைமகன் கேட்குமாறு தலைவி கூறும் பொருண்மை கொண்ட துறைக்குறிப்புகளும்,**தோழியின் ஆற்றாமை கண்டு தலைவி ஆற்றுவித்தல்** துறையில்**‘**வரைவு நீட ஆற்றாளாகிய தோழிக்கு’(நற் -304, 388) எனத் தலைவி கூறும் துறைக்குறிப்புகளும்,**வன்புறை எதிரழிந்தது** துறையில் ‘தோழிக்கு வன்புறை எதிரழிந்தது’(நற் -116, 117, 304, 327),‘நீ ஆற்றுகின்றிலை என்று நெருங்கிய

தோழிக்குச் சொல்லியது.'(குறுந் -152) எனத் துறையை விளக்கும் துறைக்குறிப்புகளும்,**இற்செறித்தல்** துறையில் 'இற்செறிப்புண்ட பின்பும் வரைந்துகொள்ள நினையாது'(ஐங்குறு -115) எனத் துறைக்குறிப்பும்,**மாலை பொழுதை இழித்துரைத்தல்** துறையில் 'வரைவு நீட்டித்த வழி, தலைமகள் பொழுதுகண்டு சொல்லியது.'(குறுந் -117) என அமையும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**அவர் வரவே ஆற்றாமைக்குக் காரணமெனல்** துறையில் 'நாம் அவரை வேறுபடுத்தற்குக் காரணம் ஆம்'எனத் தலைமகள் கூறும்(குறுந் -153) துறைக்குறிப்பும்,**வாடை தன்னை நலித்தது எனல்** துறையில் 'தோழி, வரைவர் என ஆற்றுவிப்புழி,….'(குறுந் -160) எனத் தன் நலிவு உரைக்கும் துறைக்குறிப்பும்,**தலைவனை வரைவொடு வருக எனல்** துறையில் 'வரைதற்கு வேண்டுவன முயல்வோம் எனச் சொல்லி வரையாது ஒழுகுகின்ற' தலைமகனிடம் தன்னுணர்வு மொழியும் துறைக்குறிப்புகளும்(ஐங்குறு -119, 204: நற் -272:) **நிகழ்ந்தது கூறல்** துறையில் 'வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்து நின்று கேட்ப,'நெருநல் இல்லத்து நிகழ்ந்தது இது'….'(ஐங்குறு -113) என்னும் துறைக்குறிப்பும், **வருந்தாதிருத்தல்** துறையில் 'தலைமகன் வரைவு நீடிய இடத்து,'ஆற்றுவல்'(நற் -357) எனத் தலைவி உரைக்கும் துறைக்குறிப்பும்,**இயல்பட மொழிந்தது** துறையில் 'வரைவு நீட்டித்தவழி, ......... தலைமகனை இயற்பழித்த தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.'(குறுந் -187) எனத் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது.

**தோழி** கூற்றாக அமைந்த 21 பாடல்களில் **ஆற்றாளாய தலைவியை வற்புறுத்தியது – ஆற்றுவித்தது** துறையில் 'வரைவு நீட்டிப்ப ஆற்றாளாய ...'(நற் -125, 197, 233: குறுந் -248:) என தலைவியை ஆற்றுவிக்கும் துறைக்குறிப்புகளும்,**தலைவனின் கொடுமை கூறல்** துறையில்'…தோழி குறியிடத்து எதிர்ப்பட்டு அவன் கொடுமை கூறி ...'(ஐங்குறு -275) எனவமையும் துறைக்குறிப்பும்,**தலைவியிடம் தலைவனை மணந்து கொள்ளக்கூறல்** துறையில் 'வரைவு நீட்டித்தவிடத்துத் தலைமகட்குத் ...'(குறுந் -117) எனவும்,**அலராகுமெனல்** துறையில்''வரைவு நீட்டிப்ப அலராம்' எனக் கவன்ற தோழி'(நற் -135) கூறும் துறைக்குறிப்பும்,**வரைவு முடுக்கம்** துறையில்'தோழி தலைமகனை வரைவு முடுகச்

சொல்லியது.'(நற் -227),'தோழி,'எம்பெருமாள் இதற்காய நல்லது புரியும்' என்று ….'(நற் -399),'கடிதின் வரைய வேண்டும்'.∴ (ஐங்குறு -180) என்பதினொடும், (குறுந் -53, 90: ஐங்குறு -216, 289:) இந்நான்கு பாடல்களின் துறைக்குறிப்புகளும் இத்துறையில் அமைகின்றன. **வரைவு வேட்டல்** துறையில் 'இன்ன நாளில் வரைவல்' எனக் கூறி, அந்நாளில் வரையாது பின் அவ்வாறு கூறும் ….'(ஐங்குறு - 287) எனவமையும் துறைக்குறிப்பும்,**வரைவு உணர்த்தி வற்புறுத்துதல்** துறையில் 'ஆற்றாளாய தலைமகளைத் தோழி வரைவு உணர்த்தி வற்புறுத்தியது'(நற் -392) எனவும்,**வரைவு மலிந்தது கூறல்** துறையில் 'வரைவு நீட … தோழி வரைவு மலிந்தது.'(நற் -235: குறுந் -51:) எனவும், தலைவியின் மெலிவு கண்டு வருந்திய தோழி, தலைவனை **இயற்பழித்துக் கூறல்** துறையில் 'தலைமகள் பசப்பிற்கு வருந்திய தோழி அவனை இயற்பழித்துக் கூறியது.'(ஐங்குறு -166) என அமையும் துறைக்குறிப்பையும் வகைப்படுத்தமுடிகிறது.

**அலர்**

தலைவன் தலைவியின் காதலைப் பிறர் அறிந்து, அவர்களுக்குள் பேசிக் கொள்ளுதல் அலராகும். இதனால் தலைவி இற்செறிக்கப்படுவாள். ஆதலின் அலருக்குத் தலைவன், தலைவி, தோழி மூவரும் அஞ்சுவர். இதனைத் தொல்காப்பியர் (தொல்.பொருள். நூ.எ -137) களவு வெளிப்படுதற்கு அலர் காரணமெனின், அவ்வலருக்குக் காரணம் தலைவன் என விளம்புவர். இக்காரணத்தானே போக்கும் வரைவும் வேண்டுதல் நிகழும் (தொல்.பொருள். நூ.எ - 221:3-4) எனக் கூறுகிறார். தலைவியின் காதல் அலரானவிடத்துத் (தொல்.பொருள். நூ.எ -113) தோழியிடம் செவிலி வினாவுவாள் எனவும் உரைப்பர். இவ்வலர் தோன்றாவிடின் களவுக்காதல் வெளிப்படாதிருக்கும். எனின் இவ்வலர் நன்மையே எனத் தோழி எண்ணுவதும் உண்டு.

அலர் குறித்த பொருண்மையில் ஒன்பது பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இப்பாடல்கள் தலைமகளை ஆற்றுப்படுத்தும் தோழி கூற்றாகவும், தன் ஆற்றாமை கூறும் தலைவி கூற்றாகவும் அமைகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**அலரச்சமுரைத்தல் அல்லது ஆற்றாமை உரைத்தல்** துறையில் 'அலர் அஞ்சி ஆற்றாளாகிய தலைமகள்'(குறுந் 311, 320), தோழிக்கு உரைக்கும் துறைக்குறிப்புகளும்,**ஆற்றுவித்தல்** துறையில் 'அலர் கூறப்பட்டு ஆற்றாளாகிய தலைமகளைத் ….'(நற் -138, 311: குறுந் -373:)

எனவும்,**வரைவுகடாதல்** துறையில் ‘தோழி அலர் மலிவு உரைத்து வரைவுகடாயது.’(குறுந் -393) துறைப் பொருண்மைக்கேற்பவும்,**செறிப்பு அறிவுறுத்தல்** துறையில் ‘அலர் அச்சத்தால் தோழி … செறிப்பு அறிவுறீ இயது.’(நற் -63) எனவும்,**அலர் தோன்றியதை உரைத்தல்** துறையில் ‘தலைவி வேறுபாடு கண்ட புறத்தார், அலர் கூறுகின்றமை தோன்ற’(குறுந் -109) எனத் துறைப் பொருண்மைக்கேற்பவும் **அலர் அஞ்சி இருந்தாட்குத் தலைவனின் வரைவுத் துணிவு கூறல்** துறையில் ‘இக்களவொழுக்கம் நெடிது செல்லின், இவ்வூர்க்கண் அலர் பிறக்கும்’(ஐங்குறு -181) என்னும் துறைக்குறிப்பையும் காதற் திண்மையுரைத்தல் துறையில் குறுந் -373ஆம் பாடலின் துறைக்குறிப்பும்வகைப்படுத்தப்படுகின்றன.

**நொதுமலர் வரைவு**

தலைவன் அல்லாத ஒருவன் களவுத் தலைவியை வரைந்து கொள்ள முனைவதை நொதுமலர் வரைவு எனக் குறிப்பிடுவர் அகத்துறை சார்ந்தோர். இவ்வரைவினை தோழியர் அறிகின்றனர், கவலுறுகின்றனர். இந்நிலையில் தாயாரிடம் அறத்தொடு நின்றலும், அவை நிகழா நின்றுழி, தலைவனிடம் வரைவு கடாதலும், உடன்போக்கு மேற்கொள்ளத் தூண்டுதலும் நிகழும். இந்நிகழ்வினைத் தொல்காப்பியர்,*‘‘வேற்றுவரைவு வரின்அது மாற்றுதற் கண்ணும்’*,*‘‘பிறன்வரை வாயினும்’’*[93]எனத் தலைவி, தோழி கூற்றுக்களில் குறிப்பிடுகிறார். தொல்காப்பியர் ‘வேற்று வரைவு, பிறன் வரைவு’ என்ற சொல்லாட்சியைப் பயன்படுத்த, பின்னால் வந்த இறையனார் உள்ளிட்டோர்,‘நொதுமலர் வரைவு’ என்னும் மொழியாளுகைக்குக் கொண்டு செல்வர். இதனை,*‘‘நொதுமலர் வரையும் பருவ மாயினும்’’*[94]என மொழிவர். திருக்குருகைப் பெருமாள் கவிராயர்,*‘‘அயலவர் மணமுர சாயிடை விலக்கலுங்’’*[95]அறத்தொடு நிற்கும் தோழியின் கடனென மொழிவர். சுவாமி கவிராயர்,*‘‘பிறர்வரைவும் உணர்த்தல்’’*[96]என உரைப்பர். ஏனைய இலக்கண ஆசிரியர்கள்,‘அறத்தொடு நிற்றலில்’ மொழிய, சுவாமி கவிராயர்,‘வரைவு கடாதலில்’ உரைப்பர். சரளா ராசகோபாலன் *‘‘இலக்கண நூல்கள் அனைத்திலுமே வெறியாட்டும், நொதுமலர் வரைவும் கூறி வரைவு வேண்டியதாகக் குறிப்பில்லை. ஆனால் அறத்தொடு நிற்றலில் அமைகிறது. நாணுடைய நங்கையர், வெறியெடுத்தலும், நொதுமலர் வரைவும் கூறல் கற்புக்கு இழுக்கு என இலக்கண நூலார் நினைத்திருக்கலாம்’’*[97] என்பர். எனினும் சங்க இலக்கியத்தில் இத்துறையில் பதின் மூன்று பாடல்கள்(நற் -165, 207: குறுந் -31, 321, 379, 385: ஐங்குறு -110,

168, 201, 205, 220, 266, 367:) அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இப்பாடல்கள் அனைத்தும் நொதுமலர் நேருமென அஞ்சலாகவும் அமைந்துள்ளன. இப்பாடல்களில் வரைவுகடாவுதலில்(ஐங்குறு -266:) ஒரு பாடலும், அறத்தொடு நிற்றலில்(நற் -165, 207: குறுந் -31, 321, 379: ஐங்குறு -110, 168, 201, 205, 220, 367:) பதினொரு பாடல்கள் நீங்க, எஞ்சிய பாடல்(குறுந் -385) **நொதுமலர்** துறையில் 'வேற்று வரைவு மாற்றியது.'(குறுந் -385) என வகைப்படுத்தப்படுகிறது.

**வெறியாடல்**

களவுத் தலைவியின் உடல் வேறுபாடு கண்டு, அதற்குக் காரணம் அறியும் நோக்கில் தாயர் வேலனை அழைத்துக் கேட்பது வெறியாட்டாகும். வெறியாடலில் பத்தொன்பது பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில் அறத்தோடு நிற்றலில் (குறுந் -23, 26, 214, 362: ஐங்குறு -28, 210, 248, 250:) எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் நீங்கலாக பதினொரு பாடல்கள் **'வெறியாடல்'** துறையில் 'வெறி அச்சுறீஇ'(அகநா -292), அன்னை வெறியெடுக்கக் கருதும்(நற் - 268, 273: குறுந் -263, 360: ஐங்குறு - 244, 246, 249:), வெறி விலக்கலுறும் தோழி(நற் -34: ஐங்குறு -243, 247) என்ற சொற்கள் அமைந்த துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்கள் வெறியயர்வர் எனல்(நற் - 273),வெறியஞ்சல்(குறுந் -360: அகநா -292:),வெறி விலக்கல்(நற் -34: ஐங்குறு - 243,244,247:), வெறி வெளிப்படுத்துதல்(ஐங்குறு -246),வேலனின் பொய்மையுரை(ஐங்குறு -249),தலைவனின் உள்ளக் குறிப்பை அறிய முயலல்(நற் - 268), அன்னை வெறியெடுப்பல் எனல்(குறுந் -263) என்ற துறைகளில் வகைப்படுத்தப்படுகின்றன.

**வரைவு கடாதல்**

தலைவன், தலைவியின் களவுக் காதல் நீளுமாயின் வெறியாட்டு, நொதுமலர் வரைவு, இற்செறிப்பு போன்ற துன்பங்கள் ஏற்படும். இதனையறிந்த அறிவுடைத் தோழி,''களவென ஒன்று நடந்தது என்பது தோன்றாவகையில் மணத்தை முடித்து வைக்கப் பாடுபடுவாள். பல்வேறு வழிகளால் தலைவனை வற்புறுத்துவாள். இத்துறை வரைவுகடாவல் எனப் பெயர் பெறும்''[98] என்பர் வ.சுப.மாணிக்கம். தலைவியை உற்றுநோக்கும் தன்மை கொண்ட தோழி, அவள் இருவகைக்குறி இடையீட்டால் உற்ற துயரையும், வரைவின்மீது அவள் கொண்ட வேட்கையையும்

அறிந்து, தோழி தலைவனிடம் மணம் பற்றி உரையாடுவாள், வற்புறுத்துவாள். இத்துறையில் பங்குபெறுவோர் தோழியும், தலைவனுமே ஆவார்.

வரைவுகடாதலைத் தொல்காப்பியர்,'வரைவு வேண்டல்' என்று குறிப்பிடுவதை,*''வரைதல் வேண்டித் தோழி','வரைதல் வேண்டினும் ......''*[99]என்னும் நூற்பா அடிகளின்வழி அறியமுடிகிறது. இவ்வரைவுகடாதலை *''வரைதல் வேண்டித் தோழி செப்பியபுரைதீர் கிளவி புல்லிய எதிரும்''*[100]எனத் தலைவனின் மொழிகளிலும், தோழி எவ்வெவ் நிலைகளில் வரைதலை வேண்டுவாள் (தொல்.பொருள். நூ.எ -112:29-36) என்பதையும் குறிப்பிடுவர் தொல்காப்பியர். நம்பியகப்பொருள் விளக்கம் வரைவு கடாதலின் (நம்பியகப்., நூ.எ - 165)நால்வகையைக் குறிப்பிடுகின்றது.

தோழி, தலைவியின் எண்ணப்போக்கை உணர்ந்து. தலைவனிடம் வரைவினை வேண்டிடும் பொருண்மை கொண்ட **76** பாக்கள் காணப்படுகின்றன. இப்பாக்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், தொல்காப்பியர் குறிப்பிடும் **ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும்** துறையில் 'இரவுக்குறித் தலைவன் சிறைப்புறமாக வரைவுகடாயது.'(நற் -154),'ஏதம் சொல்லி'(நற் -257),'இரவுக்குறி விலக்கி'(அகநா -168, 318),'இரவுக்குறிக்கண் வந்து நீங்கும்'(அகநா -202) எனத் துறையின் பொருண்மைக்பேற்ப வகைப்படுத்தப்படுகின்றன.

**காப்பின் கடுமை கையற வரினும்** துறையில் 'செறிப்பு அறிவுறீஇத் தோழி வரைவுகடாயது' எனவமையும் துறைக்குறிப்பு கொண்ட பாடல்கள்(நற் -57, 222, 253, 259, 267, 282, 295, 317, 354: குறுந் -303, 324, 342: ஐங்குறு -186, 194, 245: அகநா -2, 60, 118, 150, 288:) செறிக்கப்பட்டமையும், செறிக்கப்படுவோமோ என அஞ்சும்(நற் -317) பொருண்மை கொண்டனவாகவும்,**வெறியாட்டுத்** துறையில்'வெறிஅறிவுறீஇ வரைவுகடாயது.'(நற் -288) எனவமையும் துறைக்குறிப்பும்,'இரவுக்குறி வந்தொழுகும் தலைவனைத் தோழி வரைவுகடாயது.'(நற் -91) என்னும் துறைக்குறிப்பும்,**காவல் மிகுதி** துறையிலும் 'அலரச்சம் தோன்ற'(நற் -4),'வரைவு நீட்டித்தவழி(நற் -15, 263),'அலர் மலிவு உரைத்து வரைவுகடாயது.'(குறுந் -393) என்ற சொற்களமைந்த துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்கள் **அலரச்சம்** துறை பொருண்மையிலும் வகைப்படுத்தப்படுகின்றன.

**களனும் பொழுதும் வரைநிலை விலக்குதல்** பொருண்மையிலமையும் **குறிப் பெயர்த்திடுதல்** துறையில் இரவுக்குறியில் வருவானை பகற்குறி வாவென கூறி அதுவும் மறுத்து வரைவு கடாதல் பொருண்மையில் துறைக்குறிப்புகளமைந்த பாடல்களும் (நற் -172, 188, 215, 223, 261: குறுந் -353, 375: அகநா -218, 270:),**குறியிடத்தில் தலைவனுடன் இருந்த நிலை எண்ணி வருந்துதல்** துறையில் இரவுக்குறியில் தலைவன் சிறைப்புறமாக இருக்க, தலைவி தலைவனுடன் இருந்த நிலையை எண்ணி வருந்துவதுபோல் வரைவுகடாவுதல் துறைக்குறிப்பிலமைந்த பாடல்களும்(நற் -96, 145) வகைப்படுத்தப்படுகின்றன. **இது பகல் வருவானை இரவு வா எனல்** துறையில் 'பகல் வருவானை இரவுக்குறி நேர்ந்தாள்'(குறுந் -179: நற் -67: அகநா -92:) எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,''இரவுக்குறி வந்து ஒழுகாநின்ற தலைமகனைத் .... பிற்றைஞான்று தோழி, .... கூடல் அரிது' என வரைவுகடாயது.'(குறுந் -244)ம்என்னுந் துறைக்குறிப்பு **குறியிடையீடு கூறல்** துறையிலும்,'இனிப் புனங்காவற்கு வாரோம்'(ஐங்குறு -260) எனவமையும் துறைக்குறிப்பு **தினைப்புனங் காவற்கு வாரோமெனல்** துறையிலும்,**காதல் மிகுதி கூறல்** துறையில் தலைமகளின் காதல் மிகுதியான நிலையிலும், ஆற்றாமை கொள்ளும் நிலையிலும் உள்ள துறைக்குறிப்புகளமைந்த பாடல்கள்(நற் -19, 23, 92, 108, 159, 182, 203, 231, 326, 355: ஐங்குறு -179: அகநா -112:) அமைகின்றன. **கவின் அழிபு உரைத்தல்** துறையில் 'நலம் தொலைந்து'(நற் -395),'பண்டைவளை போலாவாய், மெலிந்துழி, நீங்கா நலனுடையவோ இவை? எனத் தலைமகள் மெலிவு சொல்லி'(ஐங்குறு -193),'இவள் கவின் நீ வந்த காலத்து வருதலால், நீ போன காலத்து அதன் தொலைவு உனக்கு அறியப்படாது' (ஐங்குறு -238)எனவும், இப்பாடல்களுடன் ஐங்குறு -264ஆம் பாடலையும் வகைப்படுத்தமுடிகிறது.

**நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி** துறையில் 'இரவுக்குறித் தலைமகளை இடத்து உய்த்து வந்து'(அகநா -394, 12, 132) என்னுந் துறைக்குறிப்புகளில் 'தலைமகன் குடிப்பெருமையும், தலைமகளின் இல்லின் மேன்மையும் குறிப்பிட்டுள்ளமையின் அடிப்படையில் வகைமைப்படுத்தப்படுகிறது. **அனைநிலை வகையான்** என்பதனுள் **படைத்து மொழிதல்** துறையில் 'தலைமகளை இடத்துஉய்த்து வந்த'(அகநா -156) எனவமையும் துறைக்குறிப்பும்,**தலைவனின் காதலின்மை கூறல்** துறையில் 'வரையாது வந்தொழுகும் தலைமகன் ...'

எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்(ஐங்குறு -277: நற் -396: குறுந் -169: அகநா -172, 320:),**வரைவு நீட்டித்தவழி** துறையில் 'களவின்கண் நெடுங்காலம் வந்தொழுக'(நற் -195),'வரையாது நெடுங்காலம் வந்தொழுக'(நற் -375) எனத் துறைக்குறிப்புகளமைந்த பாடல்களுடன் நற் -283ஆம் பாடலும் வகைப்படுத்தப்படுகிறது. **நொதுமலர் வரைவு** துறையில் '(மற்றோர்) நொதுமலாளர் வரைவின் மேலிட்டு. தாழ்ந்து வரையக் கருதிய'(நற் -300),'நொதுமலர் வரைவு பிறந்துழி,'(ஐங்குறு -266) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**உடன்போக்கு நயந்தாள் போல்** துறையில்'....... தோழி உடன்போக்கு நயந்தாள் போன்று'(ஐங்குறு -236) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களையும்வகைப்படுத்தமுடிகிறது.

**வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு**

நெடுநாள் ஒழுகிய களவொழுக்கத்தைக் கற்பொழுக்கமாக்குவதற்குத் தலைவன் மேற்கொள்வது வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் என்னும் நிகழ்வாகும். இந்நிகழ்வு, களவு வெளிப்பட்டப் பின்னரோ, இடையூறு ஏற்பட்ட நிலையிலோ நிகழும். தலைவியின் குரவர் வரைபொருள் கேட்ட நிலையிலோ, அல்லது தம் இல்லறம் மேன்மையுற வேண்டுமென்ற தலைவனின் இயல்பூக்கத்தின் காரணமாகவோ அமையும். இதனைத் தொல்காப்பியர் *''பொருளென மொழிதலும் வரைநிலை யின்றே......ஒன்றும் வேண்டா காப்பி னுள்ளே''*[101]எனக் களவில் தலைவனின் இயல்புரைப்பதுடன்,*''சுரமென மொழிதலும்''*[102]எனக் களவில் தலைவனின் திறனுரைப்பதும்,*''வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்''*[103]எனத் தலைவி, தானே தோழியிடம் கூறுமிடத்தையும் குறிப்பிடுவர். தலைவனின் பாராட்டு மொழிகளைக் கொண்டு அவன் பிரிவை தலைவி உணரும் தன்மையும் (தொல்.பொருள். நூ.எ -228) தொல்காப்பியத்தில் சுட்டப்படுகிறது. இவ்வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவினை இறையனார்,*''களவினுள் தவிர்ச்சி காப்புமிகி னுரித்தேவரைவிடை வைத்த காலை யான''*[104]எனக் களவில் நிகழும் இடையீடாகக் கருதுமிடத்து மொழிவர்.

தலைவன் தம் மணம்பொருட்டு, பொருள்வயிற் பிரிதல் பொருண்மை கொண்டு, சங்க இலக்கியத்தில் 96 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் மற்றும் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**தலைவன்** கூற்றுப் பாடல்களைப்,**பிரிவுழி கலங்கல்** துறையில் 'வரைவிடை .... தனித்துறைவு

ஆற்றானாய்ச் சொல்லியது.'(ஐங்குறு -195) எனவமையும் துறைக்குறிப்பு வகைப்படுத்தப்படுகிறது. இத்துறைக்குறிப்பு தொல்காப்பியர் குறிப்பிடும் **ஆற்றிடையுறுத்தலும்** (களவு-12) என்னும் சூழலுக்குள்ளும் அமைகிறது.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலைக் குறிப்பிடும் தொல்காப்பியர் (தொல்.பொருள் -110, 211, 228) இம்மீளுதலைக் கூற்றுகளில் குறிப்பிடவில்லையெனினும், தலைவன் கூற்றின் தொடர்ச்சியாக அமைந்த *''பண்பிற் பெயர்ப்பினும்''*[105]என்னும் நூற்பாவில் 'ஆற்றிடையுறுதலும்' என்னும் சூழலை உரைப்பர். இச்சுழலில் நிகழும் களவு நிகழ்ச்சிகளாக உடன்போக்கு, வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல், வரைவிடை வைத்து பொருள்வயிற் பிரிந்து மீளல் என்பன அமைகின்றன. ஆற்றிடையுறுதலுக்குத் *''தான் சேரும் ஆற்றிடை இடையூறு உண்டாயவிடத்தும் கூற்று நிகழும், இரட்டுற மொழிவான் வரைவிடை வைத்துப் பிரிந்தான் தான் சேரும் ஆற்றின்கண் வருத்தமுற்றுக் கூறலும் கொள்ளப்படும்''*[106] என இளம்பூரணரும்,''*இரட்டுறமொழிதல் என்பதனான், ஆற்றிடையுறுதற்கு வரைவிடை வைத்துப் பிரிந்தான் ஆற்றிடை வருத்தமுற்றுக் கூறுவனவும் கொள்க. அது போகின்றான் கூறுவனவும், மீண்டவன் பாங்கற்குக் கூறுவனவுமாம்''*[107] என நச்சினார்க்கினியரும் மொழிவர். இப்பொருண்மையிலமைந்த தலைவன் கூற்றுப் பாடல்களை **வரைவிடை வைத்துப் பிரிந்து மீளும் தலைவன் கூறியது** துறையில் '.... பிரிந்த தலைவன் மீள்கின்றான்' (ஐங்குறு -94, 365),'வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்ற'(ஐங்குறு -291),'வினைமுற்றி மீளுத் தலைமகன்'(குறுந் -233),'வரையாது பிரிந்து வருவான்(குறுந் -235) எனத் துறைக்குறிப்புகள் அமையும் பாடல்களை வகைப்படுத்தப்படுகின்றன.

**தலைவி** கூற்றில் **வரைவிடை நயந்ததைக் குறிப்பினால் உணர்ந்ததை தோழிக்கு உணர்த்தல்** துறையில் 'தானே ... பிரிய நினைந்தனைக் குறிப்பினானுணர்ந்த தலைமகள்'(ஐங்குறு -286) என அமையும் துறைக்குறிப்பமைந்த பாடலும்,**அவள் இரங்குதல் - வருந்துதல்** துறையில் 'வரைவிடை மெலிவாற்றுவிக்கும் தோழிக்கு'(நற் -56),'..... பிரிய ஆற்றாளாய தலைவி கனாக் கண்டு'(நற் -87, 133, 219),'வரைவிடை யாற்றுகிற்றியோ என்ற'(குறுந் -315, 316, 334),'வரைவிடை வற்புறுக்கும் தோழிக்கு'(குறுந் -371) எனவமையும் துறைக்குறிப்புகள் அமைந்த பாடல்களும்,**வன்புறை** துறையில் '.... வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி உரைத்தது.' என்னும் துறைக்குறிப்புடைய பாடலும்(குறுந் -

223),**வன்பொறை எதிர் மொழிதல் -எதிரழிதல்** துறையில் '..... தலைமகள் வன்புறை எதிரழிந்தது.' என தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணம் கூறும்வண்ணம் துறைக்குறிப்பு(நற் -38, 218, 369: ஐங்குறு -209, 274: குறுந் -30, 175, 249:) குறிப்பிடப்பட்டுள்ளமை வகைப்படுத்தப்பட்டுள்ளன. **பிரிந்தவழிக் கலங்குதல்** துறையில் '..... பிரிந்துழி ஆற்றாளாகின்ற தலைமகள்' என துறைக்குறிப்பமைந்த பாடல்கள்(நற் -196, 249, 277, 364: குறுந் -5, 6, 28, 36, 134, 145, 170, 171, 172, 205, 208, 226, 240, 241, 245, 264, 301, 302, 375, 377: ஐங்குறு -141, 183, 295:) வகைப்படுத்தமுடிகிறது. இப்பிரிந்தவழிக் கலங்குதல் துறையிலமைந்த துறைக்குறிப்புகள், தலைவியின் துயர்நிலைக்குத் தோழி ஆற்றுப்படுத்துவதும்,(ஐங்குறு -141, 183, 295: நற் -196, 249, 277: குறுந் -6, 134, 145, 208, 801, 395:), தலைவி துன்புறுவாளென வருந்துவதும் தோழியைத் தலைவி ஆற்றுவதும்(குறுந் -5, 28, 241, 36, 170, 171, 172 205 226, 245 264, 302, 377) என இருவேறு பொருண்மைகளைக் கொண்டுள்ளமையை அறியமுடிகிறது.

**வரைவிடைப் பிரிந்தவிடத்து முனிந்துரைத்தல்** துறையில் வரைவிடை முனிந்து கிழத்தி ...'(குறுந் -310) என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. இலக்கண நூல்களில் 'தலைவி ஆற்றியிருக்க வேண்டுமெனத் தோழி கடுஞ்சொற் கூறலும், தோழிக்குத் தலைவி கடுஞ்சொற்களால் பதிலுரைத்தலும் அமைகின்றன. 'என் நிலையைத் தலைவற்கு உரைப்பாரை யான் பெறேன்' என முனிந்து கூறும் துறை அமைந்தில. ஆதலின் இத்துறை **உய்த்துணரப்படும் துறையாக** அமைகிறது. **இயற்பட மொழிதல்** துறையில் '..... தலைமகள் இயற்பட மொழிந்தது.'(அகநா -22) என இரு துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடலும்,**வந்துழி மகிழ்வு** துறையில் 'வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் வந்து'(ஐங்குறு -120),'....... பிரிந்த தலைமகன் வந்துழித் தலைவி முனிந்து கூறுவாள் போலத் தன் மெலிவு நீங்கினமை'(ஐங்குறு -192),'வரைவொடு புகுதராநின்றான் என்பது தோழி கூற'(ஐங்குறு -253),'.......... 'நீ தொலைந்த நலம் இன்று எய்திய காரணம் என்னை?" என்ற தோழிக்குச் சொல்லியது.' (ஐங்குறு -263) எனவமையும் துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்களை வகைப்படுத்தமுடிகிறது.

**தோழி** கூற்றுப் பாடல்கள், அவற்றின் துறைக்குறிப்பின் பொருண்மை அடிப்படையில் வகைப்படுத்தப்படுகிறது. **பிரிவு உணர்த்திய தலைவனுக்குத் தலைவியின் நிலையுரைத்தல்** துறையில் 'இவள் வேறுபடாமை ஆற்றுவி'

என்றாற்குத் தோழி நகையாடி உரைத்தது.'(குறுந் -236),'வரைவிடை வைத்துப் பிரிவாற்கு'(குறுந் -225),'......... நீங்கும் தலைமகற்கு'(குறுந் -397),'....... பிரிவல் என்ற தலைமகனுக்கு'(ஐங்குறு -239),'நீட்டியாமை வரை'(நற் -247) எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**வரைவிடை உடன்படாமை** துறையில் '....... பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி உடன்படாது கூறியது.'(ஐங்குறு -257),'....... பிரிவும் தலைமகன் நின் துணைவியை உடம்படுவித்தேன். இனி நீயே இதற்கு உடன்படாது கலிழ்கின்றாய் என்றாற்குத் தோழி'(ஐங்குறு -273),'.......... பிரியும் தலைமகற்கு'(நற் -37, 183) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**வரைவிடைப் பிரிகின்றான் ஆற்றுவித்துக் கொண்டிரு என்றாற்குத் தோழி கூறியது**துறையில் '........ பிரியக் கருதும் தலைமகற்கு'(நற் -37) எனவமையும் துறைக்குறிப்பைக் கொண்ட பாடலும்,**படைத்து மொழிதல்** துறையில் 'வரைவிடை மெலிவாற்றுவிக்கும் தோழி ....'(நற் -55), எனவமையும் துறைக்குறிப்பும்,**வன்பொறை மொழிதல்** துறையில் 'வரைவிடை ஆற்றாளாகிய தலைமகளை வற்புறுத்தியது.'(நற் -328),'பிரிந்த அணிமைக்கண்ணே ஆற்றாளாகிய தலைமகட்கு'(ஐங்குறு -219) எனத் துறைக்குறிப்பு கொண்ட பாடல்களும்,**தோழி, தானே வரைவிடைப் பிரிவுக்கு உடன்பட்டமையால் தலைவன் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் மேற்கொண்டானெனல்** துறையில் 'வரையாது பிரிந்தவிடத்து, அவர் பிரிந்தது (பிரிந்த காரணம்) நின்னை வரைந்து கோடல் காரணமாகத்தானெனத் ....'(குறுந் -265) எனத் துறைக்குறிப்பு கொண்ட பாடலும்,**வந்துழி மகிழ்வு** துறையில் '........ பிரிந்த தலைமகன் வரைவான் வந்துழிக் ... தோழி,'நின் கண்மலர்ச்சிக்குக் காரணம் என்?' என்று வினாவிய தலைவிக்கு'(ஐங்குறு -189),'...... பிரிந்த தலைமகன் மீட்சி உணர்ந்த தோழி'(ஐங்குறு -217),'......... பருவத்திற்கு முன்னே வருகின்றமை அறிந்த தோழி தலைமகட்கு மகிழ்ந்து'(ஐங்குறு -223),'மீண்டான் என்பது கேட்டுத் தலைமகட்கு எய்திய கவினைத் தோழி தான் அறியாதாள் போன்று அவளை வினாயது.'(ஐங்குறு -229),'முன்னே வந்தானாக உவந்த தோழி'(ஐங்குறு -252),'வந்தமை அறிந்த தோழி உவந்த உள்ளத்தளாய்'(ஐங்குறு -270) 'தலைமகன் நீட்டித்து வந்துழி'(ஐங்குறு -226) எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களை வகைப்படுத்தமுடிகிறது.

**அறத்தொடு நிற்றல்**

தலைவியின் காதலைத் தோழி, குரவர் உள்ளிட்ட தமரானோர்க்கு வெளிப்படுத்துதல் இப்பெருந்துறையாகும். *''கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு வெளிப்படுத்துதல் என்பது இத்துறையின் பொருள்.''*[108] என வரையறுப்பர் வ.சுப. மாணிக்கனார். இதனையே, புலவர் குழந்தை,*''களவு முதிர்ந்து கற்பொழுக்கத்தின்கண் நிற்றலை வெளியிடுதல் - வரைந்து கொள்ளுதலை வெளியிடுதல்''*[109]என மொழிவர்.

தலைவியின் களவினை மற்றையோர்முன் முன்வைக்கும் தோழிக்கு, தலைவியின் இசைவின்றி வெளிப்படுத்தும் உரிமையில்லை (தொல்.பொருள். நூ.எ - 203) அறத்தொடு நிற்கும் தோழி 'எளித்தல் ஏத்தல் ....' எனஎழுவகை முறைகளைக் கைக்கொள்வதைத்(தொல்.பொருள். நூ.எ -204) தொல்காப்பியர் மொழிவர். அறத்தொடு நிற்றலையும் அதன் முறைகளையும் பொருளியலில் கூறிய தொல்காப்பியர், எவ்வெவ் இடங்களில், எம்முறையில் அறத்தொடு நிற்றலை மேற்கொள்ளும் தன்மையை 'அவள் விலக்குறினுங் ...'(தொல்.பொருள். -112:39) என்னும் களவியல் நூற்பாவில் உரைக்கிறார். நக்கீரனார் 'களவு வெளிப்பட்ட பின்றை வரைதல்'(இறையகப் -24:2) நூற்பாவிற்கு,*''அறத்தொடு நிலை நிகழ்ந்த பின்றை வரைதல்''*[110]எனப் பொருளுரைப்பர். இவ்வெளிப்பாடும்,'தந்தை தாயே தன்னையர் என அனைவரும் அறியச் செய்யும் பண்பாகும்' எனவும் உரைக்கிறது. 'காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும் நொதுமலர் வரையும் பருவ மாயினும் ....'(இறையகப் 29) எனத் தோழி அறத்தொடு நிற்கும் சூழலை இறையனார் சுட்டுவர். தமிழ்நெறி விளக்கம் மேற்கூறிய நிலைகள், சூழல்களைக் கூறுவதொடு, வெறியாட்டு நிகழ்வதையும் நூற்பா -22இல் குறிப்பிடுகின்றது.

அறத்தொடு நிற்றல் துறையிலமைந்த சங்க இலக்கியப் பாடல்கள் 51 என மொழிவர். எனினும் 'வெறி விலக்கியது' துறையில் அமைந்த நற் -34ஆம் பாடலை ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை 'அறத்தொடு நிற்கும் காலத்தன்றி'என்பதற்கு மேற்கோள் பாடலாகக் கொண்டு 'இது முருகற்கு கூறியது' என உரைப்பர். அதனொடு, கற்புப் பாடலாக அமையும் ஐங்குறு -104ஆம் பாடல், முன்னர் நிகழ்ந்த அறத்தொடு நிலையை மீண்டும் செவிலியிடம் தோழி கூறுவதாக அமைகிறது. இப்பாடல்களோடு குறிஞ்சிப்பாட்டையும் சேர்க்கும்பொழுது இத்துறைப் பொருண்மையில் **56** பாடல்கள் காணப்படுகின்றன. எனினும் ஐங்குறு -104ஆம் பாடல் கற்பிலமைய இப்பாடல் நீங்க, 55 பாடல்களின் பொருண்மை கொண்டு

ஆராயின் **காரிகை நேர்தல்** துறையில் ‘அறத்தொடு நிலை வலித்த தோழியைத் தலைவி முகம் புக்கது.’(நற் -244: ஐங்குறு -201:),‘தோழிக்குத் தலைமகள் அறத்தொடு நின்றது.’(குறுந் -31: அகநா -82:), என்ற துறைக்குறிப்புகளொடு, தோழியைத் தனக்காக அறத்தொடு நிற்குமாறு தலைவி வேண்டும் பாடல்களின் துறைக்குறிப்புகள்(குறுந் -259, 305: அகநா -52:) வகைப்படுத்தபடுகின்றன.

**தோழி** கூற்று பாடல்களில் தோழி தலைவியிடம் **அறத்தொடு நிற்றல் நலமெனல்** துறையில் ‘அறத்தொடு நிற்பல்’ எனக் கிழத்திக்குத் தோழி உரைத்தது.’(குறுந் -333) என்னும் துறைக்குறிப்பும்,**அறத்தொடு நின்றமை கூறல்** துறையில் ‘அறத்தொடு நின்றமையைத் தோழி .....’(குறுந் -374) எனவமையும் துறைக்குறிப்பும்,**நொதுமலர் வரையுமிடத்து அறத்தொடு நிற்பேன் எனல்** துறையில் ‘நொதுமலர் வரையுமிடத்து அறத்தொடு நிற்பேன் என்றது.’(குறுந் -321),‘தோழி, தலைவிக்கு அறத்தொடு நிலைபயப்பச் சொல்லியது.’(நற் -165) எனவமையும் துறைக்குறிப்பு வகைப்படுத்தமுடிகிறது. இத்துறையிலமைந்த நற் -297ஆம் பாடலின் துறைக்குறிப்பு சிறைப்புறமாக அமைந்துள்ளது. **காரிகை வேற்றுமை காரணம் வினாவியாட்கு உரைத்தல்** துறையில் ‘ ... ‘இவ்வேறுபாடு எற்றினான் ஆயிற்று?’ என்று வினாவிய செவிலிக்குத் தோழி அறத்தொடு நின்றது.’(ஐங்குறு -366: குறுந் -26: அகநா -48, 110:) என்றமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள் வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களில் குறுந் -26ஆம் பாடல் காரணகாரியத்துடன் அமைந்த துறைக்குறிப்பாக அமைந்துள்ளது.**கட்டுவிச்சியிடம் உரைத்தல்** துறையில்‘கட்டுக்காணிய நின்றவிடத்து’(குறுந் -23) என துறைக்குறிப்பு அமைகிறது. இத்துறை, பாடலின் பொருண்மைக்கேற்ப **கட்டுவிச்சி முருகு என மொழிதல்** என்னும் துறையிலிருந்து வருவிக்கப்பட்டுள்ளது.

**காப்பு மிகுதி** துறையில்‘இற்செறித்த இடத்து .... தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றது.’(ஐங்குறு -28: அகநா -190:) என அமையும் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன. **வெறியாட்டுத்** துறையில்‘தெய்வத்தினால் ஆயிற்று’ என்று வெறியெடுப்புழி’(ஐங்குறு -212, 190),‘வேலனைக் கேட்பத் துணிந்துழி தோழி, செவிலி கேட்குமாற்றால்’(ஐங்குறு -241) எனவமையும் துறைக்குறிப்புகளொடு, இப்பாடல்களின் (நற் -173: குறுந் -214: ஐங்குறு -250:) துறைக்குறிப்புகளும்,**வெறி விலக்கல்** துறையில் ‘வெறி விலக்கி அறத்தொடுநிற்கும்’(நற் -34: குறுந் -362: ஐங்குறு -248:) எனவமைந்த துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன.

**நொதுமலர் வரைவு வந்துழி அறத்தொடு நிற்றல்** துறையில் 'நொதுமலர் வரைவுழி'(நற் -207: குறுந் -379:),'நொதுமலர் வரைவின்கண்'(ஐங்குறு -110, 220, 367),'நொதுமலர் வரைவு வேண்டி விடுத்தமை'(ஐங்குறு -168),'நொதுமலர் வரைவு வேண்டி விட்டுழி'(ஐங்குறு -205) என அமையும் துறைக்குறிப்புகளின் தொடக்கம் கொண்ட பாடல்களும்,**தெய்வத்தால் ஆயிற்று எனத் தமர் நினைத்தல்** துறையில் '... 'தெய்வத்தால் ஆயிற்று' எனத் தமர் நினைத்துழி'(ஐங்குறு -182) என அமையும் துறைக்குறிப்பும்,**தமர் வரைவு மறுத்துழி அறத்தொடு நிற்றல்** துறையில் 'வரைவு எதிர் கொள்ளார் தமர் மறுப்புழி'(ஐங்குறு -29, 30, 212),'தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழி'(ஐங்குறு -228, 271) என்ற துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **உடன் போயினபின் அறத்தொடு நிற்றல்** துறையில் இரு(ஐங்குறு -379, குறுந் -15) பாடல்கள் அமைகின்றன. இப்பாடல்கள் உடன்போக்குத் துறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

இனிவரும் துறைக்குறிப்புகள் அறத்தொடு நிற்றலுக்குப் பின்னர் நிகழும் களவு, கற்பாகும் நிகழ்வுகளாகும். இதனடிப்படையிலே துறைகளும் வகைப்படுத்தப்படுகின்றன. **பரிசமொடு வருதல்** துறையில் 'வரைதற்பொருட்டுப் பிரிந்த தலைமகன் வரைவோடு புகுந்துழி'(ஐங்குறு -101, 102) என்ற துறைக்குறிப்புகளும்,**வரைவு மலிதல்** துறையில் '... தலைமகன் வரைவொடு வந்துழி, தலைமகள் நுதற்கண் .... தோன்றிய கதிர்ப்புக் காட்டி, செவிலிக்குத் தோழி சொல்லியது.' (ஐங்குறு -105) எனவும்,'.... 'இவள் இவ்வாறு பட்ட வருத்தம் எல்லாம் நின்னின் தீர்ந்தது'என்பது குறிப்பின் தோன்ற'(ஐங்குறு -208) எனவமையும் துறைக்குறிப்பும்,**காதலே காரணமெனச் செவிலியை வற்புறுப்பல்** துறையில் 'தோழி அது வற்புறுப்பான் வேண்டி'(ஐங்குறு -106),'தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக் கூறியது.'(ஐங்குறு -107) என்ற துறைக்குறிப்புகளும்,**செவிலியின் ஐயம் போக்கல்** துறையில் '... வரைவு நீடிற்றாக,'மற்றொரு குலமகளை வரையும்கொல்?' என்று ஐயுற்ற செவிலி குறிப்பு அறிந்த'(ஐங்குறு -108) எனத் **தலைவியின் தோள் நலங்கூறல்** துறையிலமையும் துறைக்குறிப்பும்,'ஐயுற்ற செவிலி,'அவன் நும்மைத் துறந்தான் போலும், நுங்கட்கு அவன் கூறிய திறம் யாது?' என்றாட்கு'(ஐங்குறு -109) என **அவனளிச் சிறப்புக் கூறல்** துறையிலமையும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகின்றன. **வரைவு உடன்படல்** துறையில் 'வதுவை நிகழா நின்றுழி, தாய்க்குக் காட்டி உவந்து சொல்லியது.'(ஐங்குறு -103) என்று தோழியின்

மகிழ்வைப் புலப்படுத்தும் நிலையிலும்,**அவன் ஊர் நன்மை காட்டல்** துறையில் 'புதல்வற் பெற்றுழித் தலைமகன் மனைக்கண் சென்ற செவிலிக்கு, ...... அவன் ஊர் நன்மை காட்டிச் சொல்லியது.'(ஐங்குறு -104) என்னும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகின்றன.

**தாய்க்கும் வரையார் உணர்வுடம் படினே** என்பதனுள் அடங்கும் **நற்றாய் அறத்தொடு நிற்றல்** துறையில் 'செவிலியால் அறத்தொடு நிற்கப்பட்ட நற்றாய், தந்தை முதலியோர்க்கு அறத்தொடு நின்றது.'(நற் -234) என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. இப்பாடல் பொ.வே.சோமசுந்தரனார் உரையிலமைந்த கழகப் பதிப்பில் மட்டும் காணப்படுகிறது. **உடன் போயினபின் அறத்தொடு நின்றது** துறையில் 'உடன்போயின பின்றை, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள். நிற்ப, செவிலித்தாய் நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.'(குறுந் -15),'புணர்ந்து உடன்போயவழி தோழி,' (ஐங்குறு -379) என்ற துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களுள் ஐங்குறு -379ஆம் பாடல் தன் மகளின் மணத்தைத் தானே வரைந்திருப்பேனே என்ற தாயின் தவிப்பைப் புலப்படுத்துகிறது.

**உடன்போக்கு**

களவில் நெடுங்காலம் ஒழுகிய தலைமக்களால், தொடர்ந்து காண முடியாத சூழல்கள் உருவாகும். ஊரின் அலர் தூற்றல், அம்பல் இதன் காரணமாகக் குரவர் செய்யும் இற்செறிப்பு, நொதுமலர் வரைவு போன்றவை தலைமக்கள் கண்டு புணர்தற்கு இடையூறாக அமையும். அவ்வேளையில் இருவரும் ஆற்றொண்ணாத் துன்பம் அடைவர். இதனைக் கண்ட தோழி இருவரின் துயர்போக்க 'உடன்போக்கு' மேற்கொள்வதே நலமெனத் துணிவள். தலைவிக்கும் உணர்த்துவள். தலைவனையும் வலியுறுத்துவள். தலைவனும் ஒரு நள்ளிரவு வேளையில் தோழியின் துணையோடு, தலைவியை அவள் பெற்றோர் அறியாமல் உடன் அழைத்துச் செல்வான். இதனைத் *''தலைவன், தலைவியைத் தோழியின் துணைகொண்டு ஆங்கு நின்றும் பெயர்த்து ஒருவருக்கும் தெரியாமல் நள்ளிரவில் தன் மனையிடத்துக்கு உடன் கூட்டிக்கொண்டு செல்வான். இங்ஙனம் அவன் செல்லலை 'உடன்போக்கு' என்று வழங்குவர் அகப்பொருள் நூலார்''*[111] என மொழிவர் ந.சுப்புரெட்டியார். தொல்காப்பியர் உடன் போக்கினைக் *''கொண்டுதலைக் கழிதலும்','போகிய திறத்து','போக்கற் கண்ணும்','கடைக்கொண்டு பெயர்தலிற்','போக்குடன் அறிந்த','புணர்ந்துடன்*

*போகிய', 'போக்கும்''*[112]என்ற சொல்லாட்சிகளால் சுட்டுவர். உடன்போக்குப் பற்றி தோழி (தொல்.பொருள். -42), கண்டோர் (தொல்.பொருள். -43), தலைமகன் (தொல்.பொருள். -44:1-6) மொழியும் இடங்களை அகத்திணையியலில் சுட்டிய தொல்காப்பியர், தோழியுடன் செவிலி வினாவுவதை (தொல்.பொருள். -113:8-9) களவிலும், 'ஆற்றது பண்பும்' (தொல்.பொருள். -468:1)என இளையோர் வழி நடத்துமிடத்தைக் கற்பிலும் கூறி, உடன்போக்கு எச்சூழலில் நிகழ்வதை *'ஒருதலை உரிமை வேண்டினும் .....'(தொல்.பொருள். -221)*என விளக்கியுள்ளார். இறையனார், உடன்போக்கு என்றோ தொல்காப்பியர் போன்று வேறு சொல்லாட்சிகளையோ பயன்படுத்தவில்லை. மாறாக, 'வெளிப்பட்ட பின்றையும் உரிய கிளவி'(இறையகப் - 23) எனக் மொழிவதற்கு நக்கீரனார் *''அவனுடன் போக்கும் உரித்தென்றவாறு''*[113] என மொழிவர். தமிழ்நெறி விளக்கம் 'அலர்பெரி தென்றலு மயல்வரை வுரைத்தலும் .... போக்குடன் வலித்தல்'(தமிழ்நெறி.விளக். -20)என உடன்போக்குக்கான ஏதுக்களைக் கூறுகின்றது.

**சங்க இலக்கியத்தில் உடன்போக்கு**

களவொழுக்கத்தில் கூடி இன்புற்ற தலைவி, தலைவனைக் காண முடியாதவாறு தாயர்களால் இற்செறிக்கப்படுவாள். அவ்வேளையில் தோழியின் உதவியோடு தலைவன் தலைவியைத் தன்னுடன் அழைத்துச் செல்வான். இந்நிகழ்வு உடன்போக்காகும். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் 119 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின் தொல்காப்பியர் குறிப்பிடும் **தலைவன்** கூற்றிலமையும் **ஒன்றாப் பருவத்தும்** துறையில் 'தோழியால் தலைமகள் உடன்வரும் எனக் கேட்ட'(அகநா - 121) என அமையும் துறைக்குறிப்பில் தலைவனின் உடன்போக்கை மாற்றும் நோக்கு தெளிவு. **சுரத்தும்** துறையில் 'உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்கு உரைத்தது'(நற் -9) என்னும் துறைக்குறிப்பின் பாடலில் தலைவன் சுரத்தின் இயல்பைக் கூறும் பொருண்மை கொண்டது. **வலிப்பினும்** துறையில் 'மறுத்துத் தானே போகின்றவழி, இடைச் சுரத்தின் பொல்லாங்கு கண்டு கூறியது.'(குறுந் -56) எனவும், **விடுப்பினும்** துறையில் 'உடன்போதுவல்' என்ற தலைவிக்குத் தலைவன்(நற் -162) மறுத்துக் கூறும் துறைக்குறிப்பும், **இடைச்சுர மருங்கில் அவள்தமர் எய்திக் கடைக்கொண்டு பெயர்தலிற் கலங்கஞர் எய்தி** என்னும் துறையில் 'உடன்போகாநின்ற தலைமகன் தலைமகட்குச் சொல்லியது.'(நற் -362) என்னும்

துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகின்றன. இங்கு நற் -362ஆம் பாடல் **அடிவழி நினைந்து நின்றவன் உளம் வாடல்** துறையிலும் அமைகிறது.

**அப்பாற்பட்ட ஒருதிறத்தானும்** பொருண்மையினுள் அமையும் **வழிவந்த நன்மை கூறி வருந்தம் போக்கல்** துறையில் 'உடன்போய் மீள்கின்ற தலைமகன்'(ஐங்குறு -395, 396), புணர்ந்து உடன் போகாநின்ற தலைவன் இடைச்சுரத்து'(நற் -76, 202) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**மருட்டிக் கூறல்** (வருத்தம் தோன்றாமல் இருக்கும்பொருட்டுக் கானகக் காட்சிகளைக் காட்டிப் பேசுதல்) துறையில் '.... தலைமகன் மருட்டிச் சொல்லும்'(அகநா -99, 257) துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**நாணிக் கண்புதைத்துக் கூறல்** துறையில் 'பூத்தொடுக்கின்ற தலைமகளைக் கண்டு புகழ, அவள் அதற்கு நாணி, கண்புதைத்தவழிச் சொல்லியது.'(ஐங்குறு -361) என அமையும் துறைக்குறிப்பும்,**நலம் பாராட்டல்** துறையில் 'இடைச்சுரத்துத் தலைமகளைப் பாராட்டியது.'(ஐங்குறு -363) என்னும் துறைக்குறிப்பும்,**உண்மகிழ்ந்துரைத்தல்** துறையில் 'உடன்போகாநின்றான் மலிந்து தன் நெஞ்சிற்குச் சொல்லியது.'(நற் -384) என்னுந் துறைக்குறிப்பும்,**ஊர் சார்ந்தமை கூறல்** துறையில் 'ஊர் காட்டி வற்புறுத்தியது'(நற் -264) உரைக்கும் துறைக்குறிப்பும்,**தலைவன் மீளவுரைத்தல்** துறையில் 'இடைச்சுரத்துப் பட்டதனை மீண்டு வந்த காலத்துத் தோழிக்கு'(அகநா -261) மொழியும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தமுடிகிறது.

தொல்காப்பியத்தில் உடன்போக்கில் தலைவிக்கான கிளவிகள் விடுபட்டுள்ளன எனவுரைப்பர் இலக்கண உரையாசிரியர்கள். இதனைத் "*தலைமகள் கூற்றுத் தனித்துக் கூறல் வேண்டும். இவரோடு ஒரு நிகரன்மையில் எனின் ஒக்கும். தலைமகள் கூற்று உணர்த்திய சூத்திரம் காலப் பழமையாற் பெயர்த்தெழுதுவார் விழ எழுதினார் போலும்*"[114] எனப் இளம்பூரணர் இயம்புவதன்மூலம் அறியமுடிகிறது. ஆயினும் இளம்பூரணர் "*தலைமகள் பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக் கண்டு கூறுதலும், பிரிவுணர்ந்து கூறுதலும், பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறுதலும், உடன்போவல் எனக் கூறுதலும், இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லி விட்டனவும், தமர் வந்துற்றவழிக் கூறுதலும், மீளலுற்றவழி ஆயத்தார்க்குச் சொல்லி விட்டனவும், பிரிவாற்றாமையும், ஆற்றுவல் என்பது படக் கூறுதலும், தெய்வம் பராவலும், பருவங்கண்டு கூறுதலும், வன்புறை எதிரழிந்து கூறுதலும்*

*இவையெல்லாம் கூறப்படும்.''*[115]எனத் தலைவிக்கான துறைகளை மொழிந்துள்ளார். இதனடிப்படையில் **தலைவி** கூற்றுப் பாடல்களை **உடன்போதுவல்** துறையில் 'போக்குடன்பட்ட தலைமகள் தோழிக்குச்'(அகநா -95: குறுந் -149:) என துறைக்குறிப்புகள் அமைகின்றன. இப்பொருண்மையினை நக்கீரனார்,***நாண் அழிவு இரங்கல்*** என விளம்புவர். **பிரிவுணர்த்திய தோழிக்குக் கூறல்** துறையில் 'தலைமகன் பிரிவின்கண் தலைமகள்'(அகநா -325),'..... பிரிய நயந்ததனைக் குறிப்பினால் உணர்ந்த தலைமகள் தோழிக்கு உரைக்கும்'(ஐங்குறு -286) என்னும் பொருண்மை கொண்ட பாடல்களும்,**இடைச்சுரத்து ஆயத்தாருக்குச் சொல்லி விடல்** துறையில் 'உடன்போகிய தலைமகள் ஆண்டு எதிர்வரும் அந்தணர்க்கு'(ஐங்குறு -384),'இடைச்சுரத்துக் கண்டாரை,'யான் போகின்ற படியை யாய்க்கு நீர் கூறவேண்டும்' .'(ஐங்குறு -385) என அமையும் துறைக்குறிப்புகளும்,**மீளலுற்றவழி ஆய்த்தார்க்குச் சொல்லி விடல்** துறையில் 'உடன்போய் மீள்கின்ற தலைமகள் தன் ஊர்க்குச் செல்கின்றாரைக் கண்டு கூறியது'(ஐங்குறு -397) என்னுந் துறைக்குறிப்பும்,**தமர் வந்துற்றவழி ஆண்டு நிகழ்ந்தது கூறல்** துறையில் 'உடன்போயின் தலைமகள் மீண்டுவந்துழி,'நின் ஐயன்மார் பின் துறந்து வந்த இடத்து நிகழ்ந்தது என்ன?'(ஐங்குறு -312) துறைக்குறிப்பும்,**மீண்ட தலைவி தோழிக்குக் கூறல்** துறையில் 'உடன்போய் மீண்ட தலைமகள்,'நீ சென்ற நாட்டு நீர் இனிய அல்ல, நீ எங்ஙனம் நுகர்ந்தாய்?' எனக் கேட்ட தோழிக்குக் கூறியது.'(ஐங்குறு -203) என்னும் துறைக்குறிப்பும்,**வழிவரல் வருத்தம் கண்டு வருந்திய தோழிக்கு கூறல்** துறையில் 'தலைமகன் வழிவரல் வருத்தம் கண்டு, ஆற்றாளாகிய தோழிக்குச் சொல்லியது.'(ஐங்குறு -392) என்னும் துறைக்குறிப்பையும் வகைப்படுத்தமுடிகிறது.

**தோழி** கூற்றுக்களாகத் தொல்காப்பியர் குறிப்பிடும் **தலைவரும் விழுமநிலை யெடுத்துரைப்பினும்** துறைக்குள் 'தலைமகள் குறிப்பு அறிந்து வந்து தலைமகற்கு.'(அகநா -107),'வேறுபட்ட தலைமகட்கு'(அகநா -65),'உடன்போக்கு ஒழித்துத் தனித்துச் செல்வல்' என்ற தலைமகற்கு'(ஐங்குறு -305),'தலைமகள் ஒழியப் போகலுற்ற தலைமகற்கு'(குறுந் -124) என்ற துறைக்குறிப்புகள் ***தலைமகனுக்குத் தலைமகளின் விழுமத்***தையும்,'உடன்போக்கு நயப்பத் தோழி தலைமகட்குக் கூறியது.'(குறுந் -217),'தோழி தலைவியை உடன்போக்கு

வலித்தது.'(நற் -149) என்ற துறைக்குறிப்புகள் ***தலைமகட்குத் தலைமகனின் விழுமம்*** கூறுவதாக அமைகின்றன.

**போக்கற் கண்ணும்** துறையில் 'தலைமகள் உடன்போக்கு நேர்ந்தமை உணர்ந்த தலைமகன், ...... செலவு அழுங்கலுறுவானைத் தோழி அழுங்காமற் கூறியது.'(குறுந் -388),'உடன்போக்கு வலித்த தோழி'(அகநா -283),'சுரத்து அருமை கூறி உடன்செலவு மறுக்கும் தலைமகற்கு'(ஐங்குறு -303) என அமையும் துறைக்குறிப்புகளும்,**தலைமகட்கு போக்கு நேர்ந்தமையைக் கூறல்** துறையில் 'உடன்போக்கு நேர்ந்த தோழி, கிழத்திக்கு உடன்போக்கு உணர்த்தியது.'(குறுந் -262) என்னும் துறைக்குறிப்பும்,**உடன்போக்கிற்கு ஒருப்படக் கூறல்** துறையில் 'உடன்போக்கு நயப்பக்'(குறுந் -343),'உடன்போக்கு உணர்த்தியது.'(குறுந் -369),'நாணால் வருந்தும் தலைமகளை நாணுக் கெடச்'(குறுந் -383),'.... தலைமகளைப் பாயல் உணர்த்திச் சொல்லியது.'(ஐங்குறு -200),'இடையாமத்து வந்துழி'(ஐங்குறு -235),'உடன்போக்கு நயந்தாள்'(ஐங்குறு -236),'உடன்போக்கு உடன்பட வேண்டிய தோழி'(ஐங்குறு -254),'உடன்போக்கு நயந்த தலைமகன் அதனைத் தோழிக்கு உணர்த்த .....'(ஐங்குறு -364),'தலைமகட்குப் போக்கு உடன்படச்'(அகநா -221),'உடன்போக்கு நேர்ந்த தோழி'(அகநா -259),'உடன்போக்கு உடன்படுவித்த தோழி'(அகநா -285) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**ஓம்படை கூறி விடுத்தல்** துறையில் 'உடன்போக்கு ஒருப்படுத்து மீளும் தோழி'(குறுந் -115),'உடன்போக்கும் தோழி கையடுத்தது.'(நற் -10) என்ற துறைக்குறிப்புகளும்,**நீக்கலின் வந்த தம்முறு விழுமம்** துறையில் 'தோழி உடன்போக்கு அஞ்சுவித்தது.'(நற் -12),**இயல்புறல்** துறையில் 'தோழிக்கு 'இனியான் இவளை வரைந்தமை நுமர்க்கு உணர்த்த வேண்டும்' .....'(ஐங்குறு -280) என்னும் துறைக்குறிப்புடைய பாடலுடன் ஐங்குறு -398ஆம் பாடலும்,**கற்போடு புணர்ந்த கவ்வை** துறையில் 'உடன்போயின பின்றை, தோழி செவிலிக்கு அறத்தொடு நின்றாள், நிற்ப, செவிலித்தாய், நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.'(குறுந் -15) என்னுந் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது. முற்கூறிய 'இயல்புறல்' துறையும்,'கற்பொடு புணர்ந்த கவ்வை'யில் அடங்குகிறது.

**தாய்**கூற்றில் தொல்காப்பியரின் கூற்றுப்படி **தன்னும் அவனும் அவளும் சுட்டித்** துறையில் 'மனைமருண்டு சொல்லியது.'(நற் -271),'மகட் போக்கிய தாய்

சொல்லியது.'(அகநா -203) என இத்துறைக்குறிப்புகளுடன் ஐங்குறு -372ஆம் பாடலின் துறைக்குறிப்பும் அமைகிறது. **மன்னும் நிமித்தம்** துறையில் 'தாய் காகத்திற்குப் பராய்க்கடன் உரைத்தது'(ஐங்குறு -391) என அமையும் துறைக்குறிப்பும்,**மொழிப்பொருள் தெய்வம்** துறையில் 'தெய்வத்திற்குப் பராஅயது.'(அகநா -35, 195) எனவமையும் துறைக்குறிப்புகளும்,**நன்மை** துறையில் 'நற்றாய் 'உடன்போக்கு அறநெறி' என்று மகிழ்ந்து கூறி'(ஐங்குறு -371), எனவும்,**தீமை** என்பதனுள் **சுரம் நினைந்திரங்கல்** துறையில் 'மகட் போக்கிய தாய் உரைத்தது.'(நற் -279),'மனைமருட்சி'(நற் -66, 179) என்ற துறைக்குறிப்புகளும்,**அடிநினைந்திரங்கல்** துறையில் நற் -279 என்ற செய்யுளும் அமைகின்றன.

**அச்சம்** துறையில் 'அவள் இளமை நினைந்து இரங்கித் தாய்'(ஐங்குறு -374),'மகட்போக்கிய தாய்'(அகநா -105), எனத் தலைவியின் தாய் கொள்ளும் அச்சமுரைக்கும் துறைக்குறிப்புகளும்,**முன்னிய காலம் மூன்றொடு விளக்கல்** துறையில் 'அவள் பந்து முதலாகிய கண்ட நற்றாய் கலங்கிச் சொல்லியது.'(அகநா -383: நற் -110: ஐங்குறு -377:) எனத் தலைவியின் புழங்குபொருட்களைக் கண்ணுற்று தாய் புலம்பும் துறைக்குறிப்புகளும்,**தோழி தேஎத்து** துறையில் 'அவள் தோழி ஆற்றாமை கண்ட'(ஐங்குறு -378),'மனைமருட்சி'(நற் -184),'இரங்கிய தாய் தெருட்டும் அயலாட்டியர்க்கு உரைத்தது.'(அகநா -55) எனத் தலைவிக்காக தோழி, அயலோர் ஆற்றாமை கொள்ளும்நிலையில் தாய் பதிலுரைக்கும் துறைக்குறிப்புகளும்,**போகிய திறத்து நற்றாய் புலம்பலும்** துறையில் 'மகட்போக்கிய தாய் சொல்லியது.'(நற் -27: அகநா -15, 275, 315:) எனத் துறைக்குறிப்புகள் அமைந்த இப்பாடலுடன் ஐங்குறு -392ஆம் பாடலும் அடங்குகிறது.

**அன்ன பிறவும்** என்பதனுள்,**நற்றாய் தலைவனின் தாயை வெகுண்டு கூறல்** துறையில் 'தாய்மனை மருண்டு சொல்லியது.'(நற் -293),'தலைமகளைத் தலைமகன் கொண்டு கழிந்த கொடுமை நினைத்து,'(ஐங்குறு -373),'அவன் தாய் அவட்டுச் சிலம்புகழி நோன்பு செய்கிறாள்' எனத் கேட்ட நற்றாய் ...'(ஐங்குறு -399) என அமையும் துறைக்குறிப்புகளும்,**தீவினையை வெகுண்டு புலம்பல்** துறையில் 'நற்றாய் விதியை வெகுண்டு சொல்லியது.'(ஐங்குறு -376) என்னும் துறைக்குறிப்பும்,**மீள வந்துழி சுற்றத்தார்க்குக் கூறல்** துறையில் 'வந்துழி, தாய் சுற்றத்தார்க்குச்

சொல்லியது.'(ஐங்குறு -394) என்னும் துறைக்குறிப்பும்,**செவிலியைப் போற்றல்** துறையில் 'செவிலி ஆற்றாமை கண்ட நற்றாய் ...'(ஐங்குறு -313) என்னும் செவிலியின் அன்பினைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும்,**சுரத்தும்** என்னும் பொருண்மையில் **தேடல்** துறையில் 'சேரியும் அயலும் தேடிக் காணாது வந்தாரைக் கண்டு'(ஐங்குறு -375) எனத் துறைக்குறிப்பும்,**யானே குற்றமுடையள் எனல்** துறையில் 'மனைமருட்சி'(நற் -143) எனத் தலைவியின் உடன்போக்குக்குத் தானே காரணமானவளென வருந்தும் துறைக்குறிப்பும்,**கற்பொடு புணர்ந்த கவ்வைத்** துறையில் தாயின் தவிப்பைப் புலப்படுத்தும் ஐங்குறு -379ஆம் பாடல் அறத்தொடுநிற்றல் துறையிலும் வகைப்படுத்தப்பட்டுள்ளது. உடன்போக்குச் சூழலில் அமையும் நற்றாய் கூற்று பாடல்கள் அனைத்தையும் மனைமருட்சி, மகட்போக்கிய தாயின் புலம்பல் என இரு துறைகளில் வகைப்படுத்தவும் ஏதுவாகிறது.

**செவிலி** கூற்றில் **சுரத்திடை வருந்தல்** துறையில் 'இடைச்சுரத்துச் செவிலித்தாய்'(குறுந் -44),'பின் சென்ற செவிலித்தாய்'(ஐங்குறு -389: நற் -198:) எனச் செவிலி தன் மகளை தேடி வருந்தும் துறைக்குறிப்புகளும்,**எஞ்சியோர்க்கும்** என்னும் பொருண்மையுள் **இடைச்சுரத்து நவ்விப் பிணாவிடம் கூறியது** துறையில் 'சுரத்திடைப் பின் சென்று நவ்விப் பிணாக் கண்டு சொல்லும்(அகநா -7) துறைக்குறிப்பும்,**சுரம் நினைந்திரங்கல்** துறையில் 'மகட்போக்கிய செவிலித்தாய் ...'(குறுந் -144, 356: அகநா -89, 397:) என்ற துறைக்குறிப்புகளும்,**மனையின்கண் மயங்கிக் கூறல்** துறையில் 'செவிலித்தாய் மனையின்கண் ...'(அகநா -49),'மகட்போக்கிய செவிலி ...'(குறுந் -84: அகநா -15, 17, 145, 153, 189, 203, 207, 219, 321, 369, 385:),'தெருட்டுவார்க்குச் செவிலித்தாய்'(ஐங்குறு -380),'மனைமருட்சி.'(நற் -110) என்ற துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன. **தெய்வத்திற்குப் பராயது** துறையில் 'செவிலி தெய்வத்திற்குப் பராயது.'(குறுந் -378) என்னுந் துறைக்குறிப்பும்,**தலைவியின் இயல்பு வியத்தல்** துறையில் 'தலைமகள் புணர்ந்துடன் செல்ல, செவிலி தன் மகளுக்குச் சொல்லியது.'(அகநா -63: குறுந் -396:) என்ற துறைக்குறிப்புகளும்,**தலைவனின் காதல்மிகுதி உரைத்தல்** துறையில்'மகட்போக்கிய செவிலித்தாய்'(அகநா -117, 263) என்ற துறைக்குறிப்புகளும்,**தலைவி வருகைச் செய்தி கூறல்** துறையில் 'வதுவை அயரப்பட்ட தலைவி,'தலைவனோடு இன்று வரும்' எனக் கேட்ட செவிலித்தாய் ....'(ஐங்குறு -400) என அமையும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**கண்டார்** என்பதனுள் கண்டார், அந்தணர், அயலோர் போன்றோரின் கூற்றுகள் அமைந்த பாடல்கள் இவ்வுடன்போக்குப் பகுதியில் அமைந்துள்ளன. **பொழுதும் ஆறும் வழுவினாகிய குற்றம் காட்டல்** துறையில் ‘இடைச்சுரத்துக் கண்டார் பொழுதும் செலவும் பகையும் காட்டிச்.’(குறுந் -390),‘ஊரின்கண் எல்லிடைத் தங்கியவழி, அவ்வூர்ப்பெண்டிர் பார்த்து இரங்குதல் கண்டார் கூறியது.’(ஐங்குறு - 382) என்னுந் துறைக்குறிப்புகளும்,**புணர்ந்தோர்.... அழிந்தெதிர் கூறி விடுப்பினும்** துறையில் ‘இடைச்சுரத்துக் கண்டார் ....’(ஐங்குறு -381: நற் -2: குறுந் - 229:),‘வளைத்த கொம்பிற் பூக்கொண்டு தனக்கும் பாவைக்கும் வகுக்க கண்டார் ...’(ஐங்குறு -383) என அமையும் துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **தாய்நிலை கண்டு தடுத்தல்** துறையில் ‘.... கண்டார் அவள் தாய்க்குச் சென்று கூறியது.’(ஐங்குறு -386),‘கண்டோர் தாம் கண்டவாறு .....’(ஐங்குறு - 390),‘செவிலியால் வினாவப்பட்ட அந்தணர் ...’(ஐங்குறு -387) எனச் செவிலியால் வினாவப்பட்டோர் மொழியும் துறைக்குறிப்புகளும்,**விடுத்தல்** துறையில் ‘தேடிச் சென்ற செவிலிக்கு இடைச்சுரத்துக் கண்டார் ....’(ஐங்குறு -388),**சேய்நிலைக்கு அகன்றோர் செலவு** துறையில் ‘செலவின்கண் இடைச்சுரத்துக் கண்டார் ....’(குறுந் - 7),‘தாயது நிலைமை கண்டார் .....’(அகநா -165) எனச் செவிலியின் நிலைக்கு இரங்கும் துறைக்குறிப்பும்,**வரவினும்** துறையில் ‘உடன்போய்த் தலைமகள் மீண்டுவந்துழி அயலோர் அவள் தாய்க்குச் சொல்லியது.’(ஐங்குறு -393) எனத் தலைவியின் வரவுரைக்கும் துறைக்குறிப்பையும் வகைப்படுத்தமுடிகிறது.

**வரைவு**

களவுக் காதலில் திளைக்கும் காதலர்கள் தம் காதலை, மேன்மையாக நினைத்துருக, தோழியோ அக்காதலைக் கற்பாக மாற்ற வேண்டுமென்ற எண்ணத்துடன் இருப்பாள். களவு மற்றோர்க்குப் புலப்படுமாயின் அலர் உண்டாகித் தலைவி இற்செறிப்பு, வெறியாட்டு போன்ற நிகழ்வுகளுக்கு ஆட்படுவாள். அதற்குமுன் வரைதலை மேற்கொள்ள வேண்டுமென, அதற்கான செயலில் இரங்குவாள் தோழி. அவை வரைவுகடாதல், வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலில் தலைவியின் ஆற்றாமை கூறல், அவைகள் இல்லாத நிலையில் உடன்போக்குத் துணிதல் போன்ற செயல்திட்டங்களின் ஊக்கியாகத் தோழி விளங்குவாள்.

இந்நிலையில் வரைவு பற்றிய சில துறைகள் தோழியை மையமாகக் கொண்டே நிகழ்கின்றன. அவை தோழியிடம் தலைவன், தலைவி பேசும் இடங்களாகவும் அமைகின்றன. இப்பொருண்மையில் நாற்பத்தைந்து பாடல்கள் சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றன. இப்பாடல்களில் **தலைவன்** கூற்றுகளாக அமைந்த பாடல்களைக் **கடிதின் வரைவேனெல்** துறையில் ''இனி அது கடுகமுடியும்' என உவந்த உள்ளத்தானாய் தன்னுள்ளே சொல்லியது.'(ஐங்குறு - 259) எனத் தலைவியின் உள்ளமுணர்ந்த தலைவனின் உவகை உள்ளம் உரைக்கும் துறைக்குறிப்பும்,**வரைவு மறுக்கப்படல்** துறையில் 'வரைவு மறுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன்'(நற் -356) எனத் தலைவன் துயர்கொள்ளும் துறைக்குறிப்பும்,**வரைவு மாட்சிமைப்படின் நேரில் வருவேன்** துறையில் ''வரைவு மாட்சிமைப்படில் நானே வருவல்' எனத் தலைமகட்குச் சொல்லியது.'(ஐங்குறு -92) எனத்தன் வரையும் நோக்கினைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வரைவுப் பொருண்மையிலமைந்த 'தலைவன் வரைவோடு புகுதல், வரைவு நிகழா நின்றுழி தலைவன் வருந்துதல்' போன்ற துறைகள் அறத்தொடு நிற்றல் உள்ளிட்ட துறைகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவி** கூற்றுப் பாடல்களை **வரையும் திறம் தெளிதல்** துறையில் 'தலைமகன் வரையும் திறம் தெளிக்க, தெளிந்த தலைமகள் சொல்லியது.'(ஐங்குறு -112) எனத் தலைவியின் வரைவுத் தெளிந்தமையைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும்,**வரைவொடு வருதலைத் துணிந்தான்** துறையில் 'வரைவொடு வருதலைத் துணிந்தான் என்பது தோழி கூறக்'(ஐங்குறு -181, 213) எனத் தலைவியின் மகிழ்வைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இப்பொருண்மையிலமைந்த 'தலைவன் வரைந்து கொள்வானெனல், வரைவு வந்துழி மகிழல்' என்பன போன்ற துறைகள் பிற துறைகளில் விரவிக் காணப்படுதலை அறியமுடிகிறது. **வரைவு தலைவருதல்** துறையில் '... ஐயுற்றிருந்த தலைமகள் வரைவு தலைவந்துழித் தோழிக்கு'(ஐங்குறு -146) எனத் தலைவியின் மகிழ்வைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும்,**வரைவு உணர்த்திய தோழிக்கு உரைத்தல்** துறையில் இத்துறையின் பொருண்மையினைச் சுட்டும் துறைக்குறிப்பும்(குறுந் -257, 367) **வரைவு மலிந்த தோழிக்கு உரைத்தல்** துறையில் 'வரைவு மலிந்தவழித் தோழி நன்கு ஆற்றினாய் என்றாட்கு'(குறுந -361, 368) என வரைவு மலிவுத் துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தோழி** கூற்றில் **வரைவு முடுக்கம்** துறையில் ஐங்குறு -234ஆம் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் அறத்தொடு நிற்றல் துறையிலும் வகைப்படுத்தப் பட்டுள்ளது. **வரைவு மலிவு** துறையில் ‘வரைவு மலிந்த தோழி’(நற் -22),‘வரைவு மலிந்து உரைத்தது.’(நற் -91, 163: அகநா -160, 178:),‘வரைவு மலிந்தது.’(நற் -78, 367, 393: குறுந் -297:),‘தோழி வரைவு மலிவு கூறியது’(குறுந் -51),‘வரைவு மலிந்தமை’(குறுந் -34: அகநா -42, 70:),‘தலைமகன் வரைந்தெய்துதல் உணர்த்திய செவிலியைத் தோழி வாழ்த்தியது.’(குறுந் -83),‘தலைமகன் வரைவு மாட்சிப்படுத்தமை அறிந்த தோழி’(ஐங்குறு -147),‘வரைவு மறுத்த தமர் உடம்படுமாற்றால் சான்றோரை தலைமகன் விடுத்தது அறிந்த தோழி’(ஐங்குறு -145),‘தலைமகன் வரைதல் வேண்டித் தானே வருகின்றான்’(ஐங்குறு -202) என வரைவு மலிதலால் தலைமக்களின் மகிழ்வைப் எடுத்துரைக்கும் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன.

**கடிதின் வரைவு** துறையில் ‘... தோழி தனக்கு நற்குறி செய்யக் கண்டு,‘கடிதின் வந்து வரைவான்’ எனச் சொல்லியது.’(குறுந் -55: ஐங்குறு -218) எனத் தலைவனின் வரைவுத் துணிவை உணர்த்தும் துறைக்குறிப்பும், வரைவு மறுத்த நிலையில் **அவன் மலையே எம்முயிர் காவல் எனல்** துறையில் ‘வரைவு வேண்டிவிட மறுத்துழித் தமர்க்கு உரைப்பாளாய், .... அவன் மலை காண்டலே பற்றாகத் தாங்கள் உயிர்வாழ்கின்றமை ....’(ஐங்குறு -258) எனத் தலைவியின் தமர்க்கு தம் உணர்வைப் புலப்படுத்தும் துறைக்குறிப்பும்,**வரையாமையின் தலைவி ஆற்றாள்** துறையில் ‘யான் வரையும் துணையும் ஆற்றவல்லளோ? ....’(குறுந் 365) என அமையும் துறைக்குறிப்பு, துறைக்கு வினாவாக அமைதலை அறியமுடிகிறது. **பொருளீட்டலில் நாட்டமுடையனெனல்** துறையிலமையும் ஐங்குறு -268ஆம் பாடலின் துறைக்குறிப்பு, இத்துறைக்கு வினா போன்று அமைந்துள்ளமையும் வகைப்படுத்தப்படுகிறது.

**கற்புக் கைகோள்**

மக்களின் அகவாழ்வு களவு, கற்பு என்னும் இருபெரும் பிரிவுகளாகப் பகுக்கப்பெறும். வரைவுக்கு முந்தைய வாழ்வினைக் ‘களவு’ என்றும், வரைவு மற்றும் அதற்குப் பிந்தைய வாழ்வினைக் ‘கற்பு’ என்றும் சுட்டுவர். இதனைத் தொல்காப்பியர் 487ஆம் நூற்பாவில் களவைப் பற்றி குறிப்பிட்டுவிட்டு,

*“மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்*
*இவைமுத லாகிய இயனெறி திரியாது*
*மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்*
*பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே”*[116]

எனக் குறிப்பிடுவர். உடன்போக்கு மேற்கொண்டு தாமே வரைந்து கொள்ளுதலும், பெற்றோர் கொடுப்ப வரைந்து கொள்ளுதலுமாகிய அகவாழ்வில் தலைவனும் தலைவியும் கூடி இன்புற்றிருத்தல் மலிவு ஆகும். இதனைப் பேராசிரியர், *“மலிதல் என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்றால் மகிழ்தல், புலவி என்பது புணர்ச்சியான் வந்த மகிழ்ச்சி குறைபடாமல் காலங் கருதிக் கொண்டு உய்ப்பதோர் உள்ள நிகழ்ச்சி. ஊடல் என்பது உள்ளத்து நிகழ்ந்தனைக் குறிப்பு மொழியான் அன்றிக் கூற்றுமொழியான் உரைப்பது. ஊடல் நிகழ்ந்தவழி அதற்கு ஏதுவாகிய பொருளின்மை உணர்வித்தல் உணர்வெனப்படும்... புலவிக்காயின் உணர்த்தல் வேண்டா, அது குளிர்ப்பக் கூறலும் தளிர்ப்ப முயற்கலும் முதலாயவற்றான் நீங்குதலின் ..... துனித்தல் என்பது வெறுத்தல்”*[117] என விளக்கியுரைப்பர்.

கற்புக் கைகோள் ஐவகை உணர்வுகளைக் கொண்டது. இவ்வகை உணர்வுகளும் மிகுநிலையில் மிகுப்பினும், தளரும் நிலையில் தளர்ந்தும் அமைந்து கற்பு வாழ்வினைச் செம்மைப்படுத்துவதாய் அமைப்பதுடன் இன்பமாகவும் மாற்றுகின்றன.

**மலிவு**

களவில் மறைந்தொழுகிய தலைமக்கள், வரைந்தெய்திய கற்பு வாழ்வில் புணர்ந்து மகிழ்ந்தொழுகுதல் மலிவாகும். இம்மலிவினைக் ‘கிழவோன் மகிழ்ச்சி, கிழத்தி மகிழ்ச்சி, பாங்கி மகிழ்ச்சி, செவிலி மகிழ்ச்சி’ என நால்வகையாகக் குறிப்பர் நாற்கவிராச நம்பி.

தலைமக்களின் மகிழ்வுக்கு காரணமாகத் திகழும் தோழி, அவர்களின் மகிழ்வுகண்டு மகிழ்ந்து வாழ்த்துவாள். தன் மகிழ்வை தலைவனுக்கும் செவிலிக்கும் உரைப்பாள். தலைமக்கள் மகிழ்ந்திருக்கும் காலங்களில் தலைவன், தான் வரையாதிருந்த காலத்திலும், பிரிந்திருந்த தலைவி ஆற்றியிருந்த திறம் அறிய முற்படுவான். அதற்குத் தலைவி ‘ஆற்றியிருந்த திறம்’ உரைப்பாள். அவ்விடம் தோழி இருப்பாளாயின், ஆற்றியிருந்த திறமும், விரைந்து வரைந்தமையால்

தலைவனை புகழ்ந்தும் வாழ்த்தியும் பதிலுரைப்பாள். வரைவிற்குப்பின், மனைக்கு வரும் தோழி, தலைவியின் புணர்வினால் உண்டான கவின்கண்டு அவளை வாழ்த்துவதும் நிகழும். தலைவியின் இல்லற வாழ்வின் சிறப்பைச் செவிலிக்கும் உரைப்பாள். தலைமக்கள் புதல்வனொடு மகிழ்ந்திருப்பதைக் கண்ட செவிலி மகிழ்வதும், அதனை நற்றாய்க்கும் பிறருக்கும் மகிழ்ந்துரைப்பதும் நிகழும். இதனை நாற்கவிராச நம்பி, நம்பியகப் பொருள் 203ஆம் நூற்பாவிலும்,திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இலக்கண விளக்கத்தில் 552ஆம் நூற்பாவிலும் எடுத்துரைப்பர்.

**சங்க இலக்கியத்தில் மலிவு**

சங்க அகஇலக்கியத்தில் தலைமக்கள் மகிழ்ந்திருக்கும் பொருண்மையில் தொண்ணூறு (90) பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றுள், தலைவன் கூற்றில் (குறுந் -400: ஐங்குறு -97, 411-420:) பன்னிரண்டு பாடல்களும், தலைவி கூற்றில் (குறுந் -49, 157, 193, 201, 228, 322: அகநா -352: ஐங்குறு -292:) எட்டுப் பாடல்களும், தோழி கூற்றில், (நற் -35, 131, 294, 361: குறுந் -178: ஐங்குறு -6-10,104,148, 149, 294: அகநா -400:) பதினைந்து பாடல்களும், செவிலி கூற்றில் (குறுந் -167, 242: ஐங்குறு -400-410:) பதின்மூன்று பாடல்களும், காதலுணர்ந்தோர் தம்முள் கூறுமவதாக (ஐங்குறு -421) ஒரு பாடலுமாக மலிவுப் பொருண்மையில் நாற்பத்தொன்பதுபாடல்கள் காணப்படுகின்றன.

இப்பகுதியில் மலிவுப் பொருண்மையில் **நாற்பத்தொன்பது** பாடல்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**தேர்ப்பாகனைத் தலையளித்தல்** துறையில் 'வினைமுற்றி வந்த தலைமகன் தோர்ப்பாகனைத் தலையளித்தது.'(குறுந் -400) எனத் துறையை விளக்கும் துறைக்குறிப்பும்,**தலைவியின் பேதைமை எண்ணி மகிழ்தல்** துறையில் 'புறத்தொழுக்கமின்றியே இருக்கவும் உளதெனப் புலர்ந்த தலைமகளைப் ....'(ஐங்குறு -97) என்னும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது. தலைவன் கூற்றில் அமைந்த மற்ற பாடல்கள் பிரிவுப் பொருண்மையில் **மகிழ்ந்துரைத்தல்** துறையில் (நற் -86, 89, 181, 139: குறுந் -99, 209, 210, 270, 288: ஐங்குறு -324, 325, 351-354, 356, 491-495, 500:) இருபத்திரண்டு பாடல்களும்,**வந்ததிறம் கூறல்** துறையில் (ஐங்குறு -355, 359, 360) மூன்று பாடல்களும்,**குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை கூறி மகிழ்தல்** துறையில் (ஐங்குறு -411-420, 449, 496) பன்னிரண்டு பாடல்களும்,**எம்மையும் நினைத்தீரோ என்றாட்குத் தலைவன்**

**உரைத்தது** துறையில் (அகநா -29, 309) இருபாடல்களும் வகைப்படுத்தப்படுகின்றன.

**தலைவி** கூற்றில் **ஆற்றாமை நீங்கியவழி கூறல்** துறையில் ‘தலைமகள்,…நீங்கியவழிப் பள்ளியிடத்தானாகிய தலைமகற்குச் சொல்லியது.’(குறுந்-49) என்னும் துறைக்குறிப்பும்,**பூப்பு** துறையில் ‘பூப்பெய்திய தலைமகள் உரைத்தது.’(குறுந் -157) எனத் துறையின் பொருண்மையை ஒத்த துறைக்குறிப்பும்,**பிரிவின்கண் வருந்தாமைக்குக் காரணம் கூறல்** துறையில் இத்துறைக்குப் பதிலுரைப்பதுபோல் ‘நலந்தொலையாமே நன்கு ஆற்றனாய்’ என்றாட்குக் கிழத்தி உரைத்தது’(குறுந் -193) என அமைந்துள்ளது. **வருவானென நற்சொல் கேட்டு மகிழ்ந்து கூறல்** துறையில் ‘கடிநகர் வேறுபடாது நன்கு ஆற்றினாயென்ற தோழிக்குக்... ’(குறுந் -201) என்ற துறைக்குறிப்பும்,**நெஞ்சிற்கு அணியராயிருந்த திறம் உணர்த்துதல்** துறையில் ‘கடிநகர் வேறுபடாது நன்கு ஆற்றினாய்’ ...’(குறுந் -228) என்னும் துறைக்குறிப்பும்,**பரத்தை மணத்தால் தலைவி உவந்து கூறல்** துறையில் ‘பின் முறையாக்கிய பெரும்பொருள் வதுவை முடிந்தவளை ....’ (குறுந் -292) என்னும் துறைக்குறிப்பில் தலைவனின் மறுமணத்தால் தலைவியின் மகிழ்வு சுட்டும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகின்றன. **தலைவனின் இனிமையுரைத்தல்** துறையில் ‘வரைந்து எய்திய பின்றை மணமனைக்கண் சென்ற தோழிக்குத் ....’(அகநா -352) என்னும் துறைக்குறிப்பும் அமைகிறது. தலைவி கூற்றிலமைந்த குறுந்தொகைப் (குறுந் -107) பாடலொன்று **‘காமம்மிக்க கழிபடர் கிளவி’** துறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**தோழி** கூற்றில் **தலைவனைப் பாங்கி வாழ்த்தல்** துறையில் ‘தோழியைத் தலைவன் ‘வேறுபடாமை ஆற்றுவித்தாய்’ ....’(நற் -131: ஐங்குறு -294:) என்ற துறைக்குறிப்புகளும்,**பாங்கி மடந்தையை வரையும் நாளாளவும் இடன்பெற ஆற்றிய நிலை அதனை வினாதல்** என்னும் துறைக்குப் பதிலுரைக்கும் பொருண்மையிலமைந்த **ஆற்றுவித்த விதம் கூறல்** துறையில் ‘மணமனைப் பிற்றைஞான்று புக்க தோழி நன்கு ஆற்றுவித்தாய்’ ....’(நற் -35) என்னுந் துறைக்குறிப்பும் அமைகிறது. மேற்குறித்த துறையிலமைந்த துறைக்குறிப்புகள் துறைகளின் வினாபோல் அமைந்துள்ளன. **தலைவியின் கவின் கண்டு மகிழல்** துறையில் ‘மணமனையுள் புக்க தோழி ...’(நற் -294) என்னும் துறைக்குறிப்பும்,**விருந்தயர விரும்பி முயல்கின்றமையைக் கூறல்** துறையில்

‘வாயில்களோடு தோழி உவந்து சொல்லியது.’ (நற் -361)எனவமையும் துறைக்குறிப்பும்,**புணர்ச்சி விதும்பல் கண்டு தோழி அழிந்து கூறல்** துறையில் அமைந்த குறுந் -178ஆம் பாடலின் துறைக்குறிப்பு தலைமக்களின் மகிழ்வைப் புலப்படுத்துவதாக அமைகின்றன. **அலர் அடங்கியமை கூறி மகிழல்** துறையில் ‘தலைமகள் வரைந்து எய்திய பின்றைத் தோழி கூறுவதாகத்(அகநா -400) துறைக்குறிப்பும்,**இழைத்திருந்த திறம் உணர்த்தல்** துறையில் ‘...... ‘யான் வரையாது ஒழுகுகின்ற நாள் நீயிர் இங்கு இழைத்திருந்த திறம் யாது?....’(ஐங்குறு -6-10) எனத் துறைக்குறிப்பு அமைகிறது. பின்னை இலக்கண நூல்கள் மொழியும் தலைவி, தானாற்றியிருந்த நிலையினை, தோழியைத் தலைவனிடம் கூறு என மொழிதலும், தோழி மொழிதலும், தலைவனிடம் கேட்டலுமாகிய துறைகளின்வழி இத்துறை வருவிக்கப்பட்டது. **இனிதே இன்புறக் கூறல்** துறையில் ‘.... பள்ளியிடத்து உய்க்குந் தோழி சொல்லியது.’(ஐங்குறு -148) எனத் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது. தோழி கூற்றிலமைந்த (ஐங்குறு-358) ஒரு பாடல், பிரிவுப் பொருண்மையில் **‘தலைவி ஆற்றாதிருந்த நிலையைத் தலைமகற்குக் கூறல்’** துறையில் வகைப்படுத்தப்படவுள்ளது.

**கற்பில் செவிலி**

களவு காலத்தில் செவிலியின் நிலைப்பாடுகளின்னின்று கற்புக்காலத்து நிலைப்பாடுகள் மாறுபடுகின்றன. தலைவன், தலைவி, தோழி, நற்றாய் போன்றோரின் கூற்று மொழிகளை விரிவாகப் பேசும் தொல்காப்பியர், செவிலியின் கூற்று மொழிகளைச் சுருங்க உரைப்பர். செவிலி இன்னார் எனக் குறிப்பிட்டு, இவளின் கூற்றாக,

*“கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள*
*நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்,*
*செவிலிக் குரிய ஆகும் என்ப”*[118]

எனக் கற்பியலில் குறிப்பிடுகிறார். இந்நூற்பாவினால் தலைவியின் கற்பு வாழ்வில் செவிலியின் கூற்றுமொழி நிகழும் என்பது அறியமுடிகிறது. இந்நூற்பாவிற்கு உரை கூறுமிடத்து நச்சினார்க்கினியர்,*“இனி ஆகும் என்றதனாலோ செவிலி நற்றாய்க்கு உவந்துரைப்பனவுங் கொள்க”*[119]எனவுரைத்து, குறுந் - 242, ஐங்குறு -401, 404, நற் -110 என்ற நான்கு பாடல்களையும் மேற்கோளாகச் சுட்டுவர்.

**சங்க இலக்கியத்தில் செவிலி**

சங்க அக இலக்கியத்தில் களவு, உடன்போக்கு போன்ற சூழல்களில் தலைவியின் நலம் பேணும் சிந்தனையுடன் செயல்படும் செவிலி, கற்புக் காலத்தில் தலைவி மணங்கொண்ட காதலனுடன் வருகை புரிவதைக் கண்டு உரைப்பவளாகவும், அவள் ஆற்றும் இல்லறக் கடமை கண்டு பெருமிதம் கொள்பவளாகவும், தலைவியின் கற்புவாழ்வு கண்டு மகிழ்வதுடன், அதனை நற்றாய்க்கு உரைக்கும் தன்மையினளாகவும் காணப்படுகிறாள். இப்பொருண்மையில் (குறுந் -167, 252: ஐங்குறு -400-410) பதின்மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில் **மீண்டவள் செல்வனும் செல்வியும் வியனகா் ஆண்டு அமைந்தனரென ஆய்ந்துரைத்தல்** துறையில்'உடன்போய் வதுவை அயரப்பட்ட தலைவி, தலைவனோடு இன்றுவரும்'(ஐங்குறு -400)என்னும் துறைக்குறிப்பும்,**நன்மனை வாழ்க்கைத் தன்மை உணர்த்தல்** துறையில்'கடிநகா் சென்ற செவிலித்தாய் ...'(நற் -110: குறுந் -167) என்ற துறைக்குறிப்பும் அமைகின்றன. **அன்னவர் காதல் அறிவித்தல்** துறையில் 'கடிநகா் சென்ற செவிலித்தாய்'(குறுந் -242) கடிமனைச் சென்றுவந்த செவிலி உவந்த உள்ளத்தாளாய்'(ஐங்குறு -401-409) எனத் தாய்க்கு மொழியும் துறைக்குறிப்புகளும்,**அன்னவர் காதல் கண்டு மகிழல்** துறையில் 'புதல்வனொடு பாடல் கேட்டிருந்தமை கண்டு, ....'(ஐங்குறு -410) என்னும் துறைக்குறிப்பும் அமைவதை வகைப்படுத்தமுடிகிறது. தலைமக்களின் மனைக்காதலை உணர்ந்தோர் தம்முள் கூறுவனவாக அமைந்த **கிழத்தியின் மாண்பினைப் பாராட்டிக் கூறல்** துறையில் ஐங்குறு -421ஆம் பாடலின் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது.

**ஊடல்**

கற்பு வாழ்வில் இன்புற்று வாழும் தலைமக்களிடையே தோன்றும் சிறு பிணக்குகளை அல்லது மனக் கலக்கங்களை ஊடல் என்ற சொல்லால் குறிப்பர் சான்றோர். இவ்வூடல், காதலர்களிடையே உப்பு அமைந்தாற்போல் அகவாழ்வில் எந்நிலையில் யார் யாருக்கு நிகழும் என்பதைத் தொல்காப்பியர் தெளிவுபடக் கூறுவர். களவுகாலத்தில் அல்லகுறிப் படுதல், குறிமயங்குதல் என்ற இரண்டையும் தலைவன் ஊடல் கொள்ளும் காலங்களாகத் தொல்காப்பியப் பொருளியல் 42ஆம் நூற்பாவில் குறிப்பிடுவர்.

*"உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்*

*புலத்தலும் ஊடலும் கிழவோற் குரிய''*[120]

எனக் களவு கற்பு இரு காலங்களிலும் தலைவன் ஊடல் கொள்ளும் தன்மையைப் புலப்படுத்துவதொடு, ஊடல் காலங்களில் தலைவன் பணிமொழியே தலைவியிடம் உரைக்கிறான் என்பதைத் தொல்காப்பியப் பொருளதிகார 158ஆம் நூற்பாவில் சுட்டுவர்.

**சங்க இலக்கியத்தில் தலைவன் ஊடல்**

தலைவன் பரத்தையிற் பிரிந்த காலத்திலும் காலந்தாழ்த்தி வருவானாயினும், வினைவயிற் பிரிந்து குறித்த பருவத்து வாராது இருப்பானாயினும் தலைவி ஊடல் கொள்வாள். தலைவியின் ஊடலைத் தலைவன் போக்க முயல்வான். தலைவனின் தேற்றுதல் மொழிகள் மொழிந்தும் தலைவியின் ஊடலைத் தீர்க்காத நிலையில் தலைவன் ஊடல் கொள்வான். தலைவன் ஊடல் தீர்க்க முயலும் பொருண்மையில் எட்டுப் பாடல்கள் (நற் -370: குறுந் -19: ஐங்குறு -72-74: அகநா -38, 126, 136:) காணப்படுகின்றன. இப்பாடல்கள் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**ஊடல் நீட ஆற்றாளாய தலைமகன் கூறியது** துறையில் 'ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் பாணற்கு'(நற் -370) எனத் துறையின் பொருண்மைக்கேற்பவும்,**உணர்ப்புவயின் வாரா ஊடலில் தலைவன் அழிந்து கூறல்** துறையில் 'உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் ....'(அகநா -126, 136) எனவும்,**புலவி நீக்கிப் புனலாட வாருமெனல்** துறையில் 'தலைமகள் புலவி நீங்கித் தன்னோடு புதுப்புனலாட வேண்டிய தலைமகன்'(ஐங்குறு -72 -74) எனவும் துறைக்குறிப்புகளை வகைப்படுத்தமுடிகிறது.

**தலைவி ஊடல்**

தலைவனின் குறிப்பினை அறிதற்காகவே தலைவி ஊடல் கொள்வாள் (தொல். -157). இவ்வூடற் காலங்களில் மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும் (தொல். -223) நிகழும். இப்பணி மொழிகளில் தலைவன் தலைவியின் நலம்பாராட்டுதல் (தொல். -224) நிகழும் என உரைப்பர் தொல்காப்பியர். வெளிப்படுத்தாத ஊடலின்போது தலைவி பரத்தையைப் புகழ்ந்தாலும் அவள் உள்ளத்தில் ஊடல் மிகுந்திருக்கும்(தொல். -229). அப்புகழ்தலும் கிழவோன் குறிப்பினை உணர்தற்கெனச்(தொல்.பொருள்.பொருளி -230) சுட்டுவர். அவ்வாறு பரத்தையர்க்காகத் தலைவனிடம் பேசுமிடமாகத்,

*''தம்முறு விழுமம் பரத்தையர் கூறினும்*

*மெய்ம்மை யாக அவர்வயி னுணர்ந்தும்*

*தலைத்தாட் கழறல்தம் எதிர்ப்பொழு தின்றே*

*மலிதலும் ஊடலும் அவையலங் கடையே''*[121]

எனக் கலவியின் இறுதியிலும், புலவியை உள்ளத்து வைத்துக் கூறுவாள் என மொழிகிறார்.

**சங்க இலக்கியத்தில் தலைவி ஊடல்**

தலைவி ஊடல்கொள்ளும் பொருண்மையில் முப்பத்தைந்து பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் **பரத்தையர்க்குச் சிறப்புச் செய்தமை அறிந்து ஊடுதல்** துறையில் '... தலைமகள் பரத்தையர்க்குப் பின்பும் அவன் சிறப்புச் செய்தான் என்பது கேட்டுப் பொறாளாய்க் .....'(ஐங்குறு -12) என்னுந் துறைக்குறிப்பும்,**பெட்பினும்** துறையில் 'அவன் கொடியனேயாயினும் அவன் மார்பு குளிர்ந்த துயிலைச் செய்யும் இனிய சாயலையுடையது. ஆதலாற் காண்'(ஐங்குறு -14) எனத் தோழிக்கு உரைப்பதும்,**காய்தல்** துறையில் '... புறத்தொழுக்கம் உளதாகின்றதென்று குறிப்பினானுணர்ந்து தலைமகள் வேறுபட்ட' (ஐங்குறு -15, 164, 165) எனத் தலைவியின் மனப்புலவி கூறும் துறைக்குறிப்புகளும்,**ஆடவர் ஒழுகலாறு கூறியாட்குத் தலைவி கூறியது** துறையில் பரத்தையிற் பிரிதல் ஆடவர் இயல்பு எனத் தோழி மொழிவதற்குத் தலைவி பதிலுரைக்கும் துறைக்குறிப்பும்(ஐங்குறு -17) வகைப்படுத்தப்படுகிறது.

**கொடியோர் கொடுமை சுடுமெனக் கூறல்** துறையில் 'பாணன் வாயிலாகப் பரத்தையோடு கூடினானென்று கேட்ட தலைமகள் .......'(ஐங்குறு -48, 49) என அமையும் துறைக்குறிப்பும்,**செல்லாக் காலைச் செல்கென விடுத்தல்** துறையில் 'இது மறைத்தற் கரிது என உடம்பட்டு இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது என்றாற்கு அவள் சொல்லியது.'(ஐங்குறு -61, 62),'பரத்தையரோடு பொழுது போக்கி நெடிது துய்த்து வந்த'(ஐங்குறு -70),'புறத்தொழுக்க முண்டாகியவழி அதனை யறிந்து தலைவி'(ஐங்குறு -83) என அமையும் துறைக்குறிப்புகளும்,'பல்வேறு நிலையினும்' (தொல். -145) என்னும் பொருண்மையிலமைந்த **புறத்துப் போய் வந்தானிடம் புறத்தொழுக்கம் உளதென புலத்தல்** துறையில் 'பிரிந்து புறத்து தங்கி

வந்தானாக'(ஐங்குறு -63, 66) என்ற துறைக்குறிப்புகளும்,**பரத்தையை மணந்ததை மறுத்தானிடம் புலத்தல்** துறையில் பரத்தையை மணந்ததையும், பூவணிந்ததையும் தலைவன் மறுக்கும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்(ஐங்குறு -69, 370),**பரத்தை புறனுரைத்தாளெனத் தலைமகற்கு அறியக் கூறல்** துறையில் 'பரத்தை புறனுரைத்தாளெனக் கேட்ட தலைவி தலைமகன் வந்துழி'(ஐங்குறு -67, 68) எனத் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்,**தாய்போற் கடிறித் தழீஇக் கோடல்**துறையில்'தலைமகன் பரத்தையர்மேல் காதல் கூர்ந்து நெடிது செல்வுழி ...'(ஐங்குறு -85) என்னுந் துறைக்குறிப்பும், தொல்காப்பியம் குறிப்பிடும் '*வாயிலின் வருவும் வகை*'என்பதனுள் அமைந்த **ஊடியதற்குக் காரணம் வினவிய தோழிக்குத் தலைமகன் கொடுமை கூறியது** துறையில் 'தோழி 'நீ இவ்வாறு செய்தற்குக் காரணம் என்' என்று வினவியவழித் தலைமகள் ....'(ஐங்குறு -150) என்னுந் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **இயல்பட மொழிதல்** துறையில் 'தோழி இயற்பழித்தவழி ....'(குறுந் -181) எனவும்,**யாரையும் அறியேன் என்றாரிடம் புலத்தது** துறையில் 'தலைமகன் 'யாரையும் அறியேன்' என்றாற்கு ....'(நற் -20: ஐங்குறு -369: அகநா -16:) எனவமையும் துறைக்குறிப்புகளும்,**பரத்தையுடன் நீராடியமை அறிந்து ஊடல் கொள்ளல்** துறையில் 'பரத்தையர் பிரிந்துவந்த தலைமகற்கு'(அகநா -6) எனவும்,**இல்லம் புகுந்தாரிடம் ஊடல் கொள்ளல்** துறையில் 'பரத்தையிற் பிரிந்து வந்து கூடிய தலைமகற்கு'(அகநா -196, 266) என ஊடல், புலவிப் பொருண்மையிலமைந்த துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன.

**ஊடலில் தோழி**

ஊடல் காலங்களில் தலைவியை நெறிப்படுத்தும் நிலையில் தோழி விளங்குவாள். அவள் தலைமக்களின் இருவரின் உள்ளமுணர்ந்து, அவர்களை இணைக்கும் முயற்சியை மேற்கொள்வாள். இதனைத் தொல்காப்பியர்.

*''புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்*
*சொலத்தகு கிளவி தோழிக்குரிய'*
*'பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழவி*
*மடத்தகு கிழமை உடைமை யானும்*
*அன்பிலை கொடியை என்றலும் உரியள்''*[122]

என மொழிவர்.

தலைமக்களின் ஊடற் காலங்களில், அவர்களின் ஊடலுக்குக் காரணம் அறிந்து, அதற்கேற்ப தன் சொல்லாடல்களை நிகழ்த்துவாள் தோழி. இவள் தலைவனின் புறத்தொழுக்கம் ஊடலுக்குக் காரணமாக அமையும் நிலையில் அதனைக் கடிந்துரைக்கும் தகுதி பெற்றவள். ஊடல் காலங்களில் தலைவியின் ஆற்றாமையைத் தலைவனுக்கு உணர்த்துவாள். உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் நிற்போளைக் கடிந்துரைத்துத் தலைவனை ஏற்றுக்கொள்ளச் செய்யும் தன்மை வாய்ந்தவள். இப்பொருண்மையிலமைந்த ஐந்து பாடல்கள் (நற் -30, ஐங்குறு -21, 27: அகநா -50: பரிபா -7:) உள்ளன. இப்பாடல்கள்,துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**தலைவியின் ஆற்றாமை கூறல்** துறையில் 'தோழி பாணனுக்குச் சொல்லியது.'(அகநா -50) எனவும்,**யாரையும் அறியேன் என்றாற்கு யான் அறிவேன் எனல்** துறையில் பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன்'யாரையும் அறியேன்' என்றாற்கு'(நற் -30) எனவும்,**உணர்ப்புவாயின் வாரா ஊடலுற்றோட்கு உணர்த்துதல்** துறையில் 'புறத்தொழுக்கம் எனக்கு இணையில்லை என்று தலைமகன் தெளிப்பவும்'(ஐங்குறு -21),'வாராது தாழ்த்துழிப் 'புறத்தொழுக்கம் உளதாயிற்று' எனக் கருதி வருந்தும்'(ஐங்குறு -27) எனவும் ஊடற் பொருண்மையிலமைந்த துறைக்குறிப்புகளை வகைப்படுத்தமுடிகிறது.

**பரத்தையர்**

சங்க இலக்கியங்களுள் மருதத் திணைப் பாடல்களில் பரத்தையர் பற்றிய பாடல்கள் மிகுந்திருக்கும். இப்பரத்தையரால் தலைமக்களிடையே ஊடல் உண்டாகும். இவ்வூடலைப் போக்கத் தோழியர், வாயிலோர் போன்றோர் முயல்வரென இலக்கிய மற்றும் இலக்கண நூல்கள் விளக்குகின்றன. அவ்வகையில் தொல்காப்பியம் 'அயலோர் அகற்சி'(தொல் -41) என்று குறிப்பிடுகிறது.. இப்பரத்தையின் அகற்சியில் தலைவன் இரத்தலுந் தெளித்தலும் என இருநிலைகளில் கூற்றுக்களை நிகழ்த்துவான்.(தொல் -44:22-24) பரத்தையர் பிரிவு நால்வர்க்கும் உரியது(தொல் -28). ''*புல்லுதன் மயக்கும் புலவிக் கண்ணும்....... கண்ணிய காமக் கிழத்தியர் மேன.*''[123] எனப் பரத்தையர் கூற்றுப் பற்றிக் குறிப்பிடுகிறது. இறையனார்,பரத்தையர் பிரிவு பற்றிக் குறிப்பிடும் 44ஆம் நூற்பாவிற்கு ''சிவப் பாற்றுவித்தல்''[124] என்னும் துறையாகச் சுட்டுவர் நக்கீரனார். இவ்வாறு பரத்தையர் பேசுமிடங்களைச் சுட்டுவர் இலக்கண ஆசிரியர்கள்.

**சங்க இலக்கியத்தில் பரத்தையர் மொழிகள்**

சங்க அக இலக்கியத்தில் பரத்தையர் பேசுமிடங்களாக நாற்பத்தொரு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் துறைக்குறிப்புகளின் பொருண்மைகளை ஆராயின் **பாங்காயினார் கேட்ப சொல்லியது** துறையில் 'காதற்பரத்தை – தலைவியின் பாங்காயினார் கேட்ப உரைக்கும்(நற் -216: குறுந் -8, 164: ஐங்குறு -37, 39, 87, 89, 90:), புதிய பரத்தையின் பாங்காயின வாயில் கேட்ப மொழியும் பாடலும்(நற் -390),'பரத்தை – தலைவியின் பாங்காயினார் கேட்ப உரைக்கும்(நற் -40, 100, 176: குறுந் -80, 370: ஐங்குறு -81, 88: அகநா -76, 106, 216, 276:), தன் பாங்காயினார் கேட்ப உரைக்கும்(நற் -320: அகநா -166:), அயற்பரத்தையின் பாங்காயினார் கேட்ப உரைக்கும்(ஐங்குறு -40), இற்பரத்தை –வேறொரு பரத்தையின் பாங்காயினார்க் கேட்ப உரைக்கும்(குறுந் -364: அகநா -186:), நயப்புப் பரத்தை -இற்பரத்தையின் பாங்காயினார் கேட்ப உரைக்கும் துறைக்குறிப்பு கொண்ட பாடலும்(அகநா -336) வகைப்படுத்தப்பட்டுள்ளன. **பரத்தை தாயின் கோபம் கூறித் தலைவனை இகழ்தல்** துறையில் 'தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை தலைவனை ....'(நற் -150) என்னும் துறைக்குறிப்பும்,**மனைவியைக் காய்வின் றவன்வயிற் பொருத்தல்** துறையில் 'பரத்தை விறலிமேல் வைத்துத் தலைமகளை ....'(நற் -390), தலைமகளைப் பரத்தை நொந்து சொல்லியது.'(நற் -315) எனவும்,**தலைவனின் இன்றியமையாமை கூறிப் புகழ்தல்** துறையில் 'பரத்தை தலைவனைப் புகழ்ந்தது.'(நற் -400) எனவும்,**தலைவன் தன் மனத்து உவகை கூர்தலைத் தோழி பரத்தைக்கு கூறுதல்** துறையில் 'புதல்வன் கூறிய மாற்றம் தலைமகட்குப் பாங்காயினார் கூறக் கேட்டனன் என்பதறிந்த பரத்தை'(ஐங்குறு -38, 86) என அமையும் துறைக்குறிப்புகளும்,**நீ நின் மனைக்குச் செல்லாமையின் யான் நின்னொடு புனலாடுவேன் எனல்** துறையில் 'முன்னொரு ஞான்று தலைவியோடு புனலாடினான் எனக் கேட்டு, ..... புதுப்புனலாடப் போது என்ற தலைமகற்குச் சொல்லியது.'(ஐங்குறு -77, 78) என்ற துறைக்குறிப்புகளும்,**காதற்பரத்தை புலவி** துறையில் 'காதற்பரத்தை புலந்து சொல்லியது.'(அகநா -376) எனவும்,**அவள் ஊடல் கொள்ளல்** துறையில் 'காதற்பரத்தை தலைமகற்குச் சொல்லியது.'(அகநா -396) எனவும் வகைப்படுத்தமுடிகின்றன. **தலைவியின் புலவி**த் துறையில் ஐங்குறுநூற்றில் (121-128) எட்டுப் பாடல்கள் வகைப்படுத்தப்படுகின்றன.

**வாயில் வேண்டல்**

பரத்தமை காரணமாகப் பிரிந்த தலைவன், தொடர்ந்து அங்கு தங்குவானில்லை. தன் இல்லறக் கடமை ஆற்றுவதற்காகவும், தன் ஆற்றாமையின் காரணமாகவும் தன் இல்லிற்கு வர எண்ணுவான். அந்நிலையில் தோழியிடம் இரந்து கேட்டலை 'வாயில் வேண்டல்' என்பர். தலைவன் வாயில் வேண்டல் பற்றிய கூற்றுகள் தொல்காப்பியத்தில்,

"அருமைக் காலத்துப் பெருமை காட்டிய
எளிமைக் காலத்து திரக்கத் தானும்"[125]

எனக் குறிப்பாகப் பதிவு செய்யப்பட்டிருக்கிறது. தலைவன், பரத்தையரிடமிருந்து மீண்டு வந்து, தோழியிடம் வாயில் வேண்டுமிடத்து, அவள் பதிலுரைப்பதாக அமைந்துள்ளது. அகப்பொருள் விளக்கத்தில் *"வெள்ளணி யணிந்து விடுத்துழிப்"*[126]என வாயில் வேண்டலின் தருணத்தைக் குறிப்பிடுகிறது. பின்னை இலக்கண நூல்களும் இவ்வாயில் வேண்டலை இந்நிலையிலேயே குறிப்பிடுகின்றன.

**சங்க இலக்கியத்தில் வாயில் வேண்டல்**

சங்க அகஇலக்கியத்தில் வாயில் வேண்டல் பொருண்மையில் இரு பாடல்கள் (குறுந் -196, 295) காணப்படுகின்றன. இப்பாடல்கள் 'வாயில் வேண்டிய தலைவற்குத் தோழி, அவனின் மாற்றங் குறித்தும், தலைவியின் துன்பங்குறித்தும் இடித்துரைத்துப் பதிலுரைப்பதாக அமைந்துள்ளன. இப்பாடல்கள் இரண்டுமே **நிகழ்வினடிப்**படையில் தலைவன் புறத்தொழுக்கம் மேற்கொண்டு, மீண்டு வந்த நிலையைச் சுட்டுகின்றன. **கூறுவோர் கேட்போர்** அடிப்படையில், தோழி தலைவனுக்குக் கூறுவதாக அமைகின்றன.

**வாயில் மறுத்தல்**

கற்புக் காலத்தில் தலைவிக்கு உடன்பாடில்லாத, ஏற்றுக்கொள்ள முடியாத, தலைவன் மேற்கொள்ளும் பிரிவு பரத்தையிற் பிரிவு ஆகும். இப்பிரிவு, தலைவியின் உள்ளத்தில் துன்பத்தையும், அதன் காரணமாக ஊடலையும் மிகுவிக்கும். இக்காலங்களில் தலைமகன் மற்றும் அவனுக்காகத் தூது வரும் வாயில்கட்கு வாயில் மறுக்கப்படும். இவ்வாயில் மறுத்தல், தலைவி மற்றும் தோழி ஆகியோர்மாட்டு நிகழ்வது. தலைவி, தன்னைவிட்டு வேறொரு பரத்தையுடன் தலைவன் இன்புற்றிருக்கிறான் என்பதை அறிந்து, தோழியின் வேண்டுகோளுக்கும்

இணங்காது, தலைவனுக்கும், அவனுக்காக வரும் தூதுவர்களுக்கும், வருவது தோழியாயின் அவளுக்கும் வாயில் மறுப்பாள். தோழி, தலைவியின் துயர் கூறி, அதற்குக் காரணமாகத் தலைவன் விளங்கியமையைச் சுட்டியும், கடிந்துரைத்தும் வாயில் மறுப்பாள். இதனைத் தொல்காப்பியர்,

*"புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு*

*அகன்ற கிழவனைப் ............ ...........*

*எதிர்பெய்து மறுத்த ஈரத்து மருங்கினுந்"*[127]

எனத் தலைவிக்குரிய கிளவித் தொகைகளில், வாயில் மறுத்தல் சூழல்களையும், தோழிக்குரிய கிளவித் தொகைகளில்(தொல்.பொருள் -145:38-43) வாயில் மறுத்தற்குரிய சூழல்களைச் சுட்டுவதோடு, தொல்காப்பிய 156ஆம் நூற்பாவில் வாயில் மறுத்தலில் தோழியின் நிலைப்பாட்டைச் சுட்டுகிறார்.

**சங்க இலக்கியத்தில் வாயில் மறுத்தல்**

சங்க அக இலக்கியத்தில் இத்துறையில் தலைவி -49, தோழி -54, தலைவன் முன்பு நிகழ்ந்தது கூறல் -1(அகநா -86), பரத்தை -1(ஐங்குறு -81), காதற் பரத்தை -1(நற் -150), விறலி -1(நற் -310) என 107 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் மற்றும் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**தனியாளாகத் தலைவன் ஊடலும், அன்பனைப் பாங்கி அன்பிலை, கொடியை என்று இன்புறக் கூறல்** துறையில் 'தோழி, பாணற்கு வாயில் மறுத்தது'(நற் 50, 90:குறுந் -85:), தலைவனுக்கு வாயில் மறுக்கும் பொருண்மையில்(குறுந் -295, 384: ஐங்குறு -54, 56, 240:), தலைவிக்கு உரைப்பாளாய்த் தலைவனுக்கு வாயில் மறுக்கும் துறைக்குறிப்புடைய(ஐங்குறு -24, 25, 26) என பதினொரு பாடல்களின் துறைக்குறிப்புகள் தோழி வாயில் மறுக்கும் பொருண்மையில் அமைந்துள்ளன. 'பாணற்கு வாயில்மறுத்த தலைமகள், பின் அப்பாணனோடு தலைமகன் புகுந்த காதன்மை கூறியவழிச் சொல்லியது.'(ஐங்குறு -47, 41), தோழிக்கு வாயில் மறுக்கும் பொருண்மையுடைய துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்கள்(குறுந் -202: ஐங்குறு -20, 32-35, 152, 154, 155, 169, 170:), பாணற்கு(ஐங்குறு -137), விறலிக்கு(அகநா -206), வாயிலாய்ப் புக்கார்க்கு(ஐங்குறு -18, 265) என பதினெட்டுப் பாடல்களின் துறைக்குறிப்புகள் தலைவி வாயில் மறுக்கும் பொருண்மையில் அமைந்துள்ளன. **தனித்த தலைவி துனித்து இரங்கல்**

என்னும் துறையின் பொருண்மையினின்று பெற்ற **தனித்துறைய பழகினாள் எனல்** என்னும் துறையில் தலைவனின் புறத்தொழுக்கத்தைத் தோழி கடிந்துரைக்கும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்(நற் -127, 230: குறுந் -61: ஐங்குறு -143, 153, 156:),**தலைவியின் ஈன்றணிமை கூறல்** துறையில் 'பாணற்குத் தோழி வாயில் மறுத்தது.'(நற் -380) எனத் துறைக்குறிப்பு அமைகிறது. இத்துறை ***தலைவி நெய்யாடியது இகுளை சாற்றல்*** என்பது துறை எனக் கொள்ளினும், இப்பாடல் அதனைக் கூறி வாயில் மறுத்தலாக அமைந்துள்ளது.

**நின் மொழிகள் பயனற்றவை எனல்** துறையில் 'தோழி பாணற்கு வாயின் மறுத்தது.'(நற் -167),'வாயிலாகப் புக்க விறலியைத்தோழி சொல்லியது.'(நற் -310) எனத் துறைக்குறிப்புகள் அமைகின்றன. **தலைவியின் காதற் பிணிப்புக் கூறல்** துறையில் 'தோழி வாயில் மறுத்தது.'(நற் -269) எனத் துறைக்குறிப்பு அமைகிறது. **பரத்தையிற் சிறக்க எனல்** துறையில் 'தோழி தலைமகள் குறிப்பறிந்து வாயில் மறுத்தது.'(நற் -360) எனவும்,**பாணர் இயல்பு இவ்வூர்க்கு உரையெனல்** துறையில் தலைவி பாணன்மேல் கொண்ட சினத்தினை அறிந்து அதனைக் குயவற்கு உரைக்கும் துறைக்குறிப்பு கொண்ட பாடலும்(நற் -200),**வாயிலாய் வருவோர் இயல்புரைத்தல்** துறையில் 'பரத்தை மனைக்குச் செல்கின்ற பாணன் தன் மனைக்கு வந்தானாக, தோழிக்குத் தலைமகள் சொல்லியது.'(நற் -170: குறுந் -127: அகநா -56:) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. **பரத்தையர் இயல்புரைத்தல்** துறையில் '... தலைமகள் அவர் பெண்டிர் நள்ளென் யாமத்துந் துயிலார் .....'(நற் -330: ஐங்குறு -13, 18, 32:) எனத் துறைக்குறிப்புகள் அமைகின்றன.

**நீத்த கிழவனை நிகழுமாறு படீஇக் காத்த தன்மையின் கண்ணின்று பெயர்த்தல் (தொல்.பொருள்.கற்பி.9)** துறையில்'... புணர்ச்சிக்குறியோடு வாயில் வேண்டி வந்த தலைமகற்கு'(ஐங்குறு -84: குறுந் -139:) தோழி வாயில் மறுக்கும் துறைக்குறிப்புகளும்,**மாணலந் தாவென வகுந்தல்** துறையில் 'வாயில் வேண்டித் தோழியிடைச் சென்று தெளிப்பான் புக்காற்குத் .....'(குறுந் -238: குறுந் -139:) தலைவியின் எழினலம் தாவென நுவலும் துறைக்குறிப்புகளும்,**தலைவனின் புறத்தொழுக்கம் கூறி வாயில் மறுத்தல்** துறையில் 'பரத்தையர்மாட்டு ஒழுகாநின்று தன் மனைக்கட் சென்ற தலைமகற்குத் ....'(ஐங்குறு -95, 48, 22, 23, 258: அகநா -46, 176, 306, 346, 366, 386:) எனத் துறைக்குறிப்புகள் அமையும் பாடல்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **தலைவியின் ஆற்றாமை கூறி வாயில் மறுத்தல்**

துறையில்‘தோழி அவன் வரவையே நினைத்து இவள் கண்ணும் பசந்தன. ......’(ஐங்குறு -16) என்னும் துறைக்குறிப்பும்,**சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறுத்தல்** துறையில் ஐங்குறு -50ஆம் பாடலின் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகின்றன.

**பிழைத்து வந்திருந்த கிழவனை நெருங்கி மறுத்தல்** துறையில் புறத்தொழுக்கம் ஒழுகி வந்த தலைவனுக்குத் தோழி வாயில் மறுக்கும் துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்களும்(ஐங்குறு -51, 55: அகநா -96:) **பரத்தையோடு புனலாடியமை கூறி வாயில் மறுத்தல்** துறையில் ‘காதற் பரத்தையுடன் புனல் ஆடிய தலைமகன் தோழியை .... வாயில் மறுத்தது.’(பரிபா -16), என்னும் துறைக்குறிப்புகள் கொண்ட பாடல்களும் (அகநா -116, 226, 246, 256, 296) இத்துறையில் வகைப்படுத்தப்படுகின்றன. **பரத்தையின் புலவி அறிந்து வாயில் மறுத்தல்** துறையில் ‘பரத்தை புலந்துழிப் புலவி நீக்குவானாய் அ.்.து இடமாக வந்தமை ....’(ஐங்குறு -158) என்னும் துறைக்குறிப்பும்,**பரத்தையின் புலவி கூறி வாயில் மறுத்தல்** துறையில் ‘வையை நீா் விழவணியில் காதற்பரத்தை,‘இற்பரத்தையுடன் நீராடினான் தலைமகன்’ எனக் கேட்டுப் புலந்தாளைப் புலவி நீக்கிப் புணா்ந்தான்’ எனக்கேட்ட தலைமகள் ....’(பரிபா -6), இதே தன்மையில் அமைந்த ஐங்குறு -42ஆம் பாடலின் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**அலமரல் பெருகிய காமத்து மிகுதி** துறையில் குறுந் -354ஆம் பாடலின் துறைக்குறிப்பும்,**புலவி நீங்கித் துய்த்தல் இன்பமெனல்** துறையில்‘தலைவி தோழிக்கு வாயின் மறுத்தது.’(நற் -217) என்னும் துறைக்குறிப்பும்,**தன் காதல் மேன்மை கூறல்** துறையில் ‘தலைமகள் ஊடல் மறுத்தாள் சொல்லியது.’(நற் -350) என அமையும் துறைக்குறிப்பும்,**அலா் கூறி வாயில் மறுத்தல்** துறையில்‘பரத்தையரோடு புனலாடினானெனக் கேட்டுப் புலந்த தலைமகள், ...’(ஐங்குறு -71, 55, 75, 76, 131, 132: அகநா -36: நற் -74:) என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும் வகைப்படுத்தப்படுகின்றன. **முன்பு நிகழ்ந்தது கூறி வாயில் மறுத்தல்** துறையில்,‘பரத்தையிற் பிரிந்த தலைமகற்கு வாயிலாய்ப் புக்க தோழிக்கு’(அகநா -66) முன்பு நிகழ்ந்தது கூறி வாயில் மறுக்கும் துறைக்குறிப்பும்,**தலைவன் தவறினைக் கூறி வாயில் மறுத்தல்** துறையில்‘வாயில் வேண்டிச் சென்ற பாணற்குத்

தலைமகள் வாயில் மறுத்தது.'(அகநா -146)எனவும் துறைக்குறிப்புகள் அமைந்துள்ளன

. **ஆள்வினை குறித்து பிரிந்தவழி ஆற்றாமை கூறி வாயில் மறுத்தல்** துறையில் 'மனைப்புறத்துப் போய்வந்த துணையானே இவ்வாறு வேறுபடுதல் தகாத என்றாற்கு அவள் சொல்லியது.'(ஐங்குறு -133) எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. இத்துறைக்குறிப்பு அமைந்த பாடல் 'பரத்தையல்லா பிரிவால் உண்டான புலவி'ப் பொருண்மையில் அமைந்துள்ளது. **பரத்தையின் கொடுமை கூறி வாயில் மறுத்தல்** துறையில் 'மனைவயிற் புகுந்த பாணற்கு'(ஐங்குறு -82) எனத் தொடங்கும் துறைக்குறிப்பும்,**இறைமகன் புறத்து ஒழுக்கு இறைமகள் உணர்த்தல்** துறையில் 'தோழிக்கு எதிர்ப்பாடின்றி ஓரூர்க்கண்ணே உறைகையினாலே ஆற்றேனாகின்றேன்'(ஐங்குறு -19) எனத் தன்னுணர்வு கூறும் துறைக்குறிப்பும்,**தெய்வம் அஞ்சல்** துறையில் 'பாணனோடு தலைவன் புகுந்து தெளித்துழிச் சொல்லியது.'(ஐங்குறு -43) எனவமையும் துறைக்குறிப்பும்,**விளைவு கூறி வாயின் மறுத்தல்** துறையில் 'கிழவற்குப் பாங்காயின வாயில்கட்குக் ....' (குறுந் -50) என்னும் துறைக்குறிப்பும் அமைகின்றன. **தன் அயன்மை கூறல்** துறையில் 'வாயிலாகப் புக்க தோழிக்கு'(குறுந் -93) எனவும்,**கழிவிரக்கம் கொள்ளல்** துறையில் 'வாயிலாகப் புக்க தோழிக்கு' (குறுந் -203, 231, 293) என அமையும் துறைக்குறிப்புகள் அமைந்துள்ளன. **தலைவி கொடுமை கூறி இகழ்ந்தாள் எனக் கூறி வாயின் மறுத்தல்** துறையில் 'தன்னைக் கொடுமை கூறினாள் தலைமகள் என்பது கேட்ட பரத்தை .....'(ஐங்குறு -81) எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. **வணங்கல் மொழியான் வணங்குதல்** துறையில்,'..... புலந்து வாயினேராத தலைமகள் கொடுமை தலைமகன் கூறக் கேட்ட தோழி ...'(ஐங்குறு -93) எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. **முன்பு நிகழ்ந்தது கூறல்** துறையில் 'வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது.'(அகநா -86) எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது.

**வாயில் நேர்தல்**

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தினால் துயருற்றிருந்தாள் தலைவி. தலைவனின் அருகாமை கிட்டாநிலையில் வேட்கை மீதூர்ந்தும், அவனின் கொடுமை நினைத்தும் தலைவனிடம் ஊடல் கொண்டிருந்த தலைவியிடம், தலைவன் நேரிடையாக வாயில் வேண்டியவிடத்து, அவள் தலைவனுடனான கூடலுக்கு

உடன்படுதல் ***வாயில் நேர்தல்*** எனப்படும். தலைவன் தோழியிடம் வாயில் வேண்டியவிடத்து, அவள் தலைமக்களின் கூடலுக்கு ஒருப்படுதலும் இதனுள் அடங்கும். தலைவியின் எண்ணம் அறியாது, தோழி தலைவனுக்கு வாயில் மறுத்துழி, தலைவி தலைவனுக்காக உடன்பாட்டை அறிவிக்கச் செய்தல் ***வாயில்நேரக் கூறுதல்*** ஆகும். தோழி வாயில் நேர்ந்துழி அதற்கு, தலைவியை உடன்படுமாறு வற்புறுத்துதல் ***வாயில்நேர்வித்தல்*** ஆகும். தலைவியோ, தோழியோ 'வாயினேராதவிடத்து தலைவன், தன் ஆற்றாமை கூறியோ, விருந்து மற்றும் புதல்வன் வாயிலாகவோ கொண்டு, தானே வாயில் வேண்டும்விதமாக இல்லில் புகுதல் ***வாயிற்புகுதல்*** ஆகும். இவை ஒவ்வொன்றும், கற்புகால ஊடல் நிகழ்வின் சிறுசிறு நிகழ்ச்சிக்கூறுகளாதலின் இவை துறைகளாகக் கொள்ளப்பட்டுள்ளன. இதனைத் தொல்காப்பியர்,

*“பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி*
*இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்'*
*'…………. ……….. ……….. அவ்வழி*
*உறுதகை யில்லாப் புலவியின் மூழ்கிய*
*கிழவோள் பால்நின்று கெடுத்தற் கண்ணும்”*[128]

எனத் தோழி கூற்று வாயிலாக, தோழி வாயில் நேர்ந்ததும், தலைவி வாயில் நேரக் கருதியிருந்தாள் என்பதையும் புலப்படுத்துவர். இறையனார், தலைவன், பரத்தையிற் பிரிந்து உலகியல் கருதி மீண்டும் தலைவியிடம் வருவது அறமெனவும், அவ்வாறு வந்த தலைமகனை நீக்காது உடனிருக்கச் செய்தல் அறமெனவும், அதுவே குற்றமாகாதத் தன்மை(இறையகப் -44) எனவும் சுட்டுவர்.

### சங்க அக இலக்கியத்தில் வாயில் நேர்தல், நேர்வித்தல், புகுதல்

சங்க அகஇலக்கியத்தில் வாயில் நேர்தல் பொருண்மையில், தலைவி மற்றும் தோழி கூற்றுகளில் முப்பத்தேழு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. தலைவி வாயின் நேர்ந்த பொருண்மையில் (குறுந் -33, 91, 252: ஐங்குறு -11, 167:) ஐந்து பாடல்கள் அமைந்துள்ளன. தோழி வாயின் நேர்ந்த பொருண்மையில் (நற் -210, 270, 291: குறுந் -9, 10, 45, 309: ஐங்குறு -1-5, 45, 46, 52, 53, 57-59, 98, 100, 143: அகநா -50:) இருபத்தி மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. தலைவன் வாயில் நேர வருவானெனத் தலைவி எதிர்ப்பார்க்கும் பொருண்மையில் ஒரு பாடலும்(ஐங்குறு -157), தோழியைத் தலைவி வாயில் நேரக் கூறும் பொருண்மையில் ஒரு

பாடலும்(ஐங்குறு -36), தலைவி வாயில் நேர்ந்தமையால் தலைவன் உவந்து கூறுவதாக ஒரு பாடலும்(ஐங்குறு -99), காமக்கிழத்தி வாயில் நேர்வேனென மொழியும் ஒரு பாடலும்(நற்-390), தலைவி வாயில் நேர்ந்தமை கண்ட வாயில்கள் தம்முள் கூறுவதாக ஒரு பாடலும் (ஐங்குறு -96), தோழி, தலைவியை **வாயில் நேர்வித்தல்** பொருண்மையில் நான்கு பாடல்களும்(நற் -180, 386: ஐங்குறு -198: அகநா -316:) காணப்படுகின்றன. 'தலைவி வாயில் நேர்ந்தமைக் கண்ட தோழி புலந்தமைப் பொருண்மையில் ஒரு பாடலும் (நற் -30) காணப்படுகின்றன. தலைவி வாயில் நேர்ந்தபின் தோழி புலந்து கூறுவதாக ஒரு பாடலும்(ஐங்குறு -283) காணப்படுகின்றன. தலைவன் தன் ஆற்றாமை, புதல்வன், விருந்து போன்றவற்றை வாயிலாக கொண்டு **வாயிற் புகுதல்** பொருண்மையில் (நற் -120, 250: குறுந் -359: ஐங்குறு -65, 137, 138, 139, 188: அகநா -26, 236:) பத்துப் பாடல்கள் அமைந்துள்ளன.

இப்பாடல்கள் மற்றும் துறைக்குறிப்புகளை ஆராயின்,**வாயில் நேர வருவான் என அஞ்சியிருத்தல்** துறையில் 'புதல்வன் வாயிலாக வரும்' எனக் கேட்டு, அஞ்சிய தலைமகள் புதல்வன் விளையாடித் தனித்து வந்துழி'(ஐங்குறு -157) என்னும் துறைக்குறிப்பு வகைப்படுத்தப்பட்டுள்ளது. இத்துறை தொல்காப்பியர் குறிப்பிடும்,'வாயின் வரூஉம் வகை' (தொல். -145) என்பதனுள்ளும் அமைகிறது. **வாயில்நேரக் கூறல்** துறையில் '... தோழி வாயில் மறுத்துழி, அவர் நேரும் வகையால் அவட்குத் தலைமகள் சொல்லியது.'(ஐங்குறு -36) என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. இத்துறையைப் *"பிழைத்துவந் திருந்த கிழவனை நெருங்கி, இழைத்தாங் காக்கிக் கொடுத்தற் கண்ணும்'(தொல். -148) என்னும் தோழி கூற்றாக அமையும்"*[129] பொருண்மையில் அடக்கலாமென்பர் பொ.வே.சோமசுந்தரனார். ஆனால் இத்துறைக்குறிப்பு தலைவி கூற்றாக அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. எனின், இத்துறை பாடல் துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு வருவித்துக் கொள்ளப்பட்டது.

**ஊடல் தணிதல்** துறையில் 'இ.ஃது, ஊடல் மறுத்த தலைமகள் ... .'(நற் -260) என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. இத்துறைக்குறிப்பு 'அவ்வழி உறுதகை யில்லாப் புலவியின் மூழ்கிய கிழவோள்பால் நின்று கெடுத்தற் கண்ணும்'(தொல்.பொருள் -148:17-19) என்னும் தோழி கூற்றாக அமையும் பொருண்மையுள் அடக்குவர் பொ.வே.சோமசுந்தரனார். ஆனால் இப்பாடலின்

இத்துறைக்குறிப்பு தலைவி கூற்றாக அமைந்துள்ளது. தலைவி கிளவித்தொகையாக அமையும்(தொல்.பொருள் -145) நூற்பாவில் இப்பொருண்மையிலான அடிகள் நேரடியாகச் சுட்டப்பெறாவிடினும், குறிப்பாக (தொல்.பொருள் -145:28-31) பொருள் கொள்ள முடிகிறது.

**தன் தோள் ஆற்றாமை கூறி வாயில் நேர்தல்** துறையில் ஐங்குறு -11ஆம் பாடலுக்கு இரு துறைக்குறிப்புகள் குறிப்பிடப்பட்டுள்ளன. முதல் துறைக்குறிப்பு 'பாங்கற்கு வாயில் நேர்வாள்' எனக் குறிப்பிட்டு இத்துறையில் அடங்குகிறது. **இயல்பட மொழிந்து வாயில் நேர்தல்** துறையில் '... கொடுமை கூறித் தோழி இயற்பழித்தவழித் தலைமகள் சொல்லியது.'(ஐங்குறு -167) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. **பாணன் இயல்பு கூறி வாயில்நேர்தல்** துறையில் 'வாயிலாகப் புக்க பாணன் கேட்ப தோழியை நோக்கி, தலைமகள் வாயில் நேர்வாள் கூறியது.'(குறுந் -33) எனவும்,**நெஞ்சு நெகிழ்ந்தமை கூறி வாயில் நேர்தல்**துறையில் '........ தன்வரைத்தன்றி அவன் வரைத்தாகித் தன் நெஞ்சு நெகிழ்ந்துழி, தலைமகள் அதனை நெருங்கிச் சொல்லியது.'(குறுந் -91) எனவும் அமைகின்றன. தலைவி வாயில் நேர்ந்தபின் கூறும் பொருண்மையில்,**பரத்தையருடனான நீராடலை நினைத்து ஊடல் கொள்ளல்** துறையில் அகநா -6ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமைகிறது. **யாரையும் அறியேன் என்றாற்கு தலைவி உரைத்தல்** துறையில் '....... 'யாரையும் அறியேன்ஷ என்றாற்குத் தலைமகள் சொல்லியது.'(அகநா -16) எனவும்,**பரத்தமையை அறிவேன் எனப் புலத்தல்** துறையில் 'யாரையும் அறியேன்' என்றாற்குத் தலைவி சொல்லியது.'(நற் -20, 340) என்ற துறைக்குறிப்புகளும் அமைகின்றன.

தோழி வாயில் நேர்ந்த, நேர்வித்த நிகழ்வுகளில் அமைந்த,**தலைமகள் குறிப்பறிந்து வாயில் நேர்தல்** துறையில் 'தோழி தலைமகளது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது.'(நற் -291) எனவும்,**தலைமகள் இயல்பு கூறி வாயில் நேர்தல்** துறையில் 'தலைமகற்குத் தோழி வாயில் நேர்ந்தது.'(குறுந் -9, 10, 309) எனவும்,**தலைவியின் வருத்தம் கூறி வாயில் நேர்ந்தது** துறையில் '...... தோழி வாயில் நேர்ந்தது.'(குறுந் -45) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. மேற்குறிப்பிட்ட பாடல்கள் வாயில் நேரும்போது அமைந்தவை.

வாயில் நேர்ந்தபின் அமைந்த **கடிந்துரைத்தல்** துறையில் 'தோழி தலைமகளை நெருங்கிச் சொல்லுவாளாய் வாயில் நேர்ந்தது.'(நற் -210) எனவும்,**பிரிவின் கொடுமை கூறல்** துறையில் 'தோழி வாயில் நேர்கின்றாள் தலைமகனை நெருங்கிச் சொல்லி வாயில் எதிர்கொண்டது.'(நற் -270)எனவும் அமைகிறது. இத்துறைக்குறிப்பை ஔவை.சு.துரைச்சாமிபிள்ளை,*"இது,'பரத்தையர் பலரோடும் ஒழுகுதல் காணப்பொறாத காதற்பரத்தை வாயின்மறுப்ப, அவள் தோழி வாயில் நேர்கின்றாள் தமைகனை நெருங்கிச் சொல்லி வாயில் எதிர்கொண்டது. (உடனிலைக் கிளவி வகையால்)"*[130]எனக் காமக்கிழத்தியின் தோழி வாயில் எதிர்கொண்டதாகக் குறிப்பிடுவர்.

**காத்திருந்த திறம் கூறல்** துறையில் '....... தலைமகன் தோழியோடு சொல்லாடி 'யான் அவ்வாறொழுக நீயிர் நினைத்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது.'(ஐங்குறு -1-5) எனவும்,**சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறப்பினும்** துறையில் ஐங்குறு -44ஆம் பாடலின் துறைக்குறிப்பு அமைகிறது. **வாயில் நேரும்பொருட்டு தோழி புலத்தல்** துறையில் தலைவியை உடன்படச் செய்ய தோழி பொய்யாகப் புலக்கும்.(ஐங்குறு -46) துறைக்குறிப்புடன்,'தலைமகற்குப் புறத்தொழுக்கம் உளதாயிற்றென்பது கேட்ட தோழி'(ஐங்குறு -57, 59) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. **புறத்தொழுக்கம் இடித்துரைத்து வாயில் நேர்தல்** துறையில் 'புறத்துத் தங்கிவந்த தலைமகற்குத் தோழி சொல்லியது.'(ஐங்குறு -143) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. **வணங்கிய மொழியான் வணங்குதல்** என்னும் துறையில் '........ வாயினேராத தலைமகள் கொடுமை தலைமகன் கூறக்கேட்ட தோழி அவற்குச் சொல்லியது.'(ஐங்குறு -98) எனவும்,**சூள்நயத் திறத்தால் சோர்வுகண் டழியினும்** என்னும் துறையில் 'தெய்வங்கள் உறையும் துறைக்கண்ணே நாம் ஆடினவதனாற் பிறந்ததுகொல் நினக்கு இவ்வேறுபாடு' என்று வினவியதற்கு அவள் தோழி சொல்லியது.'(ஐங்குறு -53) எனவும்,**தலைமகள் மாண்புணர்த்துதல்** துறையில் 'வாயிற் பெற்றுக் கூடியிருந்த தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது.'(ஐங்குறு -52) எனவும்,**குறைநேர உடன்பட்டமை கூறி ஊடல் தீரக் கூறல்** துறையில் '........ ஆற்றாமையே வாயிலாக வந்த தலைமகனை எதிர்ப்பட்ட தோழி தலைமகட்குச் சொல்லியது.'(ஐங்குறு -198) எனவும்,**தலைவி வாயில் நேர்ந்தமையால் தோழி புலத்தல்** துறையில் '..... தலைமகள் வாயினேர

அவன் பள்ளியிடத்தானாக யிருந்துழிப் புக்க தோழி கூறியது.'(ஐங்குறு -283: நற் - 30:) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன.

**ஊடிய தலைமகற்குப் பணிமொழி மொழிதல்** துறையில் 'உணர்ப்புவயின் வாராவூடற்கண் புலந்து தலைமகற்குத் தோழி கூறியது.'(ஐங்குறு -58) எனவும்,**இயல்பட மொழிந்த திறமுணர்த்துதல்** துறையில் '....... இயற்பழித்தவழித் தலைமகள் இயல்பட மொழிந்த திறம் தலைமகற்குத் தோழி சொல்லியது.'(ஐங்குறு -100) எனவும்,**தலைவி வருத்தம் கூறி வாயில்நேர்தல்** துறையில் 'தோழி பாணனுக்குச் சொல்லியது.'(அகநா -50) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன. தலைவி, தலைமகற்கு உடன்பட்டமையைக் கண்ட வாயில்கள் **தலைமகள் பெருங்குணத்தைப் பாராட்டி யுரைத்தல்** துறையில் 'பரத்தையர் பலரோடும் ஒழுகுதல் கண்டு பொறாதிருந்த தலைமகள், தலைமகன் மனைக்கட் புகுந்துழி உடன்படுதல் கண்ட வாயில்கள் தம்முள்ளே சொல்லியது.'(ஐங்குறு -96) எனவும், காமக்கிழத்தி **பிறர் நலம் காக்க வாயில் நேர்வேனெனல்** துறையில் 'பாங்கு ஆயின வாயில் கேட்ப, நெருங்கிச் சொல்லியது.'(நற் -390) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன.

**வாயில் நேர்வித்தல்** என்ற பெருந்துறையிலமைந்த **தலைமகள் ஊடல் தணியாதிருந்த நிலையில் தோழி தன்னிலை கூறல்** துறையில் 'தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி, தலைமகளிடத்துப் பொறாமை கொண்டு சொல்லியது.'(நற் - 180) எனவும்,**குறிப்பறியாது இருந்தேனெனல்** துறையில் '....... 'பாவியேன் இன்று பேதைமை செய்தேன்: எம்பெருமாட்டி குறிப்பு உணர்ந்து வழிப்படுவேனாவேன்மன்னோ' எனச் சொல்லியது.'(நற் 386) எனத் தோழி மொழியும் துறைக்குறிப்பும்,**பரத்தமை நீங்கி வந்தானை ஏற்றல் நலமெனல்**துறையில் 'தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி தலைமகளை நெருங்கிச் சொல்லியது.'(அகநா 316) எனவும் துறைக்குறிப்புகள் அமைகின்றன.

**வாயிற் புகுதல்** என்னும் பெருந்துறையிலமைந்த **விருந்து வாயிலாக வாயிற் புகுதல்** துறையில் 'விருந்து வாயிலாகப் புக்க தலைவன்'(நற் -120), விருந்து வாயிலாகப் புகுந்த தலைமகன்'(ஐங்குறு -188) எனவும்,**புதல்வன் வாயிலாக வாயிற் புகுதல்** துறையில் 'புதல்வனொடு புக்க தலைமகன் ஆற்றானாய்ப் பாணற்கு உரைத்தது.'(நற் -250) என்னும் துறைக்குறிப்பும்,**வாயிற் புகுந்தானிடம் கற்பருமை கூறல்** துறையில் '....... வாயில் வேண்டிப்பெறாது தானே புக்குக் கூடியது கண்டு,

தோழி பாணற்குச் சொல்லியது.'(குறுந் -359) எனவும்,**தலைவன், தன் ஆற்றாமை கூறி வாயிற் புகுதல்** துறையில் 'ஆற்றாமையே வாயிலாகப் புக்க தலைமகற்குத் தலைமகள் சொல்லியது'(அகநா -26, 236: ஐங்குறு -65:) என அமையும் துறைக்குறிப்புகளும்,**வாயிற் புகுந்த தலைமகன் நீங்கியவழி வேறுபாடு வினவிய பாங்கற்குரைத்தல்** துறையில் 'தலைமகன் வாயில் பெற்றுப் புகுந்து நீங்கினவிடத்து அவன் முன்பு செய்த தீங்கு நினைந்து தலைமகள் வேறுபட்டிருந்தாளாக, இனிஇந்த வேறுபாடு என் என்று வினவிய பாணற்கு அவள் சொல்லியது.'(ஐங்குறு -137) என்னும் துறைக்குறிப்பும்,**நகையாடி உரைத்தல்** துறையில் 'தலைமகன் வாயிற் பெற்றுப் புகுந்தது அறியாது, வந்த பாணற்குத் தலைமகள் நகையாடிச் சொல்லியது.'(ஐங்குறு -138) என்னும் துறைக்குறிப்பும்,**பாணன் இயல்பு கூறித் தலைவனை இடித்துரைத்தல்** துறையில் 'தலைமகற்கு பாணன் வந்துழித் தலைமகள் சொல்லியது.'(ஐங்குறு -139) எனவும் துறைக்குறிப்புகளை வகைப்படுத்தமுடிகிறது.

**செலவழுங்கல்**

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்பது குறள். ஆதலின் தலைவனும் களவுக்காலத்தில் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலும், கற்புக் காலத்தில் இல்லறத்திற்கு இனிமை சேர்ப்பதற்கும், விருந்தெதிர் கோடலுக்கும் ஈதலுக்கும் தேவையான பொருளைத் தேடிப் பிரிவை எண்ணுவான். அந்நிலையில், தலைவியின் உள்ளம் வருந்துமே என எண்ணி, பொருள்வலித்த தன் நெஞ்சிற்கு உரைத்து செலவைத் தவிர்த்தல் 'செலவழுங்குதல்' என்னும் துறையாக அமைகிறது. இதனைத் தொல்காப்பியர்,

*"செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே*
*வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்"*[131]

எனச் செலவழுங்கல் என்பது தற்போதைய செலவுத் தவிர்ச்சியே ஆகும் என்பர். நாற்கவிராசநம்பியும் (நம்பியகப் -88) தொல்காப்பியர் கூறுவது போன்றே குறிப்பிடுகின்றார். இதன்வழி, தலைவன் தலைவியின் நலம் உள்ளி, சிறிது காலம் தற்போதைய செலவைத் தள்ளி வைப்பானே ஒழிய, செல்லாமல் இருப்பானில்லை என்பது அறிய முடிகிறது.

## சங்க அகஇலக்கியத்தில் செலவழுங்கல்

சங்க அகஇலக்கியத்தில் 'செலவழுங்கல்' பொருண்மையில் 49 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை நோக்குமிடத்து ***செலவழுங்கல்*** என்னும் துறையாகவும், இத்துறையிலும் நெஞ்சிற்குக் கூறியதாக நாற்பத்து மூன்று பாடல்கள் அமைகின்றன. இப்பாடல்களை ***நெஞ்சோடு கிளத்தல்*** துறையாகவும் கொள்ள முடிகிறது.

**செலவழுங்குதல்** துறையில் '..... பின்னும் பொருள்கடைக் கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது.'(நற் -3, 62,: குறுந் -151, 256: ஐங்குறு -426: அகநா 3, 327, 335, 337, 353, 379: பட்டினப்பா),'பொருள்கடைக் கூட்டிய .....'(நற் -16, 53, 126, 137, 141, 166, 205, 262, 308, 312, 366: குறுந் -63, 71, 101, 168, 267, 347, 376: ஐங்குறு -427, 428, 430: அகநா -5, 43, 51, 75, 77, 131, 149, 167, 171, 193, 199, 225, 245:),'இது பொருள் வலித்த நெஞ்சினைத் ....'(குறுந் -274),'பொருள் வலிப்பித்துத் தலைமகளை எய்தி ஆற்றாதாய நெஞ்சிற்கு நெருங்கிச் .......'(நற் - 298,308) எனவமையும் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன.இத்துறைக்குறிப்புகளின் பொருண்மையை நோக்குமிடத்து, பொருள்வயிற் பிரிவை பலமுறை மேற்கொண்டனர் என்பதும், ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் ஒன்றிணைந்து சென்றுள்ளனர் என்பதும் பெறப்படுகிறது.

### செலவழுங்குவித்தல்

செலவு மேற்கொள்ளும் தலைவன், தானே செலவழுங்கிப் பின் தேர்ந்து, செலவிற்குத் தன்னை ஆயத்தப்படுத்திக் கொள்வான். இச்செலவுகள், கல்வி, போர், பகை, பொருள் குறித்தும் நிகழும். இதனைத் தோழி குறிப்பாகவோ, கூற்றாகவோ அறிந்து கொள்வாள். தலைவனின் செலவினை, தலைவியின் இளமை, ஆற்றாமையைக் கூறித் தவிர்க்குமாறு தோழி கூறுவாள். இவ்வாறு தலைவனது செலவினைத் தவிர்க்கும் முயற்சி ***செலவழுங்குவித்தல்*** துறையாக அமைகிறது. இதனைத் தொல்காப்பியர்,"*பிரியுங் காலத்தே நின்று சாற்றிய மரபுடை எதிரும்*"[132]எனத் தோழி கூற்றில் குறிப்பாகவும்,

> "*செலவுறு கிளவியும், செலவழுங்கு கிளவியும்*
> *அன்னவை பிறவும் பார்ப்பார்க் குரிய*"[133]

எனப் பார்ப்பார்க்குரிய கிளவியாகவும் மொழிவர். பின்வரும் இலக்கண ஆசிரியர்கள் இத்துறை பற்றிக் குறிப்பிடவில்லை. இச்செலவழுங்குவித்தல் களவில் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரியும் காலத்தும், ஒருவழித்தணத்தல் காரணமாகவும் நிகழும். இவை வரைவு நோக்காக அமையும். கற்பில் போர், பொருள், கல்வி போன்ற காரணங்களுக்காகவும் பிரியும் பிரிவு மரபெனினும், அச்செலவைத் தவிர்க்க தோழி முயல்வது உண்டு. களவு, கற்பு என்ற இரண்டுக்கும் பொதுவான செய்திகளைத் தொல்காப்பியர் அகத்திணையியலில் மொழிவர். ஆனால் இச்செலவழுங்குவித்தலை கற்பியலில் மொழிந்துள்ளார். எனினும், செலவழுங்குவித்தலைக் களவில் குறிப்பிடாமல் கற்பில் குறிப்பிட்டதற்கான காரணமாக, ஆ.இராமகிருட்டிணன்,*"தலைவன் களவில் வரைவு காரணமாகவும், கற்பில் பொருள், போர் காரணமாகவும் பிரிவது மரபு, எனினும் செலவழுங்குவித்ததைத் தொல்காப்பியர், கற்பியலில் மட்டுமே பெயர்த்துரைக்கக் காண்கிறோம். களவில் தலைவன், தலைவி தோழியரிடம் சொல்லிப் பிரிவதில்லை. கற்பில் பரத்தையிற் பிரிவு தவிர்த்த பிற பிரிவுகளின்போது தலைவன் குறிப்பாகவோ வெளிப்படையாகவோ, பிரிவை உணர்த்தும் மரபு காணப்படுகிறது. செலவழுங்குவித்தலைக் கற்பியலில் மட்டும் உரைத்தமைக்கு இது காரணமாகலாம்"*[134]என ஆய்ந்து நோக்குவர்.

**சங்க அகஇலக்கியத்தில் செலவழுங்குவித்தல்**

சங்க அகஇலக்கியத்தில் நாற்பத்து நான்கு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில் நற் -266ஆம் பாடல் தலைவி, தலைவனின் செலவின் இன்றியமையாமையினை உணர்ந்துரைக்கும் பொருண்மை கொண்டது. ஏனைய பாடல்கள் தோழி கூற்றாக அமைந்துள்ளன. இப்பாடல்களின் பொருண்மைகளைக் கொண்டாராயின் **தலைவியின் இளமை ஆற்றாமை கூறி செலவழுங்குவித்தல்** துறையில்,'தலைவி பிரிவுணர்ந்து வேறுபட்டமை சொல்லித் தோழி செலவழுங்குவித்தது.' என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களும்(நற் -26, 37, 43, 46, 71, 183, 325: ஐங்குறு -301, 302, 304, 305, 306, 368, 423, 424: அகநா -13, 143, 161, 179, 215, 271, 319:)அமைந்துள்ளன. இத்துறைக்குறிப்புகளில் மூன்று பாடல்கள்(நற் -183: ஐங்குறு -305, 368) மட்டும் களவில் செலவழுங்குவித்தலில் அமைந்துள்ளன.**செல்லும் வழியின் இயல்புரைத்து செலவு அழுங்குவித்தல்** துறையில் 'பிரிவுணர்த்தப்பட்ட தலைமகளது குறிப்பறிந்த தோழி, தலைமகற்குச் சொல்லியது.'(நற் -33, 318: குறுந் 363: அகநா -179, 307,

387:) போன்ற துறைக்குறிப்புகள் அமைகின்றன. இத்துறையில் வழியின் அன்புறு - துன்புறு காட்சிகள் சுட்டப்படுகின்றன. குறுந் -363ஆம் பாடல் அன்புறு காட்சிகளைக் காணும் நின்னால் செலவு மேற்கொள்ள முடியாது என உரைக்கும் பொருண்மை கொண்டதாக அமைந்துள்ளது.**கூதிர்ப்பருவம் வந்தமை கூறிச் செலவழுங்குவித்தல்** துறையில்‘பிரிவல் என்ற தலைமகற்குத் தோழி ‘பிரியா தொழியப்பெறின் நன்று’ பிரிவையாயின் இப்பருவத்து இம்மாமலை எங்களை விட்டுப் பிரிந்தாற் பிரியெனச் சொல்லியது.’(ஐங்குறு -308)எனத் துறைக்குறிப்பு அமைந்துள்ளது. **தலைவியை காப்பதே கடமையெனக் கூறிச் செலவு அழுங்குவித்தல்**துறையில்‘தோழி தலைமகன் பொருள்வயிற் பிரிதலுற்றானது குறிப்பறிந்து விலக்கியது.’என்னும் துறைக்குறிப்பும்,**தலைவி, தலைவனுடன் இருப்பதே இன்பம் எனக் கூறிச் செலவழுங்குவித்தல்** துறையில் ‘சுரத்தருமை கூறி உடன்செலவு மறுக்கும் தலைமகற்குத் ....’(ஐங்குறு -303, 307) எனவமைந்த துறைக்குறிப்புகள்அமைகின்றன. இவற்றின் பாடல்களின் பொருண்மை ‘தலைவியுடன் இருத்தலே இன்பமென’ அமைகின்றன. **புதல்வன் முறுவல் இனிமை கூறிச் செலவு அழுங்குதல்**துறையில்‘பொருள்வயிற் பிரிவல் என்ற தலைமகற்குச் .....’(ஐங்குறு -309)என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. **தலைவியின் நலம் மீட்டல் அறிதெனல்** துறையில் ‘கருமம் முடித்தாயாயினும் இவள் நலம் மீட்டற்கு அரிது .....’(ஐங்குறு -310)என்ற துறைக்குறிப்பும்,**களவில் நிகழ்ந்தது கூறல்** துறையில் ‘பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது.’(நற் -48)என்ற துறைக்குறிப்பும்,**செலவு உடன்பட்டது** துறையில் ‘தலைமகனைச் செலவு உடன்பட்டது.’(நற் -266) என்ற துறைக்குறிப்பும் அமைந்துள்ளது.

களவில் செலவழுங்குவித்தல் பொருண்மையில் அமைந்த பாடல்கள் அனைத்தும் தலைவியின் ஆற்றாமையைத் தோழி கூறுவதாக அமைந்துள்ளன. ஆகையால் இப்பாடல்களை **தலைவியின் ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தல்** துறையில் ‘வரைவிடை வைத்துப் பிரிவான் ‘இவள் வேறுபடாமை ஆற்றுவி’ என்றாற்குத் ....’(குறுந் -236, 225, 397: ஐங்குறு -239, 257, 273:) என்ற துறைக்குறிப்புகள் அமைந்துள்ளன. இப்பாடல்களில் ஐங்குறு -273ஆம் பாடலின் துறைக்குறிப்பில் தலைவி உடன்பட்டும் தோழி உடன்படாமையை அறியமுடிகிறது. இத்துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களின்வழித் தோழி, தலைவனை வரைவிற்கு உடம்படச் செய்ய முயல்கிறாள் என்பதை அறியமுடிகிறது.

**பிரிவு**

சங்க அகவாழ்வில் பெருமிடம் வகிப்பது இன்பம். அவ்வின்பத்தை நிலை பெறச் செய்வது, சாற்றுகோலிடுவது துன்பம் விளைவிக்கும் பிரிவு. இப்பிரிவு, இன்பத்தின் அடிநாதத்தை அறியச் செய்கிறது. களவுக் காதலை வலுபெறச் செய்வன இட்டுப்பிரிவு, வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு என இவ்விரண்டு ஆகும். கடமைகள் நிறைந்த கற்புக் காதலை நிலைபெறச் செய்வது ஓதல், பகை, தூது பரத்தையர் பிரிவுகள். இப்பிரிவுகள் அகவாழ்வின் அர்த்தங்களை ஒளிரச் செய்கின்றன.

தொல்காப்பியர், ஓதல், பகை, தூது, பொருள்வயிற் பிரிவுகள் பற்றியும், இப்பிரிவுகளின்பொழுது தலைவன் துயர்கொள்வது போல் தலைவியும் துயர்கொள்வாள். தன்னை எதிர்நோக்கிக் காத்திருப்பாள் என்பதைத் தொல்காப்பியப் பொருளதிகார 44:7-24, 144:37-54 நுற்பாக்களில்சுட்டுவர். ‘முந்நீர் வழக்கம் மகடூஉ வோடு இல்லை’ என்னும் தொல்காப்பியப் பொருளதிகார 37ஆம் நுற்பாவில் ‘கடல்வழிப் பிரிவு’ பற்றியும் சுட்டுவர். அகத்திணையியலில் (27-37 நூற்பா) பதினொரு நூற்பாக்களில் பிரிவு பற்றிக் விளம்புவர். தலைவன் பிரிவு மேற்கொண்ட பின்பு தலைவியின் அச்சமொழிகளை தொல்காப்பியப் பொருளதிகார 145:1-7, 146 நூற்பாகளில் மொழிவர். தொல்காப்பிய உரையாசிரியரான இளம்பூரணர் தம் உரையில்“*பிரிவாற்றாமையும், ஆற்றுவல் என்பதுபடக் கூறலும், தெய்வம் பராவலும், பருவங்கண்டு கூறுதலும், வன்புறை எதிரழித்து கூறுதலும்*”[135]என்பவற்றைக் குறிப்பிடுவர். தொடர்ந்து ‘பிரிதலுற்ற தலைமகன் குறிப்புக்கண்டு கூறுதல், பிரிவுணர்ந்த தலைமகள் தலைமகனுடன் கூறுதல், பிரிவுணர்த்திய தோழி தூதுவிடக் கூறுதல்,’சில துறைகளைமொழிவர்.

தொல்காப்பியர் பாலைக்குரிய மரபாக,‘நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும்.’(தொல்.பொருள் -46),‘நிகழ்ந்தது கூறி நிலையலுந் திணையே’(தொல்.பொருள் -47), (தொல்.பொருள் -48) எனச் சுட்டுவதும், பிரிந்தவிடத்துத் தலைவன் பேசும் நிலைகளைப் புலப்படுத்துகின்றன. அகத்திணையியல் 48-ஆம் நூற்பாவின் உரையில்,“*பாசறைக்கண் தூது கண்டு கூறுதலும், தலைமகளை இடைசுரத்து நினைத்துக் கூறுதலும்*”[136] எனப் பிரிதலின் நிகழ்வைப் புலப்படுத்துவர் இளம்பூரணர். இறையனார், இறையகப்பொருள் -35ஆம் நூற்பாவில் பிரிவின் ஆறு வகைகளைக் கூறுவர். நாற்கவிராச நம்பி,‘ஓதல் பிரிவு உடைத்து ஒரு மூன்று யாண்டே’(நம்பியகப்

-89),'தூதின் பிரிவும் துணைவயின் பிரிவும், பொருள்வயின் பிரிவும் ஓர் யாண்டு'(நம்பியகப் -90) எனப் பிரிவின் காலவெல்லையைச் சுட்டுமிடத்து பிரிவின் வகைகளையும் உரைப்பர். ஓதல், தூது பிரிவுகளில் செல்வோர் இடையில் மீள்வதில்லை, பிரிவு நீளும் காலத்து அவ்விடத்துப் புலம்பலும் நிகழும் என்பதைக் (நம்பியகப் -92, 93) குறிப்பிடுவர்.

**சங்க அக இலக்கியத்தில் பிரிவு**

சங்க அகஇலக்கியத்தில் காணப்படும் 966 கற்புப் பாடல்களில் 496 பாடல்கள் பிரிவுப் பொருண்மையில் அமைகின்றன. (நற் -88: குறுந் -114: ஐங்குறு -122: அகநா -171: மொத்தம் 509:) இப்பாடல்களில் ஓதல் பிரிவு(அகநா -125), கடல்வழிப் பிரிவு (அகநா -255), தூதிற் பிரிவு(அகநா -54: ஐங்குறு -466:), பகைவயிற் பிரிவு(நற் -341: ஐங்குறு -426, 429, 441-450, 451, 452, 460, 465-467, 477, 479, 480: அகநா -24, 44, 84, 104, 124, 164, 174, 194, 204, 214, 254, 304,334, 354, 374, 384:) ஆகிய 44 பாடல்கள் தவிர்த்து எஞ்சியவை பொருள்வயிற் பிரிவுப் பாடல்களாக அமைகின்றன.

இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,**பிரிவுணர்தல் அல்லது பிரிவுணர்ந்து வேறுபடல்** துறையில் 'செலவுக் குறிப்பு அறிந்து வேறுபட்ட தலைவி சொல்லியது.'(நற் -73, 79, 177, 256: குறுந் -76: அகநா -293, 345:) என்னும் துறைக்குறிப்புகளும்,'தலைமகன் பிரியும்' எனக் கருதி வேறுபட்ட தலைமகட்குத் தோழி சொல்லியது.'(அகநா -137, 27: குறுந் -171, 135, 331, 348: நற் -5:) எனவும் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன. **பிரிவு உணர்த்தப்படல்** துறையில் 'தோழியால் பிரிவுணர்த்தப்பட்ட தலைமகள் சொல்லியது.'(நற் -1, 224, 296: குறுந் -20, 174, 207, 398: அகநா -147, 157, 217, 305, 355:) என அமையும் துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இத்துறையைத் தமிழ்நெறி விளக்கம் 'பிரிவு அறியக் கூறல்' துறையாக மொழிகிறது. **செலவுடன்பட வேண்டியாற்கு தோழி கூறல்** துறையில் 'பொருள்வயிற் பிரியும் தலைமகன்,'பிரிவு உடன்படுத்த வேண்டும்' என்றானாக,'(ஐங்குறு -302, 303, 368) என்றமையும் துறைக்குறிப்புகளும்,**உடன் வருமென்றாற்குத் தலைவன் உரைத்தல்** துறையில் 'தலைமகள் உடன்வரும் எனக் கேட்ட தலைமகன்'(அகநா -121) என்னும் துறைக்குறிப்பும்,**உடன்பாடு பெற்று பிரிதல்** துறையில் புறவு அணிப்

பத்து (ஐங்குறு -431-440) பாடல்களும் ‘ஆற்றுவித்தல்’ பொருண்மையில் அமைந்துள்ளன.

**சொல்லாது பிரிதல்** துறையில் ‘சொல்லாது தலைமகன் பிரிந்துழி’(குறுந் -79),‘நம்மைப் பிரியான்’ என்று கருதியிருந்த தலைமகளை அவன் பிரிந்துழி’(ஐங்குறு -315) எனத் தோழி கூற்றாக அமையும் துறைக்குறிப்புகளும்,‘அவன் உணர்த்தாது பிரிந்தமை கூறிய தோழிக்கு’(ஐங்குறு -319: அகநா -345:) எனத் தலைவி கூற்றாக அமையும் துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **பிரிந்தவழி மகிழ்தல்** துறையில் ‘பொருட் பிரிவுக்கு உடன்பட்ட தோழியைத் தலைவி உவக்க கூறியது.’(நற் -24, 1) என்னும் துறைக்குறிப்புடைய பாடல்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இத்துறை, இலக்கண நூல்களில் கூறப்படவில்லை. **பிரிந்தவழி ஆற்றாமை** துறையில் பிரிவிடை மெலிந்த, பிரிவிடை ஆற்றாளாய்’ என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -64, 73, 79, 84, 107, 109, 343: குறுந் -4, 5, 12, 27, 35, 43, 60, 64, 67, 68, 77, 102, 104, 140, 154, 190,283, 330, 352: ஐங்குறு -311, 314, 317, 332, 334, 335, 336, 337, 338, 340, 475: அகநா -1, 31, 103, 113, 115, 139, 151, 155, 235, 255, 265, 329, 331, 341, 347, 349:) என அமையும் துறைக்குறிப்புகளின் பாடல்களும், தமிழ்நெறி விளக்கத்தில் கூறப்பட்ட **தோழி, நொந்தனள் உரைப்பவும் நோவாள் கூறலும்** துறையில் ‘பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு கிழத்தி ஆற்றுவல் என்பதுபடச் சொல்லியது.’(குறுந் -12, 27, 41, 46, 86, 102, 191, 218, 224, 241, 264, 325, 329: அகநா -11, 133, 141, 267, 281, 309:) என்ற துறைக்குறிப்புகளின் பாடல்களும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வருத்தம் தணித்தல்** துறையில் ‘பிரிவு உணர்த்தப்பட்டு ஆற்றாளாய தலைமகளைத் தோழி உலகியல் கூறி வற்புறுத்தியது.’(நற் -18, 41, 92, 148, 189, 246, 286, 316, 333, 391: குறுந் -16, 22, 37, 59, 180, 197, 211, 213, 215, 232, 253, 255, 282, 317, 338, 348, 350, 358: அகநா -59, 61, 71, 85, 91, 111, 127, 129, 159, 171, 173, 177, 197, 201, 209, 211, 213, 223, 227, 231, 233, 237, 251, 253, 295, 311, 313, 323, 357, 359, 363, 393, 399:)எனத் தலைவியின் வருத்தத்தைப் போக்க முயலும் தோழியின் மொழிகளமைந்த துறைக்குறிப்புகளும் வகைப்படுத்தப்படுகின்றன. இவ்வாற்றுவித்தல் துறையில் மூன்று துறைக்குறிப்புகள் (குறுந் -211, 213, 255) இடையில் மீள்வாரோ எனத் தலைவி அஞ்சுவதற்கு தோழி

ஆற்றுவித்தமையை அறிய முடிகிறது. **வன்புறை எதிர்மொழிதல் எதிரழிதல்** துறையில் 'வன்புறை எதிரழிந்தது' எனவும்,'.... 'யாங்ஙனம் ஆற்றுவேன்?' எனத் தனது ஆற்றாமை மிகுதி தோன்றத் தலைமகள் கூறியது.' எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -109, 130, 199, 225, 226, 241, 281: குறுந் -39, 192, 279, 281, 290, 307, 344, 386, 387, 398: அகநா -37, 40, 45, 53, 67, 74, 97, 115, 159, 163, 175, 205, 229, 235, 241, 243, 265, 301, 333, 341, 367, 368, 375, 389, 391, 395:) வகைப்படுத்தப்படுகின்றன. இத்துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்களில் 'ஆற்றி இரு என வற்புறுத்தும் தோழியிடம், தலைவி தன் ஆற்றாமை கூறியதாக' அமைந்துள்ளன.

**பருவங் கண்டழிதல்** துறையில் 'பொருள்வயிற் பிரிந்த தலைவன், பருவம் உணர்ந்த நெஞ்சிற்கு உரைத்தது.' எனவும்,'வேந்தற்கு உற்றுழிப் பிரிந்த தலைமகன் வினை முடியாமையின் பாசறைக்கண் இருந்து பருவ வரவின்கண் சொல்லியது.' என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -157: குறுந் -131: ஐங்குறு -441-448: அகநா -24, 41:) வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களுடன், பாணன் பத்தில்(ஐங்குறு -478, 479) இரு பாடல்களும் அடங்கும். இப்பதினான்கு பாடல்களும் தலைமகன் **'பருவங் கண்டழிந்து'** கூறுவதாக அமைந்துள்ளன. 'வினைவயிற் பிரிதல் ஆற்றாளாய தலைவி சொல்லியது.''பருவம் கண்டு அழிந்த தலைமகள், .....' எனவமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -69, 97, 118, 193, 214, 238, 289, 302, 381: குறுந் -24, 65, 82, 98, 103, 108, 110, 126, 148, 155, 195, 197, 200, 216, 220, 221, 251, 254, 285, 314, 319, 382, 391: ஐங்குறு -338, 339, 341, 350, 451-458, 460, 473-476: அகநா -23, 139, 183, 185, 194, 264, 277, 364:) தலைவி பருவங்கண்டு அழிந்ததாக அமைந்துள்ளதை அறிய முடிகிறது.

**பருவங்கண்டு அழிந்த தலைவியைத் தோழி ஆற்றுவித்தல் மற்றும் கடிந்துரைத்தல்** துறையில் 'பருவ கண்டு ஆற்றாளாய தலைவியைத் தோழி,'பருவம் அன்று' என்று வற்புறுத்தியது.','பருவங் கண்டு வேறுபட்ட தலைமகளை,'வேந்தன் வினை முடிந்தான்' எனக் கேட்ட தோழி 'வருவர்' என வற்புறீஇயது.' என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -99, 112, 248, 316, 329, 387: குறுந் -66, 275, 277, 282, 380: அகநா -25, 73, 461, 462, 463, 464, 465, 466, 467, 468, 469, 470:) அமைகின்றன. 'பருவ வரவின்கண் தூதாகி வந்த பாணன்

கூறிய வழி, தோழி சொல்லியது.'(ஐங்குறு -471, 472) என அமையும் துறைக்குறிப்புகளும்,'தலைமகட்குத் தூதாய்ப் பாசறைக்கண் சென்ற பாணன் தலைமகனை நெருங்கிச் சொல்லியது.'(ஐங்குறு -480) என்னும் துறைக்குறிப்பைக் கொண்ட பாடலும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **இடைச்சுரத்து அழுங்கல்** துறையில் 'இடைச்சுரத்துக்கண் தலைமகள் குணம் நினைத்தலின் ....'இடைச்சுரத்துத் தலைமகள் குணம் நினைந்த தலைமகன்,'அவள் பண்பு வந்தன' சொல்லியது.','.... தலைமகள் நலன் நயந்து உள்ளிய நெஞ்சினைக் கழறியது.' என அமையும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -103, 105, 113, 284, 346, 353: ஐங்குறு -321, 322, 323, 324, 325, 326, 327, 328, 329, 330: அகநா -19, 21, 33, 47, 57, 79, 83, 87, 93, 109, 123, 169, 181, 239, 279, 287, 289, 291, 299, 339, 343, 351, 361, 365, 371, 373, 381:) வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களில் தலைவன், தலைவிமேல் கொண்ட காதல் உள்ளத்தை உணரமுடிகிறது.

**வினைமுற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகற்கு உரைத்தல்** துறையில் 'வினைமுற்றி மீள்வான்','வினைமுற்றிப் பெயருந்''வினை தலைவைக்கப்பட்ட இடத்துத்''பொருள் முற்றி மீள்வான்''வினை முற்றினான்''மீள்கின்றான்''வினைமுற்றி மீளும்''வினைமுற்றி மீண்ட''வினைமுற்றிய' எனத் துறைக்குறிப்பின் தொடக்கத்தில் அமைந்து தேர்ப்பாற்கு உரைக்கும் பாடல்கள் (நற் -21, 42, 59, 81, 142, 161, 221, 321, 371: குறுந் -189, 237, 250, 323: ஐங்குறு -422, 425, 481 – 490: அகநா -9, 34, 44, 54, 64, 94, 114, 124, 134, 144, 154, 224, 234, 244, 274, 284, 344:) வகைப்படுத்தப்படுகின்றன. **தேர்ப்பாகன் தலைவனுக்கு உரைத்தல்** துறையில் 'வினைமுற்றி மறித்தருந் தலைமகற்குத் தேர்ப்பாகன் சொல்லியது.'(நற் -121) என்னும் துறைக்குறிப்பும்,**நெஞ்சிடம் கூறுதல்** துறையில் 'வினைமுற்றி மறுத்தரா நின்றான் நெஞ்சிற்கு உரைத்தது.'(நற் -169) என்னும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது. **தலைமகன் தன் உணர்வு புலப்படுத்துதல்** துறையில் வினைமுற்றி மீளும் தலைவன் - கண்டார்க்கு(நற் -374), முல்லைக்கு(ஐங்குறு -162), பருவ வரவின்கண்(குறுந் -131), கனாக் கண்டு(குறுந் -41), உழையர்க்கு(அகநா - 324, 351), போன்றோர்க்கு உரைப்பதாக அமையும் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்படுகின்றன.

'வினைமுற்றி மீண்டபின்' தலைவன், தலைவியுடன் இனிதிருத்தல், தோழியின் சொல்லாடல், தோழி, தலைவி போன்றோரிடம் பேசுவதாக அமைந்துள்ளன.

அவ்வகையில் **மகிழ்ந்துரைத்தல்** துறையில் ‘வினைமுற்றிப் புகுதந்தது கண்ட தோழி மகிழ்ந்து உரைத்தது.’, ‘தலைமகன் வினைமுற்றிப் வந்து பள்ளிடத்தானாகப் பெய்த மழையை வாழ்த்தியது.’ எனத் தோழி மகிழ்ந்துரைக்கும் துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(நற் -86, 89, 181, 139: குறுந் -210, 288: ஐங்குறு -351 – 354, 491 -495, 500: அகநா -104, 184, 314, 317, 384:) அமைகின்றன. சுரத்தின் தன்மை பற்றித் தோழி வினவ, அதற்குத் தலைவன் பதிலுரைக்கும் பொருண்மையிலமைந்த துறைக்குறிப்புகளைக் கொண்ட பாடல்கள்(குறுந் -99, 209, 270: ஐங்குறு -324, 325, 356:) வகைப்படுத்தப்பட்டுள்ளன. **வந்த திறம் கூறல்** துறையில் ‘மீண்டு வந்த தலைமகன் .... சுரத்தின் சேய்மையும், வருகின்ற காலத்து அதன் அணிமையும் கூறியது.’(ஐங்குறு -355, 357, 359, 360, 362) எனத் துறைக்குறிப்பமைந்த பாடல்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றுள் ஐங்குறு -357ஆம் பாடல் மட்டும் தலைவன் வந்த திறத்தை, தோழி கூறுவதாக அமைந்துள்ளது.

**தலைவி ஆற்றாதிருந்த நிலையைத் தலைமகற்குக் கூறல்** துறையில் ‘தலைமகள் ஆற்றாமை கண்டு பிரிந்த தலைகன் வந்தானாகத் தோழி சொல்லியது.’(ஐங்குறு -358) என்னும் துறைக்குறிப்பு அமைகிறது. **குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை கூறி மகிழ்தல்** துறையில் ‘பருவம் குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து,’‘தலைமகன் பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடு கூடிச் சென்றுழி’,‘இன்ப நுகர்ச்சிக்கு ஏற்ற பருவம் வந்துழி,’ எனத் தொடக்கம் கொண்ட துறைக்குறிப்புகளுடைய பாடல்கள்(ஐங்குறு -411-420, 496-499:) வகைப்படுத்தப்பட்டுள்ளன.**எம்மையும் நினைத்தீரோ என்றாட்குத் தலைவன் உரைத்தல்** துறையில் ‘.... ‘எம்மையும் நினைத்து அறிதீரோ?’ என்ற தலைமகட்குச் சொல்லியது.’(அகநா -29, 39) என அமையும் துறைக்குறிப்புகளும்,**காமம் மிக்க கழிபடர் கிளவித்** துறையில் ‘..... கிழத்தி, காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறியது.’(குறுந் -107) என்னும் துறைக்குறிப்பும் வகைப்படுத்தப்படுகிறது.

**தூது**

தொலைவிலுள்ள இருவர் உள்ள உணர்வினைப் பரிமாற்றம் செய்வதற்கு இடைநிற்பவரால் உரைக்கப்பெறுவது தூது. இடைநிற்பவர் தூதர். இடைநிற்பவர் உயர்திணையாகவோ, அ∴றிணையாகவோ, இரண்டுமல்லா தூதுவிடுபவரின்

நெஞ்சமாகவோ அமைவர். இத்தூது பற்றித் தொல்காப்பியர், காமக் கூட்டம் தனிமையில் அமையும்பொழுது தாமே தூதுவ ராகலும் உண்டு எனக் களவுத் தூதினையும்(தொல்.பொருள் -117), தூதிற் பிரிவு(தொல்.பொருள் -44:15) பற்றியும், கூத்தரும் பாணரும் தூதிற்கு உரியோர்(தொல்.பொருள் -167) என்பதையும் மொழிவர். தொல்.பொருள் -167ஆம் நூற்பாவிற்கு உரைகூறும் இளம்பூரணர்,*"தலைவன் பிரிந்தவிடத்துச் சென்று கூறுதல், அவள் நின்ற நிலையைத் தலைவற்குக் கூறுதல்"*[137]எனப் பொருளுரைத்து, கலித்தொகை 39-ஆம் பாடலை மேற்கோள் காட்டி,*"பாசறைக்கண் தலைவருக்கு தலைவி வருந்தங் கூறியவாறு காண்க"*[138] என மொழிவர். இந்நூற்பாவும் இளம்பூரணர் உரையும் 'தூது' என்ற சொல்லாட்சியை மொழியவில்லையெனினும் தூதுக்கான வரையறையைச் சுட்டுகின்றன.

### சங்க அகஇலக்கியத்தில் தூது

தூதுப் பொருண்மையிலமைந்த பாடல்கள் சங்க இலக்கியத்துள் பதின்மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. இவற்றில் பதினொரு பாடல்கள் பிரிவுப் பொருண்மையில் அமைந்தவை நீங்க இரு(குறுந் -106: ஐங்குறு -140:) பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின் **ஆறுதல் அடைவோமெனல்** துறையில் 'தலைமகன் தூது கண்டு கிழத்தி …..'(குறுந் -106)என்னும் துறைக்குறிப்பையும்,**தூது விருப்பினால் மெலிவு காட்டல்** துறையில் ஐங்குறு -140ஆம் பாடலின் துறைக்குறிப்பையும் கொண்டு தூதில் வகைப்படுத்தப்படுகிறது.

### தொகுப்புரை

சங்கச் செய்யுட்களில் கூறுவோரின் எண்ணங்கள், உணர்வுகள், எதிர்பார்ப்புகள் போன்றவை வெளிப்பட்டும், எச்சூழல் என்பது புலப்படாதிருக்கும். அந்நிலையில் பாடலின் பொருண்மையை வெளிப்படுத்துவனவாகத் துறைக்குறிப்புகள் அமைந்து பாடலின் சூழலையும் பொருண்மையையும் தெளிவுபடுத்துகின்றன. அகவாழ்வின் கூறுகளாக அமையும் சூழல்களைத் 'துறை' யெனச் சுட்டுதல் மரபு. தொல்காப்பியர், முதல், கருப்பொருட்களின்வழி உரிப்பொருளை வெளிப்படுத்துவது துறையென மொழிவர். புலவர்கள் தான் மொழிய நினைத்ததை முறைப்பட ஏற்புடையதாய் இயம்புவது துறை: இன்ப வெள்ளத்து இசைவுறும் ஒவ்வோர் நிகழ்ச்சியும் துறையென மொழியும் பிற இலக்கண நூல்கள்.

புலவர்களுக்கு முதற் - கருப்பொருட்களைப் பயன்படுத்திச் செய்யுள் யாக்க உதவுவது துறை என்று இளம்பூரணர், நச்சினார்க்கியர் உரைவழி மொழியப்பட்டுள்ளன. செய்யுட்களில் முதல் கருப்பொருட்களால் உரைக்கப்படும் பொருள் இவை என்றும், இப்பொருட்கள் இதன்பாற்படும் என உரைக்கப் பயன்படும் கருவி ‘துறை’யென பேராசிரியர், க.வெள்ளைவாரணன், கு.சுந்தரமூர்த்தி போன்றோரின் உரைவழி அறியமுடிகிறது.

சொற்களின் பொருளைச் சுருக்கமாக, தேவைக்கேற்ப விரிவாகப் புலப்படுத்தும் தன்மை கொண்ட அகராதிகள்வழியும் துறை பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தை அடியொற்றி அபிதான சிந்தாமணியும், செய்யுள் இயற்றிய புலவர்கள் கருத்து என தமிழ் இலக்கணப் பேரகராதியும் உரைக்கின்றன. ‘அகமும், புறமும் பற்றிய தமிழ்ப் பொருட்கூறு’ என சுருக்கத் தமிழ் அகராதி உள்ளிட்ட அகராதிகள் வரையறுக்கின்றன. கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி ‘வகைப்படுத்தப்பட்ட வகுப்பு அல்லது பிரிவு’ என கூறுவது துறை பற்றிய எச்சூழலுக்கும் பொருந்தும் செறிவுமிகுந்த வரையறையாகும். செய்யுட்களில் முதற்கருப்பொருட்கள் பயன்படுமாற்றைத் தொல்காப்பியர் ‘துறை’யெனக் குறிப்பர். பின்னை வந்த திறனாய்வாளர்கள், உரிப்பொருளைத் தெளிவுபடுத்துவது துறை, கூற்றுக்களின் ஒருமுகப்படுத்தப்பட்ட தன்மையைக் குறித்து நிற்கிறது எனபர். ‘பாட்டின் அடிக்கருத்து துறை’ என க.கைலாசபதியின் கருத்துக்கு,‘துறை என்பதுதான் ‘சூழல் என்றும் (ீழநவளை ளுவைரயவழைெ) கூற்று என்பதுதான் அடிக்கருத்து (வுாநஅந) என்றும் தமிழண்ணல் தெளிவு படுத்துவது எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

**இயற்கைப் புணர்ச்சியில்** அமைந்த பத்துப்பாடல்கள் நலம்பாராட்டல், முதல் அருமையறிதல் வரையிலான ஆறு துறைகளாகவும்,**இடந்தலைப்பாட்டிலமைந்**த ஏழு பாடல்கள் நுகர்ச்சி, முதலான மூன்று துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில், நலம் பாராட்டல், நுகர்ச்சி, தீராத் தேற்றம் ஆகிய துறைகள் தொல்காப்பியத்தையும், பிரிவச்சம், பிரிவுழிக் கலங்கல், பிரிந்துழிக் கலங்கல், வன்புறை போன்ற துறைகள் பின்னை இலக்கண நூல்கள்வழியும், அருமையறிதல் நக்கீரனார் மட்டுமே குறிப்பிடும் துறையாகவும், அ∴றிணை உயிரினை வாழ்த்தல் பாடல் மற்றும் துறைக்குறிப்பின் பொருண்மைவழி வருவிக்கப்பட்டதாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பாங்கற் கூட்டத்தில்** அமைந்த 28 பாடல்கள், பெற்றவழி மகிழ்தல், முதல் பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுத்தல் வரையிலான ஏழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் பாங்கற் கூட்டத்தின் முடிவில் நிகழும் **பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்** துறை தனித்துக் கூறப்பட்டுள்ளது. **மதியுடன்பாட்டுத்** துறையிலமைந்த 9 பாடல்கள் **இருவரும்உள்வழி அவன் வரவுணர்தல்,தோழியிற் கூட்டம் வேண்டல்,கையுறை** துறைகளில் எட்டு உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இதுகாறும் கூறிய 24 துறைகளுள் தலைவன் மட்டும் பேசும் துறைகளாக 18 துறைகளும், தோழி தலைவனுடன் பேசும் துறைகளாக 5 துறைகளும், தோழி, தலைவியிடம் பேசும் துறையாக ஒரு துறையும் அமைகின்றன.

**தோழியிற் கூட்டம்** என்னும் பெருந்துறையில் **பின்னிற்றல்** துறையில் அமைந்த 40 பாடல்கள், ஊரும் பேரும் கூறித் தோழியைக் குறையுறுதல் முதல் படைத்து மொழிதல் வரையிலான 17 உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் தலைவன், தோழியிடம் பேசுவனா 8 துறைகளும், தோழி, தலைவனிடம் பேச்சுவனவாக 9 துறைகளும் அமைந்துள்ளன. **சேட்படுத்துதல்** துறையிலமைந்த 7 பாடல்கள், பெருமையிற் பெயர்த்தல் முதல் ஆற்றாமை வரையிலான 5 துறைகளாக அமைந்துள்ளன. இவற்றில் தோழி, தலைமகற்குக் கூறுவதாக 2 துறைகளும், தலைவி, தலைவனுக்குக் கூறுவதாக 1 துறையும், தோழி தன்னுள்ளும், தலைவன் தோழிக்கும் கூறுவதாக தலைவி அருமை சாற்றல்துறையும், தலைவன் தன்னெஞ்சுக்கும், தோழி தன்னுள்ளும் கூறுவதாக ஆற்றாமை துறையும் அமைகின்றதை அறியமுடிகிறது. **மடல்** துறையில் 10 பாடல்களில் இரு பாடல்கள் இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருள் என மதித்தல் என்ற ஒரு துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது. மற்ற 8 பாடல்களும் பின்னிற்றல், சேட்படுத்துதல் துறைகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**இருவகைக் குறிப்** பொருண்மையில் 115 பாடல்கள் உள்ளன. **தலைவன்** கூற்றிலமைந்த பாடல்களை ‘அவட்பெற்று மலிதல் முதலாக வேளாண் எதிரின் விருப்பின் கண்ணும் வரையிலான ஐந்து துறைகளாகவும்,**தலைவி** கூற்றிலமைந்த பாடல்களைப் இரவுக்குறி நயத்தல் முதலாக வேட்கை மீதூர்தல் வரையிலான பதினாறு துறைகளாகவும்,**தோழி** கூற்றிலமைந்த பாடல்களைச் ‘சிறைப்புறமாக – படைத்து மொழிதல் முதல் முகம் புக்கல் வரையிலான முப்பத்து நான்கு துறைகளொடு 55 துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **அல்லகுறி**

பொருண்மையிலமைந்த 12 பாடல்கள் உள்ளன. குறிப் பிழைத்தவழித் தலைவன் உள்ளத்திற்குச் சொல்லியது, என் பிழைப்பன்று என்று இறைவி நோதல், இறைவியின் ஆற்றாமை உரைத்தல் என்ற மூன்று துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**இற்செறிப்புத்** துறையில் 35 பாடல்கள் உள்ளன. காப்புச் சிறைமிக்க கையறு கிளவி முதலாக தலைவனின் திறம் உணர்த்துதல் வரையிலான ஐந்து துறைகளும் தலைவி கூறுவனவாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. அலர் ஆயிற்று என்றாட்குக் கூறல் முதலாக காப்பு இடையீட்டின் கையறு கிளவி வரையிலான ஏழு துறைகளும் தோழி கூறுவனவாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. **சிறைப்புறம்** பொருண்மையில் அமைந்த 80 பாடல்களில் 11 பாடல்கள் ஏனைய துறைகளிலும், சிறைப்புறம், ஆறுபார்த்துறும் அச்சம் என்ற இரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. **ஒருவழித்தணத்தல்** துறையில் 28 பாடல்கள் உள்ளன. வன்புறை எதிர் மொழிதல் முதலாக காமம் மிக்க கழிபடர் கிளவி வரையிலான நான்கும் தலைவி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும்,'மென்சொல் பாங்கி விலக்கல் முதலாக காமம்மிக்க கழிபடர் கிளவி வரையிலான ஆறும் தோழி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவு நீடல்** துறையிலமைந்த 64 பாடல்களில் 12 பாடல்கள் ஏனைய துறைகளில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. தலைவி தன் ஆற்றாமை கூறல் முதலாக இயல்பட மொழிந்தது வரையிலான பதின்மூன்றும் தலைவி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும், ஆற்றாளாய தலைவியை வற்புறுத்தியது முதல் வரைவு மலிந்தது கூறல் வரையிலான எட்டும் தோழி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **அலர்** துறையிலமைந்த 6 பாடல்களை அலரச்சம் உரைத்தல், வரைவு துணிபு என்ற இரண்டும் தலைவி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும், ஆற்றுவித்தல் முதல் அலர் தோன்றியதை உரைத்தல் வரையிலான நான்கும் தோழி கூற்றியலமைந்த உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **நொதுமலர் வரைவு** என்னும் துறையிலமைந்த 14 பாடல்களில் வரைவுகடாவுதல், அறத்தொடு நிற்றல் எனவும், தோழி தலைவியிடம் கூறும் துறைகளாகவும் நொதுமலர் வரைவு துறையும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. **வெறியாடல்** துறையிலமைந்த 19 பாடல்களில் அறத்தொடு நிற்றல் துறையில் எட்டுப் பாடல்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளதால், ஏனைய பாடல்கள் 'வெறியாடல்' என்ற ஒரு துறையில் வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**வரைவுகடாதல்** துறையிலமைந்த 76 பாடல்கள் அனைத்தும் தோழி தலைவனிடமும் தலைவியிடமும் கூறுவதாக அமைந்துள்ளன. ஆற்றது தீமை அறிவுறு கலக்கம், முதல் அலரச்சம் வரையிலான ஐந்து உட்துறைகளாகவும், களனும் பொழுதும் வரைநிலை விலக்குதல் உட்துறையில் 'குறிப் பெயர்த்திடுதல், முதல் தினப்புனங்காவற்று வாரோமெனல்' என்ற நான்கும் வழிநிலைத் துறைகளாகவும், காதல் மிகுதி கூறல், கவின் அழிபு உரைத்தல்,'நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் இறப்பும் இறப்ப நோக்கி' என அமைந்த துறைகள் நான்கும் உட்துறைகளாகவும், அனைநிலைவகையான் என்பதனுள் 'படைத்து மொழிதல், முதல் உடன்போக்கு நயந்தாள் போல்' என்ற ஐந்து துறைகளொடு பதினேழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு** துறையிலமைந்த 95 பாடல்கள். பிரிவுழி கலங்கல், வரைவிடை வைத்துப் பிரிந்து மீளும் தலைவன் கூறியது என்ற இரண்டும் தலைவன் கூற்றிலமைந்த உட்துறைகளாகவும், வரைவிடை நயந்ததை குறிப்பினால் உணர்ந்ததைத் தோழிக்கு உணர்த்தல் முதல் வந்துழி மகிழ்வு வரையிலான எட்டும் தலைவி கூற்றிலமைந்த உட்துறைகளாகவும், பிரிவு உணர்த்திய தலைவனுக்குத் தலைவியின் நிலையுரைத்தல் முதல் வந்துழி மகிழ்வு வரையிலான எழும் தோழி கூற்றியலமைந்த உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இங்கு, பாடலின் துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு வருவிக்கப்பட்ட துறையாக வரைவிடை வைத்து பிரிந்தவிடத்து முனிந்து கூறல் துறை வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**அறத்தொடு நிற்றல்** துறையிலமைந்த 53 பாடல்கள், காரிகை நேர்தல் என்ற ஒரு துறை தலைவி கூற்றில் அமைந்ததாகவும், அறத்தொடு நிற்றல் நலமெனல், முதல் காதலே காரணமெனச் செவிலியை வற்புறுப்பல் என்ற பதினான்கு உட்துறைகளும், செவிலியின் ஐயம் போக்கல் உட்துறையில் தலைவியின் தோள் நலங்கூறல், அவனளி சிறப்புக் கூறல் என்ற இரண்டும் வழிநிலைத் துறைகளாகவும், வரைவுடன்படல் முதல் உடன் போயினபின் செவிலி அறத்தொடு நின்றது என்ற நான்கு துறைகளுடன் 22 உட்துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் இறுதித் துறைகளில் நற்றாய் மற்றும் செவிலித்தாய் அறத்தொடு நிற்பனவாக அமைந்துள்ளன. 'கட்டுவிச்சியிடம் உரைத்தல்' துறை பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையின்வழி வருவிக்கப்பட்ட துறையாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

**உடன்போக்குத்** துறையிலமைந்த 119 பாடல்கள் ஒன்றாப் பருவத்தும் முதல் தலைவன் மீளவுரைத்தல் வரையிலான பன்னிரு உட்துறைகள் தலைவன் கூற்றிலும், உடன்போதுவல் முதல் வழிவரல் வருத்தம் கண்டு வருந்திய தோழிக்குக் கூறல் வரையிலான ஏழு உட்துறைகளும் தலைவி கூற்றிலும், தலைவரும் விழும நிலையெடுத்து உரைத்தல் முதல் கற்பொடு புணர்ந்த கவ்வை வரையிலான எட்டு துறைகளும் தோழி கூற்றிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. தன்னும் அவனும் அவளும் சுட்டிக் கூறல் முதல் நன்மை வரையிலான நான்கு உட்துறைகளும், தீமை உட்துறையில் சுரம் நினைந்திரங்கல், அடிநினைந்திரங்கல் என்ற இரண்டு வழிநிலைத் துறைகளும், அச்சம் முதல் போகிய திறத்து நற்றாய் புலம்பல் வரையிலான நான்கு துறைகளும், அன்னபிறவும் என்பதனுள் நற்றாய் தலைவனின் தாயை வெகுண்டு கூறல் முதல் கற்பொடு புணர்ந்த கவ்வை வரையிலான ஏழு துறைகளொடு பதினெட்டும் தாய் கூற்றிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. சுரத்திடை வருந்துதல், முதல் தலைவி வருகைச் செய்தி கூறல் வரையிலான எட்டும் செவிலி கூற்றிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. பொழுதும் ஆறும் வழுவினாகிய குற்றம் காட்டல் முதல் வரவு வரையிலான ஆறும் கண்டோர், அயலோர் உள்ளிட்டோரின் கூற்றுக்களிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவுத்** துறையில் 45 பாடல்கள் அமைந்துள்ளன. கடிதின் வரைவேனெனல், வரைவு மறுக்கப்படல், வரைவு மாட்சிமைப்படின் நேரில் வருவேனெனல் என்ற மூன்று உட்துறைகளும், தலைவன் வரைவொடு புகுதல், வரைவு நிகழா நின்றுழி தலைவன் வருந்துதல் என்ற வழிநிலைத் துறைகளும் தலைவன் கூற்றிலமைந்த துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. வரையுந்திறம் தெளிதல் முதல் வரைவு மலிந்த தோழிக்குக் கூறல் வரையிலான ஐந்தும் தலைவி கூற்றிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. வரைவு முடுக்கம் முதல் பொருளீட்டலில் நாட்டமுடையனெனல் வரையிலான ஆறு துறைகளும் தோழி கூற்றிலமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

களவுவழி வந்த கற்பு வாழ்வினை மேற்கொண்டொழுகும் தலைமக்களின் வாழ்வின் நிகழ்வுகளை மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு என்ற ஐந்து நிலைகளில் பகுத்து, அவற்றின் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. தலைமக்கள் மகிழ்ந்திருக்கும் **மலிவுப்** பொருண்மை 90 பாடல்கள் உள்ளன. இவற்றில் பிரிந்து மீண்டும் வந்து மகிழ்ந்திருக்கும் பொருண்மையில் 42 பாடல்கள்

காணப்படுகின்றன. எஞ்சிய 48 பாடல்களின் துறைக்குறிப்புகள் வகைப்படுத்தப் பட்டிருக்கின்றன. தேர்ப்பாகனைத் தலையளித்தல் முதல் எம்மையும் நினைத்தீரோ என்றாட்குத் தலைவன் உரைத்தது வரையிலான ஆறும் தலைவன் கூற்றிலமைந்த துறைகளாகும்.

மலிவுப் பொருண்மையில் **தலைவி** கூற்றில், ஆற்றாமை நீங்கியவழி கூறல் முதல் தலைவனின் இனிமையுரைத்தல் வரையிலான ஏழு துறைகளும்,**தோழி** கூற்றில், தலைவனைப் பாங்கி வாழ்த்தல் முதல் இனிதே இன்புறக் கூறல் வரையிலான எட்டு துறைகளும் வகைப்படுத்தப்பட்டிருந்கின்றன. இங்கு, இழைத்திருந்த திறம் உணர்த்தல் துறை வருவிக்கப்பட்ட துறையாகும். **செவிலி** கூற்றில் மீண்டவள் செல்வனும் செல்வியும் வியனகர் ஆண்டு அமைந்தனரென ஆய்ந்துரைத்தல் முதல் கிழத்தியின் மாண்பினைப் பாராட்டிக் கூறல் வரையிலான ஐந்து துறைகளாகும். இங்கு அன்னவர் காதல் கண்டு மகிழல் வருவிக்கப்பட்ட துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

தலைவியின் ஊடலுக்குக் காரணமாக அமைபவள் **பரத்தை** இவ்வூடல் பொருண்மையில் பரத்தையர் தம் எண்ணப் போக்குகளை வெளிப்படுத்தும் பாடல்களின் துறைக்குறிப்புகளும், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயில் நேர்வித்தல், வாயிற் புகுதல் போன்ற துறைகளில் அமைந்த பாடல்கள் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. இவ்**வூடல்** பொருண்மையில் அமைந்த 246 பாடல்கள்,**தலைவன்** கூற்றில் ஊடல் நீட ஆற்றானாய தலைமகன் கூறியது உள்ளிட்ட மூன்று துறைகளும்,**தலைவி** கூற்றில் பரத்தையர்க்குச் சிறப்புச் செய்தமை அறிந்து ஊடுதல் உள்ளிட்ட பதினேழு துறைகளும்,**தோழி** கூற்றில் தலைவியின் ஆற்றாமை கூறல் உள்ளிட்ட நான்கு துறைகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. பாங்காயினார் கேட்ப சொல்லியது உள்ளிட்ட ஒன்பதும் புலவிப் பொருண்மையில் **பரத்தையர்** கூற்றிலமைந்த துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இங்கு*‘தலைவன் தன் மனத்து உவகை கூர்தலைத் தோழி பரத்தைக்கு கூறுதல்’,‘நீ, நின் மனைக்குச் செல்லாமையின் யான் நின்னொடு புனலாடுவேன் எனல்’ என்ற* இரு துறைகள் புதிதாக வருவிக்கப்பட்ட துறைகளாகும்.

வாயில் வேண்டல் துறை தலைவன் கூற்றாகவும், தணியாளாகத் தலைவன் ஊடலும்’ முதல் கழிவிரக்கம் கொள்ளல் வரையிலான முப்பது துறைகளும் வாயில் மறுத்தல் துறையில் தலைவி மற்றும் தோழி கூற்றில் அமைந்த

உட்துறைகளாகவும், தலைவி கொடுமை கூறி இகழ்ந்தாள் என கூறி வாயில் மறுத்தல் என்ற உட்துறை பரத்தை மொழியாகவும், வணங்கற் மொழியான் வணங்கற் கண்ணும், முன்பு நிகழ்ந்தது கூறல் என்ற துறைகள் தலைவன் கூற்று உட்துறைகளாகும். இங்கு 3 உட்துறைகளும் வருவிக்கப்பட்ட துறைகளாகும். ஆற்றாமை கூறி வாயில் மறுத்தல் என்னும் துறை பரத்தை அல்லாத ஊடல் உட்துறையாகும்.

வாயில் நேர வருவான் என அஞ்சியிருத்தல் முதல் நெஞ்சு நெகிழ்ந்தமை கூறல் வரையிலான ஏழு துறைகளும் வாயில் நேரும் பொருண்மையின் தலைவி கூற்றில் அமைந்த உட்துறைகள். பரத்தையருடனான நீராடலை நினைத்து ஊடல் கொள்ளல், யாரையும் அறியேன் என்றார்க்கு தலைவி உரைத்தல், பரத்தைமையை அறியேன் எனப் புலத்தல் என்ற மூன்று துறைகளும் வாயில் நேர்ந்தபின் அமைவன. இப் பத்துத் துறைகளும் தலைவி கூற்றில் அமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப் பட்டிருக்கின்றன.

தலைமகள் குறிப்பறிந்து வாயில் நேர்தல், தலைமகள் இயல்பு கூறி வாயில் நேர்தல், தலைவியின் வருத்தம் கூறி வாயில் நேர்ந்தது என்ற மூன்றும் தோழி வாயில் நேரும்போது அமைந்த உட்துறைகளாகும். கடிந்துரைத்தல் உள்ளிட்ட எட்டு உட்துறைகளும்,'பிறவும் வகைபட வந்த கிளவி எல்லாம்' என்பதனுள் தலைமகள் மாண்புணர்த்துதல் முதல் தலைவி வருத்தம் கூறி வாயில் நேர்தல் வரையிலான ஆறு துறைகளுடன், பதினான்கு துறைகளும் தலைவி வாயில் நேர்ந்தபின் தோழி கூறுவனவாகவும், தோழி வாயில் நேர்ந்தபின் அவள் கூறும் உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

தலைமகள் பெருங்குணத்தைப் பாராட்டியுரைத்தது, காமக்கிழத்தி பிறர் நலம் காக்க வாயில் நேர்வேனெனல் என்ற இரு உட்துறைகளும் வாயிலோர், காமக்கிழத்தி கூறும் துறைகளாக வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. தலைமகள் ஊடல் தணியாதிருந்த நிலையில் தோழி தன்னிலை கூறல், குறிப்பறியாது இருந்தேனெனல், பரத்தை நீங்கி வந்தானை ஏற்றல் நலமெனல் என்ற மூன்று துறைகளும், தோழி வாயில் நோகவித்தல் துறையில் அமைந்த உட்துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. விருந்து வாயிலாக வாயிற் புகுதல் முதல் பாணன் இயல்பு கூறித் தலைவனை இடித்துரைத்தல் வரையிலான ஏழு துறைகளும் வாயில் புகுதல் துறையில் அமைந்த உட்துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் இரண்டு துறைகள் தலைவன்

பேசுவனவாகவும், மூன்று துறைகள் தோழி பேசுவனவாகவும், இரண்டு துறைகள் தலைவிக்குரியனவாகவும் அமைந்துள்ளன.

செலவழுங்கல் துறையில் அமைத்த 49 பாடல்கள், செலவழுங்கல் துறையாகவே வகைப்படுத்தப்பட்டுள்ளது. இத்துறையில் ஆறு பாடல்கள் தலைவிக்குக் கூறுவதாகவும், ஏனைய 42 பாடல்கள் நெஞ்சிற்குக் கூறும் 'நெஞ்சொடு கிளத்தல்' துறையாகவும் கொள்ளமுடிகிறது. செலவழுங்குவித்தல் துறையில் அமைந்த 45 பாடல்கள், தலைவியின் இளமை – ஆற்றாமை கூறி செலவழுங்குவித்தல் முதல் செலவு உடன்பட்டது வரையிலான பத்து துறைகளும் தோழி கூற்றில் அமைந்த உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

பிரிவுப் பொருண்மையில் அமைந்த 496 பாடல்களில் ஓதல்பிரிவு, கடல்வழிப்பிரிவு, தூதிற் பிரிவு, பகைவயிற் பிரிவு ஆகிய பொருண்மைகளில் அமைந்த 44 பாடல்களும் அமைந்துள்ளன. இப்பாடல்கள், பிரிவுணர்தல் முதல் காமம் மிக்கக் கழிபடர் கிளவி வரையிலான 24 துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இத்துறைகளுள் பருவங் கண்டழிதல் (தலைவன் -14, தலைவி -76) துறை அதிகப் பாடல்களைக் கொண்டுள்ளது. தூதுப் பொருண்மையில் அமைந்த பாடல்கள், ஆற்றுவித்தல் முதல் ஆறுதல் அடைவோமெனல் வரையிலான எட்டுத் துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்


1. தொல்காப்பியர், தொல். பொருள் ப -510
2. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள் விளக்கம் ப -234
3. திருக்குருகைப் பெருமாள் கவிராயர், மாறன் அகப்பொருள், ப -298
4. சுவாமி கவிராயர், சுவாமி நாதம், ப -121
5. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், அறுவகை இலக்கணம், ப -325
6. இளம்பூரணர்(உ..ஆ), தொல்.பொருள். ப -539
7. நச்சினார்க்கியர், தொல்.பொருள்., ப -235
8. பேராசிரியர், பொருளதிகாரமும் பேராசிரியருரையும், ப -206
9. வெள்ளைவாரணன், தொல்காப்பியம் நுதலிய பொருள்(தமிழ் இலக்கிய வரலாறு ப -270
10. கு.சுந்தரமூர்த்தி, தொல்.பொருள் -நச்சினார்க்கினியம், ப -4
11. ஆ.சிங்காரவேலு முதலியார், அபிதான சிந்தாமணி, ப -1069
12. தி.வே.கோபாலையர், தமிழ் இலக்கணப் பேரகராதி, ப -106
13. அ) ரா.பி.சேதுப்பிள்ளை, சுருக்கத் தமிழ் அகராதி, ப -99
ஆ)மாருதிதாசன், நர்மதாவின் தமிழ் அகராதி, ப -445
14. ஐயன்பெருமாள் கோனார், கோனார் தமிழ் அகராதி, ப -370
15. சங்கரலிங்க முதலியார், வெள்ளிவிழா தமிழ்ப் பேரகராதி-2, ப -103
16. பா.ரா.சுப்பிரமணியன், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, ப -567
17. அ)கதிரைவேற்பிள்ளை, தமிழ் மொழியகராதி, ப -822
ஆ) எஸ்.கௌமாரீஸ்வரி, கதிரைவேற்பிள்ளையின் தமிழ் மொழியகராதி, ப -836 இ).இராமநாதன், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்ப்பேரகராதி, ப -758
18. …………., தமிழகராதி – தொகுதி -4, ப -3086
19. ந.கடிகாசலம்., க.சிவகாமி., தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள், ப -12 (கட்டுரை ஆசிரியர்ச.பாலசுந்தரம், செய்யுள் உறுப்பு)
20. மு.இராமலிங்கனார், தொல்காப்பியச் செய்யுளியல் விளக்கம், ப -47
21. கெ.ஜீன் லாரன்ஸ், கு.பகவதி, தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், ப -44
22. ம.மயடையளயியவால வுயஅடை ர்நசழளை ீழநவசல(ழுஓகழசன –1968) பக் -188-192

(பார்வை நூல்: வையை –மலர் - ஐந்து)

23. தமிழண்ணல்(கட்டுரை ஆசிரியர்), வையை: மலர் - ஐந்து, பக் -178-179
24. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப -34
25. செ.சாரதாம்பாள், சங்கச் செவ்வியல், ப -118
26. தொல்காப்பியர் தொல்.பொருள் நூ.எ -1002, 1006, 1009, 1013, 1016
27. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -39, 43, 44
28. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -105, 110, 113
29. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -99:7-8
30. கி.வா.ஜகந்நாதன், இன்பமலை, ப -7
31. நா.செயராமன், தமிழ் இலக்கிய நெறி, ப -21
32. குளோரியா சுந்தரமதி, இலக்கியக் கல்வியும் பகுப்பாய்வும், ப -76
33. வி.ஆனிலெட் பாமி, சங்க அகப்பாடல்களின் அடிக்கருத்துக்கள், பக் -36-37
34. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -89
35. தொல்காப்பியர், தொல்.பொருள்.,நூ.எ -487
36. இராஜகோபாலச்சாரியார், இலக்கண விளக்கம், நூ.எ -401
37. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப -16
38. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -55
39. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை.,பா.எ -2
40. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும் தொகுதி -1, பா.எ -171
41. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -99
42. இளம்பூரணர், தொல்.பொருள். ப -174
43. மேலது ப -174
44. மேலது ப -174
45. க.சுந்தரபாண்டியன், தமிழில் பொருளிலக்கண வளர்ச்சி, ப -29
46. அ.நாராயணசாமி, பொ.வே.சோமசுந்தரனார், நற்றிணை நானூறு பா.எ -155
47. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -99:7-9
48. இளம்பூரணர், தொல்.பொருள்.களவு, ப -176
49. க.பாலசுந்தரம், தொல்.பொருள்., ப -28
50. இரா.இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், பா.எ -119
51. வே.ரா..இராகவையங்கார், அகநானூறு மூலமும் பழைய உரையும்பா.எ -140
52. வி.நாகராஜன், குறுந்தொகை மூலமும் உரையும், பா.எ -100
53. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும், ப -185

54. இளம்பூரணர், தொல்.பொருள், ப -178
55. க.சுந்தரபாண்டியன், தமிழில் பொருளிலக்கண வளர்ச்சி, ப -84
56. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை, பா.எ -1
57. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு பா.எ -187
58. பொ.வே.சோமசுந்தரனார்,ஐங்குறுநூறுபா.எ -211
59. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -99:11-20
60. இறையனார், இறையகப் நூ.எ -5
61. எச்.வேங்கடராமன், நற்றிணை மூலமும் உரையும், பா.எ -77
62. இரா.இராகவையங்கார், குறுந்தொகை விளக்கம், பா.எ -286
63. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -99:19
64. தொல்காப்பியர், தொல்.பொருள்., 233:1-2
65. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்., ப -403
66. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -350
67. உ.வே.சாமிநாதையர்(ப.ஆ), தமிழ்நெறி விளக்கம், ப -17:3
68. அ.நாராயணசாமி, பொ.வே.சோமசுந்தரனார், நற்றிணை நானூறு பா.எ -45
69. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும் தொகுதி -2, ப -1161
70. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு பா.எ -91
71. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -179
72. நச்சினார்க்கினியர், தொல்.பொருள். ப -403
73. நக்கீரனார், இறையகப் ப -129
74. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு பா.எ -293
75. தொல்.பொருள் நூ.எ -105:6-8
76. மேலது நூ.எ -101:4-5
77. அ)ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும் தொகுதி -1, பா.எ -6 ப -33

ஆ) அ.நாராயணசாமி, பொ.வே.சோமசுந்தரனார்,நற்றிணை நானூறு பா.எ -6: ப -13

இ) கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும் பா.எ -6 ப -11

ஈ) எச்.வேங்கடராமன், நற்றிணை மூலமும் உரையும், பா.எ -6 ப -13

78. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -21:12:24:30: 21:26:

79. நக்கீரனார், இறையகப் ப -30

80. …….., தமிழ்ப்பேரகராதி., ப 302

81. …….., திருக்கோவையார்(செந்தமிழ்ப் பேரகராதி)., ப -384

82. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -244

83. நக்கீரனார், இறையகப் ப -131

84. ந.மு.வேங்கடசாமி நாட்டார்., ச.வேங்கடாசலம்பிள்ளை.,அகநானூறு பா.எ -71

85. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -105:10, 109:6-7, 112:2

86. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -188

87. மேலது ப -194

88. மேலது ப -222

89. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -208

90. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -336

91. ச.வே.சுப்பிரமணியன்., தொல்.பொருள்., ப -469

92. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -221:1

93. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -343

94. ச.வே.சுப்பிரமணியன்., தொல்.பொருள்., ப -473

95. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -109:15, 112:40

96. இறையனார், இறையகப் நூ.எ -29:2

97. திருக்குருகைப் பெருமாள் கவிராயர்., மாறனகப் நூ.எ -202:1

98. சுவாமி கவிராயர், சுவாமி நாதம், நூ.எ -104:2

99. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியத்தில் தோழி ப -46

100. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க் காதல் ப -59

101. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -105:11, 12:36

102. மேலது நூ.எ -105:11-12

103. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -211

104. மேலது நூ.எ -212

105. மேலது நூ.எ -110

106. இறையனார், இறையகப் நூ.எ -16

107. தொல்காப்பியர், தொல்.பொருள். நூ.எ -100:1

108. இளம்பூரணர், தொல்.பொருள். ப -182

109. நச்சினார்க்கினியர், தொல்.பொருள். ப -406

110. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க் காதல் ப -60

111. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர் ப -184
112. நக்கீரனார், இறையகப் ப -160
113. ந.சுப்புரெட்டியார், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை ப -130
114. தொல்காப்பியர், தொல்.பொருள்.அகத். நூ.எ -17:1, 39:7, 42:2, 44:4, 113:8,141:2, 221:6
115. நக்கீரனார், இறையகப் ப -143
116. இளம்பூரணர், தொல்.பொருள் ப -56
117. மேலது ப -56
118. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -488
119. பேராசிரியர், தொல்.பொருள். ப -529
120. தொல்காப்பியர், தொல்.பொருள். நூ.எ -151
121. நச்சினார்க்கினியர், தொல்.பொருள் ப -506
122. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -154
123. தொல்காப்பியர், தொல்.பொருள். நூ.எ -231
124. தொல்.பொருள் நூ.எ -155, 156
125. மேலது நூ.எ -149
126. நக்கீரனார், இறையகப் ப -217
127. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -148:23-24
128. நாற்கவிராசநம்பி, நம்பியகப் நூ.எ -206:1
129. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -145: 11-14
130. மேலது நூ.எ -148:8-9, 149:17-19
131. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு ப -284
132. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும் பா.எ -270, ப.எ -1058
133. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -183
134. தொல்காப்பியர், தொல்.பொருள் நூ.எ -148:29-30
135. மேலது நூ.எ -175:4-5
136. ஆ.இராமகிருட்டிணன், அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, பக் -83-84
137. இளம்பூரணர், தொல்.பொருள் ப -61
138. மேலது ப -626
139. மேலது ப -311
140. மேலது ப -311

# இயல் - 2

## தலைவன் கூற்றில் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

சங்க இலக்கியங்கள் அக்கால மக்களின் பழக்கவழக்கம், பண்பாடு, தொழில் முதலிய வாழ்வியல் முறைகளையும், களவு, கற்பு என்ற வாழ்வியல் ஒழுக்கங்களையும் புலப்படுத்துகின்றன. வாழ்வியல் ஒழுக்கங்களைக் கூறும் சங்க அக இலக்கியங்கள் கூற்றுமுறையில் அமைந்துள்ளன. ஒன்றற்கு மேற்பட்ட கூற்றுகளைக் கொண்ட பாடல்கள், ஒத்த பொருண்மையுடன் குறிப்பிட்ட சூழலில் அமைகின்றன. இதனை, அதன் பொருண்மைக்கேற்ப துறையாகக் கொண்டு மாந்தர்கள் கூற்றுப் பாடல்கள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில் தலைவன் கூற்றுப் பாடல்களை, அவற்றின் துறைக்குறிப்புவழி ஆய்ந்து பொருத்தப்பாட்டைக் காண்பதே இவ்வியலின் நோக்கமாகும்.

### தலைவன்

சங்க இலக்கியங்கள் முதன்மை மாந்தர்களாக 'தலைவன், தலைவி, தோழி' ஆகியோரை முன்னிறுத்துகின்றன. அவர்களில் முதன்மையாகவும் மூலமாகவும் விளங்குபவன் தலைவன். *"பெருமையும் உரனும் ஆடூஉ மேன"*[1] எனத் தொல்காப்பியரால் விதந்தோதப் பட்டவன். தன் உள்ளம் உணர்ந்த காதலை முதலில் வெளிப்படுத்தி நிலைபெறச் செய்தவன். களவில் காதலை உணர்த்தி, உடன்போக்கில் சோர்வில்லா காதலாண்மையைப் புலப்படுத்தி, கற்பில் இல்லொழுக்க வாழ்வினை மேம்படுத்தி, தன் ஆண்மையை செம்மையுடன் திளைத்தோங்கச் செய்பவன். இத்தலைவன் இயற்கைப்புணர்ச்சி முதல் பல்வேறு சூழல்களில் கூற்று நிகழ்த்தும் இயல்பினன்.

### இயற்கைப்புணர்ச்சி

சங்க அக இலக்கியங்களில் அகப்பாடல்கள் 1862 என வ.சுப. மாணிக்கனாரும், 1859 என ந.சஞ்சீவியும் குறிப்பிடுகின்றனர். இவற்றில் 896 களவுப் பாடல்கள், 966 கற்புப்பாடல்களாகும். களவுப்பாடல்களில் தோழியிற் கூட்டம் -842, இடந்தலைப்பாடு -3, பாங்கற்கூட்டம் -27, இயற்கைப்புணர்ச்சிக்குரியவை 10 பாடல்கள்[2] எனக் குறிப்பிடப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின் பின்னணிச் சூழல்களாக,

- தோழியற் குழாத்தொடு தலைவியைத் தலைவன் காண்டல்

- தலைவியின் அழகினை இயற்கை பெறவில்லை எனல்
- ஊழிதோறும் பிரியாத் தன்மைகூறல்
- தலைவனைப் பிரிந்து தலைவி ஆயத்தொடு செல்லல்.
- தலைவியின் காதல் உணர்வை அறியும் நோக்குடையவனாக இருத்தல்.
- தலைவியின் அழகு புதுமையாகத் தோன்றுதல்
- புணர்ச்சிக்கு இடையூறு ஏற்படும்பொழுது உரையாடலில் அஃறிணை உயிர்களை நடுநிலைப்படுத்துதல்
- தெய்வத்தால் கூட்டுவிக்கப் பெற்றோமெனல்
- தலைவி தனக்குக் கிடைப்பதற்கரியவள் என எண்ணி வருந்துதல்
- 'யான் நின்னைப் பிரியேன்' என வன்புறை மொழிந்து தலைவியின் பிரிவச்சம் போக்குதல்.

ஏன்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில்'நலம்பாராட்டல்' முதல் 'அருமையறிதல்' வரையிலான ஆறு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடல்கள் (குறுந் -119: அகநா -140:) இரு பாடல்களில் 'பாங்கனிடம் கூறுவதாக' அமைந்துள்ளதால் பாங்கற் கூட்டத்திலும், குறுந் -120ஆம் பாடல் இரு துறைக்குறிப்புகளில் முதல் துறைக்குறிப்பாக'அல்ல குறிப்பட்டு மீளும் தலைவன்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளதால் 'அல்ல குறி' பகுதியிலும் சேர்த்து ஆராய்தல் நலம்பயக்கும். எனவே, இப்பகுதியில் இயற்கைப்புணர்ச்சிக்குரிய பாடல்களாகப் பத்துப் பாடல்கள் ஆராயப்படுகின்றன.

**நலம்பாராட்டல்**

தலைவன், தலைவியின் எழில் நலத்தினைப் பாராட்டுதல் நலம் பாராட்டுதல் துறையாகும். இப்பாராட்டுதலைத் தொல்காப்பியர் 'பொய் பாராட்டல்'(தொல்.,-99:1)என்பர். இந்நலம்பாராட்டல்,'இயற்கைப்புணர்ச்சி இடையீடுபடுதல், தன்னெஞ்சிற்கு உரைத்தல்'என்ற சூழல்களில் நிகழ்கிறது.

***இயற்கைப்புணர்ச்சி இடையீடுபடுதல்***

'இயற்கைப்புணர்ச்சி புணர்ந்தவழி தலைமகளை இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீட்டு நின்ற தலைமகன், நாணின் நீக்குதற் பொருட்டு, மெய்தொட்டுப் பயிறல் முதலாயின அவள்மாட்டு நிகழ்த்திக் கூடி, தனது அன்பு தோன்ற நலம்

பாராட்டியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைந் தும்பி’ எனத் தொடங்கும் குறுந் -2ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘கொங்குதேர் வாழ்க்கை அம்சிறைந் தும்பி’ என்னும் அடிக்கு நாகராசன் *“நல்ல மணத்தை நாடிச் செல்லும் உயர்சாதி வண்டு, தும்பி என்ற சொல்லால் குறிப்பிடப்படுகின்றது. ஊன்தேர் வாழ்க்கைப் பறவையினங்களின் வேறுபட்டு விளங்கும்”*[3] எனக் குறிப்பிடுவர். இதனைத் தலைவிக்குப் பொருத்திப் பார்ப்போமானால், தொல்காப்பியர் குறிப்பிடும் பத்துச் சிறப்புகளும் பொருந்தப் பெற்றவளாயும் தனக்கொப்பானவர்களில் சிறப்புப் பொருந்திய உயர்ந்தோளாகவும் திகழக்கூடியவளாகவும் தன் சொல்வழி நிற்றல் வேண்டும் என்ற எண்ணக் குறிப்புக் கொண்டவளாகவும் தலைவி உள்ளாள் என்பது புலனாகும்.

முதன் முதலில் தலைவனுடன் தலைவி நாணமிகுதியால் உரையாடாள். செவ்விதழ் விரிந்து சிறுமுறுவலே பூத்திருப்பாளாதலின் அப்பொழுது கண்டு மகிழ்ந்த பல்லெயிறுகளின் ஒழுங்கைச் செறி எயிற்று அரிவை எனக் குறிப்பிடுகின்றான். தலைவன் தலைவி காணும் முதல் காட்சியினாலும் தலைவியிடம் இயற்கையாக அமைந்த நாண்மிகுதியினாலும் புணர்ச்சிக்குத் தலைவியால் இடையீடுபட்டு நின்றது. அந்நாணினைப் போக்க அவன் தும்பியை நடுநிலைப்படுத்தும் நிலையை அறியமுடிகிறது. குறிஞ்சி நிலமாதலின் தலைவியின் மென்மையான நடையியல்பை ‘மயிலியல்’ எனல் இங்கு ‘இயற்கைப்புணர்ச்சிக்கு ஏற்றவிடம் குறிஞ்சி நிலமாதலின்’ எனத் தமிழ்ச் சான்றோர் கூறுவது ஒப்பு நோக்கத்தக்கது. இவ்வாறு நோக்கின் இப்பாடல், இயற்கைப்புணர்ச்சியில் நலம் பாராட்டுதல் என்னும் துறையிலமைந்து பின்னணிச் சூழலொடும் துறைக்குறிப்புடனும் ஒத்துக் காணப்படுவது தெளிவாகும்.

**வன்புறை**

“*வன்புறையென்பது வற்புறுத்துவது*”[4] தலைவன் தான் பிரிந்தால் தலைவியின் நிலை என்னவாகுமோ? என அஞ்சுவதும், இப்பிரிவு நீண்ட காலம் பெற்றதல்ல’ என வற்புறுத்தும் துறையில் அடங்கும். இதனை நக்கீரனார் *“இவளும் பெருநாணினள், யான் பிரியாதுவிட இவ்வொழுக்கம் புறத்தார்க்குப் புலனாம். புலனாகவே இவள் ஒருதலையாக இறந்துபடுமென இவ்வகைப் பிரிவச்சமும் வன்புறையுஞ் சொல்லிபடுமெனச் சொல்லிப் பிரியுமாகலிற் பிரிவும் அன்பினானே நிகழ்ந்ததென்பது”*[5] என்பர். இத்துறையில் ‘இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சமும்

வன்புறையும் கூறியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு,‘குவளை நாறுங் கவையிருங் கூந்தல்’ எனத் தொடங்கும் குறுந் -300ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘பிரிவுக்கு அஞ்சும் தலைவியைத் தேற்றி, நின்னுடைய நட்பை விடாமல் பற்றிக் கொள்வேன்’ என்றும் அன்புறு மொழிகளைத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,‘மாயோயே, நீயே, அஞ்சல் என்ற என்சொல் அஞ்சலையே, நின்னுடை நட்பே’ என்பன போன்ற முன்னிலை அண்மைச் சொற்கள், தலைவியின் அருகிலிருந்த தலைவன் அவளின் பிரிவச்சத்தைப் போக்க முயல்கிறான் என்பதும்,‘நின்னைப் பிரியேன்’ என வன்புறை மொழிந்து தேற்றுகிறான் என்பதும் அறிய முடிகிறது. வன்புறை பெரும்பாலும் அன்புரையாக அமைவதையும், முதல் மூன்றடிகள் தலைவியின் எழில் நலனைப் பாராட்டி அவளின் அச்சத்தைப் போக்குவதாகவும் விளங்குகிறது. இந்நிலைகளை நோக்கின் இயற்கைப்புணர்ச்சியில் தலைவியின் அச்சத்தைப் போக்கி, அன்பு மொழிகளைக் கூறுவதாக அமைவதுடன் துறைக்குறிப்பின் பொருண்மையுடனும் ஒத்து, பின்னணிச் சூழலுக்குள்ளும் அமைந்துள்ளது.

**அருமையறிதல்**

அருமையறிதல் என்பதற்குத் *“தலைமகளை ஆற்றுவித்துப் பிரிந்த தலைமகன் அவளைத் தனியாளாக விட்டு நீங்குமோவெனின் நீங்கான். அவள் தன்னைக் காணாமல் தான் அவளைக் காண்பதோர் அணிமைக்கண் மழைக் கொண்டலின் மின்னுப்புக்கொளித்தாற்போல ஒரு தாழைப் பொதும்பரிடை மறைந்து நிற்கும் .............”*[6] இந்நிலையில் தலைமகன், தலைவியின் எழில் நலன்களைப் பாராட்டியும், அவள் பெறற்கரியவள் என்று அருமை கூறியும் நிற்குந்தன்மை அருமையறிதலாக அமைகிறது. அருமையறிதலில் இளமையும் அழகும் பெற்ற தலைவியின் அருமையும், செல்வச் செழிப்புக் கொண்ட தலைவியின் பெற்றோரின் அருமையும் கூறப்படுகிறது. அருமையறிதல் என்னும் அகத்துறைக் கலைச்சொல்லை இறையனார் அகப்பொருள் உரையாசிரியரே முதன்முதலில் சுட்டியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இலக்கண விளக்கம், இயற்கைப்புணர்ச்சியின் இறுதியில் *“பிரிய மனமில்லாதவளாய், மெல்லத் தளர்நடையிட்டுச் செல்லும் தலைவியின் அருமையை எண்ணியும், அவளது பின்னழகைக் கண்வழிப் பருகியும், தலைவன் மகிழ்தல் ‘பிரிவுழி மகிழ்தல்’ ஆகும்.”*[7] என்று குறிப்பிடுகிறது. இவ்வுரை அருமையறிதலுக்கு நக்கீரர் கூறிய விளக்கத்துடன் ஒத்துள்ளது.

அருமையறிதல் துறையில் மூன்று பாடல்கள்(ஐங்குறு -171, 299: நற் -8:) காணக்கிடக்கின்றன. ‘இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைமகன், ஆயத்தோடு செல்லும் தலைமகளைக் கண்டு சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘திரையிமி ழின்னிசை யளைஇ’(ஐங்குறு -171) எனத் தொடங்கும்

இயற்கையழகும், செயற்கையழகும் நிறைந்த தலைவி கிடைப்பதற்கு அரியவள் என்னும் பொருண்மை கொண்ட் பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலில் கண்டதும் காதலுணர்வுக் கொண்டமையை ‘நுண்தொடி அரிவை என் நெஞ்சு கொண்டோளே’ என்னுமடிகள் சுட்டுகின்றன. தலைவியின் அழகினைக் கூறுமிடத்து ‘தொண்டி அன்ன’ என உவமிக்கப்பட்டுழி, தலைவி செல்வச் செழிப்புடைய இல்லினள். பலரும் புகழும் பண்பும் நிறையும் மிக்கவளெனக் கொள்ளுமிடத்து, தன்னால் இவளைப் பெறமுடியுமோ? என்ற அச்சம் தலைவனின் உள்ளத்தில் எழுந்திருக்கும் என்பது தெளிவு.‘திரையின் ஒலியோடு கலந்து முழவு ஒலிக்குமென்றது, உடன் செல்கின்ற ஆயத்தார் மகிழ்ச்சியரவமும் உழையராய் எதிர்வருகின்றார் மகிழ்ச்சியரவமும் கூறியவாறு’ எனப் பழையவுரை கூறுமிடத்து, தலைவி இயற்கைப்புணர்ச்சிக்குப் பின் தோழியர் குழாத்துடனும், சேடியர் கூட்டத்துடன் செல்வதைத் தலைவன் காண்கிறான் என்பதை அறியமுடிகிறது. இந்நிலைகளை நோக்கின் ‘தலைவி பெறற்கரியவள் என்னும் பொருண்மை சுட்டி, துறைக்குறிப்பின் பின்னணிச் சூழலுடன் பொருந்திக் காணப்படுகிறது.

நற் -8ஆம் பாடலிலும் தலைவியைப் பெற்ற மகிழ்வில் பெற்றோரை வாழ்த்துகிறான் தலைவன். இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்கும் தலைவியைப் பார்த்து ‘தொண்டி-தன்திறம் பெறுக: இவள் ஈன்ற தாயே!’ எனக் கூறுமிடத்து, அவள் முன் செல்லுந் தன்மைப் புலப்படுகிறது. கொடைக்குரிய மரபினால் கொடுக்கப்பட்டு, கொளற்குரிய மரபினால் கொள்ளப்படும் தன்மை கொண்டவள் தலைவி. அவள் எங்கிருந்தாலும் இனிதிருப்பாள் என்னும் பொருண்மை கொண்ட (நற் -8:6-8) அடிகள் அமைந்துள்ளன. இப்பாடல் கருப்பொருளால் நெய்தல் திணையாகவும். *பெறற்கரிய தலைவி தனக்குக் கிடைக்க வேண்டும்* என்னும் உரிப்பொருளால் குறிஞ்சித்திணையாகவும் அமைந்து, பாடலின் பொருண்மையும் துறைக்குறிப்புடன் ஒத்துக் காணப்படுகிறது.

**இடந்தலைப்பாடு**

இடந்தலைப்பாடு, இயற்கைப்புணர்ச்சியின் அடுத்த நிகழ்வு. முன்னிகழ்வில் தெளிவின்மை காணப்படின் அதனைப் போக்கக்கூடிய வாயிலாக, அடுத்த களவுக்குரிய தோரணமாக அமைவது. இயற்கைப்புணர்ச்சியில் புணர்ந்து பிரிந்த தலைமக்கள் தாம் காதல் கொண்ட இடந்தன்னில் மீண்டும் கண்டு இன்புறுதல், தமக்குக் கிடைத்த புதிய பெரிய உறவை மீண்டும் ஒருமுறை களித்துக் காண்பது இடந்தலைப்பாடு. இவ்விடத்தினைக் காதலர் தம் காதலின் கருந்தொருங்கினைப் புலப்படுத்தும் இடமாக அமைவதை அறியமுடிகிறது. இச்சூழலுக்கு மூன்று பாடல்களைக்[8] குறிப்பிடுவர் வ.சு.மாணிக்கனார். எனினும் இதனொடு நான்கு பாடல்கள்[9] இடந்தலைப்பாட்டில் அமைந்துள்ளன.

இப்பாடல்கள் நுகர்ச்சி என்னும் வழிநிலைத்துறையிலமைந்த முயங்கல், புகழ்தல் என்ற உட்துறைகளும், தீராத் தேற்றம், அஃறிணை உயிர்களை வாழ்த்துதல்(மகிழ்தல்) என்ற வழிநிலைத்துறைகளும் வகைப்படுத்தப்படுகின்றன. இவற்றில் நுகர்ச்சி, தேற்றம் என்ற இரு துறைகளும் தொல்காப்பியம் நுதலியவை. மகிழ்தல் வருவித்துக்கொள்ளப்பட்டவை.

இயற்கைப்புணர்ச்சியில் காதல் கொண்ட தலைவன் தலைவியுடனான காதலின் பூரணத்தன்மை உணருமிடம் இடந்தலைப்பாடாகும். இக்கூட்டத்தில் தலைவி மீதான தனது காதலை முயங்கல் குறிப்புடன் புலப்படுத்துவான் தலைவன். இப்பொருண்மையில் அமைந்த பாடல்களின் பின்னணிச் சூழல்களாக,

- புணர்ச்சி விருப்பினனாக இருத்தல்
- குறியிடத்துக் காதல் குறிப்புடன் தலைவி நிற்றலைக் கண்டு மகிழ்தல்

என்பன அமைகின்றன.

‘தலைமகன் இடந்தலைப்பாட்டின்கண் தலைவியது நிலைமை கண்டு சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘இலங்குவளை தெளிர்ப்ப வலவ னாட்டி’எனத் தொடங்கும் ஐங்குறு -197ஆம் பாடல் அமைகிறது. ‘விளையாடும் நேரத்தில், உடனிருப்போர் அறியாமல் இருப்பதற்காக, தன் கூந்தலினால் முகம் மறைத்து, இறைஞ்சி நிற்கும் தலைவியானவள், துன்பந் தரும் மாலைப்பொழுதில், தன் மார்பினை எமக்கு தருவாள்’ எனத் தலைவன் கூறுவதாக இப்பாடலின் பொருண்மை அமைந்துள்ளது.

இப்பாடலின் முதலிரு அடிகள், ஆயத்தொடு நிற்கும் தலைவி, மற்றையோருக்குப் புலப்படா வண்ணம் இலங்கு வளையலைத் தெளிர்ப்பச் செய்தும், முகத்தைத் தன் அடர்ந்த கூந்தலால் மறைத்து காதல் நோக்கு நோக்கியும், காதற்குறிப்பை வெளிப்படுத்தும் சூழல் இடந்தலைப்பாடாக அமைதல் தெளிவு. அடுத்த இரு அடிகள், தனிமைத் துயரை மிகுவிக்கும் இம்மாலைப்பொழுது மறைந்ததும், எம் தனிமையைப் போக்கும்வண்ணம், தலைவி தன் நலங்கெழும் ஆகம் நல்குவள் எனத் தலைவன் தனக்குள் கூறுமிடத்து, தலைவனின் கூடலுறும் உள்ளம் புலப்படுகிறது. இப்பாடல் நெய்தல் பாடலாக அமைந்திடினும், தலைவியின் நல்லாகத்திற்காகக் காத்திருக்கும் தலைவனின் உணர்வுகளைக் கூறும் உரிப்பொருள் நிலையில் முல்லைத் திணைப் பாடலாக அமைகிறது. இப்பாடல், முயங்கல் குறிப்புடன் பாடலின் பின்னணிச்சூழலுடன் ஒன்றி, துறைக்குறிப்புடன் ஒத்துக் காணப்படுகிறது.

**தேற்றம்**

தீராத் தேற்றம் என்பதற்கு *“எஞ்ஞான்றும் பிரியாமைக்குக் காரணமாகிய சூளுறுதல்”*[10] என நச்சினார்க்கினியரும், ந.சுப்புரெட்டியாரும் மொழிவர். இதனையே எளிமையாக்கி,“(தலைவன்) *அவளது தீராத அச்சத்தைத் தீர்த்து உறுதி கூறித் தேற்றுதல்”*[11] என்றுரைப்பர் தமிழண்ணல். அதாவது இயற்கைப் புணர்ச்சியில் தொடர்ந்த காதலின் தெளிவின் அறிவுறுத்துதலாக அமைவது இத்துறையாகும். தலைவிக்குப் புதிதாகத் தோன்றிய காதலினால் அச்சங் கொண்டிருப்பாள். அவ்வச்சத்தைப் போக்கி,‘நம் காதல் உண்மை, நின்னைப் பிரியேன்’ என உறுதி கூறித் தலைவியைத் தேற்றுதல் உயர் தலைவனின் மாண்பு. இப்பொருண்மை கொண்ட பாடலின் பின்னணிச் சூழலாக,

- களவுத் தலைவியின் காதற்குறிப்புக் கண்டு தலைவன் உறுதி கூறல்

அமைகிறது.

‘இரண்டாங் கூட்டத்துத் தலைவியை எதிர்ப்பட்டுத் தலைவன் சொல்லியது. உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைவன் சொல்லியதூஉமாம்.’ என்ற துறைக்குறிப்பிற்கு,‘ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்’ எனத் தொடங்கும் நற் -155ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் கண்டோர் விரும்பக் கூடிய நலத்தையுடைய தலைவியிடம்,‘நீ எப்பொழுதும் செய்யக்கூடிய செயல்களை மறந்து

சோலையில் தனித்து நிற்கும் நீ, இக்கடற்கரை அணங்கோ? வேறு யாரோ? என வினாவிய தலைவனுக்கு, அவளின் முறுவலும், கண்பனி நீருமே பதிலாக அமைந்தன' என்னும் பொருண்மை கொண்டது.

ஓரையாடாமல் இருத்தல், தொடலைப் புனையாதிருத்தல், கடற்கரைச் சோலையில் ஒரு பக்கத்தே தனித்திருத்தல் போன்ற செயல்கள் காதல் கொண்ட களவுத் தலைவிக்குரிய செயல்கள். இச்செயல்கள் ஊடல்கொண்ட தலைவிக்கும் ஒக்குமெனினும் ஊடல் தீர்க்கும் தலைவனின் செயல்களும் பணிமொழிகளும் இல்லுள்ளே நிகழும். இப்பாடலுக்கு இரு துறைக்குறிப்புகள் குறிப்பிடப்பெற்றுள்ளன. முதல் துறைக்குறிப்பு களவுக் காதலின் இரண்டாங் கூட்டமாகவும், இரண்டாம் துறைக்குறிப்பு கற்புக்காதலில் ஊடல் தீர்க்க முயல்வதாகவும் அமைகிறது. களவுத்தலைவன் முன்னிலையில் உள்ள தலைவியிடம் அண்மை விளிச் சொற்களால் கூறுவதாகப் பாடல் அமைந்துள்ளது. தலைவன் இரந்துமொழிதல் களவு, கற்பிற்குப் பொதுவானதெனினும், இப்பாடலில் இடம்பெறும் தலைவி பற்றிய வர்ணனை பெரும்பாலும் களவுத்தலைவிக்கே பொருத்தமாக அமைந்துள்ளது. தலைவியின் முறுவலும் பனிபடர்ந்த கண்களும் உணர்த்திய காதல் குறிப்புக் கண்டு தலைவன் மகிழ்வதாகப் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இரு துறைக்குறிப்புகளைக் கொண்ட இப்பாடலுக்கு உரையெழுதிய ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை *“இடந்தலைப்பாட்டின்கண் தலைமகளைக் கண்டு இன்புற்ற திறத்தைத் தன் நெஞ்சோடு கூறுவானாய்த் தலைவி கேட்பக் கூறியது இருவர் உள்ளத்தும் காதலுணர்வு ஒத்து நின்றமை உணர்த்துமாறு காண்க.”*[12] என்றுரைப்பர். இதனை வலியுறுத்தமாறு எச்.வேங்கடராமனும் *“இடந்தலைப்பாட்டில் தலைமகள் தலைவியை வியந்து கூறி அவளின் முயங்கற் குறிப்பை கண்டு மகிழ்ந்தான்”*[13]என்றுரைப்பர். பொ.வே.சோமசுந்தரனார், கு.வெ.பாலசுப்பிரமணியன் போன்றோர் இரு துறைக்குறிப்பிற்கும் பொருந்துமாறு வலிந்து உரையெழுதியுள்ளனர். எனினும் இப்பாடலின் பொருண்மை, களவுத் துறைக்குறிப்பினை விளக்குவதுடன் தலைவன் தலைவிக்குத் தன் காதலின் திறத்தை உணர்த்தும் பின்னணிச் சூழலுக்குள் அமைகிறது.

இவ்விடந்தலைப்பாட்டில் ‘காதல் தொடர்வதற்கான காலமும், நிகழ்வும் ஏதுவாகும் நிலையில்’ என்ற பின்னணிச் சூழலில் அமைந்த **மகிழ்தல்** துறையில்‘வெள்ள வரம்பி னூழி போகியுங்’ எனத் தொடங்கும் ஐங்குறு -281ஆம்

பாடல் அமைகிறது. 'தினைப்புனக் காவலைத் தந்த கிளிகள் வெள்ளம் அளவிலான ஊழிகள் வாழ்கவெனத்' தலைவன் வாழ்த்துவதாக இப்பொருண்மை இடந்தலைப்பாட்டுப்பாடலாக அமைகிறது. காதல் தலைமகளை இனித் தொடர்ந்து காணும் வாய்ப்பினை ஏற்படுத்தித் தந்தமையை எண்ணி மகிழ்ந்து அக்கிளிகளை வாழ்த்துகிறான் என்பது புலப்படுகிறது. இந்நிலை நோக்கின் இப்பாடலின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பாங்கற் கூட்டம்**

தலைவனின் களவொழுக்கம் தொடர, பாங்கன் உதவுவது பாங்கற் கூட்டமாகும். இதனைப் பாங்கனால் கூடும் கூட்டம் என்பர்.இப்பாங்கற் கூட்டத்தில் தலைவனின் செயல்களைக் கடிந்துரைத்தாலும், பாங்கன் தலைவனுக்கு நன்மையே புரிவான். இதனைப் *"பாங்கற் கூட்டம் - தலைவனின் நலம் கருதல்"*[14] என்பர் இரா.ஈஸ்வரி. இத்தன்மை கொண்டதாக இருபத்தெட்டுப் பாடல்கள்[15] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவனின் காதலுணர்வு மிகுதல்
- தலைவனின் வேறுபாடு கண்டு பாங்கன் வினாதல்
- தனக்குதவுமாறு பாங்கனிடம் வேண்டுதல்
- பாங்கன் விதந்துரைத்தல், காதலினால் தான் உற்ற துன்பம் கூறல்
- தலைவியின் காதல் ஆழத்தைக் கூறல்
- காதலின் நிலைத்த தன்மையைக் கூறல்
- பிரியாமைக்குரிய நன்மொழிகளைக் கூறெனல்
- சாதலைப் போக்கும் அருமருந்தெனல்
- முன்பு பெற்ற தலைவியின் தோள்கள் இனியும் பெறலாகுமோ என வருந்துதல்
- என் நெஞ்சிலிருந்து நீங்காமல் இருப்பவள் என் தலைவி எனல்
- தலைவியை நினைந்து வருந்துதல் தகாதென பாங்கன் உரைத்தல்

போன்றவை பின்னணிச் சூழலாக அமைகின்றன. இவற்றினடிப்படையில் 'உற்றது கூறல்' முதல் 'பெட்ட வாயில் பெற்றிரவு வலியுறுத்தல்' வரை எட்டு துறைகளாக வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன.

**கழற்றெதிர் மறை**

காதலினால் வருந்துவது நின் தலைமைக்குத் தகாது எனக் கழறிய பாங்கனுக்கு, தலைவன் என்னால் காணப்பட்ட வடிவத்தை நீ கண்டால் இவ்வாறு கூறமாட்டாய் என்று பதிலுரைக்கிறான். அக்காதலினால் ஏற்பட்ட துன்பத்தையும் சில நேரங்களில் காதலின் பெருமையையும் எடுத்துரைப்பதாக இத்துறை அமைகிறது. இப்பொருண்மையில் அமைந்த பாடல்களின் துறைக்குறிப்புகள் வெவ்வேறு தொடரமைப்பில் அமைந்திடினும் ஒரே பொருண்மையைக் கொண்டுள்ளன. அதாவது, கழறிய பாங்கற்குத் தலைமகன் கழற்றெதிர் மறுத்தது (அகநா -130), தலைமகன் உரைத்தது. (நற் -201: குறுந் -184, 206, 272), கிழவன் அழிந்து கூறியது (குறுந் -156), தலைமகன் பாங்கற்கு உரைத்தது (குறுந் -136), கழற்றெதிர்மறை(நற் -160: குறுந் -58, 132, 280:) என அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

'கழற்றெதிர் மறை' என்னும் துறைக்குறிப்பில் (நற் -160: குறுந் -58, 132, 280:) நான்கு பாடல்கள் அமைந்துள்ளன. இத்துறைக்குறிப்பிற்கு 'இடிக்கும் கேளிர்! நும்குறை ஆக ... பரந்தன்று இந்நோய் நோன்று கொளற்கு அரிதே' என அமையும் குறுந் -58ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் முதலிரு அடிகள், பார்ப்பனப் பாங்கன் முன்னிலையில் உள்ளான் என்பது நன்கு புலப்படுகிறது. தலைவன் பாங்கனிடம், இடித்துரைக்கும் நும் வார்த்தையில் எமக்கு நன்மை உண்டாகும் சொற்களைக் கூறுவாயாக என்றுரைக்கிறான். இப்பாடலில் *"வெண்ணெய் உணங்கல் ஆகத்திற்கு உவமை, அதனை ஞாயிறு காய்தல் நோய் பரத்தற்குவமை, கையில் ஊமன் தலைவனுக்கு உவமை"*[16] என பொ.வெ.சோமசுந்தரனார் குறிப்பிடுவர். இவ்வுவமையை நோக்குமிடத்து தன்னால் காமநோயை அடக்கிக் கொள்ளும் ஆற்றலும், வெளிப்படுத்தும் துணிவும் இல்லாததால் தலைவன் பாங்கற்குக் கூறுவதாகக் கொள்ள முடிகிறது. மற்றொரு நிலையிலும் பின்வந்த உரையாசிரியர் *"கை, கால், கண் ஆகிய எல்லா உறுப்புக்களைப் பெற்றிருந்தும் நீ என்னுடைய காமத்தின் மெலிவைப் போக்க உதவவில்லையே"*[17] எனத் தலைவன் பாங்கனைப் பார்த்து வினாவுவதாக உரை பகர்வர் நாகராசன். இவ்விரு பொருண்மைகளும் இப்பாடலுக்குப் பொருந்துகிறது. ஏனெனில் இரு உரைகளுமே பாங்கனிடம்

தலைவன் கழறியுரைப்பதாக உள்ளது. இந்நிலை நோக்கின், இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குவது புலனாகும்.

**அவயம் தேறுதல்**

பாங்கன் தலைவன் கூறிய குறிவழிச் சென்று, தலைவி அக்குறியில் நிற்பதைக் கண்டு தலைவனிடம் கூறுகிறான். தலைவனும் தலைவியைக் காண அவ்விடம் செல்லத் தெளிவது அவயம் தேறுதல் துறையாகும்.

'குறிவழிச் சென்று தலைமகளைக் கண்டு வந்த பாங்கன்,'அவள் நின்றுழி நின்றாள் என்று கூறியவழி, ஆண்டுச் செல்லக் கருதிய தலைமகன் தன்னுள்ளே சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'அணங்குடைப் பனித்துறைத் தொண்டி அன்ன' எனத் தொடங்கும் ஐங்குறு -174ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலின்,'தொண்டியன்ன' என்னும் சொல்லை இருவேறுமுறைகளில் உவமையாகக் கொள்கின்றனர் உரையாசிரியர்கள். *"தொண்டி நகர் போன்ற மணம் கமழும் பொழிலின்கண்"*[18] எனப் பொழிலுக்கு உவமை கூறுவர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை. அவரே *"தொண்டியன்ன மேனி என இயையும்"*[19] என அடுத்த ஆய்வுக்கும் வழிவிடுவர். பின்னை வந்த பெருமழைப் புலவர் *"தொண்டிப்பட்டணத்தை ஒத்தவளாகிய ........ தலைவி"*[20] என உரைகூறி அதற்கு அரண்சேர்ப்பதுபோல் *"தொண்டியன்ன நுணங்கிழை எனத் தொண்டியைத் தலைவிக்கே உவமையாக்குக"*[21] என விளக்கவுரை கூறுவர். உவமை எவ்விதம் அமைந்திடினும் பாடல், துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல்**

தோழியிற் கூட்டம் வேண்டும்விதமாகத் தலைவன் தலைவியிடம் தோழியுடன் வருமாறு கூற, அவளும் அவ்வாறே வர, ஆயத்தாரிடை தலைவியின் அன்பிற்கு உரியவளாகிய ஒருத்தியை அறிந்துகொண்டு அவள் வாயிலாகத் தன்குறையை முடித்துக்கொள்ள எண்ணுதல் இத்துறையாகும்.

'பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தியது' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -222ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,'....... மாண்ட மாரிப் பித்திகத்து நீர்வார் கொழுமுகைச் செவ்வெரிந் துறழும் கொழுங்கடை மழைக்கண் துளிதலைத்

தலைஇய தளிர் அன்னோளே'(குறுந் -222:4-7) எனக் கூறுமிடத்து இயற்கைப்புணர்ச்சி முதலான கூட்டங்களில் தலைவன் தலைவியைக் கூடி இன்புற்றமை தெளிவு. 'தலைப்புணைக்கொளினே தலைப்புணைக் கொள்ளும், கடைப்புணைக் கொளினே கடைப்புணைக் கொள்ளும், புணைகை விட்டுப் புனலோடு ஒழுகின் ஆண்டும் வருகுவள் போலும்'(குறுந் -222:1-4) அன்னாளுக்கு,'ஒன்றித் தோன்றும் தோழி இவள் என அறிந்தமையும், இவளே தன் குறைமுடிக்க ஏதுவானவள் எனத் தெளிந்து, அவளிடம் தன் குறையைக் கூறக் தயார்படுத்திக் கொண்டமையும் தெளிவாகிறது. இப்பாடலின் பொருண்மையும் துறைக்குறிப்பின் பொருண்மையும் ஒன்றிக் காணப்படுவதுடன் பின்னணிச் சூழலுக்குள்ளும் அமைகிறது.

**மதியுடன்பாடு**

தோழியின் எண்ணம், சொல் செயல்களின் மூலம் தன் களவொழுக்கத்துக்கு உதவுமாறு தலைவன் இவளை மாற்ற முயல்வது மதியுடன்பாடாகும். இப்பொருண்மையில் நான்கு பாடல்கள்[22] உள்ளன. இப்பாடல்கள் தொல்காப்பியர் குறிப்பிடும் 'இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல்' துறையில் அமைகின்றன. எனினும் பாடலின் பொருண்மையை நோக்கமிடத்து 'பதி வினாதல்' முதல் 'இளையவள் எனப் பெயர்த்துழி தலைவன் கூறியது' வரையிலான நான்கு துறைகள் வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தோழியின் உதவிபெற எண்ணுதல்.
- தன் துன்பதற்குத் தலைவியே காரணமெனல்

என்பன அமைகின்றன.

தலைவி, என்னுள்ளம் புகுந்து துன்பம் செய்தனள். ஆதலின் அவளின் எண்ணம் யாது? என்ன நினைத்திலள்' எனத் தலைவன் புலம்புதல் இத்துறையாகும்.

'தலைமகளும் தோழியும் ஒருங்குநின்றுழிச் சென்ற தலைமகன்' இவள் என்னை இவைகோடற்குத் காரணம் என்? என்று தோழியை வினாவியது' என்னும் துறைக்குறிப்பின் பாடலாக ஐங்குறு -176ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் 'பண்பும் பாயலுங் கொண்ட தொண்டித் தண்கமழ் புதுமலர் நாறு மொண்டொடி' (ஐங்குறு -176:1-2) என்னுமடிகளைத் தலைவிக்கும்,'ஐதமைந் தகன்ற வல்குறு

கொய்தளிர் மேனி கூறுமதி தவறே'(ஐங்குறு -176:3-4) என்னுமடிகளைத் தோழிக்கும் கொண்டு பொருண்மை கொள்வோமாயின், இப்பாடலின் துறைக்குறிப்பின் பொருண்மைக்கும் ஏற்புடையது. மாறாகப் பாடல் முழுவதும் தலைவி, தோழியைக் குறிக்கும் எனக் கொள்வோமாயின், பிறழ உணர்ந்து துறைக்குறிப்பு வரைந்தமையாகக் கொள்ளக் கூடும். ஏனெனில், தலைவி இருக்கும்பொழுதிலேயே தலைவன் தோழியிடம் மதியுடம்படுக்க வேண்டுவான். தலைவி உடனிருக்கத் தோழியை மட்டும் தலைவன் புகழ்வானில்லை. அகமரபுக்கு ஏற்றதன்று. இப்பாடலை முழுமையும் (கூறுமதி தவறே – நீங்கலாக) தோழியையே குறிப்பிடுகின்றது என உ.வே.சாமிநாதயைரும்[23] ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையும்[24] மொழிவர். பொ.வே.சோமசுந்தரனார்[25] தலைவியைக் குறிப்பதாக உரை பகர்வர். பின்வந்த அ.தட்சிணாமூர்த்தி,[26] முதலிரு அடிகள் தலைவியையும் அடுத்த அடிகள் தோழியையும் குறிப்பதாகப் பொருளுரைப்பர். இவற்றுள், பின்னையவர் கூறியது போன்று பொருண்மை கொள்ளின் பாடலின் துறைக்குறிப்புடன் ஒத்து அமைகிறது.

**பின்னிற்றல்**

தோழியை மதியுடன்படுத்திய தலைவன், தலைவியைத் தன்னுடன் கூட்டுவிக்குமாறு, அவளிடம் இரந்து நிற்றல் பின்னிற்றல் என்னும் நிகழ்வாகும். இந்நிகழ்வில் தலைவன், தன் காதல் உணர்வையும், அதனால் ஏற்பட்ட துன்பத்தையும் எடுத்துரைப்பான். இப்பொருண்மையில் பத்தொன்பது பாடல்கள்[27] உள்ளன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவி, தன்மேல் காதல் கொண்டிருந்தும். தோழியின் உடன்பாடு தேவையென உணர்ந்திருத்தல்
- சோர்வுற்ற தலைமகனிடம் தோழி, சோர்வுக்குக் காரணம் வினாதல்
- தன் குறையை முடிக்க எண்ணுதல்
- குறை முடிக்கா நிலையில் தன்னிரக்கம் கொள்ளல்
- முற்கூட்டத்தில் நடந்ததை நினைவுகூர்ந்து தோழியிடம் கூறல்
- தினைப்புனங் காத்தலின்போது கிளியோப்பும் தலைவியின் இன்குரலைக் கேட்டிருத்தல்
- தோழி தன்னிலை (தலைவனின்) குறித்து ஆராயும் காலம்வரை பொருத்திராத தன்மை கொண்டிருத்தல்

- தலைவி தன்மேல் காதல் கொண்டிருக்கிறாள் என எண்ணுதல்
- குறை முடிக்கக் கூறல்
- தலைவி குறை நேர்ந்தமையை எண்ணி மகிழல்

என்பன அமைகின்றன. இப்பின்னிற்றலில் அமைந்த பாடல்கள்,'பின்னிற்றல்' முதல் 'குறை நேர்தல் (இகுளை அறியாது இறைவி மறைத்தல்)' வரை ஐந்து உட்துறைகளாகவும், ஏழு வழிநிலைத் துறைகளாகவும் வகைப்படுத்தப்பெற்றுள்ளன.

**ஆற்றா நெஞ்சொடு அழுங்கல்**

தலைவியைப் பெறமுடியாத நிலையில் தலைவன் தன் நெஞ்சொடு புலம்பி மொழிவது 'ஆற்றா நெஞ்சொடு அழுங்கல்' துறையாகும். இத்துறையில் நான்கு பாடல்கள் உள்ளன. அவற்றில்,'பின்னின்ற தலைமகன் ஆற்றானாகி நெஞ்சிற்குச் சொல்லியது. அல்லகுறிப்பட்டு மீள்வான் நெஞ்சிற்குச் சொல்லியது. இடைச்சுரத்துச் சென்று தலைமகள் நலம் உள்ளி மீளலுற்ற நெஞ்சிற்குச் சொல்லியது.' என்ற துறைக்குறிப்புகளுக்குப் பாடலாக நற் -190ஆம் பாடல் அமைகிறது. 'பருத்த தோள்களையும் குளிர்ந்த பார்வையினையும் கொண்ட இளமை பொருந்திய மிஞிலியின் ஆர்க்காடன்ன தலைவியின் தோள்கள் தழுவுதற்கு அரியன. அவளின் செவ்வாயில் தோன்றும் குறுநகைக்கு நீ மகிழ்ந்தாய். ஆதலின் அத்தலைவி கிடைக்கப்பெறாத நிலையில் துன்புறுவாய். அத்துன்பத்துடனே நீ நீண்ட காலம் வாழ்வாய்' எனத் தலைவன் தன்னெஞ்சுக்குக் கூறுவதாக இப்பாடலின் பொருண்மை அமைந்துள்ளது.

இப்பாடலில் 'நோஇனி வாழிய நெஞ்சே'(நற் -190:1) '...... சின்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந் தோயே'(நற் -190:7-9) என்னுமடிகள்,'தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறும் நிலை. இது இப்பாடலின் துறைக்குறிப்புகளாக அமையும் மூன்று சூழல்களிலும் நிகழும். தலைவன், தன் காதற் தலைவியைக் கூடும் கூட்டத்திற்காகத் தோழியிடம் பின்னிற்றலின்போது தலைவியிடம் குறிப்புமொழிகள் புலப்படாது இருக்குமேயாகில், தோழியின் உதவி கிடைக்கப்பெறா. இந்நிலையில் தலைவன் தோழி கேட்குமாறு தன் நெஞ்சிற்குக் கூறுதல் நிகழும். முதற் துறைக்குறிப்பில் 'தலைவன், தன் நெஞ்சிற்குக் கூறியதாக இருப்பினும் காதற் தலைவியின் தோழி இடைநிற்றல் தகுதலே. ஏனெனில் தலைவன் 'பின்னிற்றல் சூழலிலே தன் குறையைத் தோழியிடமோ, அவள் கேட்குமாறோ கூறல் நிகழும்.

இருவகைக் குறிகளில் தலைவன் செய்குறியை இயற்கை நிகழ்வெனப் பிழையாகத் தலைவியும் தோழியும் உணர்ந்து கொள்ளுதலும், செய்குறிகள் இருவருக்கும் புலப்படாதிருக்கும் நிலையிலும் அல்லகுறிப்படல் நிகழும். இந்நிலையிலும் தலைவன் தன்னெஞ்சிற்கு உரைத்தல் நிகழும். மூன்றாம் துறைக்குறிப்பு, கற்புக்கால நிகழ்வு. பொருள்வயிற் பிரியும் தலைவனின் நெஞ்சம் தலைவியின் எழில் நலனை உள்ளி மீளலுற எண்ணுகிறது. தன் நெஞ்சை நிலைபெறச் செய்யமுடியாத தலைவன்,'நீ வருந்துவாயாக' என்றுரைக்கிறான். இந்நிலைகளை நோக்கின் மேற்குறிப்பிட்ட அடிகள் (நற்.190:1,7-9) மூன்று சூழலுக்கும் பொருத்தமுடையதேயாகும்.

இப்பாடலில் நற் -190:1-6 என்னுமடிகள் காவலுற்ற தலைவியின் அழகினைச் சுட்டுவதாக மட்டும் கொள்ளப்படுமேயாகில், முதல் இரு துறைக்குறிப்புகளுக்கும் பொருந்தமுடையதாய் இருக்கும். மாறாக, இவ்வடிகளைத் தலைவியின் சொல், செயல் மூலம் உணர்த்தப்படா நிற்க, அன்பும் அறனுமிக்கத் தோழி தலைவியின் குறிப்பு மொழிகளை உணர்ந்து கொள்ளாள். இதனால் தலைவனின் மனச்சுமை அதிகரிக்கும் நிலையினையே இவ்வடிகள் (நற் -190:1-6) குறிப்பிட்டதாகக் கொள்ளின், இப்பாடல் முன்னிரு துறைக்குறிப்புகளுக்கும் கொள்ளமுடியும். எனினும் அல்லகுறிப்படுதலுக்குத் தோழியின் சொற்செயற்திறம் எங்ஙனம் ஒப்பும்? தோழி இடம்பெற்ற மூன்றாவது துறைக்குறிப்புக்கு, தோழி தலைவிக்கான உள்ளுறையாகக் கொள்ளின் பொருத்தப்பாடாகா. தலைவியும் தலைவனுக்கு உரியவள். காவலில் இருக்க மாட்டாள் என்பதும் நினைவில் கொள்ளத்தக்கது.

இப்பாடலின் பொருண்மையை நோக்கிய ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை *"மேவார் அரண் கடந்த விறலும் மகிழ் வழங்கும் வள்ளன்மையும் உடைய சேந்தனையும், விரிதாருடைமையான அன்பும், இயல்தேர் உடைமையான் வலியுடைய அழிசியையும் கூறியது. தலைவியால் தோன்றிய காதற்குறிப்பும். தோழிபால் நிலவிய உரனும் புலப்படுத்தி நின்றன"*ஆ) பிரிவின் பின் மலிவு: நற் - 139: குறுந் -99, 209, 270: ஐங்குறு -324, 325, 355, 356, 357, 359, 360, 411-420, 449, 491-495: அகநா -29, 39 என மொழிவது குறிப்பிடத்தக்கது. இக்கூற்றினை நோக்க, இப்பாடல் முதலிரு துறைக்குறிப்புகளுக்கும் பொருத்தமாயிருப்பது அறியமுடிகிறது. மேற்கூறியவற்றான் இப்பாடல் தலைவன் தன்னெஞ்சுக்கு இரங்கிக்கூறல் தன்மையில் மூன்று துறைக்குறிப்புகளுக்குப் பொருந்தியும், பின்னணிச் சூழலுக்குள்ளும் அமைகிறது. தலைவி தோழிக்கான உள்ளுறை

நோக்குமிடத்து முதலிரு துறைக்குறிப்புகளுக்கும் பொருத்தமாக அமைந்து மூன்றாம் துறைக்குறிப்புக்கு ஒன்றாமல் உள்ளது. பின்னிற்றல் உட்துறையிலமைந்த ஏனைய வழிநிலைத் துறைகளிலமையும் பாடல்கள், அவ்வத் துறைகளின் பொருண்மைக்குள் அமைகின்றன.

**சேட்படுத்துதல்**

தலைவனின் அன்பை அறிந்துகொள்வதற்காகத் தோழி, தலைவியிடமிருந்து சிறிது காலம் தலைவனைத் தொலைவில் இருக்கச் செய்தல் சேட்படுத்துதலாகும். இந்நிலையில் தலைவனின் ஆற்றாமை மொழிகள் புலப்படும். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் மூன்று பாடல்கள்[29] காணப்படுகின்றன. தலைவி அருமை சாற்றிச் சேட்படுத்தியாட்குக் கூறல்(நற் -75) ஆற்றாமை(நற் -80, 377) என்ற இரு துறைகள் வகைப்படுத்தப்படுகின்றன. இப்பாடல்களின் பின்னணிச் சூழல்களாக,

- நகையாடிய தோழியிடம் தன் காதலுள்ளத்தைப் புலப்படுத்துதல்
- தலைவியின் காதலருமை கூறல்
- தலைவியின் எழில் நலத்தினால் உண்டான காதல்மிகுதி கூறல்

என்பன அமைந்துள்ளன.

**தலைவியின் அருமை சாற்றிச் சேட்படுத்தியாட்குக்கூறல்**

களவொழுத்தில் நாட்டங்கொண்ட தலைவனை, வரைந்து கொள்ளும் சூழலை உண்டாக்குவதற்குச் சேட்படுத்துவாள் தோழி. அந்நிலையில் தலைவன்,தலைவியின் பெறலருமையைக் கூறிய தோழியிடம் தன் காதலருமையைப் கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘சேட்படுத்தப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தோழி கேட்பச் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு,‘நயனின் மையின் பயனிது என்னாது’ எனத் தொடங்கும் நற் -75ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் தோழி தலைவியின் அருமை கூறி சேட்படுத்தியவளிடம்,‘நீ பாம்பின் விடம் போன்று நகைக்காமல் உரைப்பயாக. தலைவியின் இனிமை பொருந்திய இதுகாறும் காணாத பார்வையைப் பெற்று வருந்திய என்னுள்ளம் உய்யும்வண்ணம் நன்முறையில் நகை செய்து உரைப்பாயாக’ எனத் தலைவன் கூறுவதாக இப்பாடலின் பொருண்மை அமைந்துள்ளது. இப்பாடலில் ‘சேயரி பரந்த மாவிதழ் மழைக்கண் ஊறாஅ நோக்கம் உற்றஎன் பைதல் நெஞ்சம் உய்யுமாறே’(நற் -75:8-10) என்புழி,‘தலைவியின் காதலைப் பெற்ற தலைவனைத் தோழி

சேட்படுத்தியுள்ளமையும், தோழியின் நகையே தலைவனைத் துன்புறுத்துகிறது என்பதும் அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றி, பின்னணிச் சூழலுக்குள் அமைந்து துறையினை விளக்குகிறது.

**மடல்**

தலைவியைக் காணமுடியாத நிலையிலும் தோழியால் குறை நீங்கப் பெறாத நிலையிலும் குறை மறுக்கப்பட்ட நிலையிலும் சேட்படுத்தும் நிலையிலும் தலைவன் மடலூரப் போவதாகத் தோழியிடமோ, தலைவியிடமோ மொழிவது இத்துறையாகும். இத்துறையில் இரு பாடல்கள்[30] உள்ளன. இப்பாடல்கள் 'இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன், மடலே பொருள் என மதித்தலும்'என்னும் துறையில் அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவன் தன் ஆற்றாமையைப் புலப்படுத்துதல்
- தன்னை ஊரார்க்குத் தெளியப்படுத்த முயலல்

என்பன அமைகின்றன.

## இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே, பொருள் என மதித்தல்

தலைவியைப் பெறப் பல்வேறு நிலைகளில் முயன்றும், தோழி குறைமுடிக்கப்பெறாத நிலையிலும் தலைவன் வருந்துவான். இந்நிலையில் தலைவியைப் பெற மடல் ஒன்றே வழியாக அமையுமெனத் தெளிதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த,'மடல் வலித்த தலைவன் முன்னிலைப் புறமொழியாகத் தோழி கேட்பச் சொல்லியது' என்னுந் துறைக்குறிப்பிற்கு 'மடலே காமம் தந்தது அலரே' எனத் தொடங்கும் நற் -152ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல், தலைவியைக் காணாநிலையில் தலைவன் தான் உறும் துன்பங்களை அடுக்கிக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவியைத் தலைவன் காணாநிலைக்குத் தோழியிடம் குறை இரந்தும் அவள் குறை நீங்காததே என்பதறியமுடிகிறது. இப்பாடலில் 'கங்குலும் கையறவு தந்தன்று யாங்கு ஆகுவென்கொல் அளியென் யானே?'(நற் -152:8-9) என்புழி, தலைவன், தலைவியைக் காணாநிலையிலுள்ளான் என்பதும், அவனின் கூடலுணர்வும் உணர்த்தப்படுகிறது. 'மடலே காமம் தந்தது அலரே மிடைபூ எருக்கின் அலர் தந்தன்றே' (நற்.152:1-2) என்புழி, தலைவிமேல் தான் கொண்ட காதல் மிகுதியால் மடல் மேற்கொள்ளும் நிலை தனக்கு

ஏற்பட்டதாகத் தலைவன் வருந்துவதும் புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இருவகைக்குறி**

இயற்கைப்புணர்ச்சி முதலிய கூட்டங்களில் தம் காதலினை உறுதிப்படுத்திய தலைவன், தோழியை மதியுடம்படுத்தி, தம் காதல் உறவுக்கு உதவுமாறு வேண்டுவான். தோழி ஒருப்பட, கூட்டங்கள் நிகழ, காணுமிடம் குறிக்கப்பெறும். இச்செயலினைத் தோழியே செம்மையுறச் செய்வளாதலின், தலைவன் அவளிடமே கிளந்துமொழிவான். தோழி, தலைமக்கள் காணுதற்கான இடம் சுட்டுதலைக் குறியெனக் குறிப்பர். பகலில் காணுதலாயின் பகற்குறி எனவும், இரவில் காணுதலாயின் இரவுக்குறி எனவும் சுட்டப்பெறும். தோழியர் இருவரும் குறி சுட்டுதற்கு உரியராயினும் முதலில் தோழியே குறியினைச் சுட்டுவாள். இதற்கான காரணத்தை வ.சு.ப.மாணிக்கனார் *“தோழி பெண்ணாயினும் பணிமகளாதலின் தலைவியைவிடத் தனித்துச் செல்லும் உரிமையும் கடமையும் அவளுக்கு உண்டு. காதலோர் தம் கூட்டத்திற்கு தகும் இடம் எது? தகுங்காலம் எது? என்று அவளால் காண முடியும்”*[31]என மொழிவர்.

***சங்க இலக்கியத்தில் இருவகைக்குறி***

சங்க இலக்கியத்தில் இருவகைக்குறிப் பொருண்மையில் தலைவன் கூற்றில் பன்னிரண்டு பாடல்கள்[32] காணப்படுகின்றன. அவற்றுள் பகற்குறியில் ஒரு பாடலும் இரவுக்குறியில் பதினொரு பாடல்களும் காணப்படுகின்றன. இப்பாடல்களுள் பெரும்பான்மையாகத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறுவதாக அமைந்துள்ளன. இதனை மு.மணிவேல் *“நெஞ்சுக்குச் சொல்லுதல் என்பது அகத்தலைமை மாந்தர் பிரிவின் காரணமாகவும் பிரிவு நிமித்தம் காரணமாகவும் நிகழ்த்தப் பெறுவது. அதாவது தனிமையுறும்போதும் தனிமையுறவிருக்கும்போதும் நிகழ்த்தப்பெறுவது”*[33] என மொழிவர். இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவன் இரவுக்குறி வந்த பின்னும் தோழி காணாததுபோல் இருக்கும் நிலை
- தலைவி அஞ்சும் நிலையில் இவளைத் தலைவன் தேற்றுதல்

- வேட்கை மிக்கிருத்தல்
- தலைவியின் நுண்ணறிவு கண்டு மகிழும் நிலைய
- தலைவியின் வருகையால் மகிழ்ந்த நிலை
- மகிழ்வித்த தலைவி பிரிந்த நிலை
- மகிழ்ந்த தலைவன், தலைவி பெறற்கரியவள் என வருந்தும் நிலை

என்பன அமைகின்றன.இப்பாடல்கள்,'அவட்பெற்று மலிதல்' முதல் 'ஆற்றினது அருமை செப்பியாட்கு உரைத்தல்' வரையிலான ஐந்து துறைகளில் வகைப்படுத்தப்பெறுகின்றன.

**அவட்பெற்று மலிதல்**

தலைவன் இருவகைக் குறிகளிலும் தலைவியைப் பெற்றுப் புணர்ச்சியில் மகிழ்தல் இத்துறையாகும். இதனை இளம்பூரணர்,*"தோழி உட்பாட்டினைப் பெற்று மகிழ்தல். இரட்டுற மொழிதலான் தலைமகளை இருவகைக் குறியினும் பெற்று மகிழினும் என்றும் கொள்க"*[34] என உரைப்பர். இத்துறையில் எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. அவற்றில் ஒரு பாடல்(ஐங்குறு -298) தலைவியிடம் கூறுவதாகவும்,ஏனைய பாடல்கள் தன்னெஞ்சிற்குச் சொல்லுவதாகவும் அமைந்துள்ளன. இப்பாடல்கள் 'நெஞ்சொடு கிளத்தல்' துறையாகவும் அமையும்.

இத்துறையிலமைந்த 'பகற்குறியிடம் புக்க தலைவன், தலைவி பின்னாக மறைய வந்து கண் புதைத்துழி சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'சிலம்புகமழ் காந்தள் நறுங்குலை அன்ன' எனத் தொடங்கும் ஐங்குறு -298ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'பின்னாக வந்து கண்புதைத்த தலைவியிடம் மகிழ்ந்து நின்னை அல்லது என் நெஞ்சம் புகுந்தார் உளரோ?"எனத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் 'நலம்பெறு கையின் என்கண் புதைத்தோயே! ......... தோகை மாட்சிய மடந்தை நீ அலது உளரோ என்நெஞ்சு அமர்ந்தோரே?'(ஐங்குறு -298) என்னும் அடிகள், தலைவனின் கண்ணைப் பொத்தியவள் தலைவியே என்பதும், தலைவியின் தேகத் தெளிவை தலைவன் அறிந்தான் என்பதும், அதனைத் தலைவியின் உள்ளம் மகிழும்படி இனிதாக அவன் உரைத்தனன் என்பதும் பெறப்படுகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த அகநானூற்றுப் பாடல்களின் பொருண்மை, இரவுக்குறியில் பெற்று மகிழ்ந்த தலைவன் 'புணர்ந்த பேரின்பம் நினைத்தல்(அகநா -142, 208, 262), பிரிவினை ஆற்றாது வருந்தல்(அநா -152), பெறுதற் கரியவள் எனல்(அகநா -162, 280), தலைவியின் பண்புகளைக் கண்டு மகிழ்ந்து கூறல்(அகநா -198)' என்ற நிலைகளில் அமைவதை அறியமுடிகிறது.

### வரைவு வேட்டல்

காதலில் கருத்தொருமித்த தலைவன், தலைவியின் அன்புடைமை கண்டு வதுவையை விரும்புதல் வரைவு வேட்டலாகும். இத்துறை தொல்காப்பியர் குறிப்பிடும் *"புகாஅக் காலை புக்கெதிப் பட்டுழிப் பகாஅ விருந்தின் பகுதி"*[35]என்னும் கிளவித் தொகையினுள் அடங்கும். இத்துறையிலமைந்த 'இரவுக்குறிவந்து நீங்குகின்ற தலைமகன், தன் நெஞ்சிற்கு வரைவிடைவேட்பக் கூறியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'இரண்டறி கள்வி நம்காத லோளே' எனத் தொடங்கும் குறுந் - 312ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'நம் காதலி, இரவுப் பொழுதில் குறிக்கண் நம்பால் எய்தி நம்மொடு ஒரு தன்மையுடையவளாயும், காலைப் பொழுதில் நமக்கு அமரா முகத்தளாயும் தமர்க்கு அமர்ந்த முகத்தளாயும் கொண்டு இன்னொரு தன்மையுடையவளாயும் விளங்குகிறாள்' எனத் தலைவன் பெருமிதங்கொள்ளும் பொருண்மை கொண்டது. இப்பாடலுள்,'தலைவியின் இருவேறு நிலைக்குத் தாமே காரணமாக அமைந்தமையால், அவளின் நிலை போக்க, வரைய வேண்டுமெனத் தலைவன் விரும்புவது புலனாகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

### அல்லகுறி

இருவகைக் குறிகளில் கண்டு மகிழும் தலைமக்கள் குறியிடம் வந்தமையை அறிவித்தற்பொருட்டு, ஓசைகளை எழுப்புவது இரவுக்குறியிலாகும். அவ்வோசைகளை ஏற்கனவே அறிந்திருக்கும் தலைவி குறியிடம் வந்து தலைவனைக் காண்பாள். அக்குறியின் ஓசைகள் இயற்கை சார்ந்து அமைவதால், இயற்கையின் ஓசை எழுந்துழி, குறியென மயங்கிக் குறியிடம் வந்து தலைவனைக் காணாது வருந்துவாள். பின் வரும் தலைவன் வந்து குறியோசையை எழுப்புவான். அது வேறுகாரணங்களால் எழும் ஓசையென எண்ணுந் தலைவி வாராதிருப்பாள்.

தலைவனும் நெடுநேரம் காத்திருந்துவிட்டு, தான் வந்து சென்றதை உணர்த்துவதற்காகச் சில அடையாளங்கள் செய்துவிட்டுச் செல்வான். இவ்வாறு குறிப்பிட்ட குறியில் தலைமக்கள் காணவியலாது தவறிப்போவது ‘அல்லகுறிப்படுதல்’ என அழைக்கப்பெறும். இதனைத் தொல்காப்பியர்,

*“அல்லகுறிப் படுதலும் அவள்வயின் உரித்தே*

*அவன்குறி மயங்கிய அமைவோடு வரினே”*[36]

என்று குறிப்பர்.

**சங்க இலக்கியத்தில் அல்லகுறிப்படுதல்**

அல்ல குறிப்படுதல் பொருண்மையிலமைந்த தலைவன் கூற்றில் ஒன்பது பாடல்கள்[37] காணப்படுகின்றன. இப்பாடல் அனைத்தும் தலைவன் தன்னெஞ்சுக்குக் கூறியதாக அமைந்துள்ளமையால் ‘குறிப்பிழைத்தவழி நெஞ்சொடு கிளத்தல்’ துறையாக அமைகிறது, இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மையை ஆராயுமிடத்து அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- முன்னாள் போல் இந்நாளும் கூட்டம் அமையும் என எண்ணியிருந்த நிலை
- தூது விடக் கருதிய நிலை

என்பன அமைகின்றன.

**குறிபிழைத்தவழித் தலைவன் நெஞ்சொடு கிளத்தல்**

இரவுக் குறியிடத்துத் தலைவியைக் காணாது வருந்திய தலைவன், தன் நெஞ்சிற்குள்ளே பேசிக் கொள்வது இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த ‘அல்லகுறிப்பட்டு மீளும் தலைமகன், தன் நெஞ்சிற்குச் சொல்லியது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிந்தவழிக் கலங்கியதூஉம் ஆம்’ என்ற துறைக்குறிப்புகளுக்கு ‘இல்லோன் இன்பம் காமுற் றாஅங்கு ...... அரியள் ஆகுதல் அறியா தோயே’(குறுந் -120) என்னும் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘பொருள் இல்லாதவன் அப்பொருளால் பெறலாகும் இன்பத்தை விரும்புதல் போல, அரிய ஒன்றினை விரும்புகிறாள். நின்னால்

காதலிக்கப்பட்டவளும் இன்பம் வழங்குபவளாயினும் அரியள்' எனத் தலைவன் தன்னெஞ்சிற்குக் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,'நல்லள் ஆகுதல் அறிந்தாங்கு அரியள் ஆகுதல் அறியா தோயே'(குறுந் -120:3-4) என்ற அடிகளில் மூன்றாமடியை நோக்கின்,'நல்ல இன்பத்தை வழங்குபவள் தலைவி' என்னும் பொருண்மை, காதல் தோன்றிய முதல் நிகழ்வின்போது நிகழ்ந்ததாகக் கொள்ளுதற்கு ஏற்புடைத்தன்று. பல நாள் பழகிய பின் குறியிடம் பிழைத்த நிலையில் தலைவனின் ஆற்றா மொழியாகக் கொள்ள முடியும். 'தலைவி பெறற்கரியள்' என்பது இருவகைச் சூழலுக்கும் பொருந்துமாறு அமைகிறது. இவ்வாறு இப்பாடல் முதல் துறைக்குறிப்பிற்குப் பெரும்பான்மையும், இரண்டாம் துறைக்குறிப்பிற்கு ஓரோர் நிலையிலும் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறைப் பொருண்மையைச் சுட்டுகிறது.

இத்துறையில் அகநானூற்றில் ஏழு பாடல்கள் (அகநா -62, 212, 258, 322, 338, 342, 372) காணப்படுகின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மை 'அல்லகுறிப்பட்ட தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது' என்பதாக அமைந்துள்ளது. இப்பாடல்களில் அகநா -322ஆம் பாடலில் 2-6 அடிகளில் 'நள்ளிரவில் ஆராக் காமம் என் உள்ளத்தே அலைமோத, வேறு துணையின்றித் தவிக்கின்றேன். அவளை எண்ணியே நீ வாட்டமுறுவாய் என் நெஞ்சே' என்னும் பொருண்மையை நோக்கின், அல்லகுறிப்பட்டமையும் தலைவன் தன்னுள்ளத்து வருந்துவதும் தெள்ளிதின் புலப்படுகிறது. அகநா -338:8, 10-11, 15-16, 21ஆம் அடிகளை நோக்கின்,'அவளது முயங்குதலைப் பெறாது போயிற்று. எனினும் அவளது நட்பு என்றும் நீண்டு நிலைப்பதாக. நம் உள்ள உணர்வினை அவளிடத்துச் சென்று செல்லும் தூதுகள் பலகாலும் பல அமைந்தால் நலம்.' எனத் தலைவன் தன்னெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. இவ்வாறு இப்பாடல்களின் பொருண்மை அவ்வத் துறைக்குறிப்புகளின் பொருண்மைக்குள் அமைந்தும் பின்னணிச் சூழலுக்குள் ஒன்றியும் துறையை விளக்குவது தெளிவாகும்.

**இற்செறிப்பு**

தலைமக்களின் களவறிந்த தாயர், தலைவியைப் புறம்போகாது இல்லத்தில் செறித்து வைத்துக் காத்தல் இற்செறிப்பாகும். இதனைத் 'தமர் தற்காத்தல், காப்புச்சிறை, இற்செறித்தல்' எனக் குறிப்பிடுவர் இலக்கண நூலார். தலைவி

இற்செறிக்கப்பட்ட நிலையில் நிகழும் தலைவன் கூற்றாக மூன்று பாடல்கள்[38] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவியைக் காணமுடியாத நிலை
- முயக்க வேட்கை மிகும் நிலை
- தலைவியைப் பெறும் குறிக்கோளைக் கொண்ட நிலை

என்பன அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு, காப்புச் சிறைமிக்க கையறு கிளவித் துறையாக வகைப்படுத்தப்படுகிறது.

**காப்புச் சிறைமிக்க கையறு கிளவி**

தலைவியை அவள் பெற்றோர் இற்செறித்தனர். தலைவிக்குக் காப்பு மிகுதியானமையைத் தோழி உணர்த்த, அவளைக் கண்டு இன்புற முடியாத தலைவன் ஆற்றாது தன்னெஞ்சிற்கு உரைத்தல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த 'தோழி செறிப்பு அறிவுறுப்ப, நெஞ்சிற்குக் கிழவன் உரைத்தது' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -199ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'தலைவியுடனான நட்பினால் யாம் கொண்ட நோய் நீங்கும் உபாயம் இப்பிறவியில் பெறாவிடினும், மறுமையில் பெற்று இன்பம் துய்க்கலாம்' எனத் தலைவன் தன்னெஞ்சுக்குக் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,'நட்பின் இந்நோய் இம்மை எனஒன்று இன்றி மறுமை உலகத்து மன்னுதல் பெறினே' (குறுந் -199:6-8),'பெறுவது இயையாது ஆயினும் உறுவது ஒன்று உண்டுமன் வாழிய நெஞ்சே ..........' (குறுந் -199:1-2) என்ற அடிகளில்,'தன் காதல் பிறப்பிற்கு அப்பாலும் தொடர வேண்டும் என்னும் தலைவனின் வேட்கை மிகுகிறது. ஆதலின் அவன் தன் நெஞ்சிடம் 'தலைவி நமக்கு உறுதியாகக் கிடைப்பாள்' என அறிவுறுத்துகிறான். தலைவனின் இந்நிலை, அவனின் காதலாழத்தைப் புலப்படுத்துகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு**

'கற்பெனப் படுவது களவின் வழித்தே' என்கிறது இறையனார் அகப்பொருள். களவில் காதல் பூண்டொழுகிய தலைவன், தன் இனிய தலைவியை இல்லாளாக்க முயலுவான். அதற்குமுன் செல்வப்பெருங்குடியில் தான் பிறந்திருந்தாலும், தன் இல்லற வாழ்விற்குத் தேவையான செல்வத்தைப் பெறவும், தலைமகளை 'மகட்கொடையாகப் பெறுதற்கு வேண்டிய பெரும்பொருளைப் பெறவும் தலைவன் பொருள்வயிற் பிரிவான். இப்பிரிவு 'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு' ஆகும். இதனை*"…. வரையாக் கிழவன் நெட்டிடை கழிந்து பொருள்வயின் பிரிதலும்"*[39] என மொழிவர் இறையனார். பாலசுந்தரம்,

*"தன்தா ளெண்டையும் தகவும் தலைவிக்கு*
*உரிய பரியப் பொருளுங் கருதி*
*ஈட்டுதற் பொருட்டுத் தலைவன் ஏகுதல்*
*வரைபொருட் பிரிதற் கெல்லையொரு திங்களே"*[40]

எனக் காலவரையறையொடு குறிப்பிடுவர். இங்கு மணப்பெண்ணின் வீட்டாருக்கு மணமகனோ, அவனின் பெற்றோரோ 'பரிசப் பணம்' கொடுப்பதும் குறிப்பிடப்படுகிறது. இப்பொருண்மையில் தலைவன் கூற்றில் ஆறு பாடல்கள்[41]காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயுமிடத்து, அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவியின் அன்பு, பிரிந்துள்ள தலைவனுக்கு வருத்தத்தை அளித்தல்
- தலைவியை வரைந்து கொள்ள தலைவன் வரைவுப் பொருளுடன் வருதல்
- காத்திருக்கும் தலைவி, வரைவுப் பொருளுடன் வந்துள்ள தலைவனைக் கண்டு மகிழ்வாள் என எண்ணுதல்
- வரைவிற்குப் பின் இருவரும் கூடியிருக்கும் இன்பநிலையை மனக்கண்ணில் நிகழ்த்தி மகிழ்தல்
- களவில் தலைவியைக் காண வந்த வழியையும் அங்குள்ள குன்றத்தையும் எண்ணிப் பார்த்தல்
- வரைவிற்குத் தலைவியின் பெற்றோரும் ஒருப்படும்படி உலகியல்பைக் கூறுதல்

- வரும்வழியில் செழித்து நிற்கும் செடி, கொடி, மரங்களுடன் தனது மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளல்

என்பன அமைகின்றன. இதன்வழி 'பிரிவுழிக் கலங்கல் ஆற்றிடையுறுதல் (ஐங்குறு - 195), வரைவிடை வைத்து பிரிந்து மீளும் தலைவன் கூறல் (குறுந் -233, 235: ஐங்குறு -94, 291, 365:)' என்னும் துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவிடை வைத்து பிரிந்து மீளும் தலைவன் கூறல்**

வரைவிடை வைத்துப்பிரிந்து மீளும் தலைவன் தலைவியின் நலனுள்ளி, தன்னுள்ளும், தன் முன்னிலையில் உள்ளவற்றினொடும் தன்னுணர்வைப் புலப்படுத்துதல் இத்துறையாகும்.

'வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்த தலைவன் மீள்கிறான் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'மள்ள ரன்ன தடங்கோட் டெருமை' எனத் தொடங்கும் ஐங்குறு -94ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'தடங்கோட்டு எருமை, தன் துணையொடு இணைந்து உறையும் இல்வாழ்வின் இயற்கையினைப் பெற்றதும், தண்ணிய நிழலினைப் பெற்றதுமான பழனம். சூரியன் வரவுகண்டு இதழ் விரிந்து தாமரை மலரக்கூடிய கழனி. இவை இரண்டும், அழகுபெற்ற ஒளிவீசும் நெற்றியினையுடைய என் தலைவியின் தந்தையின் ஊரின்கண்ணே உள்ளது' எனத் தலைவன் தன்னுள்ளே கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலின் முதலிரண்டடியில் பழனத்தில் எருமைகள் துணையுடன் வதிகின்றன எனக் குறிக்குமிடத்து, தலைவனின் இல்லறச் சிந்தனை சிறக்கிறது.

வரைவு நோக்கத்துடன் தலைவியைக் காணவரும் தலைவனுக்குத் தலைவனின் ஊரில் உள்ள பழனம் 'நிழன்முதிர் இலஞ்சிப் பழன'மாகத் தெரிகிறது. கழனித் தாமரை மலரும் என்புழி வரைவுப் பொருளொடு வரும் தலைவனைக் கண்டு தலைவி தன் இல்லிருந்து மகிழ்வாள் என்பதும்,'கவின்பெறு சுடர்நுதல்' என்புழி, பிரிந்திருக்கும் தலைவன், தலைவியின் அழகை மனத்திற்குள் நினைத்து இன்புறும் தன்மையும்,'சுடர்நுதல் தந்தை ஊரே' என்புழி, களவில் பிற நோக்கங்களுக்காக வரும் தலைவனின் மனம் தலைவியின் தந்தையைப் பற்றி சிந்தியாது சுட்டப்பெறுவதை இத்தலைவன் வரைவு நோக்கத்துடன் வந்துள்ளான் என்பதும் சுட்டப்பெறுவதை அறியமுடிகிறது. கொடைக்குரிய மரபினனாகத் தலைவியின்

தந்தை அமைவதைத் தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்கள் சுட்டுகின்றன. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

‘வரைவிடை வைத்துப் பிரிந்து மீள்கின்றான், இடைச்சுரத்துக் குழைந்த மாவின் தளிர் கண்டு சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பின் பாடலில், கூட்டமாக உலாவக்கூடிய மான்களைக் கொன்று, அவற்றின் நிணங்களாகிய தசைகளைக் கொண்டு வந்தனர் அவட்கு முற்பிறந்தோர். அத்தசை உணவினைக் கவர்வதற்காக வரும் பறவைகளைக் கடிந்து ஓட்டுகின்றாள் எம் தலைவி. அவள் பார்ப்போர் போற்றும் பெண்மை நலமிக்க எயிற்றியாவாள். அவளைப் போல் மாந்தளிரே,

“................................................ பலமிகு

நன்னல நயவர வுடையை

என்னோற் றனையோ...........”— (ஐங்குறு.365:3-5)

எனத் தலைவன், தலைவியின் மேனிநலச் சிறப்பினைக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவன், தலைவியை முதன்முதலில் கண்டபோது *“அவள் புள்ளோப்பி நின்றாளாதலின் அவள் குரலையும் நடையையும் நேரிற்கண்டு காதல் கொண்டதை நினைத்து இடைசுரத்தில் நின்ற பொழுதும் ‘படுபுள்ளோப்பும் நலமாண் எயிற்றி’ என மொழிகிறான்”*[42] என்பர் அ.தட்சிணாமூர்த்தி. இப்பாடலை,*“இது வரைவிடை வைத்துப் போகின்றான், மாவினை நோக்கிக் கூறியது”*[43] என்பர் நச்சினார்க்கினியர். இப்பாடலின் பொருண்மையும் அவற்றின் துறைக்குறிப்பும் வரைவிடை வைத்துப் பிரிந்து மீளும் தலைவன் இடைச்சுரத்து, குழைத்த மாவின் தளிர் கண்டு கூறியதென அமைந்துள்ளது. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிந்து செல்லும் தலைவன் வினையின் மேல் தன் கருத்தைச் செலுத்தியும், வருந்தும் தன்மை கொண்டும் செல்வான். ஆனால் இப்பாடலில் தலைவன் பொருளீட்டி மீள்கின்றான் என்பதும், தலைவியின் பெண்மை நலன்மீது இறும்பூது கொள்ளும் தன்மையும் பொருண்மைகளாக அமையப்பெற்றுள்ளன. இப்பொருண்மை துறைக்குறிப்பின் பின்னணிச் சூழலுடன் ஒன்றிக் காணப்படுகிறது.

**உடன்போக்கு**

களவுக் காதலில் திளைத்த தலைமகன், தன் அன்புக்குரியாளை வரைய எண்ணுவான். வரைவிற்குத் தலைமகளின் பெற்றோர் உடன்படாத நிலையில் தோழியின் உதவியுடன் அவளைத் தன்னூர்க்கு அழைத்துச் செல்வான். இந்நிகழ்வை உடன்போக்கு, கொண்டுதலைக் கழிதல் எனக் குறிப்பர். *"கொண்டுதலைக் கழிதல்' என்பது தலைவன் தலைவியை அழைத்துக் கொண்டு உடன்போக்குச் சென்றதைக் குறிக்கும்."*[44] என மொழிவர் க.ப.அறவாணன். இவ்வுடன்போக்குப் பொருண்மையில் தலைவன் கூற்றில் பதினைந்து பாடல்கள்[45] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவி இளையோளாய் இருத்தலின் விளையாட்டுடன் கூட்டிச் செல்லல்
- தோழியின் அருகாமை நின்னைக் காக்குமெனக் கூறல்
- சுரத்தின் கொடுமை அவளின் சிந்தனைக்கு செல்லாத வகையில் அழைத்துச் செல்லல்
- போக்கில் தலைவியின் காதலுள்ளம் அறிந்து மகிழல்
- பாலை வழியின் கொடுமையைத் தலைவி தாங்க மாட்டாள் என எண்ணுதல்
- வருத்தம் தோன்றாதிருக்க நலம்பாராட்டல்,
- தலைவி உரிமை கொடுக்க தலைவனின் மணம் விழைதல்
- இடைவழியில் நிகழ்ந்ததனைத் தோழிக்குக் கூறல்

என்பன அமைகின்றன. இவற்றை நோக்கின் 'சுரத்துய்த்தல்' முதல் 'தலைவன் தம்மூர் சார்ந்தமை கூறல்' வரையிலான பதினொரு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**உடன்கொண்டு சேரலுக்கு அருமை உரைத்தல்**

தலைவியின் மென்மைத் தன்மை கூறி அவளை உடன்கொண்டு செல்லத் தலைவன் மறுத்துக் கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'உடன்போகுவம்' என்ற தலைவிக்குத் தலைவன் சொற்றது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'மனையுறை புறவின் செங்காற் பேடை' எனத் தொடங்கும் நற் - 162ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலுள் 'மனையில் புறாவின் பேடையொடு அதன்

சேவல் கூடி மகிழும் மாலைப்பொழுது துன்பம் விளைவிக்கிறது. நும்மொடு வருகிறேன் என்கிறாய், வேனிற்காலத்தில் இத்தி மரத்தின் விழுதுகள் நிலத்தில் தோயாது தொங்கும். காற்று வீசும் பொழுதெல்லாம் விழுதுகள் அசைந்து கீழே படுத்திருக்கும் பெண்யானைமீது புரளும். இப் பாலைவழி நினக்குப் பொருந்தாததாகும். ஆகவே, நீ என்னோடு வரவேண்டா' எனத் தலைவன் தலைவியிடம் உடன்போக்கு மறுத்துக் கூறும் பொருண்மை கொண்டது. ஆனால் கா.கோவிந்தன்,*"மரத்தின் விழுது வைகறைப் போதிலே மேல் காற்று வீசுந்தோறும் நிலத்திலே படாது ஊசாலாடிக் கீழே துயிலும் பிடியானையின்மீது புரளாநிற்கும் சுரத்தின் கண்ணே செல்லுதல் அவளால் இயலுவதன்று என்றுகூறி முதலில் மறுப்பான். மறுவலும் அவள் வற்புறுத்துவதன்கண் உடன்படுகின்றான்"*[46]என்று கூறுவதோடு தோழி கூற்றாகவும் உரைக்கிறார். ஆனால், இப்பாடலடிகளில் (நற்-162) அமைந்துள்ள பொருண்மையின்படி,'மரத்தின் விழுதைத் தோழியின் தேற்றுதல் மொழிக்கு உவமையாகக் கொண்டு தலைவன் உடன்போக்கினுக்கு மறுப்பதாகக் கொள்ளுதலே' சரியான புரிதலாக அமையும். இப்பாடலில் தலைவன், தலைவியின் உள்ளுணர்வைப் புரிந்துகொண்டாலும், அவளின் மென்மைத் தன்மைக்கு இரங்குகிறான். தோழி என்னும் பாதுகாப்பினையும் அவளுக்கு அறிவுறுத்துகிறான். என்னோடு வந்து வருந்த வேண்டாம் என்று கூறினால், தலைவி துன்புறுவாள் என எண்ணி, பாலைநில நிகழ்வுகளின் மூலம் எடுத்துக் கூறும் பண்பு மிக்கவனாகத் திகழ்கிறான்.

இதனொடு 'வேனில் இற்றித் தோயா நெடுவீழ் ........ துஞ்சு பிடிவருடும் அத்தம்' (நற் -162:9,11) என்னும் அடிகளை இறைச்சியாகக் கொள்ளின், யான் மீண்டும் வருமளவும் ஆற்றாமை உண்டாகின் தோழி நின்னை ஆற்றுவிப்பாள் எனக் கூறுவது புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**மருட்டிக்கூறல்**

உடன்போக்கில் பாலை நிலத்து வழியே தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன் ஆறுசெல் வருத்தம் தோன்றாமல் இருக்கும் பொருட்டு, வழியில் நன்மை வாய்ந்த கானகத்துக் காட்சிகளை அவளுக்குக் காட்டி அழைத்துச் செல்லல் மருட்டிக்கூறல் என்னும் துறையாகும். இத்துறையிலமைந்த 'உடன்போகிய

தலைமகளைத் தலைமகன் மருட்டிச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'வாள்விரி வயமான் கோள்உகிர் அன்ன' எனத் தொடங்கும் அகநா -99ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல், முள் முருங்கையின் வண்டுகள் மொய்த்த வாடிய பூக்கள் எங்கும் பரவிக் கிடக்கின்றன. மொட்டு அலர்ந்த கோங்கின் பூக்களோடு புனலிப் பூக்களும் கூடிக் கிடக்கின்றன. கிளைகளினின்றும் உதிர்ந்த பூக்களோடு வெண்கடம்ப மலர்கள் விரவிக்கிடந்தன. வழிபாடு செய்வதற்குரிய தெய்வம் வாழும் கோயிலின்கண் பரந்து கிடக்கும் பல்வேறு மணங்கமழும் பூக்களைப் போல, இக்காடு பலவகை மணக்கும் பூக்களைப் பெற்று மிகுதியும் விரும்பத்தக்கதாய் இருக்கின்றது. அதனைக் காண்பாயாக! உன் தந்தை போரிடும் போர்க்களத்து பாய்ந்து போர் செய்தமையால் பூண் சிதைந்த கோடுகளைப் பெற்றும், பிடிகள் சூழப் பெற்று நிற்கும் களிறுகளைப் போலத் தோற்றம் தரும் சிறிய பெரிய அளவினையுடைய குன்றங்களையும் கொண்டது இக்காடு அதனையும் காண்பாயாக' என வருத்தம் தோன்றாதவாறு மென்மொழிகளைத் தலைவியிடம் கூறித் தலைவன் அழைத்துச் செல்லும் பொருண்மை கொண்டது. இப்பாடலில், மென்பதங்களைக் கொண்ட தலைவியின் மனமும், ஒண்பாதங்களும் வருத்தங் கொள்ளாதிருக்க, மணம் கமழும் வன்வழியினை மென்பாதையாக மாற்றும் மணம் மிக்க மலர்கள் பரந்த வழியில் தலைவியை அழைத்துச் செல்வது புலப்படுகிறது. இப்பாடலின் பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் ஒன்றியும் துறையை விளக்குகிறது.

### உடன்போக்கு வரைந்து மீளுதல்

உடன்போக்கு சென்ற தலைவன், தலைவி மணம் செய்து கொண்ட பின்னர் மீண்டு வருதல் உடன்போய் வரைந்து மீளுதல் எனப்படும். இத்துறையிலமைந்த உட்துறைகளாகத் தலைவன் வந்த திறம் தோழிக்கு உரைத்தல், தலைவன் தம்மூர் சார்ந்தமை கூறல் என்ற இரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

### ஊர் சார்ந்தமை கூறல்

உடன்போக்கில் தலைவியை அழைத்துச் செல்கிறான். நெடுந்தூரம் வந்ததால் தலைவி சோர்வுடன் காணப்பட்டாள். அவளின் சோர்வு போக்க ஊர் அணிமைத்து ஆதலின் விரைந்து செல்வோம் என மொழிதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'உடன்போகா நின்ற தலைமகன் தலைமகளை வற்புறீஇயது.

உடன்போய் மறுத்தரா நின்றாள் ஊர்காட்டி வற்புறீஇயதும் ஆம்' என்ற துறைக்குறிப்புகளுக்கு 'பாம்பளைச் செறி முழங்கி வலனேர்பு' எனத் தொடங்கும் நற் -264ஆம் பாடல் அமைந்துள்ளது. இப்பாடல் 'பகற்பொழுதெல்லாம் தன்னுடன் நடந்து வந்த தலைவியின் உடலும் உள்ளமும் சோர்ந்துள்ளதை உணர்ந்த தலைவன் அவளைப் பாராட்டி மொழிகிறான். ஊரும் சத்தம் கேட்கும் தொலைவிலுள்ளது. விரைந்து சொல்வோம். களைப்பைப் போக்கிக் கொள்வோம்' எனத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில் 'உதுக்காண் தோன்றுமெம் சிறுநல்லூரே' (நற் -264:9) என்புழி, சோர்வுற்ற தலைவிக்கு சோர்வு நீங்கும் வித்தையாக உதுக்காண் என்ற இடைமைச் சுட்டைப் பயன்படுத்தலும், தலைவியை ஊக்கமளிக்கும் விதமாக சத்தம் கேட்கும் அண்மையில் உள்ளோமெனத் தலைவன் மொழிவதும் தெளிவு. 'அணிகிளர் கலாவம் ஐதுவிரித்து இயலும் மணிபிறை எருத்தின் மஞ்ஞை போலநின் வீபெய் கூந்தல் வீசுவளி உளர ஏகுமதி மடந்தை எல்லின்று பொழுதே' (நற் -264:3-6) என்புழி, தன்னின் இனிய சொற்கள் தலைவியின் உடல் தளர்ச்சியையும் உள்ளச் சோர்வையும் விரட்டும் மாமருந்து' என்பதை அறிந்து 'நலம் பாராட்டல்' வித்தையைத் தலைவன் கையாள்வதும் வெள்ளிடை. இவ்வாறு தக்க சமயமறிந்து சொற்களையும் செயலையும் பயன்படுத்தும் தலைவனின் ஆளுமையை இளவழகனார் *"துன்பவுணர்வுகளை நினைவினாலேயே மாற்றிக் கொள்ளும் முறைகள் மிகவும் நுட்பம் வாய்ந்தவை. பகலெல்லாம் தன்னுடன் வெயிலில் நடந்து களைத்து வரும் தலைவியின் துன்பத்தை மாற்றி ஆறுதல் அடைவிக்கும் பொருட்டுத் தலைவன் செய்யும் விரகுகள் இவை. இன்னல் நேரத்தில் அதன் மறுதலையான இனிமை பயக்கும் நினைவுகளை உள்ளத்திற் கொண்டு வருதல் வாழ்க்கை வளர்ச்சியின் நுண்முறைகளுள் ஒன்று. நினைவினை மாற்றிக் கொள்ளும் இந்நன்முறையின் அடிப்படையிலிருந்து எத்தனையோ வகையின் நலங்கள் வாழ்க்கையின் கிளையோடு மலர்ச்சி பெறுகின்றன."*[47] எனப் பாடலின் பொருட்சுவையையும் தலைவனின் எண்ணப் போக்கையும் துறைக்குறிப்புகளின் உள்ளார்ந்த பொருண்மையையும் வலுப்படுத்தும் வண்ணம் மொழிந்திருப்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவு**

களவில் திளைத்த தலைமக்கள் கற்புநெறிகளில் உடன்படல் வேண்டும். நிகழாவிடில் அலர், இற்செறிப்பு, வெறியாடல் போன்றவை நிகழும். களவு வெளிப்பட்ட பின்னும், வெளிப்படா முன் தமராலும் வரைவு நிகழ்வதுண்டு. இதனைத் தொல்காப்பியர் 'வெளிப்பட வரைதல் படாமை வரைதல்' (தொல். -138) என வகைப்படுத்துவர். இத்தகைய வரைவுப் பொருண்மையில் தலைவன் கூற்றில் மூன்று பாடல்கள்[48] காணப்படுகின்றன. இப்பாடலின் பொருண்மைகளை நோக்கின்,

- வரைவு நீடலால் தலைவியின் வருத்தத்தை எண்ணுதல்
- குரவரால் வரைவு மறுக்கப்பட்டநிலை
- தலைவியின் காதலுணர்வு முதிராநிலை
- உடன்படுவர் எனத் தோழி உரைத்தல்

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் வரைவு மறுத்தலில் மையல்(நற் -356), கண்டோன் மகிழ்வு(ஐங்குறு -259), வரைவு மாட்சிமைப்படின் நேரில் வருவேனெனல்(ஐங்குறு -92) என்ற மூன்று துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவு மறுத்தலில் மையல்**

தலைவன், தலைவியின் தமரிடம் வரைவு வேண்டி நின்றான். வரைவு மறுக்கப்பட்டு ஆற்றாத் தலைவன், தலைவி தம் அருகில் இருக்குமாறு கிடைப்பாளோ எனத் தனக்குள் வருந்திக் கூறுவது இத்துறையாகும். இத்துறை வரைவு மறுக்கப்பட்ட நிலையில் தலைவி ஆற்றாமை கொள்ளும் பொருண்மையிலமைந்த துறைக்குத் தமிழ்நெறி விளக்கம் *"மையல்"*[49] எனக் குறிப்பிடுகின்றது இதன் அடிப்படையில் இத்துறை வருவிக்கப்பட்டுள்ளது.

இத்துறையிலமைந்த 'வரைவு மறுக்கப்பட்டு ஆற்றானாகிய தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நிலந்தாழ் மருங்கின் தெண்கடல் மேய்ந்த' எனத் தொடங்கும் நற் -356ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'அன்னம் பார்ப்புகட்கு இரைதேடி அலையும். அதன் பார்ப்புகள் இமயமலையில் இருப்பதால் இரை தேடிக் கொணர்ந்தூட்டும் செயலால் அன்னம் வருந்தும். அதுபோல தலைவியின்பால் காதலெனும் இரைகொண்டு, என் நெஞ்சு

அலைந்தலைந்து மெலிந்தது. அவள் அருகில் இருப்பின் இத்துயரில்லை' எனத் தன் நெஞ்சுக்குக் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் 'வளராப் பார்ப்பிற்கு அலகு இசை ஒய்யும்' என்புழி, தலைவி காதல் நோக்கு முதிர்ந்து, தன்னிடம் வரும் பருவத்தை அடையவில்லை என்பதைத் தலைவன் உணர்ந்திருந்தான் என்பதையும் வளராப் பார்ப்பிற்கு அலகுஇரை ஒய்யும் ....... செல்வரே வருந்தினை வாழ என்னுள்ளம்'(நற் -356:5-7) என்புழி, தலைவன் தலைவியோடு சேர்ந்து வாழும் வாழ்விற்கான பொருளீட்டி வரும் முயற்சியை மேற்கொண்டு வாழ்வான் என்பதையும் புலப்படுத்துகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவு மாட்சிமைப்படின் நானே வருவேனெனல்** என்னும் துறையிலமைந்த '.... தலைமகள் முகம் நோக்கி,'இவள் குறிப்பினால் கூறினாள்'என்பதறிந்த தலைமகன், வரைவு மாட்சிமைப்படின் நானே வருவல்' எனத் தலைமகட்குச் சொல்லியது' என்ற துறைக்குறிப்பிற்குக் 'கருங்கோட் டெருமைச் செங்கண் புனிற்றா' எனத் தொடங்கும் ஐங்குறு -92ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'புனிற்றாவானது தனது கன்றுக்கு தானே ஊறுகின்ற பாலைக் கொடுக்கும். அதுபோல் நின் தந்தையின் ஊருக்கு நின்னைக் கொடுப்பது உறுதியானால் நானே நேரில் வருவேன்' எனத் தலைவியிடம் தலைவன் மொழியும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,'கருங்கோட் டெருமைச் செங்கண் புனிற்றா காதல் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்'(ஐங்குறு -92:1-2) என்புழி, தலைவன் கேட்க தலைவியின் தந்தை தானே மகட்கொடை நேர்வார் என்பது அறியமுடிகிறது. இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது,

**கற்பு**

அகவாழ்வு களவு, கற்வு என்ற இரு கைகோள்களைக் கொண்டது. இயற்கைப் புணர்ச்சி முதல் வரைவு வரையிலான நிகழ்வுகள் களவுத் துறைகளாகும். அவற்றுள் வரைவுத் துறையில் அமைந்த உட்துறைகள் வரைவை நோக்கிய நிகழ்ச்சிக் கூறுகளை அடிப்படையாகக் கொண்டவை. உடன்போக்குத் துறையிலமைந்த உட்துறைகளுள் 'உடன்போய் வரைந்து மீளுதல், தலைவன்

வந்த திறம் தோழிக்கு உரைத்தல்' என்ற துறைகள் மட்டும் கற்பாக அமைகின்றன. இக்கற்பு வாழ்வின் நிகழ்வுகளை,

> *“மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்*
>
> *பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே”*[50]

என நிரல்படுத்துவர் தொல்காப்பியர். தலைமக்கள் *“இருவரும் உலகத்தார் அறிய மணஞ்செய்துகொண்டு மனையறஞ் செய்தலே ‘கற்பு’ எனப்படும்”*[51] என்பர் க.வெள்ளைவாரணன். *“மலிவு என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலாயவற்றால் மகிழ்தல்”*[52] என உரை பகர்வர் பேராசிரியர். தலைமக்கள் இல்லிருந்து புணர்ந்தும் அளாவியும் இருத்தல் மகிழ்தலாகும்.

**மலிவு**

களவுத் தலைமக்கள் வரைவுடன்பட்டு கற்பொழுக்கத்தில் திளைக்கும் சூழல்கள் நிறைந்தது மலிவுப்பொருண்மையாகும். மலிவு என்பதற்கு, கற்பொழுக்கத் தலைமக்கள் புணர்ந்தும் புலவி நீங்கியும் ஊடல் மறந்தும் மகிழ்ச்சியில் திளைத்தலைக் குறிப்பிடுவர் இலக்கணிகள். இம்மலிவுப் பொருண்மையில் தலைவன் பேசும் சூழல்களாக,

- புலவி நீங்கிய தலைவியின் பேதைமை எண்ணி மகிழ்தல்
- செலவழுங்குதல்
- பிரிவின் பின் மகிழல்
- தேர்ப்பாகனைத் தலையளித்தல்

என்பன அமைவதை அறியமுடிகிறது. இச்சூழல்களின் பொருண்மையை உள்ளடக்கியதாக எண்பத்து மூன்று பாடல்கள்[53] காணப்படுகின்றன.

**புலவி நீங்கிய தலைவியின் பேதைமை எண்ணி மகிழ்தல்**

தலைவன் புறத்தொழுக்கமின்றி இருந்தும், உளதெனக் கருதி புலந்த தலைவியை தெளிய, அவள் ஏற்கும் வண்ணம் இனிய சொற்களைக் கூறி, அவளின் புலவியை நீக்கிய தலைவன் அவளுடன் இனிதிருந்தான். அறியாது புலந்த தலைவியின் அறியாமை எண்ணி இன்புற்றும், அவளின் அன்பின் ஆழத்தை

எண்ணி இறும்பூது கொண்டும் மகிழ்ந்துரைத்தல் 'பேதைமையெண்ணி மகிழ்தல்' துறையாகும்.

இத்துறையிலமைந்த 'புறத்தொழுக்கம் இன்றியே யிருக்கவும் உளதென்று புலர்ந்த தலைமகளைப் புலவி நீக்கிய தலைமகன் புணர்ச்சியது இறுதிக்கண் தன்னுள்ளே சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'பகன்றை வான்மலர் மிடைந்து கோட்டடைக்' எனத் தொடங்கும் ஐங்குறு -97ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'தாய் எருமையின் கோட்டிற் கிடந்த பகன்றை மலரைக் கண்டு, அதன் கன்று வேறுபட நினைந்து வெருவும் பொய்கை ஊரனின் மகள் இவள். இவள் அப்பொய்கையில் மலர்ந்த பூவினும் நறுந்தண்ணியள்' எனத் தலைவன் பெருமிதம் கொள்ளும் பொருண்மை கொண்டது. இப்பாடலில், முதல் மூன்றடிகளை உள்ளுறையில் நோக்கின்,

தாய் எருமை – பகன்றைமலர் - கன்றுவெருவுதல்
⇩ ⇩ ⇩
தலைவன் - புறத்தொழுக்கம் - தலைவி அஞ்சுதல்

என்று அறியுமிடத்து தலைவியின் அச்சம் பேதைமை உடையது என்பதைப் புலப்படுத்தும்.

'பொய்கைப் பூவி னறுந்தண் ணியளே' (ஐங்குறு -97:4) என்புழி, புறத்தொழுக்கம் எண்ணி, புறத்தே வெகுண்டாலும் அகத்தே பேரன்புமிக்கவள் தலைவி என்பதையும் அறியமுடிகிறது. 'தாயினுடைய பகன்றை வான்மலர் மிடைந்து கோட்டிடைக் கன்று வெரூஉம்' என்றது,"தன் தோளில் அணிந்த மாலையைப் பிறிதொன்றிற் கணிந்த மாலையெனக் கருதினாள் என்பதாம்"[54] எனப் பொருளுரைப்பர் பழைய உரைகாரர். இவ்வுரையும் துறையைச் சுட்டுவதாக அமைகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பினோடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**செலவழுங்குதல்**

காதலில் கருத்தொருமித்த அன்பினையுடையோர்க்கு பிரிதல் என்பது, முகவாட்டத்தையும் உயிர்வாட்டத்தையும் உள்ளச் சோர்வையும் ஏற்படுத்தும் கொடுஞ்செயலாகும். எனினும் பொருள்வயிற் பிரிதல் தலைவனின் தலையாய

கடமைகளில் ஒன்று. இப்பிரிவு தலைவனின் இல்லறம் பேணல் விருந்தெதிர் கோடல் குரவர் காத்தல், சுற்றம் பேணல் போன்றவற்றை மேற்கொள்ள உதவிபுரியும். எனினும் பொருளுக்காக யாம் பிரிந்து சென்றால் அது தலைவியைத் துன்பத்திற்குள்ளாக்குமோ எனக் கருதிச் செலவு மேற்கொள்வதைத் தவிர்த்தலுமுண்டு. இதனை *“பொருள் காரணமாகப் பிரிகின்ற தலைவன் தன் பிரிவினால் தலைவிக்கு மனஅழிவும் உடல் அழிவும் கருதிப்பார்த்துத் தன் பிரிவாகிய செலவினைத் தவிர்க்க முயல்வான். தலைவன் தன் பிரிவினைத் தானே தவிர்த்தலாக அமைவது ‘செலவழுங்குதல்’ என்னும் அகத்துறையாகக் கூறப்படும்”*[55] என்பர் மு.மணிவேல். அவ்வாறு தவிர்க்கும் நிலையில்,

“வளமையோ வைகலும் செயலாகும் மற்றிவள்
முளைநிரை முறுவலார் ஆயத்துள் எடுத்தாய்ந்த
இளமையும் தருவதோ இறந்த பின்னே”[56] (கலித் -15:24-26)

எனத் தோழியின் சொற்றிறத்தாலும் செலவினைத் தவிர்த்தலும் நிகழும்.

**சங்க இலக்கியத்தில் செலவழுங்குதல்**

சங்க இலக்கியத்தில் செலவழுங்குதல் துறையில் நாற்பத்தொன்பது[57] பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல் துறைக்குறிப்புகளின் பொருண்மையை ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவியின் மாலைநேரக் கலக்கத்தை முன்பொரு நாள் உணர்ந்த நிலை
- தலைவியின் காதல் இன்பத்தைவிட பொருட்செல்வம் இனிதல்ல என மொழிதல்
- தானுற்ற இன்னிலை நினைத்தநிலை
- இளமை நிலைபெறாது என நினையும்நிலை
- தன் இல்லாள் புதல்வனுடன் இனிதிருக்க விளைதல்
- ஆற்றாக் குறிப்பு கண்டு நெஞ்சை இடித்துரைத்தல்
- தோழியால் செலவு வலிப்பித்த பின்னும் தன் ஆற்றாமை கொள்ளல்
- வாடை வருந்துமாறு செல்லல் வேண்டாம் எனத் தன்னைக் கடிந்து கொள்ளல்
- தலைவியே சிறந்த செல்வமெனல்

- தலைவியின் நலம் நினைத்தநிலை
- தலைவியின் வருத்தம் கண்டநிலை
- தலைவியின் ஐயத்தைப் போக்கும்நிலை

என்பன அமைகின்றன. இப்பாடல் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ‘நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவழுங்குதல்’ முதல் ‘செலவழுங்கியமையைத் தலைவிக்குக் கூறல்’ வரையிலான பத்து துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**செலவொழிந்தமையைத் தலைவிக்குக் கூறல்**

செலவு மேற்கொள்ள நினைக்குந் தலைவன் இளமையும், குறுகிய காலமும், இல்லாள் எழில் அருமையும் கூறிச் செலவொழிந்தமையைத் தலைவிக்குக் கூறுதல் இத்துறையாகும். இத்துறைப் பொருண்மையில் ஆறு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில்,‘செலவுக் குறிப்பினால் வேறுபட்ட கிழத்திக்குத் தலைவன் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘பொன்னும் மணியும் போல் யாழநின்’ எனத் தொடங்கும் நற் -166ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் ‘மடந்தையே நின் எழினலம் கண்டு, யான் ஆறா நிலைபெற்றவர் போலாவேன். புதல்வனும் விளையாடுகின்றனன். உங்களைப் பார்த்து மகிழ்வதைக் காட்டிலும் சிறந்த செல்வம் வேறில்லை. வேறு வினையுமில்லை. எனவே யான் எதற்காகப் பிரிதல் வேண்டுமென’த் தலைவியை தலைவன் தேற்றும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் ‘இவை காண்தோறும் அகம்மலிந்து யானும் ......... மடந்தை காதல்தானும் கடலினும் பெரிதே!’ (நற்-166:5-10) என்னுமடிகள்,‘தலைவியும் புதல்வனும் பிரியும் நிலைபேற்றினைப் பெற்றவரல்லர். ஆதலின் காதல் தலைவன் செலவொழிந்தான் என உணர்த்துகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த ஐங்குறுநூற்றுப் பாடல்கள் போர்வயிற் பிரிந்து மீண்டுவந்த தலைவன், மீண்டும் பிரிதலை மேற்கொள்வானோ என அஞ்சிய தலைவியை,‘வென்வேல் வேந்தன் அருந்தொழில் துறந்தினி நன்னுதல் யானே செலவு ஒழிந் தனெனே!’ (ஐங்குறு-426:1-2) என அவளின் கவற்சி தீரத் தலைவன்

கூறும் பொருண்மை, இப்பாடலின் துறைக்குறிப்புடன் ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குவதாய் அமைந்துள்ளது.

**முந்தைய நிகழ்வைச் சுட்டிச் செலவழுங்குதல் (நிகழ்ந்தது நினைத்தல்)**

பொருள்வயிற் பிரிய எண்ணிய நெஞ்சத்திடம் முன்னொரு பிரிவின்போது நிகழ்ந்த நிகழ்வினை எண்ணி, அதன் விளைவுதனைக் கூறிச் செலவினைத் தவிர்த்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'முன்னொரு காலத்துப் பொருள்வயிற் பிரிந்து வந்த தலைமகன் பின்னும் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு நான்கு பாடல்கள் (நற் -3, 62: அகநா -337, 379:) காணப்படுகின்றன. இப்பாடல்களில்,

'பேரமர் மழைக்கண் புலம்புகொண் டொழிய
ஈங்குப் பிரிந்துறைதல் இனிதன்று ஆகலின்
அவனது ஆக பொருளென்று ............' (அகநா -337:3-5)

என்புழி, பொருள்வயிற் பிரிய எண்ணிய நெஞ்சத்திடம் முன்பு தன் தலைவியுடன் வாழ்தலே இனிய செல்வம்' என மொழிந்ததை நினைவு படுத்துதல் புலப்படுகிறது. 'பெருங்கலி வானம் தலைஇய இருங்குளிர் வாடையொடு வருந்துவள் எனவே!'(அகநா -337:20-21) என்புழி, பொருள்வயிற் பிரிந்த தலைவன், தான் கானத்தில் இருந்தாலும் தன்னுள்ளம் தலைவியிடமே இருந்தது என்பதையும், தன்னை மட்டும் தனித்து விட்டு வாடையில் வருந்தும் தலைவியைக் காண வந்தமையைக் கடிந்துரைப்பதும் புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல்கள் அவற்றின் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

**பிரிவின் பின் மலிவு**

வினை – பொருள்வயிற் பிரிவு மேற்கொண்ட தலைவன், வினைமுடித்து மீண்டு வந்து தலைவியுடன் மகிழ்ந்திருத்தல் மலிவு என்னும் பொருண்மையில் அடங்கும். பிரிவின் பின் அமையும் மலிவில் இருபத்தொன்பது[58] பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை அடிப்படையில்,'வினைமுற்றி மீண்டபின் தலைவியுடன் இனிதிருத்தல்' முதல்

‘நின்னை உள்ளி வந்தனன் எனல்’ வரையிலான ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வினைமுற்றி மீண்டபின் இனிதிருத்தல்**

வினைமுற்றி மீண்டு, தன் இல்லம் வந்த தலைவன், தலைவியுடன் மகிழ்ந்திருக்கிறான். தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்துதலும் அதற்குக் காரணமாக அமைந்தவற்றை வாழ்த்திப் பாராட்டுதலும் இத்துறையில் அடங்கும்.

இத்துறையிலமைந்த ‘தலைவன் வினைமுற்றி வந்து பள்ளியிடத்தானாகப் பெய்த மழையை வாழ்த்தியது’ என்ற துறைக்குறிப்பிற்கு ‘உலகிற்கு ஆணியாகப் பலர் தொழ’ எனத் தொடங்கும் நற் -139ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் வினைமுற்றி மீண்ட தலைவன், தன்னில்லத்து தலைவியுடன் பள்ளியிருக்கையில், இவ்வினிய மகிழ்வைத் தரச் செய்த கார்காலத்தில் பெய்த மழையையுடைய மேகமே நீ பலரும் தொழும்படி உயர்ந்த குன்றின் சிகரம் தோறும் நின்று உலாவுவாயாக’ எனத் தனக்கு உதவிய மேகத்திற்குப் பாராட்டும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில் ‘வணர்ந்து ஒலிகூந்தல் மாஅயோ ளோடு புணர்ந்து …….. இரவுப் பெயல்பொழிந்த உதவி யோயே!’ (நற் -139:7-10) என்புழி, பிரிந்து மீண்ட தலைவன் ‘தலைவியுடன் மகிழ்ந்திருத்தல், கார்கால மேகம், அதனின் மழை செய்த உதவி’ போன்றவற்றைக் குறிப்பிடுகிறான் என்பது புலப்படுகிறது. ‘உலகிற்கு அணியாகப் பலர் தொழ பலவயின் நிலைஇய குன்றின் கோடுதோறு ஏயினை’ (நற் -139:1-3) என்புழி, தலைவியுடன் மகிழ்ந்திருக்கச் செய்த மழைப் பொழிவைத் தந்த மேகத்தினைத் தலைவன் பாராட்டுவது தெளிவு. இப்பாடலின் துறைக்குறிப்பில் ‘... மழையை வாழ்த்தியது.’ எனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் பாடலின் பொருண்மையில் மழைப் பொழிவிற்குக் காரணமாக அமைந்த மேகத்தினைத் தலைவன் வாழ்த்துவதாகப் பாடலடிகள் அமைந்துள்ளன. இதனை நோக்கின் இப்பாடலின் துறைக்குறிப்பில் ‘.... மழையைப் பெய்த மேகத்தினை வாழ்த்தியது’ என அமைந்தால் சாலச் சிறந்தது. எனினும், இப்பாடல் பின்னணிச் சூழலுக்குள் அமைந்து துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த ஐங்குறுநூற்றுப் பாடல்களின் (324, 325, 356) பொருண்மையின் சுருங்கிய வடிவமாகவும் பதிலுரைக்கும் முறையாகவும் துறைக்குறிப்புகள் அமைந்துள்ளன. 'பிரிந்து வந்த தலைமகன் 'சுரத்தின் வெம்மை எங்ஙனம் ஆற்றினீர்?'என்ற தோழிக்குச் சொல்லியது' என்ற துறைக்குறிப்பிற்கு 'வெம்பலை யருஞ்சுரம் நலியா தெம்வெங் காதலி பண்புதுணைப் பெற்றே' (ஐங்குறு -325:3-4)என அமைகிறது. இவ்வடிகள் தோழி வினாவியதற்குப் பதிலுரைப்பது போன்றும், வினைமுற்றி வந்தோன் தலைவியல்லாத தோழியிடம் மொழிவதாக அமைந்து துறைக்குறிப்பை விளக்குவது புலப்படுகிறது.

### குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை கூறி மகிழ்தல்

தலைவன் குறித்துச் சென்ற பருவத்திற்கு முன்னே வினைமுடித்துத் திரும்பினான். மகிழ்வையும், கால நிகழ்வுகளையும் சுட்டி, தலைவிக்குக் கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பருவம் குறித்துப் பிரிந்த தலைமகன் அப்பருவத்திற்கு முன்னே வந்து தலைவியொடு கூடிச் செல்லாநின்றுழிப் பருவம் வந்ததாக, தான் அப்பருவத்திற்கு முன்னே வந்தமை தோன்றக் கூறுவான் தலைவிக்கு உரைத்தது' என்ற துறைக்குறிப்பிற்கு ஐந்து பாடல்கள் (ஐங்குறு -411-415) அமைந்துள்ளன. இப்பாடல்களுள் 'கார்தொடங் கின்றாற் காமர் புறவே' (ஐங்குறு -411:2),'பூவணி கொண்டன்றால் புறவே' (ஐங்குறு -412:3),'கார்தொடங் கின்றாற் பொழுதே' (ஐங்குறு -413:3)' என்புழி,'தான் வினைமுடித்து வந்த பின்னரே பருவம் வந்தமையைத் தலைவன், தலைவியிடம் கூறுவது புலப்படுகிறது. 'வீழ்தரு புதுப்புன லாடுதறும் தாழிருங் கூந்தல் வம்மதி விரைந்தே' (ஐங்குறு -411:3-4),'பேரமர் கண்ணி யாடுநம் விரைந்தே' (ஐங்குறு -412:4), இனிதுடன் கழிக்கு விளமை இனிதா லம்ம இனியவர்ப் புணர்வே' (ஐங்குறு -415:3-4)' என்புழி, தலைவியுடனிருக்கும் தலைவன், பிரிந்திருந்த துயரினின்று மீண்ட நாம் இனி,'புனலாடியும், பொழிலாடியும், நாம் காத்திருந்த இன்பம் பெற்றும் மகிழ்திருப்போம்' எனத் தலைவியை அழைக்கும் பொருண்மை, துறைக்குறிப்பிற்குள் ஒன்றியும் துறையை விளக்கியும் அமைந்துள்ளது. இத்துறையிலமைந்த ஏனைய பாடல்கள் (ஐங்குறு -416-420, 449) தலைவன் தலைவியை உடன்கொண்டு பொழில், புனலாடுந் தன்மையைச் சுட்டுவதாக அமைகின்றன.

### வாயில் நேர்ந்தமையால் மகிழல்

தலைவனின் புறத்தொழுக்கத்தினால், தோழி முதலானோர் அவனுக்கு வாயில் மறுத்தனர். ஆனால் காதல் கொண்ட தலைவி, தலைமகற்கு வாயில் நேர்ந்தாள். அதனால் தலைவன் மகிழ்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தோழி முதலாயினார் தலைமகன் கொடுமை கூறி விலக்கவும், தலைமகள் வாயில் நேர்ந்துழி அவன் உவந்து சொல்லியது' என்னுந் துறைக்குறிப்பிற்கு 'பழனப் பாகன் முயிறுமூசு குடம்பை' எனத் தொடங்கும் ஐங்குறு -99ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'பாகற் கொடியிலிருக்கும் முயிறுகளின் முட்டைகளையும், நெற்கதிர்களையும், அங்கு மேயும் எருமை மாடுகள் சிதைக்கும். பூக்கள் நிறைந்த உரனின் மகளாகிய தலைவி எம்நோய்க்கு மருந்தாகினள்' எனத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடற்கு *"முயிறுமூசு குடம்பையை நெற்கதிரோடு எருமை மயக்கும்' என்றது, யான் செய்த கொடுமையையும் அவர்கள் தன்மேற் காதலித்துக் கூறியவற்றையும் சிதைத்து என் பக்கதே நின்றாள் என்பதாம்"*[59] என உரை பகர்வர் பழைய உரைகாரர். இதனையே பின்னைய உரைகாரார்கள் உள்ளுறையாகத் கொண்டுள்ளனர் என்பது அறிய முடிகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயிற் புகுதல்**

பரத்தையிற் பிரிந்த தலைவன், பாணன் முதலியோரை வாயில் நேர்விக்கும்படி அனுப்பினான். தலைவி ஊடல் தணியப் பெறாது மறுத்தனள். மனம் வருந்திய தலைவன் புதல்வன், விருந்து, ஆற்றாமை ஆகியவற்றை வாயிலாகக் கொண்டு, தானே தன்னில்லிற்குள் நுழைதல் 'வாயிற் புகுதல்' துறையாகும். இச்சூழலில் அமைந்த பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின், விருந்தெண்ணி மகிழ்தல்(நற் -120), இல்வாழ்க்கைச் சிறப்பு கண்டு மகிழ்தல்(ஐங்குறு -188), ஆற்றானாய் ஊடல் தணிய உரைத்தல் என்ற மூன்று துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன. இத்துறைகளில் முன்னை இரண்டும் மலிவுப் பொருண்மையிலும், பின்னையது ஊடல் பொருண்மையிலும் அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

**விருந்தெண்ணி மகிழ்தல்**

வாயிற் புகுந்த தலைவனிடம் ஊடலை வெளிக்காட்டாது விருந்தயர்தலில் விருப்புடையவளாய்த் தலைவி விளங்கியமை கண்டு தலைவன் மகிழ்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘விருந்து வாயிலாகப் புக்க தலைவன் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘தடமருப் பெருமை மடநடைக் குழவி’ எனத் தொடங்கும் நற் -120ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘விருந்தினருடன் தலைவன் வருகிறான். புதியவர்களுக்காக வாளை மீனை உணவாகச் சமைக்கிறாள். அதனால் ஊடல் கொள்ளத்தக்க பொழுதன்று எனவெண்ணிப் புலந்து சமையலறைக்குள் புகுந்தனள். இப்பொழுது வந்தால் அவள் சினம் தணிவள். யாமும் புன்னகை முகத்தைக் காண முடியும்.’ எனத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் ‘வாளை ஈர்ந்தடி வல்லிதின் வகைஇ ......... முறுவல் கொண்ட முகங்காண் கம்மே’ (நற் -120:5-12) என்புழி, விருந்தினருக்காகச் சமைத்தலும் தலைவன்மேல் கோபமிருந்தும் அதனை விருந்தினர்முன் காட்டாத பண்புடையவளாய் தலைவி இருத்தலும் அறியமுடிகிறது. இந்நிலையில் தலைவி இன்னகையுடன் விருந்து உபசரிப்பைப் பேணுகிறாள். இங்கு,

*“மோப்பக் குழையும் அனிச்சம் முகத்திரிந்து*

*நோக்கக் குழையும் விருந்து”*[60]

என்பதை அறிந்து இல்லறம் பேணுபவளாகத் தலைவி இருப்பதை உணரமுடிகிறது. விருந்தினர் வருகையால் தலைவியின் இன்முகத்தைக் கண்டு மகிழலாம் எனத் தலைவன் மகிழ்ந்து கூறுவதும் அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இல்வாழ்க்கை சிறப்புக் கண்டு மகிழ்தல்**

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவன் விருந்தினரொடு வர தொலைவில் பார்த்த தலைவி புன்சிரிப்பொடு முகமலர வரவேற்றாள். இவ்வாறு தான் இல்லாத நிலையிலும் தலைவியின் இல்லறம் பேணும் சிறப்பைக் கண்டு தலைவன் மகிழ்ந்துரைத்தல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த ‘விருந்து வாயிலாகப் புகுந்த தலைமகன் தலைவியது இல்வாழ்க்கைச் சிறப்புக் கண்டு மகிழ்ந்து சொல்லியது’ என்னுந் துறைக்குறிப்பிற்கு ‘இருங்கழிச் சேயிறா யினப்புள் ளாரும்’ எனத் தொடங்கும் ஐங்குறு -188ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘பறவையின் பெரிய கழியிலுள்ள இறா மீன்களைக் கவர்ந்து உண்ணுதற்கு இடனான பாண்டியனின் கொற்கைப் பட்டினத்தில் அமைந்த அழகிய நீரோடு துறையின்கண் வைகறைப் பொழுதில் மலரும் நெய்தல் மலரைப் போன்று அழகுடையன எம் காதலியின் கண்கள்’ எனத் தலைவன் பாராட்டியுரைக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலின் பொருண்மையைக் குறிப்புப் பொருண்மையாகக் கொள்ளும் பொழுது,‘இருங்கழிச் சேயிறா இனப்புள் ளாரும்’ (ஐங்குறு -188:1) என்புழி, தலைவி இல்லில்,*“விருந்தினர் யாருந் தடையின்றிப் புகுந்து தத்தம் வேண்டிய உணவு முதலியவற்றை யுண்ணும்படியாக இல்லறம் நிகழ்த்துகின்றாள்”*[61] எனப் பெருமழைப்புலவர் உரைப்பர். இதன்வழித் தலைவியின் செயல்திறம் கண்ட தலைவன் உவந்துள்ளமைப் புலப்படுகிறது. ‘வைகறை மலரும் நெய்தல் போலத் தகைபெரி துடைய காதலி’ (ஐங்குறு -188:3-4) என்புழி,‘விருந்தினரைக் கண்ட போதே முகமலரும் இயல்பினள் தலைவனின் தவறினைப் பொருத்துக்கொள்ளும் தகைமைப் பெற்றவள்’ என்பதும் அறிய முடிகிறது. இப்பாடற்கு ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை மொழியும் விளக்கவுரையும் இத்துறையினை விளம்பும். இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**புலவி, ஊடல், துனி**

கற்புக் காலத்தில் தலைமக்களிடையே ஏற்படும் சிறுசிறு பிணக்குகளை ‘ஊடல்’ என்ற சொல்லால் குறிப்பர். இதற்குக் காரணமாகத் தலைவனின் பரத்தமை ஒழுக்கம் அமைகிறது. இவ்வூடலைப் ‘புலவி, ஊடல், துனி’ என்றப் பெயராலும் குறிப்பிடுவர். புலவி என்பது மனதளவில் வெறுத்தல். ஊடல் என்பது மனத்தின்கண் நின்ற வெறுப்பை குறிப்பு மொழியாளன்றி, கூற்று மொழியாலும் புலப்படுத்துதல். ஊடலின் முதிர்ச்சியே துனி. இத்துனியை துன்பம் என்றும் குறிப்பிடுவர். இவ்வூடல் பொருண்மையில் தலைவன் கூற்றில் எட்டுப் பாடல்கள்[62] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளை ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவி ஊடலை வெளியிடா நிலையைத் தலைவன் அறிந்திருத்தல்

- தலைவியுடனான இன்பமான சூழலை உருவாக்க எண்ணுதல்
- கூடல் இனிமையென உணர்த்தி நிற்றல்
- தன் தவறின்மையை உணர்த்த முயலல்
- புலவி நீங்கி இனிதிருக்க வேண்டுமென தலைவன் கவன்ற நிலை

என்பன அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின்,'வாயில் மறுத்தலில் நிகழ்ந்தது நினைத்தல்' முதல் 'புலவி நீக்கிப் புனலாட வாருமெனல்' வரையிலான ஐந்து துறைகளாக வகைப்படுத்த இயலும்.

**வாயில் மறுத்தலில் தலைவன் (முன்பு நிகழ்ந்தது கூறல்)**

வாயில் வேண்டிய தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தனள். அந்நிலையில் அவன் முன்னர் தலைவியுடன் மகிழ்ந்திருந்த நிகழ்ச்சிதனை நினைவு கூர்ந்து அவளுக்குச் சொல்லுவது **'முன்பு நிகழ்ந்து கூறல்'** துறையாகும். வாயில் மறுத்தல் பொருண்மையில் தலைவன் பேசுமிடமாக ஒரு பாடல் (அகநா -86) மட்டும் காணப்படுகிறது. 'வாயில் மறுத்த தோழிக்குத் தலைமகன் சொல்லியது. தலைமகளைக் கூடி இன்புற்றிருந்த தலைமகன் பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்ததூஉம்ஆம்' என்ற துறைக்குறிப்பிற்கு 'உழுந்து தலைப்பெய்த கொழுங்களி மிதவை' எனத் தொடங்கும் அகநா -86ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'வாயில் மறுத்த தோழிக்குத் தங்களின் மணநாள் நிகழ்வைத் தலைவன் கூறும் பொருண்மை கொண்டது. இங்கு மணநாள் நிகழ்வு விரிவாகக் குறிப்பிடப்படுகிறது. இப்பாடலுக்கு இரு துறைக்குறிப்புகள் உரைக்கப்பட்டுள்ளன. முன்னது வாயில் மறுத்த தோழிக்கும், பின்னது தலைவியுடன் மணமுதல்நாள் நிகழ்வின் மகிழ்ச்சி கூறி மகிழ்தலுமாக அமைகிறது. இப்பாடலின் பொருண்மை மணநாள் நிகழ்ச்சியைத் கூறுவதாக அமைந்திடினும் கேட்போர் யார் என்ற வினாவின் விடையினில் துறைக்குறிப்பின் பொருண்மையின் தெளிவு வெளிப்படும். இப்பாடலின்,

'கனையிருள் அகன்ற கவின்பெறு காலை
கோள்கால் நீங்கிய கோடுவெண் திங்கள்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென' (அகநா -86:5-7)

என்புழி,'முன்பு நிகழ்ந்ததைத் தலைவி அல்லாத ஒருவரிடம் கூறுவதாக அமைந்துள்ளமைப் புலப்படுகிறது. அகநா -86:21-29 என்ற இவ்வடிகளை நோக்கின்

தனக்கும் தலைவிக்கும் நிகழ்ந்ததனை, தலைவியின் மடமைத் தன்மையைத் தோழியிடம் வினாவுவதும் புலப்படுகிறது. ‘ஒடுங்கினள், அஞ்சினள், உவகையள்’ என்ற சுட்டுச் சொற்கள் ‘தலைவியைக் குறிப்பதாகவும்,‘நின் நெஞ்சம் நினைத்ததை மறைக்காமல் உரைப்பாயாக என யான் வினவினேன்’ என்பது, தலைவியுடன் பேசியதைத் தோழியிடம் மொழிவதாக அமைவது புலப்படுகிறது. இச்சொற்களைத் தலைவன் தனக்குள்ளே கூறிக்கொண்டானா? என்பது சிந்திக்கத்தக்கது. நா. செயராமன் *“ஒரு பாடல் (அகநா -86) தலைவன் தனது முதலிரவு நிகழ்ச்சியை நினைந்து கூறியதாக அமைந்துள்ளது. அப்பாடலுக்குத் தலைமகளைக் கூடி இன்புற்று இருந்த தலைமகன் பண்டு நிகழ்ந்தது சொற்று இன்புற்றிருந்தது என்ற துறைக்குறிப்புப் பொருத்தமாக உள்ளது. ஊடல் குறிப்போ பரத்தமை குறிப்போ இல்லாத இப்பாடலுக்கு வாயில் மறுத்தல் என்னும் சூழலில் தோழியிடம் தலைவன் கூறுவதாகக் கொள்வது பொருத்தம் இல்லை”*[63]என உரைப்பர். எனினும், தலைவன் தலைவி எம்மேல் மிகுந்த காதலுடையவள். ஆதலின் அவள் துயர் நீங்கி நாங்கள் மகிழ்தல் பொருட்டு,‘நீ வாயில் நேர்தல் வேண்டுமெனத் தலைவன் கேட்பதைக் குறிப்பெச்சமாகக் கொள்ள முடிகிறது. இந்நிலை நோக்கின், இப்பாடல் முதல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் புகுந்த பின்னும் ஊடல்**

வாயில்கள் வாயில் நேரமுடியாதநிலையில், தலைவன் தானே தன் இல்லில் நுழைதல் வாயில் புகுதலாகும். அவ்வாறு புகுந்த பின்னும் தலைவன் ஊடல் நீங்காதிருக்கும் நிலையில் தலைவன் கூற்று நிகழும்.

**ஊடல் நீட ஆற்றானாய தலைவன் கூறியது**

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவனுடன் தலைவி ஊடியிருந்தாள். அதனால் உடன்வந்த பாணனிடம் தான் தலைவியுடன் முன்பு கூடியிருந்த இன்பநிலையை எடுத்துக்கூறி அத்தகைய தலைவி இன்று ஊடியிருக்கிறாள் என நொந்து கூறுதல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த,‘ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது. முன் நிகழ்த்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉம் ஆம்’ என்ற துறைக்குறிப்புகளுக்கு ‘வாராய் பாண நகுகம் நேரிழை கரும்புடைக் கடுஞ்சூல்

நம்குடிக் குதவி' எனத் தொடங்கும் நற் -370ஆம் பாடல் அமைகின்றது. இப்பாடல்,'பாணனை நோக்கி,'எம் தலைவியின் தலை பிரசவத்தின்போது, யான் அவளிடம் என் அன்பைப் புலப்படுத்தினேன். அது கண்டு நாணி வெட்கிக் கண்புதைத்ததாள். ஆனால் இப்பொழுது என்மீது ஊடி முகம் சிவந்து நோக்குவதைக் காண்பாயாக' என நகைத்து தலைவன் நொந்து கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலின் பொருண்மை முன்னைய நிகழ்ச்சியைப் பாணனிடம் தலைவன் நொந்து நகைப்புடன் கூறுதலைச் சுட்டுகிறது. முதல் துறைக்குறிப்பில் தலைவி ஊடிய குறிப்புக் காணப்படுகிறது. பாணன் ஊடல் நேரங்களில் உதவ முன்வரக் கூடிய வாயில் எனக் கொள்ளின், இத்துறைக் குறிப்புகள் மற்றும் பாடலின் பொருண்மைகள் ஒன்றிக் காணப்படுகின்றன.

*"இப்பாட்டுக்குப் பின்னத்தூர் நாராயணசாமி ஐயர்,இ.ஃது ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது, முன் நிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉமாம்" என்று இரண்டு கிளைவிகளைக் குறிப்பர். இரண்டு கூற்றிலும் கூறுபவன் தலைவன், கேட்பவன் பாணன். முதல் துறையில் தலைவி ஊடிய குறிப்பு உள்ளது. ஆனால் பாட்டில் குறிப்பெச்சமாக ஊடியமை வருவித்து உரைக்கப் பெறுகிறது. இரண்டாவது துறைக்குறிப்பே இதற்கு நன்கு பொருந்துவதாகும்"*[64] என உரைப்பார் சி.சிதம்பரம். எனினும் இப்பாடல் முதல் துறைக்குறிப்புக்கு குறிப்பெச்சமாகவும் இரண்டாம் துறைக்குறிப்புக்கு நேரடியாகவும் ஒன்றியமைகிறது. இப்பொருண்மைக்கேற்ப ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை,*"இ.ஃது ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியது"*[65] என்பர். ஏனைய துறையாசிரியர்கள் கூறிய இரண்டு துறைகளையும் ஒன்றாக்கிக் குறிப்பிடுவர். இத்துறைக்குறிப்பு பாடலின் (நற்.-370) பொருண்மையை முழுமையாகப் பிரதிபலிக்கும். இதனை அவர் அந்நூலின் அடிக்குறிப்பில் *"அச்சுப்பிரதியில் இது "ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் பாணற்குச் சொல்லியது என்றும் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியதூஉமாம் என்றும் இரண்டுபட்டுக் கிடக்கிறது"*[66] என்று இத்துறைக்குறிப்புகளுக்கு விளக்கம் தருகிறார்.

**உணர்ப்புவயின் வாரா ஊடலில் அழிந்து கூறல்**

தலைவன் தெளியச் செய்யவுந் தெளியாத ஊடல் உணர்ப்புவயின் வாரா ஊடலாகும். ஊடியிருக்கும் தலைவியைக் கூடும் நோக்கம் கொண்டு வந்த தலைவனிடம் முகம் பாராதிருந்தாள். அதனால் தலைவன் வருத்தித் தன்னெஞ்சிற்குச் சொல்லியது என்பது இத்துறையாகும். இத்துறையிலமைந்த அகநா -126ஆம் செய்யுட்கு ‘உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியது. அல்ல குறிப்பட்டழிந்தூஉமாம். தோழியைப் பின்னின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம்.’ என மூன்று துறைக்குறிப்புகள் துறையாசிரியர்களால் குறிப்பிடப்பட்டுள்ளன. துறைக்குறிப்புகளில் முதல் துறைக்குறிப்பு கற்பாகவும், மற்ற இரு துறைக்குறிப்புகள் களவாகவும் அமைந்துள்ளன. இவை தலைவன் தன் நெஞ்சினை முன்னிறுத்தி தலைவி காரணமாகத் தனக்கேற்பட்டுள்ள துயரை வெளிப்படுத்துவதாக அமைகிறது. *“தலைவன் தன் துயரை எடுத்துப்பேசுதல்,‘தலைவி ஊடல் தணியாத போது, தலைவியைக் குறித்த இடத்தில் சந்திக்க முடியாத போது, தலைவி தன் காதலை ஏற்க வேண்டும்போது’ என்ற மூன்று சூழல்களில் வெளிப்படும்,“இம்மூன்று சூழல்களுக்கும் பொருத்தமாக அமைந்து இருப்பதால் மூன்று துறைக்குறிப்புகள் கூறப்பட்டுள்ளன”*[67] என்பர் நா.செயராமன். வ.சுப. மாணிக்கனாரோ,*“உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன்நெஞ்சிற்குச் சொல்லியது (கற்பு).அல்ல குறிப்பட டழிந்த தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம் (களவு).தோழியைப் பின்னின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதூஉமாம் (களவு)என மூன்று துறைகள் 126 –ஆம் அகப்பாட்டுக்கு உண்டு. முதலில் நிற்கும் துறையே அப்பாட்டின் துறையெனத் தழுவித் கொண்டேன்”*[68] என்பர். இவர்களின் கூற்றுக்களின் வழி இத்துறைக்குறிப்புகளை ஆராயின் இப்பாடலை மேலும் உற்றுநோக்கும் தன்மையில் உள்ளதெனப் புலப்படுகின்றது.

இப்பாடலின் முதற்துறைக்குறிப்பு ‘உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன்நெஞ்சிற்குச் சொல்லியது’ எனக் கற்புக்கால ஊடலைக் குறிப்பிடுகின்றது. அதாவது கற்புக் காலத்தே தலைவி தலைவனுடன் ஊடியிருந்தாள். தலைவன் தான் தவறிலன் என அவள் ஊடல் தீர்க்கப் பணிவைப் புலப்படுத்தும் மொழிகள் பலவற்றையும் பலகால் கூறா இரந்தான். இரந்தும் தேறாளாய் பின்னும் ஊடினாள். அப்பொழுது தலைவன் தன்னெஞ்சை நோக்கி வருந்திக் கூறியது. இப்பாடலில் 17-22 மற்றும் 1-2 என்ற அடிகளை இணைக்கும்பொழுது இத்துறைக்கான பொருண்மைப் புலப்படும். ‘செவ்வாயினையும்,

போரிடும் மையுண்ட கண்களையும், ஐந்து பகுப்புகளையுடைய கூந்தலையும், மின்னலையொத்த இடையினையுமுடைய இளைய தலைவியின் பின்னே தாழ்ந்து நிற்றலை விடாத அறியாமை மிக்க நெஞ்சே, நீ நின் எண்ணங்களை உண்மையானவை எனக் கருதி, பலவும் எண்ணி மிகப்பெரிய துன்பத்தினையுடையாய் வருந்துதல் அன்றியும், அன்னி என்பானைப் போல் இரந்துபடுவாய்' என அமைந்துள்ளது. இங்கு தலைவியின் ஊடலைத் தணிக்க இயலாத தலைவனின் தன்னிரங்கல் புலம்பலாக வெளிப்படுகிறது. '........ குறுமகள் பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே' (அகநா -126:21-22) என்புழி, தலைவன் தலைவியிடம் பலகால் இரந்து வேண்டியமையைத் தன்னெஞ்சிற்கு உரைத்ததை உணரமுடிகிறது. இப்பாடலில் உள்ளுறையாக 'எவ்வியின் நலம்புரி நன்மொழிகளுக்கும் செவிசாயா அன்னி என்பான், திதியனின் புன்னைக்கு வெ.ஃகி அவனொடு போரிட்டு இறந்தது' கூறப்படுகிறது. இந்த உள்ளுறை உவமையை,

| எவ்வி | - | அன்னி | - | திதியன் | - | பொன்னினர் புன்னை |
|---|---|---|---|---|---|---|
| ⇩ | | ⇩ | | ⇩ | | ⇩ |
| தலைவன் | - | தலைவனின் மனம் | - | ஊடல்கொண்ட தலைவி | - | தலைவியால் கிடைக்கப்பெறும் கூடல் இன்பம் |

என மருத நிகழ்வோடு பொருந்திக் காண்புழி, துறைக்குறிப்பின் பொருத்தப்பாட்டினை அறியமுடிகிறது.

- தலைவயின் அழகினைக் கூறுமிடத்து களவுபோல் தோன்றினும், உள்ளுறை உவமையை நோக்குமிடத்து கற்பாகப் புலப்படுகிறது. தலைவியின் நலம்பாராட்டல் என்பது இருவகைக் கைக்கோளுக்கும் பொதுவானது.
- தலைவி ஊடினால் என்பது பாடலடியிலில்லை. இதனைத் தலைவனின் இரங்கல் மொழியிலிருந்து பெறப்படும் குறிப்பெச்சமாகவே கொள்ள முடிகிறது.

இப்பாடலின் இரண்டாம் துறைக்குறிப்பு 'அல்லகுறிப்பட்டதுமாம்' என அமைகிறது. பாடலில் அல்லகுறிப்பட்டதற்கான அடிகளில்லை. 'மலைமிசைத் தொடுத்த மலிந்துசெலல் நீத்தம், தலைநாண் மாமலர் தண்டுறைத் தங்கக், கடற்கரை மெலிக்குங் காவிரிப் பேரியாற்றி' (அகநா -126:3-5) என்னுமடிகள் அல்லகுறிபோல் தோன்றினாலும் தலைவனின் இரங்கலைச் சுட்டுவதற்காகப்

புலவரால் கையாளப்பட்ட செய்யுட்திறனாகவே கொள்ளமுடிகிறது. இதனை நோக்கின் இத்துறைக்குறிப்பின் பொருண்மையுடன் இப்பாடல் பொருந்தாத் தன்மையுடன் அமைவதை அறிய முடிகிறது.

இப்பாடலில் மூன்றாம் துறைக்குறிப்பாகத் ‘தோழியைப் பின்னின்ற தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியதுமாம்’ என அமைந்துள்ளது. அதாவது, களவில் தோழி அருகில் இருக்க அவட்குக் கேட்கும்வண்ணம் அண்மைச் சொற்களில் தன் நெஞ்சிற்குக் கூறியது எனக் கொள்வோமானால், அதன் பயன் தோழி தலைவியைத் தன்னுடன் கூட்டுவிப்பாள் என்னும் விருப்பு.

எவ்வி அன்னியிடம் நன்மொழிகள் கூறுவதாக அமைந்துள்ள உள்ளுறையை நோக்கின், தலைவன் தலைவியிடமே பலவாறு இரந்துரைப்பதாக அமைந்துள்ளது. இங்கே தோழி இருப்பதற்கான குறிப்புகள் இல்லை. எனவே, தலைவன் பின்னிற்றான் என அமையும் இத்துறைக்குறிப்பு இப்பாடலுக்குப் பொருத்தப்பாடாக அமையவில்லை. தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறுவது இருவகைக் கைகோளிற்கும் பொதுவெனினும், தலைவியிடம் பலகாறும் இரந்து கூறல் கற்பென்றே கொள்ள முடியும். இதனையே தன் நெஞ்சிற்குக் கூறுகிறான்.

இப்பாடலுக்கான மூன்று துறைக்குறிப்புகளில் முதல் துறைக்குறிப்பு மட்டும் பொருந்துவதாக வ.சுப. மாணிக்கனாரும், மூன்று துறைக்குறிப்புகளும் பொருந்துவதாக நா.செயராமனும் விளம்பியுள்ளனர். இவற்றில் முன்னவரின் கூற்றாக அமைந்த ‘உணர்ப்புவயின் வாரா ஊடற்கண் தலைமகன் தன் நெஞ்சிற்குச் சொல்லியது’ என்ற துறைக்குறிப்பு பொருத்தமாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

**பிரிவு**

களவுகாலப் பிரிவுகளை விரும்பி ஏற்காத தலைவன், கற்புகாலப் பிரிவிற்குக் கடமையை முன்னிட்டுக் கருத்தொருமிக்கிறான். தலைவனின் இப்பிரிவுகளின் ஆற்றாதொழியும் தலைவியின் எண்ணமே செயலில் செம்மையையும் விழைவையும் நிகழ்த்தும். பிரியும் தலைவன் தன் பிரிவை, குறிப்பாலும் கூற்றாலும் புலப்படுத்துவான். குறிப்பால் தலைவி, தோழி ஆகிய இருவருக்கும், கூற்றால் தோழிக்கும் புலப்படுத்துவான். பிரிவிற்குத் தலைவி உடன்பட வேண்டுமென, தோழியிடம் வேண்டுவது தொடங்கி வந்தபின் இருவரும் இனிதிருத்தல் வரையாகப் பலநிகழ்வுகளில் தலைவன் மொழியலுறுவான். இம்மொழிகளில் தலைவியின் மீதுள்ள தலைவனின் ஆழ்காதலும் இல்லற மேன்மை போற்றும் கடமையுணர்வும்

மேலோங்கி இருக்கும். இப்பொருண்மைகளில் அமைந்த சங்க இலக்கியங்களில் தலைவன் கூற்றில் 151 பாடல்கள்[69] காணப்படுகின்றன. இப்பாடல்களில் கடல்வழிப்பிரிவு (அகநா -34) தூதிற் பிரிவு (அகநா -54) போர்ப்பிரிவு நற் -341: ஐங்குறு -426, 429, 441-450, 477, 479, 480: அகநா -24, 44, 84, 124, 164, 174, 204, 214, 254, 304, 334, 374:) என்பன போக எஞ்சிய பாடல்கள் பொருள்வயிற் பிரிவுப் பாடல்களாக (125) அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மையை நோக்கின் பின்னணிச் சூழல்களாக,

- சுரத்தருமை கூறி மறுத்துக் கூறும் நிலையில் எண்ணுதல்
- மீள முடியா நிலைகண்டு தலைவன் வருந்துதல்
- தூதின் வாய்மொழி கேட்க விழைதல்
- பிரிந்துறையும் நிலையிலும் தலைவியின் நலம் பேணல்
- தலைவனின் மனம் தலைவியைக் காணும் ஆவலிலிருத்தல்
- தூது விடுதல்
- தலைவியின் ஆற்றாமையைப் போக்க, தலைவன் விரைந்து வர எண்ணுதல்
- வந்த வழியின் நிலையும் தலைவியின் நினைவும் கூறுதல்
- தலைவியின் இல்லொழுக்கம் கண்டு மகிழ்ந்துரைத்தல்
- தோழியிடம் உரையாடுதல்
- இடைச்சுரந்தன்னில் தன் மனவுணர்வைப் புலப்படுத்துதல்

என்பன அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை நோக்கின்,'உடன் வரும் என்றாற்குக் கூறல்' முதல் 'எம்மையும் நினைத்தீரோ என்றாட்குத் தலைவன் உரைத்தல்' வரையிலான பதினொரு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பருவங் கண்டழிதல்**

பொருள்வயிற் பிரிந்து சென்ற தலைவன் 'இளவேனிற் காலத்தில் வருவேன்' எனக் கூறிச் சென்றான். வினை முடியாமுன் கூறிய பருவம் வந்தது கண்ட தலைவன் இப்பருவங்கண்டு தலைவி ஆற்றாதொழிவாள் எனத் தலைவியின் நிலையை எண்ணி மனமழிதல் இத்துறையாகும்.

ஐங்குறுநூற்று 'பாசறைப் பத்து' பாடல்களில் அனைத்தும், வினைமுடியாநிலையில் பருவகாலம் வந்த விடத்து, தலைவியின் ஆற்றாமையைப் பிறர் கூற அறிந்தும், தான் ஊகித்தறிந்தும் உணர்ந்து தலைவன் ஆற்றாமை கொள்ளும் பொருண்மை கொண்டன. 'புகழ்சால் சிறப்பிற் காதலி புலம்பத்'

(ஐங்குறு -445) என அமையும் பாடலில்,'நெஞ்சமே காதலி புலம்ப, அவளைப் பிரிந்து வந்தன. இப்பொழுது நீ புலம்பி வருந்துவது எத்தன்மையது எனத் தலைவன் தன் நெஞ்சோடு புலந்து கொள்ளும் தன்மை நோக்கின், பாசறைக்கண் இருந்த தலைமகன் பருவவரவின்கண் தலைமகளை நினைந்து நெஞ்சொடு புலந்து சொல்லியது' என்ற துறைக்குறிப்புடன் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இத்துறையிலமைந்த 'இது பாசறைக்கண் இருந்த தலைமகன் பருவவரவின்கண் உருவு வெளிப்பாடு கண்டு சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,'முல்லை நாறுங் கூந்தல் கமழ்கொள'(ஐங்குறு -446) எனப் பாடல் அமைகிறது. இப்பாடல்,'வினைமுடிந்த பொழுது கார்காலம் தொடங்குகிறது. அப்பருவத்தில் முல்லையின் மணங்கமழும் கூந்தலை உடைய தலைவியின் நினைவு சிந்தையில் உறைய, அவளின் உருவம் வெளிப்பட்டு தோன்றியது. அவ்வுருவிடம் தலைவன் தன் மனவுணர்வைப் புலப்படுத்தும் பொருண்மை கொண்டது. இப்பாடலின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இடைச்சுரத்து அழுங்கல்**

தலைவியை இல்லத்தில் விட்டுப் பொருள்வயிற் பிரிந்தான் தலைவன். இடைச்சுரத்து, தலைவியின் நினைவுவர மருண்டு தன் நெஞ்சத்து அழுங்கிக் கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பொருள் முடியா நின்ற தலைமகன் ஆற்றானாகிச் சொல்லியது' என்ற துறைக்குறிப்பிற்கு 'புறந்தாழ் யிருண்ட கூந்தல் போதின்' எனத் தொடங்கும் நற் -284ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் 'உள்ளம் பிணிக்கொண் டோள்வயின் நெஞ்சம் செல்லல் தீர்கம் செல்வம்' என்னும் ........... உறுதி தூக்கத் தூங்கி அறிவே'(நற் -284:3-7) என்புழி, தலைவனின் நெஞ்சமும் அறிவும் வேரூன்றி வெவ்வேறான நிலை கொண்டவிடத்து தலைவன் தலைவியுடன் இல்லை என்பதும், திரும்பவும் முடியாமல், செல்லவும் இயலாமல் இடையில் நின்று தவிப்பதும் புலப்படுகிறது. இப்பாடலில் வரும்,'........... களிறு மாறு பற்றிய தேய்புரிப் பழங்கயிறு போல வீழ்வது கொல்என் வருந்திய உயிரே'(நற் -284:9-11) என்னும் உவகையும், தலைவனின் மனப்போராட்டத்தை விளம்புவதுடன் அப்போராட்டத்தினால் உண்டான உள்ளச்சோர்வையும் அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும்

பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இத்துறையின் பொருண்மையை நோக்கின்,

*"கிழவி நிலையே வினையிடத் துரையார்*

*வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்"*[70]

என்னும் தொல்காப்பியர் கொள்கைக்கு மாறாக அமைந்தது போல் தோன்றும். ஆய்ந்து நோக்கின் வினை, போர் மேற்கொள்ளும்போது வினைக்கு இடையூறு ஏற்படும் வண்ணம் தலைவியை நினைத்துப் புலம்பியதாக அமையபெறவில்லை. மாறாக குறித்துச் சென்ற வினைமுடிந்தபின் மற்றொரு வினைக்காகக் காத்திருந்த நிலையிலும், ஓய்வு நேரமான மாலைப் பொழுதிலும், தலைவியை நினைத்து ஆற்றாமை கொள்வதாகப் பாடப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**வினைமுற்றி மீளல் :**

கற்பில் பொருள், போர்வயிற் பிரிந்த தலைவன் வினையினைச் செவ்வனே செய்து முடித்து தலைவியைக் காண வருதல் 'மீளல்' துறையாகும். இத்துறையில் ஐம்பது பாடல்கள்[71] காணப்படுகின்றன. இவற்றில் நெய்தல் திணையில் ஒரு (நற் - 106) பாடலும் பாலைத் திணையில் மூன்று (குறுந் -189, 250: அகநா -9:) பாடல்களும் தவிர்த்து ஏனைய பாடல்கள் முல்லைத் திணையில் அமைகின்றன. இதனை நோக்க,*"தலைமகன் பாசறைக்கண் தலைவியது பிரிவை ஆற்றியிருத்தலும் தலைமகள் தலைவன் பிரிவை ஆற்றி மனைக்கண் இருத்தலும் உரிய பொருளாய் முல்லைத்திணைக் குரியவாயின"*[72] என்பதனொடு,'செலவு மேற்கொண்டான் வினைமுடித்து தலைவியைக் காணும் வேணவா மிகுதியை ஆற்றி வருதலும் முல்லைக்கு உரியவாய் அமையும்' என்பதும் தெளிவுறுகிறது. இப்பாடல்களில் 47 பாடல்கள்[73] முல்லைக்குரியனவாக வரையறுப்பர் நா.செயராமன். இவற்றில் இரு பாடல்கள் களவுப் பிரிவுக்கு (குறுந் -233, 235) உரியன. எனினும் இப்பகுப்பில் களவுப்பாடல்கள் நீங்லாக நாற்பத்தெட்டுப் பாடல்கள் காணப்படுவதை அறியமுடிகிறது. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு 'தான் தலைவியைக் காண விரைந்து செல்கவென உரைத்தல்' முதல் 'தேர்ப்பாகனைப் பாராட்டல்' வரையிலான பன்னிரண்டு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**மகன் வரவேற்கும் நல்லுரை கேட்க விரைகவெனல்**

வினைமுற்றி மீளும் தலைவன் தன் மகன் தன்னை வரவேற்கும் இனிய மொழியினைக் கேட்க விரைந்து செல்க பாகனே என உரைக்கும் பொருண்மை கொண்டது இத்துறையாகும். இத்துறையில்,'வினைமுற்றி மறுத்தராநினற தலைமகன்

பாகற்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,'மணிகண் டன்ன மாநிறக் கருவிளை' எனத் தொடங்கும் நற்றிணை -221ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் 'செல்க பாகநின் செய்வினை நெடுந்தேர் விருந்து விருப்புறுஉம் பெருந்தோட் குறுமகள்' (நற் -221:7-8),'நடைநாட் செய்த நவிலாச் சீறடிப் பூங்கட் புதல்வன் உறங்குவயின் ஒல்கி வந்தீக எந்தை என்னும் அம்தீம் கிளவி கேட்கம் நாமே' (நற் -221:10-13) என்புழி, தலைவியின் விருந்தயரும் விருப்பினைக் காணவும், புதல்வனின் நல்லுரை கேட்டு மெய் மறக்கவும், பாகனே நீ தேரினை விரைந்து செலுத்துவாயாக! எனத் தலைவன் மொழிவது துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றி அமைகிறது. இத்துடன் இப்பாடலில் அமைந்த கருப்பொருட்களின்வழி,'கருவிளைக்கொடி காந்தளுடன் புதரில் அழகு செய்தலை,'தலைவி, மகனுடன் அழகு பொலிய முகமலர்ச்சியுடன் இருப்பாள்' எனவும், சுரக்கொன்றையின் பூங்கொத்துக்கள் நறுமணம் பரப்புதலை, தலைவனின் வரவு தாய் சேய் இருவருக்கும் இனிய மகிழ்ச்சி ஆரவாரத்தைப் பெருகச் செய்யும் எனவும், துறைக்குறிப்பின் பொருண்மைக்கேற்ப உய்த்துணர முடிகிறது.

**தலையளி செய்தல்**

வினைமுற்றி மீண்ட தலைவன் தனக்கு உற்றுழி உதவிய தேர்ப்பாகனைப் பாராட்டுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வினைமுற்றி வந்த தலைமகன் தேர்ப்பாகனைத் தலையளித்தது' என்ற துறைக்குறிப்பிற்கு குறுந் -400ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில், முதல் இரு அடிகளில்,'கடந்து செல்லும் வழி நீண்டதாக அமைந்து உள்ளது எனவும் தலைவியின் துன்பத்தைப் போக்க முடியாது என்று தலைவன் வருத்தம் கொண்டான்' என்பதும் புலப்படுகிறது. 3-5 அடிகளின்வழி தலைவன் தலைவியின் துயர் போக்குவதற்காகப் பாகன் மேற்கொண்ட செயல் திறத்தையும் தெளிவுபடுத்துகிறது. 5-7 அடிகள் தேர்ப்பாகன் செய்த பேருதவிக்கு அவனைத் தலைவன் பாராட்டியதும் அவன் உதவியினால் பெற்ற நன்மையையும் தலைவன் கூறுவது அறியமுடிகிறது. புதுவழிப் படுத்த மதியுடை வலவோய்' என்புழி, தலைவன் தேர்ப்பாகனைப் பாராட்டு மொழிகளாகவும் தேர்ப்பாகனைச் சுட்டும் சொல் முன்னிலை அண்மைச்சொல்லாக அமைவதும் அறியப்படுகிறது. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள்ளும் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தொகுப்புரை**

சங்ககால மக்கள் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வுகளையும் தொகுத்துரைக்கும் வாழ்வியல் பெட்டகமாகச் சங்க இலக்கியங்கள் அமைகின்றன. ஒவ்வொரு நிகழ்வுகளுக்குள்ளும் பல சிறுசிறு நிகழ்ச்சிக் கூறுகள் நிறைந்திருக்கும். அவ்வகையில் சங்க அகப்பாடல்கள் களவு, கற்பு என்ற இருவகைக் கைகோள்களைக் கொண்டுள்ளன. அவற்றில் தலைவன் கூற்றுப் பொருண்மையில் இயற்கைப்புணர்ச்சி முதல் வரைவு வரையிலான முதன்மைத் துறைகள் களவுத் துறைகளாகவும், மலிவு முதல் பிரிவு வரையிலான முதன்மைத் துறைகள் கற்புத் துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. அத்துறைகளில் அமைந்த உட்துறைகளின்கீழ் அப்பாடல்களின் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மைகள் ஆராயப்பட்டுள்ளன.

எத்தகைய செயலையும் தலைமை தாங்கிச் செய்து முடிக்கும் இயல்பு கொண்ட தலைவன் தன் உள்ள உணர்வான காதலையும் தன் இல்லம் சிறக்க வருவாளென உள்ளம் உரைப்பாளிடம் தானே முன்மொழிகிறான்.

தலைமக்கள் இருவரும் முதன்முதலில் காதற் குறிப்புடன் நோக்குதல் இயற்கைப்புணர்ச்சித்துறையாகும். இம்முதன்மைத் துறையில் அமைந்த உட்துறைகளில் அமைந்த பாடல்கள் அவற்றின் துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் அமைந்து துறையை விளக்குகிறது. இங்கு தலைவனின் இல்லறச் சிந்தனை வெளிப்படுவது சுட்டியுரைக்கப் பெற்றுள்ளது. தொல்காப்பியத்தில் சுட்டப்பெறாத ‘அருமையறிதல்’ என்னும் கலைச்சொல் துறையாக அமைத்துக் கொள்ளப்பட்டுள்ளது. இத்துறை இறையனார் அகப்பொருளிலிருந்து பெறப்பட்டது.

கருத்தொருமித்த காதலர்கள் தம் காதலின் நிலைப்புத் தன்மையை உறுதி செய்யும் துறையாக இடந்தலைப்பாடு அமைகிறது. இத்துறைக்கு மூன்று பாடல்கள் எனத் தமிழ் இலக்கிய அறிஞர்கள் மொழிவர். எனினும் இப்பொருண்மையில் நான்கு பாடல்களுடன்(குறுந் -62, 70: ஐங்குறு -281 288:) சேர்த்து ஏழு பாடல்களும் மூன்று உட்துறையில் அமைந்து ஆராயப்பட்டுள்ளன. இங்கு இலக்கணங்களில் இப்பகுதியில் சுட்டப்படாத அஃறிணைகளை வாழ்த்துதல் பொருண்மையில் ‘மகிழ்தல்’ என்னும் உட்துறையும் மொழியப்பட்டுள்ளனது. இத்துறையிலமைந்த பாடல்களும் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றி, துறையை விளக்குவது குறிப்பிடப்பட்டுள்ளன.

தலைவன் தன் காதலுக்குப் பாங்கனைத் துணையாகக் கோடல் பாங்கற் கூட்டமாகும். இம்முதன்மைத் துறையில் 28 பாடல்கள், அதன் துறைக்குறிப்புவழி

ஆராயப்பட்டுள்ளன. பெட்ட வாயில் துறைப் பாடல்களையும் (குறுந் -222, 271) சேர்ந்து பாடற்பொருண்மை நோக்கப்பட்டுள்ளன. பாங்கற் கூட்டத்தின் இறுதியில் 'தோழியுடன் வருக' என்ற தலைவன், வந்த தோழி தனக்குதவும் மனநிலைக்கு மாற்றுதல் மதியுடம்பாடாகும். இப்பொருண்மையில் நான்கு பாடல்கள் உள்ளன. தொல்காப்பியர் குறிப்பிடும் 'இருவரும்உள்வழி அவன் வரவுணர்தல்' துறையில், பின்னை வந்த இலக்கணிகள் நான்கு துறைகளாக மொழிந்துள்ளனர். அதனடிப்படையிலே துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை ஆராயப்பட்டுள்ளன.

இதுகாறும் கூறப்பட்ட துறைகள் தலைவன் மட்டும் பேசும் துறைகளாக எதிர்மொழியில்லாத துறைகளாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது. இனிவரும் துறைகளில் எதிர்ச் சொல்லாடல் இருக்குமாதலால் தோழிக்கோ, தலைவிக்கோ பதிலுரைத்தல், வினாவுதல் போன்ற நிலைகளில் துறைகள் அமைதலும் உண்டு.

தலைவியைத் தன்னுடன் கூட்டுவிக்குமாறு தோழியிடம் இரந்து நிற்றல் பின்னிற்றல் துறையாகும். இத்துறையிலமைந்த 19 பாடல்கள் ஐந்து உட்துறைக்குள்ளும், 7 வழிநிலைத் துறைக்குள்ளும் அமைந்துள்ளன. இப்பாடல்கள் துறைக்குறிப்புவழி ஆராய்ந்துரைக்கப்பட்டுள்ளன. இத்துறையிலமைந்த நற்.190- ஆம் பாடல் மூன்று துறைக்குறிப்புகளைக் கொண்டுள்ளது. இப்பாடல் இரந்து நிற்றல் நிலையில் மூன்று துறைக்குறிப்புகளொடு ஒன்றியும், தோழி- தலைவிக்கான உள்ளுறை நோக்குமிடத்து மூன்றாம் துறைக்குறிப்புக்குப் பொருந்தாமையையும் குறிப்பிடப்பட்டுள்ளன. தலைவனின் அன்பின் ஆழத்தை அறிந்து கொள்வதற்காகத் தோழி தலைவியை நெருங்காது இருத்தி வைக்கும் சேட்படுத்துதல் துறையில் உள்ள மூன்று பாடல்களை இரு துறைகளாக வகைப்படுத்தி அவற்றின் துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன. மடல் என்னும் முதன்மைத் துறையிலுள்ள இரண்டு பாடல்கள் ஒரு துறையாக வகுக்கப்பட்டு துறைக்குறிப்புவழி நோக்கபட்டுள்ளன.

தலைவன் தலைவியைக் காண்பதற்கு எண்ணுவான். அவன் எண்ணத்தைப் பூர்த்தி செய்வதற்கு தோழி, தலைவியால் குறியிடம் குறிக்கப்படும். அவை இரவு, பகல் என்ற காலங்களுக்கு ஏற்றாற்போல் இரவு பகற்குறிகளாக அமையும். இக்குறியிடம் கூட்டப் பொருண்மையில் தலைவன் கூற்றாக 12 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்பட்டு துறைக்குறிப்புகளொடு பொருத்தி நோக்கப்பட்டுள்ளன. இத்துறையிலமைந்த அகநா - 280ஆம் பாடலின் பொருண்மை இரு துறைக்குறிப்புகளுக்குப் பொருந்தும் பாங்கு விளக்கப்பட்டுள்ளது. குறிப் பொருண்மைகளில் காணப்படும் பாடல்களில்

தலைவனின் காதல் தவிப்பு புலப்படும். எனினும் தோழியிற் கூட்டப்புணர்ச்சியில் மகிழல் பொருண்மையில் ஒரு பாடல் (நற் -82) ஆராயப்பட்டுள்ளது.

அல்லகுறிப் பொருண்மையிலமைந்த ஒன்பது பாடல்கள் ஒரு துறையில் வகைப்படுத்தப்பட்டு அவற்றின் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை ஆராயப்பட்டுள்ளன. தலைவியைத் தமர் தற்காத்துக் கொண்டதைத் தோழி தலைவனுக்கு உரைக்க, தலைவியைக் காணாது ஆற்றாமை கொண்டு தன்னெஞ்சிற்கு உரைக்கும் 'இற்செறித்தல்' பொருண்மையில் மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றிக் காணப்படுவது மொழியப்பட்டுள்ளன. தலைவன்,'தலைமகளை மகட்கொடையாகப் பெறுவதற்கு வேண்டி பெரும்பொருளைப் பெறப் பொருட்வயிற் பிரியும் பொருண்மையிலமைந்த ஆறு பாடல்கள் அவற்றின் இரு துறைகளின் நுவல்பொருளைப் பெற்றிருக்கும் விதம் ஆய்ந்து உரைக்கப்பட்டுள்ளன.

பெற்றோர் களவுக் காதலுக்கு ஒருப்படாத நிலையில் தலைவன் தலைவியைத் தோழியின் உதவியுடன் தன்னுடன் அழைத்துச் செல்வது உடன்போக்குத் துறையாகும். இம்முதன்மைத் துறையிலமைந்த பதினைந்து பாடல்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. உடன்போக்கு அழைத்து செல்லும் தலைவன் தலைவியின் மனதில் நம்பிக்கையை வேரூன்றும்விதமாகச் செயல் திறத்துடன் அழைத்துச் செல்வதை, இப்பாடல்களின் பொருண்மை துறைக்குறிப்புடன் ஒன்றி அமைந்துள்ளமை விளக்கப்பட்டுள்ளன.

களவொழுக்கத் தலைமக்கள் கற்பொழுக்கம் பூண்டு இல்லொழுக்கத்தில் மேம்பட வரைவு நிகழ்தல் இன்றியமையாமை. இவ்வரைவுப் பொருண்மையில் மூன்று பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் மூன்று துறைகளாக வகைப்படுத்தப் பட்டுள்ளன. இவற்றின் பொருண்மைகள் வரைவு நீடலால் தலைவியின் வருத்தம்,பெற்றோரால் வரைவு மறுக்கப்பட்ட நிலை, வரைவுக்காகக் காத்திருத்தல் போன்ற நிலைகளைச் சுட்டுவது விரித்துரைக்கப்பட்டுள்ளன.

இதுகாறும் மொழியப்பட்டவை வரைவை எதிர்நோக்கிய துறைகளாகவும் அதன் பொருண்மையை நுவலும் துறைக்குறிப்புகளுடன் பாடல்களின் பொருண்மை ஒன்றும்விதம் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. இனிவரும் துறைகளும் அவற்றின் பாடல்களும் கற்பொழுக்கம் சார்ந்தவையாக அமைகின்றன. கற்பொழுக்க அக நிகழ்வுகளை 'மலிவு, புலவி, ஊடல், துனி, பிரிவு' என வரையறுத்துள்ளனர். மலிவு என்பது தலைமக்கள் இல்லிருந்து மகிழல். உடன்போக்கு மேற்கொண்டு வரைந்து

தன்னூர் திரும்புதலைத் தோழிக்குரைத்தல், பொருள்வயிற் பிரிந்து மீண்டு வந்து இனிதிருத்தல், புலவி, ஊடலின்பின் மகிழல், தலைவியை விட்டு நீங்க மனம் வராமல் செலவழுங்குதல் போன்றவை 'மலிவுப்' பொருண்மையில் ஆராயப்பட்டுள்ளன. இம்மலிவுப் பொருண்மையில் அமைந்த பாடல்கள் பதினெட்டுத் துறைகளாக வகைப்படுத்தி ஆராயப்பட்டுள்ளன. 'நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவழுங்குதல்' துறையிலமைந்த நற் -205ஆம் பாடல் 'செலவழுங்குதல், செலவழுங்குவித்தல்' என்ற இரு துறைகளுக்கும் பொருத்தமாக அமைந்துள்ளது. துயர் கூறிச் செலவழுங்குதல் துறையில் 'தலைவியின் துயர் எண்ணியும், அதனால் தனக்கு ஏற்படும் துயர் எண்ணியும் என இருவேறு நிலைகளில் தலைவன் செலவழுங்கியது ஆராயப்பட்டுள்ளது.

'புலவி - ஊடல் - துனி' என்ற மூன்று உணர்வுகளும், ஊடலின் தொடக்கநிலை - வளர்நிலை - முதிர்நிலைகளாகும். இம்மூன்றும் 'ஊடல்' பொருண்மைக்குள் அமைத்து ஆராயப்பட்டுள்ளன. இவ்வூடல் பொருண்மையில் தலைவன் கூற்றுப் பாடல்களாக எட்டுப் பாடல்கள் ஆராயப்பட்டுள்ளன. வாயில் மறுத்தலில் நிகழ்ந்தது நினைத்தல் முதலாக ஐந்து உட்துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. வாயில் மறுத்தல் துறையில் அமைந்த அகநா -86ஆம் பாடல் இரு துறைக்குறிப்புகளுக்கும் பொருத்தமாக அமைவது விரித்துரைக்கப்பட்டுள்ளது. ஊடல் நீடல் துறையிலமைந்த நற் -370ஆம் பாடலின் இரு துறைக்குறிப்பை ஒன்றாக்கி,'இஃது ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியது' என்று ஔவை. சு.துரைசாமிப்பிள்ளையின் மாற்றத்திற்கேற்ப பாடலின் பொருண்மை அமைந்துள்ளது குறிப்பிடப்பட்டுள்ளது. அதேபோல் அகநா -126ஆம் பாடலுக்கு 'உணர்ப்புவயின் வாரா ஊடல், அல்லகுறி, பின்னிற்றல்' என்ற மூன்று துறைகளுக்குரிய துறைக்குறிப்புகள் அமைந்துள்ளன. இப்பாடலுக்கு முதல் குறிப்பான 'உணர்ப்புவயின் வாரா ஊடல்' துறையின் பொருண்மையுடன் ஒன்றியுள்ளது குறிப்பிடப்பட்டுள்ளது.

பிரிவு என்பது தலைவன் தலைவியை விட்டுப் பிரிந்திருத்தல். பொருள், வினை, போர், ஓதல் பிரிவுகளுடன் பரத்தையிற் பிரிவும் அடங்கும். பரத்தையிற் பிரிவு ஊடலில் அடங்குமாதலினும் அவற்றில் தலைவன் கூற்று மிகுதியாக இல்லை. ஏனைய பிரிவுகளே இங்கு 'பிரிவு' என்னும் பொருண்மையில் ஆராயப்பட்டுள்ளன. பிரிவில் தலைவன் கூற்றுப் பாடல்களாக 151 பாடல்கள்

காணப்படுகின்றன. இவற்றில் ‘வினைமுற்றி மீண்டபின் இல்லத்தில் இனிதிருக்கும்’ துறையில் அமைந்த 29 பாடல்கள் மலிவுப் பொருண்மையில் ஆராயப்பட்டுள்ளன. எஞ்சிய 122 பாடல்கள் பிரிவுப்பொருண்மையில் நோக்கப்பட்டுள்ளன. இப்பாடல்கள், உடன் வரும் என்றாற்குக் கூறல் முதலாக தன் மனவுணர்வைப் புலப்படுத்துதல் ஈறாக எட்டு உட்துறைகளாக வகைப்படுத்தி ஆராயப்பட்டுள்ளன. இத்துறைகளில் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட பாடல்களின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றி அமைந்துள்ளமை ஆய்வில் கண்டறியப்பட்டுள்ளன.

மீளல் பொருண்மையில் ஐம்பது பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்கள் ‘தான் தலைவியைக் காண விரைந்து செல்கவென உரைத்தல் முதல் தேர்ப்பாகனைப் பாராட்டல் (குறுந் -400)’ வரையிலான பன்னிரண்டு துறைகளாக வகைப்படுத்தப்பட்டு ஆராயப்பட்டுள்ளன.

## சான்றெண்விளக்கம்

1. தொல்காப்பியர், தொல்.பொருள், நூ.எ -65
2. இயற்கைப்புணர்ச்சி: (நற் -8: குறுந் -2, 40, 116, 137, 142, 300: ஐங்குறு -171, 299: அகநா -230:)
3. வீ.நாகராஜன், குறுந்.மூலமும் உரையும், ப. -9
4. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை (1962), ப. -283
5. நக்கீரனார், இறையனார் அகப்பொருள் -54
6. மேலது -54-55
7. ................, இலக்கண விளக்கம் -56
8. வ.சுப.மாணிக்கம், தமிழ்க் காதல், (நற் -39, 155: ஐங்குறு -197:) -35
9. இடந்தலைப்பாடு: (நற் -37, 155: குறுந் -62, 70: ஐங்குறு -197, 281, 288:)
10. அ) நச்சினார்க்கினியர் தொல். பொருள். -394

    ஆ) ந.சுப்புரெட்டியர், தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, ப.-100
11. தமிழண்ணல், தொல்காப்பியம், ப. -343
12. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுயையும் -615
13. எச்.வேங்கடராமன், நறறிணை மூலமும் உரையும் -283
14. இரா.ஈஸ்வரி, தொல்காப்பியத்தில் கூற்றுக் கோட்பாடு -51
15. பாங்கற் கூட்டம் (நற் -95, 160, 185, 201, 324: குறுந் -58, 72, 95, 100, 119, 129, 132, 136, 156, 184, 206, 222, 272, 280, 290: ஐங்குறு -172, 174, 175, 191, 255: அகநா -130, 140, 390:)
16. பொ.வே.சோமசுந்தரனார், குறுந்தொகை., - 86
17. வீ.நாகராஜன், குறுந்தொகை மூலமும் உரையும் (புத் 1) -150
18. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குநுறூறு மூலமும் விளக்கவுரையும் (தொ-1), ப. -424
19. மேலது, ப. -425
20. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும் (தொ-1), ப. -251
21. மேலது, பா.எ -174, ப.எ -251
22. மதியுடன்பாடு: (நற் -213: ஐங்குறு -176, 185, 256:)
23. உ.வே.சாமிநாதையர், ஐங்குறுநூறு மூலமும் பழையவுரையும் -78

24. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை. ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. -429
25. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு, ப. -253
26. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். -368-369
27. பின்னிற்றல்: (நற் -77, 101, 140, 146. 190 204, 209, 265, 349: குறுந் -17, 32, 165, 173, 182, 276, 286. 337: ஐங்குறு -178, 298:)
28. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், ப. -962
29. சேட்படுத்துதல் (நற் -75, 80, 377)
30. மடல்: (நற் -152: குறுந் -14:)
31. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல்,ப -45
32. இருவகைக் குறி: பகற்குறி (ஐங்குறு -293), இரவுக்குறி (நற் -6, 192: குறுந் -29, 312: அகநா -142, 152, 162, 198, 208, 262, 280:)
33. மு.மணிவேல், தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள், ப. -6
34. இளம்பூரணர், தொல். -182
35. தொல்ாகப்பியர், தொல். -105:11-12
36. மேலது, ப. -131
37. அல்லகுறி: (குறுந் -120, 128: அகநா -62, 212, 258, 322, 338, 342, 372:)
38. இற்செறிப்பு: (நற் -44, 319: குறுந் -199:)
39. இறையனார், இறையனார் அகப்பொருள், நூ.எ -25
40. பாலசுந்தரம், தென்னூல், நூ.எ -94, (பார்வை நூல் - காவ்யா காலாண்டிதழ்)
41. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு: (குறுந் -283, 235: ஐங்குறு -94, 195, 291, 365:)
42. அ.தட்சிணாமூர்த்தி, ஐங்குறுநூறு மூலமும் உரையும் (தொகுதி-2), ப. -798
43. நச்சினார்க்கினியர், தொல்.பொருள், ப. -283
44. க.ப.அறவாணன், அற்றை நாட்காதலும் வீரமும்,ப -128
45. உடன்போக்கு (நற் -9, 76, 162, 202, 264, 362, 384: குறுந் -56: ஐங்குறு -361, 363, 395, 396: அகநா -99, 257, 261:)
46. கா.கோவிந்தன், நற்றிணைச் சொற்பொழிவுகள், ப. -19
47. இளவழகனார், சங்க இலக்கிய இன்கவித் திரட்டு (2-ஆம் பாகம்), பக். -54-55
48. வரைவு (நற் -356: ஐங்குறு -92, 259:)
49. ..........., தமிழ்நெறிவிளக்கம், பொருள்., நூ.எ -22:10, .ப -36
50. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -488:3-4
51. க.வெள்ளைவாரணன், சங்ககாலத் தமிழ்மக்கள், ப. -27

52. பேராசிரியர், தொல்.பொருள். ப. -529

53. அ) புலவி நீங்கியபின் மலிவு: ஐங்குறு -97: ஆ) பிரிவின் பின் மலிவு: நற் -139: குறுந் -99, 209, 270: ஐங்குறு -324, 325, 355, 356, 357, 359, 360, 411-420, 449, 491-495: அகநா -29, 39: இ) வாயில் நேர்ந்தமையால் மகிழல்: ஐங்குறு -99: ஈ) வாயிற் புகுதலில் விருந்து வாயிலாய் மகிழல்: நற் -120: ஐங்குறு -188:)

54. பழைய உரைகாரர், ஐங்குறு. மூல.பழைய.உரை, பா.எ : 97, ப. - 48

55. மு.மணிவேல், தமிழ் இலக்கிய அகப்பொருள் மரபுகள் ப.- 23

56. பாலை பாடிய பொருங்கடுங்கோ, கலித்தொகை, பா.எ -15:24-26

57. செலவழுங்குதல் (நற் -3, 16, 52, 62, 126, 137, 141, 166, 305, 262, 298, 308, 312, 366: குறுந் -63, 77, 101, 151, 168, 256, 267, 274, 347, 376: ஐங்குறு -426, 427, 428, 430: அகநா -3, 5, 43, 51, 75, 77, 131, 149, 167, 191, 193, 199, 225, 245, 321, 355, 337, 353, 377, 379: பட்டினப் -1)

58. பிரிவின் பின் மலிவு: நற் -139: குறுந் -99, 209, 270: ஐங்குறு -324, 325, 355, 356, 357, 359, 360, 411-420, 449, 491-495: அகநா -29, 39

59. பழைய உரைகாரர், ஐங்குறு. மூல.பழைய.உரை, பா.எ : 99, ப.எ : 49

60. திருவள்ளுவர்,திருக்குறள்பாடல் - 90

61. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு -244

62. புலவி ஊடல் துனி (நற் -250, 370: ஐங்குறு -72-74: அகநா -86, 126, 136:)

63. நா.செயராமன், அகநானூற்றில் பல்துறைக் குறிப்புடைய பாடல்கள் ப -61

64. சி.சிதம்பரம், உறந்தை தமிழ்வளம், ப. -35

65. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, நற்றிணை மூலமும் விளக்கவுரையும், பா.எ -370, ப -1402

66. முந்நூல், பா.எ -370, ப -1402

67. நா.செயராமன்,அரங்கேறிய ஆய்வுகள், ப -61

68. வ.சுப.மாணிக்கம், தமிழ்க்காதல், ப -81

69. பிரிவு: 151 பாடல்கள் (நற்.2, 42, 59, 81, 103, 105, 106, 113, 139, 142, 157, 161, 400, 169, 221, 242, 284, 321, 341, 346, 352, 371, 374, குறுந்.99, 131, 147, 162, 189, 209, 237, 250, 270, 323,ஐங்குறு: 321, 330, 355, 359, 360, 411-420, 422, 425, 426, 429, 441-450, 477-480, 481-495, அகநா.9,19, 21, 24, 29, 33, 34, 39, 41, 44, 47, 54, 57, 64, 79, 83, 84, 87, 94, 109, 114, 121, 123, 124, 131, 134, 144, 154, 164, 169, 174, 181, 199, 204, 214, 224,

234,239, 244, 254, 274, 279, 284, 287, 289, 291, 297, 299, 304, 334, 339, 343, 344, 351, 361, 365, 371, 373, 374, 381)

70. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -184
71. மீளல்: (நற் -21, 42, 59, 81, 106, 142, 161, 169, 221, 242, 321, 371, 374: குறுந் -162, 233, 235, 250, 323, 400: ஐங்குறு -422, 425, 481-490: அகநா -9, 34, 44, 54, 64, 94, 114, 124, 134, 144, 154, 204, 224, 234, 244, 254, 274, 284, 334, 344, 374:)
72. ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. -970
73. நா.செயராமன், முல்லைப்பாடல்கள், ப. -46

## இயல் - 3

# தலைவி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

சங்கப் புலவர்தம் கவி உணர்வோவியத்திற்கு உரு கொடுப்பவர்கள் காதற் தலைமக்கள். அவர்களுள் காதலை ஒளிரச்செய்பவன் தலைவனெனில், அதனை உட்கிரகித்து மிளிர்பவள் தலைவி. இத்தலைவியின் கூற்றுப் பாடல்களாக சங்க இலக்கியத்தில் கலித்தொகை(39) நீங்கலாக 511 பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில் ஐந்தில் மூன்று பங்குப் பாடல்கள்(321) கற்பில் அமைகின்றன. துறைகளாகப் வகைப்படுத்திய பாடல்களை அவற்றின் துறைக்குறிப்புவழி ஆய்ந்து பொருண்மையைப் புலப்படுத்துவது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

### தலைவி

காணும்பொழுதிலே கருத்தை நிறைப்பவள் தலைவி. அத்தலைவி அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு முதலான குணங்களைத் தன்னுள் நிறைத்திருப்பவளாய் இருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியரின் கொள்கை. இவள் களவில் தலைவனின் நம்பிக்கையைப் பற்றுக்கோடாகவும், கற்பில் தன் நம்பிக்கையைத் தலைவன் மீது கொண்டும், அவனுக்குத் துணைநின்று இல்லறக் கடமைகளைச் சீர்தூக்கியாளும் செம்மை மாந்தராகத் திகழ்பவள். தலைவனின் புறத்தொழுக்கத்தால் தான் தீங்குறும்நிலையில், தன் உணர்வுகளை உரியமுறையில் புலப்படுத்தி அவனைத் தன்வயப்படுத்துபவள். உணர்வுகளை வெளிப்படுத்தும் தன்மையில் மேம்பட்டுத் திகழ்பவள். *“காதலன் காதலி இருவரும் தலைவன் தலைவி என்று பெயர் பெற்றாலும் அகத்தலைமை பெண்ணுக்கே உரியது. புறத்தலைமையுடைய ஆடவன் இல்லத் தலைமையையும் உடன்கொள்வது ஒத்துவராது. மகவைப் பொறுக்கும் பெண்ணினத்துக்கே குடும்பத்தைச் சுமக்கும் பொறுப்பு உரியதும் எளியதும் நல்லதும் ஆம். ஆதலின் தலைவன், தோழி, செவிலி, அன்னை முதலான அகமாந்தர்கள் எல்லாரும் தலைமை நோக்கி இயங்குபவர்கள்.”*[1] என்னும் வ.சுப.மாணிக்கனாரின் மொழிகள் தலைவியின் தலைமைத் தன்மைக்குச் சான்றாக அமைகிறது.

### தோழியிற் கூட்டம்

களவொழுக்கத்தின் முன்னை முக்கூட்டங்களில் தலைவி தன் காதலுணர்வைக் கண்ணுணர் குறிப்பாகப் புலப்படுத்துவாள். தோழியிற்

கூட்டத்திற்குப் பின் தன்னுணர்வைத் தன்மொழியாகவும், தன் தோழியை முன்னிலைப்படுத்திய தன்மொழியாகவும் வெளிப்படுத்துவாள். இத்தலைவியின் மொழி கொண்டு, முன்னை முக்கூட்டங்களைச் சொல்லிலாக் கூட்டம், தோழியிற்கூட்டத்தைச் சொல்லுள்ள கூட்டம் என வகைப்படுத்தமுடிகிறது. இத்தோழியிற்கூட்டத்திலும் தலைவியின் மொழிகள் பின்னிற்றல் துறையிலே தொடங்குகின்றன.

**பின்னிற்றல்**

தலைவன் தன் காதல் தலைவியைக் காண உதவுமாறு தோழியிடம் இரந்து கேட்கும் சூழலைப் பின்னிற்றல் என்பர். இச்சூழலில் தலைவனின் குறையை ஏற்பதும், மறுப்பதுபோல் கூறுவதும் தோழியின் செயலாக அமைகின்றது. தலைவனின் குறையை ஏற்று குறைநேர்ந்து, அதனைத் தலைவியையும் நயக்குமாறு கூறுபவள் தோழி. அப்பொழுது தலைவியும் தான் நயக்க இருப்பதைத் தோழிக்குத் தெரிவிப்பாள். இப்பின்னிற்றல் பொருண்மையில் மூன்று பாடல்கள்[2] காணப்படுகின்றன. இப்பாடல்கள் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவன் போல் தானும் காதலுணர்வு கொண்டிருத்தலைக் கூறல்,
- தோழியின் உதவியை நாடல்,

என்பன அமைகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,'குறைநயந்தமையைக் கூறல்' (நற் -128: அகநா -32, 180:) என்னும் உட்துறையாக அமைவதை அறியமுடிகிறது.

**குறைநயந்தமை கூறல்**

தலைவனுக்காக குறைநயக்கக் கூறிய தோழியிடம், தான் குறைநயந்தமையைக் கூறல் இத்துறையாகும். தோழி, தலைவி நயந்ததை மறைமுகமாக அறிய முயல்வதையும், தலைவி நயந்ததைத் தலைவனுக்கு அறிவிப்பதையும் சுட்டும் தொல்காப்பியர், தோழி குறைநயக்கக் கூறியதையும், தலைவி, தான் நயந்தமையைக் கூறலையும் குறிப்பிட்டாரில்லை. ஆதலின் இத்துறையை **உய்த்துணரும் துறையாகக்** கொள்ளமுடிகிறது. இத்துறையிலமைந்த,'குறைநேர்ந்த தோழி, தலைவி குறைநயப்பக் கூறியது.தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றதூஉமாம்'என்ற

துறைகளுக்கு,‘பகலெரி சுடரின் மேனி சாயவும்’எனத் தொடங்கும் நற் -128ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் தலைவியின் குறையைத் தீர்க்க முயலும் தோழியின் மதிநலம் புலப்படுகிறது. தலைவி துன்புறுவதைப் பார்த்து,

‘எனக்குநீ உரையா யாயினை நினக்குயான்
உயிர்பகுத் தன்ன மாண்பினேன் ஆகலின்
அதுகண் டிசின்யானே ……………….’ (நற் -128:3-5)

எனத் தோழி உரைக்கிறாள். ‘ஏனல் காவலின் இடையுற் றொருவன் ……. சிறுபுறம் கவையின னாக அதற்கொண் டஃதே நினைத்த நெஞ்சமெடு அஃதா கின்றியான் உற்ற நோயே’(நற் -128:7-11) என்புழி, தான் காதலைத் தோழிக்கு உரைத்ததும், தலைவிக்குத் தாயிடம் அறத்தொடு நின்று கற்பாக மாற்றத் தோழியின் உதவி தேவை என்பதை உட்கிரகித்துக் கொண்ட தலைவியின் சிந்தை புலப்படும். தன் நோயைத் தான் தோழியிடம் உரைக்காவிட்டாலும், தோழியே தன் மேனி வேறுபாடு கண்டு உதவும் தன்மையும், அறத்தொடுநிற்கும் துணிவும் கொண்டவள் என்னும் தலைவியின் நம்பிக்கையும் தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்புக்களுடன் ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இதே பொருண்மையிலமைந்த அகநா -32, 180 ஆகிய பாடல்களின் துறைக்குறிப்புகளும் பின்னிற்றலின்போது குறைநயந்ததாக அமைந்துள்ளன. இவ்விரு பாடல்களையும் தோழியின் கூற்றாகக் கொள்ளின் ‘படைத்துமொழிதல்’ துறையாகவும், தலைவியின் மொழியாகக் கொள்ளின் ‘குறைநயந்ததைக் கூறல்’ துறையாகவும் கொள்ள இடமளிக்கும் தன்மையில் அமைந்துள்ளன.

**சேட்படுத்துதல்**

களவு காலத்தில் தலைவனின் காதலுறுதியை மிகுவிக்க, தோழியால் தலைவனைத் தலைவியிடமிருந்து அயன்மைப்படுத்துதல் சேட்படுத்துதல் துறையாகும். இச்சேட்படுத்துதலினால் தலைமக்கள் இருவருக்கும் ஆற்றாமை மிகுமெனினும், தலைவனே அதனை வெளிப்படுத்தும் தன்மை கொண்டவனாகிறான். தலைவன் ஆற்றாமையைப் புலப்படுத்தும் நிலையில் தலைவி மறுப்பதும் உண்டு.

**தையல் மறுத்தல்**

அயன்மைப்படுத்தப்பட்ட தலைவன், தலைவியிடம் ஆற்றாமையைப் புலப்படுத்த, அதனை அவள் மறுத்தல் 'தையல் மறுத்தல்' என்னும் துறையாகும். இத்துறையில் ஒரு பாடல்[3] காணப்படுகிறது. இப்பாடலின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழலாக, களவுகாலப் பிரிவின் துன்பத்தைத் தலைவனுக்கு உணர்த்துதல் அமைகிறது.

'சேட்படுத்து வந்த தலைமகற்குத் தலைமகள் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'இன்னிசை உருமொடு கனைதுளி தலைஇ' எனத் தொடங்கும் அகநா -58ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'இடிமுழங்கு மழை பெய்யும் கூதிர்காலத்தில் குறத்தியரின் தந்தை காட்டில் வேட்டையாடித் தூங்குதற்கு இடமின்றி, வீட்டின் முற்றத்தில் புலித்தோளில் படுத்துறங்கும் மலைகள் பொருந்திய நாட்டின் தலைவனே!. பிரிந்திருக்கும் காலத்தில் நும்மை நினைக்கும்பொழுதெல்லாம் அருளில்லாத வாடைக்காற்று எம்மை வருத்தும். அப்பொழுது நீ வந்தானில்லை. அவ்வாறு நினக்காகக் காத்திருக்கும்பொழுது எம்நிலை, செய்து வைத்தாற்போல் எழுகின்ற இளமுலைகள் அழுந்துமாறு விளங்கும் தொடிகளையணிந்த முன்கை வளைந்து பலமுறை முதுகினைச் சுற்றிக் கொள்ள நின் மார்பினைத் தழுவிக் கிடத்தலைக் காட்டிலும் எமக்கு இனிதாயிருந்தது' எனத் தலைவி, தலைவனிடம் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,அகநா -58:7-9 அடிகளின்வழி,'நின்னொடு இன்பந் துய்க்க என்னால் முடியவில்லையெனினும், நான் மகிழ்வுடனே இருக்கிறேன். ஆதலால் இப்பொழுது நின் நினைவே போதும்' எனத் தலைவி தலைவனிடம் கூறுவது புலப்படுகிறது. 'தண்வரல் அசைஇய பண்பில் வாடை'(அகநா -58:11)என்புழி, தலைவியின் தனிமை துயர்மிகுதியும் தெளிவு. 'மனைமரம் ஒசிய ஒற்றிப் பலர்மடி கங்குல் நெடும்புற நிலையே'(அகநா -58:13-14)என்புழி, தோழியின் சேட்படுத்துதல் நிகழ்ந்துள்ளமையும், நெடுநாள் தலைவனைப் பிரிந்துள்ளமையும் தெளிவு. குறத்தியின் தந்தை தன் வேட்டையாடுதலை முடித்து அங்கு துயில் கொள்ள காலமும் நிலமும் ஏற்றதாக அமையாதவிடத்து வீட்டின் முற்றத்து உறங்குதல்(அகநா -58:3-4) போல்,'நீயும் சேட்படுத்துதல் நிலையிலும், நின் வேலைகளை முடித்த பின்னரே என் நினைவு வந்து என்னைத் தேடி வந்துள்ளாய்' எனத் தலைவி கூறுவது அறியமுடிகிறது.இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின்

பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இருவகைக்குறி**

களவுக் காதலில் கருத்தொருமித்த காதலர்கள் இருவகைக் குறிகளிலும் கண்டு களித்தனர். அந்நிலையில் தலைவி தன் மகிழ்வு, துன்ப உணர்வுகளைத் தோழிக்கும் தலைவற்கும், அ∴றிணை உயிர்கட்கும், சொல்லா மரபுடையனவற்றிக்கும் நேரடியாகவோ, மறைமுகமாகவோ புலப்படுத்துவாள். இருவகைக்குறிகளிலும் தலைமகளின் மொழிகளாக அமையும் பாடல்களாக சங்க இலக்கியத்தில் நாற்பது பாடல்கள்[4] காணப்படுகின்றன.

**பகற்குறி**

பகற்பொழுதில் தலைமகள் குறிப்பிடும் இடந்தனில் தோழியின் உதவியொடு தலைமக்கள் கண்டு இன்புறும் சூழலைப் பகற்குறியெனச் சுட்டுவர். இந்நிகழ்வில் தலைவனின் பிரிவுத் துயர், வரைவு விருப்பம், அலர் வருத்தம் போன்ற உணர்வுகளைத் தலைவி புலப்படுத்துவாள். இப்பொருண்மையில் பகற்குறிக் கூற்றுகளாகப் பதினெட்டுப் பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மையை ஆராயுமிடத்து, அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- முன்பு கண்ட குறியிடம் கண்டு கலங்கி நிற்றல்.
- தலைவனின் பிரிவை மனம் ஏற்காத நிலை.
- தலைவனின் வருகையை விரும்பியிருத்தல்.
- வரைதல் விருப்பம்.
- அலரால் செறிப்புண்டு வருந்துதல்.

என்பன அமைந்துள்ளன. இவற்றினடிப்படையில் 'அன்னை அறிந்து வினவினளெனல்' முதல் 'பிரிந்தவழிக் கலங்கலில் இரவுக்குறி வேண்டல்' வரை பன்னிரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**சிறைப்புறமாக - காப்புமிகுதி கூறல்**

சிறைப்புறமாக நிற்கும் தலைவன் உணருமாறு, தலைவி தாயாரால் காக்கப்படும் தன்மையைக் கூறல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'சிறைப்புறம்' என்னும் துறைக்குறிப்பிற்கு 'பெருங்கடற் கரையது சிறுவெண்

காக்கை’ எனத் தொடங்கும் குறுந் -246ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை …. பனிக்கழி துழவும் பானாள் …’(குறுந் -246:1-3) என்புழி, பகற்குறியெனவும், இங்கு ‘பானாள்’ என்னும் சொல் இரவுக்குறியைக் குறிக்க வழங்குமெனினும், காக்கை இரை தேடுவது கூறப்படுதலின் பகற்குறியே என்க. காக்கைக்கு இரவுப் பொழுது ஓய்வுப் பொழுதாக அமைவதுடன், அவ்வேளையில் அதன் பார்வை குறைந்தே காணப்படும் என்பதும் அறிந்த ஒன்று. குறுந் -246:4-8 அடிகளின்வழி, தன்னின் காப்புமிகுதிக்கு தலைவனே நின் தேரின் வருகையும், அதனைப் பிறர் அலராக மொழிந்தமையும், அதனால் அன்னை தன்னை அடித்தமையும், தன்னையொத்த தன் ஆயத்தார்போல் தன்னால் புறம் செல்ல முடியவில்லை’எனத் தலைவி கூறுவதை அறியமுடிகிறது. இவ்வாறுஇப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

சிறைப்புறமாக நிற்கும் தலைவன் உணருமாறு தோழியிடம்,‘நாம் வருந்துமாறு பிரிந்த தலைவன், பிறர் புகழுமாறு மீண்டும் நம்மை வந்து பெற்றால் யான் உடன்படுவேன்’ எனக் கூறுவது சிறைப்புறமாக வரைந்தால் நலமெனக் கூறல் என்னும் துறையாகும். இத்துறையில் நற்-275ஆம் பாடலில் ‘அறனி லாளன் புகழஎற் பெறினும் வல்லேன்மன் தோழி யானே’(நற் -275:8-9) என்னுமடிகளில் தலைவன் ‘நம் தமர் எமைக் கொடுக்கத் தான் பெற்றால் யான் மகிழ்வேன் தோழி’ எனத் தன் அவாவை வெளிப்படுத்துவாள் தலைவி. இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இரவுக்குறி**

பகற்குறியில் தலைவனின் வருகையால் பெரிதும் துன்புறுபவள் தலைவி. அவள், அலர்கண்டு அஞ்சுவதும் தலைவன் பிரிவினால் துயருற்று அலைப்புறுவதுமான நெஞ்சுடன் காணப்படுவாள். இதனால் தோழியிடம் கூறுவதுபோல் பகல்வரும் தலைவனிடம் இரவுக்குறி வேண்டுவதும், இரவு வரும் தலைவனின் காதலுள்ளம், நேரும் இடர்ப்பாடுகள், தன்னாற்றாமை, அதன் விளைவுகள் போன்றவற்றைத் தலைவன் அறியுமாறு கூறுவாள். இப்பொருண்மையிலமைந்த இரவுக்குறிப் பாடல்களாக இருபத்திரண்டு பாடல்கள்

காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயுமிடத்து, அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- பிரிந்த தலைவற்கு (குறிப்பிழைத்தமையின்) துயர் கூறும்நிலை
- செவிலி இடையூறாய் அமைந்த நிலை
- தோழி தனக்காகத் தலைவனிடம் பேசினால் நலமெனத் தலைவி கூறும்நிலை
- கார்ப்பருவத்தால் துன்பம் உண்டானநிலை
- உள்ளம் அலைப்புறும்நிலை
- வரைவினைத் தூண்டும்வழி, வழியின் ஏதம் கூறும்நிலை
- பசலை தோன்றியதன் காரணத்தைத் தோழியிடம் கூறும்நிலை
- தலைவனின் வருகையை வேட்கும்நிலை
- தலைவியின் ஆற்றாமையைத் தோழி உரைக்கும்நிலை
- புணர்ச்சியால் தன் வேறுபாட்டினைத் தாய் அறிவாளோ என அஞ்சல்

என்பன அமைகின்றன. இவற்றின் துணைகொண்டு,'சிறைப்புறமாக வழியின் ஏதம் கூறுதல்' முதல் 'உள்ளத்தின் நயப்புக் கூறல்' எனப் பன்னிரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**சிறைப்புறமாக வழியின் ஏதம் கூறுதல்**

தலைவன் சிறைப்புறமாக இருக்க அதனை அறியாததுபோல், இரவுவரும் வழியின் ஏதங்கள் எம்மை அச்சமுறச் செய்கின்றன. இதனை விடுத்து தலைவன் மணந்து கொள்ளல் நலமென அவன் உணருமாறு தோழியிடம் தலைவி கூறல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தலைமகன் இரவுக் குறிக்கண் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது. தோழி தலைமகட்குச் சொல்லியதூஉம் ஆம்.' என்ற துறைக்குறிப்புகளுக்கு,'இருள்கிழிப் பதுபோல் மின்னி வானம்' எனத் தொடங்கும் அகநா -72ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'நள்ளிரவில் மின்னல் மின்னி மழை பெய்தல், மின்மினிப் பூச்சிகளின் புற்று உருவாதல், அப்புற்றினை ஆண்கரடி தன் உணவாகிய புற்றாஞ் சோற்றிற்காகச் சிதைத்தல், காண்போர் அச்சம் கொள்ளும் முதலைகள் நிறைந்த வெள்ளம் ஓடுதல்' போன்றவை இரவுக்குறியின் வழியிடை ஏதங்களாகத் தலைவி குறிப்பிடுகிறாள். இவ் ஏதங்களைத் தலைவன் கருத்தில் கொள்ளாமையையும், தலைவி அதனை நினைத்து அச்சங்கொள்வதையும் அறியமுடிகிறது. அவன்

வரும்வழியில் தெய்வம் உறையும் கூரிய கற்களைக் கொண்ட மலையில், கருவுற்றிருக்கும் பெண்புலிக்கு, ஆண் பன்றியை உணவாகக் கொண்டுவர ஆண்புலிக்கு, பாம்பின் மணியொளி பாதையை விளக்கமுறச் செய்யும்' என வழியின் ஏதம் குறித்து துயரமுற்றாள். 'அவ்வழியில் வந்த தலைவனும் கொடியோன் அல்லன்: வரச் செய்த தோழியாகிய நீயும் தவறுடையள் அல்லை: இத்துன்பத்திற்குக் காரணமான யானே தவறுடையள்:' எனத் தலைவி, தோழியிடம் துயருற்றுக் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலுக்கு தலைவி, தோழி கூற்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால்,'ஆனா அரும்படர் செய்த யானே தோழி தவறுடை யேனே' (அகநா -72:21-22) என்னுமடிகளை நோக்கின், தலைவி கூற்றாக அமைவது புலப்படும். இரவுக்குறி நேருமாறு தலைவி தோழியிடம் கூறினாலும், தோழியே தலைவனை வரச் செய்வாள் என்பதும்,'யானே' என்னும் சொல் தலைவி தன்னையே கூறிக் கொள்கிறாள் என்பதும் விளங்கும். ஏனெனில் இரவுக்குறி வருகைக்கு மூலகாரணம் தானே என்னும் தலைவியின் குற்றவுணர்வும் தலைவி கூற்றாக அமைதலை விளம்புகிறது. இப்பாடலில் முதல் பதினைந்து அடிகள் இருவர் கூற்றாக அமைய, பின்னை ஏழு அடிகள் தலைவி கூற்றாக மட்டுமே கொள்ளும்வகையில் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல், முதல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு முற்றிலும் ஒன்றியும், இரண்டாம் துறைக்குறிப்பிற்கு ஓரோர் நிலையில் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**சிறைப்புறமாக - தன் ஆற்றாமை கூறல்**

கேட்கும் அண்மையனாகத் தலைவன் இருக்க, தலைவி அவன் பிரிவினால் உண்டான ஆற்றாமையை அவன் அறியுமாறு தோழியிடம் கூறல் இத்துறையாகும். பருவத்தால் தாம் பெறும் துன்பம், பசலை படர்தல், காமவேட்கைப் பரவல் போன்றவை தன் ஆற்றாமைக்குக் காரணங்களாகத் தலைவி மொழிவள்.

இத்துறையிலமைந்த 'தலைமகன் இரவுக்குறி வந்துழி, அவன் கேட்பத் தோழிக்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நெடுவரை மருங்கின் பாம்புபட இடிக்கும்' எனத் தொடங்கும் குறுந் -158ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'பாம்பும் இறந்துவிடும்படி இடியிடித்தும், பேரிசையொடு பெய்யும் மழையே! நீ சினந்து மிகுதியாகப் பெய்தால் புகழ்கொண்ட இமயத்தையும் துளைக்கும் வலிமையையுடையாய். துணையில்லாப் பெண்பாலர்களிடம் அருளில்லாமல் நின்

வலிமையைக் காட்டுதலினால் யாதொரு பயன் உடைத்து' எனத் தலைவி மழையிடம் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலின் துறைக்குறிப்பில் 'தலைவி, தோழிக்கு'க் கூறியதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. எனினும், பாடலடிகளில் தலைவன் சிறைப்புறமாக நிற்க, அவன் உணருமாறு மாமழையிடம் கூறியதாக அமைந்துள்ளது. இதனுள் தோழிக்கு மொழிதற்கான குறிப்பில்லை. ஆதலின் இப்பாடலின் துறைக்குறிப்பு '*தலைமகன் இரவுக்குறி வந்துழி, அவன் கேட்ப மாமழைக்குச் சொல்லியது*' என்றிருத்தல் சாலும்.

இவ்விரவுக்குறிப் பொருண்மையில் அமைந்த ஏனைய துறைகளிலமைந்த பாடல்களும், அவ்வத் துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் அமைந்து, துறையை விளக்கும் தன்மை கொண்டமைகின்றன.

**சிறைப்புறம்**

களவுத் தலைவன் வரைந்து கொள்ளும் நினைவு சிறிதுமின்றி களவையே நீட்டிக்க விரும்புவான். இதனால் வருந்திய தலைவி குறியிடத்தில் தலைவனது வருகையை அறியாதவள் போன்று அவன் அறியும்வண்ணம் தன் வருத்தத்தைத் தோழியிடம் புலப்படுத்துவாள். இதனைக் கேட்கும் தலைவனின் மனதில் தலைவியை விரைந்து மணந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் தோன்றும். இந்நிகழ்வுதனைச் சிறைப்புறம் என்று கூறுவர். அச்சூழலில் தலைவி கூற்றில் ஐந்து பாடல்கள்[5] காணப்படுகின்றன. பகல் மற்றும் இரவுக்குறிகளில் முப்பத்து மூன்று பாடல்கள் சிறைப்புறமாகக் கூறியது சூழலில் அமைந்துள்ளன. மேற்குறித்த ஐந்து பாடல்கள் இருவகைக் குறிகளிலும் தவறிய தலைவனின் வருகையின் பொழுது தலைவி உரைக்கும் மொழிகளாக அமைகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவியின் வேட்கையை அறியாதிருத்தல்
- புணர்ச்சியால் தன் வேறுபாட்டினைத் தாய் அறிவாளோ என அஞ்சல்
- தலைவி தன் வேட்கையைப் புலப்படுத்துதல்
- தலைவி மிகுந்த துயர் கொள்ளல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு,'சிறைப்புறமாக வன்புறை எதிரழிந்து மொழிதல்' முதல் 'சிறைப்புறமாகத்

தன் துயர் இகுளைக்கு உரைத்தல்' வரை என நான்கு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**சிறைப்புறமாகத் தன் துயர் இகுளைக்கு உரைத்தல்**

தலைவன் தன்னைக் காண இரவில் வரும்வழியின் ஏதங்களை எண்ணி தான் வருந்துவதாகத் தோழியிடம் கூறுவதுபோல் சிறைப்புறம் இருக்கும் தலைவன் உணருமாறு தலைவி கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தலைமகன் சிறைப்புறத்தானாக, தோழிக்குச் சொல்லுவாளாய், தலைமகள் சொற்றது: தோழி சொல் எடுப்ப, தலைமகள் சொல்லியதூஉம் ஆம்.' என்ற துறைக்குறிப்புகளுக்கு 'இரும்பிழி மகாஅர்இவ் அழுங்கல் மூதூர்' எனத் தொடங்கும் அகநா -122ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,'விழா நடைபெறவில்லையாயினும் ஊர் துஞ்சாமை, தாய் உறங்காமை, ஊர்க் காவலர் சுற்றுதல், நாய் குரைத்தல், நிலவு ஒளி தோன்றுதல், கூகைச் சேவல் குழறத் தொடங்குதல், மலையுறைக் கோழிச் சேவல் கூவுதல் என இவையெல்லாம் ஒழிந்தாலும், எம் நெஞ்சினையுடைய நம் காதலர் வாராது ஒழிவர். அதனால் எம் களவொழுக்கமானது தித்தனின் பாறைகள் சூழ்ந்த காவற்புறங்காடு போன்று பல்வேறு இடையூறுகளையும் உடையது' எனத் தலைவி, சிறைப்புறமாக இருக்கும் தலைவன் அறியும்வண்ணம் தோழியிடம் தன் துயர் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,'வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்'(அகநா -122:4) என்புழி, தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த அன்னையின் கடுஞ்சொல் கூறியமையால் தலைவி துயருற்றமை புலப்படுகிறது. இப்பாடலின் பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**அல்லகுறி**

இரவுக்குறியில் வரும் தலைவனின் செய்குறியைப் பிழைபட உணர்ந்து தலைவி வாராது ஒழிதல் அல்லகுறியாகும். இதனைக் குறி பிழைத்தல் எனவும் உரைப்பர். இப்பொருண்மையில் ஒரு பாடல்[6] அமைந்துள்ளது. இப்பாடலின் பின்னணிச் சூழலாக, தலைவனின் செய்குறியைப் பிறரும் அறிந்தநிலை அமைகிறது. இப்பாடல் 'என் பிழைப்பன்று என்று தலைவி நோதல்' துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**என் பிழைப்பன்று என்று தலைவி நோதல்**

இரவுக்குறியில் தலைவனின் செய்குறியைப் பிறரும் அறிந்ததால் தலைவி வாராதொழிந்தாள். அடுத்த நாள் வந்த தலைவன் உணருமாறு, முதல் நாள் குறி செய்த தன்மை கூறி, தாய் அறிந்தமையால் யான் வாராதொழிந்தேன். ஆதலின் என் பிழையன்று எனத் தலைவி வருந்தியுரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக, முன்னை நாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குக் கூறுவாள் போன்று தலைமகள் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்' எனத் தொடங்கும் ஐங்குறு -272ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'தாயின் வயிற்றினைப் பற்றிக்கொள்ளும் வன்மையையுடையது மந்தியின் குட்டி. அது உயர்ந்த மலையிலுள்ள தேனைப் பெறுதல் பொருட்டு அவற்றின் தேனீக்களைக் கலைத்துவிட்டு, பின்னர் அச்சம் தரும் மற்றொரு கிளையில் பாயும் மலைநாட்டின் தலைவன். இரவுப் பொழுதில் வருதலை அறியான். எம் தாயர் அவன் வருகிறான் எனக் கூறுகின்றாள்' எனத் தலைவி தோழியிடம் வருந்திக் கூறும் பொருண்மை கொண்டது.

'வரும் வரும் என்ப தோழி யாயே' (ஐங்குறு -272:5) என்புழி, தலைவன் செய்குறியைத் தாய் முன்பே அறிந்தமையும், அதனால் அல்லகுறிப்பட்டமையும் தெளிவு. அத்துடன் தேன் எடுக்க முயலும் கல்லா மந்தி செயல்போல் தலைவனும் பலரறிய குறிகளைச் செய்தமையை உணர்த்துகிறாள். இப்பாடலின் துறைக்குறிப்பில் 'அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன்….. சொல்லியது' என எதிர்காலத்தைச் சுட்டும் சொல் குறிப்பிடப்பட்டுள்ளது. பாடலின் பொருண்மையில் முதல் நாள் அல்லகுறிப்பட்டதனை, அடுத்தநாள் கூறுவதாக அமைந்துள்ளது. ஆதலின் *'அல்லகுறிப்பட்டு 'நீங்கிய' தலைமகன் …. தலைமகள் சொல்லியது.'* என அமைந்திருத்தல் சாலும். மேற்குறித்த நிலையில் இப்பாடல், பின்னணிச் சூழலுக்குள் அமைந்து துறையை விளக்குகிறது.

**இற்செறிப்பு**

களவொழுக்கத்தில் திளைத்த தலைவியின் இயல்புகளில் மாற்றத்தைத் தாயர் அறிந்தனர். அயலாரின் அலரும் புதியவனின் வருகையும் அதனை உறுதி செய்தன. அதனால் தாயர் அவளைப் புறம்போகாது இற்செறித்தனர். இதனைப் *"பெற்றோர் தன்னைப் புறத்துப் போகாதவாறு இல்லின்கண் செறித்தல் காரணமாக*

*அமைந்த பக்கத்தும்”*[7] என வெள்ளைவாரணனாரும்,*“காரணமாவன தலைவி தோற்றப் பொலிவும், வருத்தமும், அயலார் கூறும் அலருமாம்”*[8] என நச்சினார்க்கினியரும் உரைபகர்வர். இற்செறித்தல் பொருண்மையிலமைந்த தலைவி கூற்றில் எட்டு பாடல்கள்[9] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவனைக் காணாது தலைவி தவிக்கும் நிலை
- இற்செறிப்பினால் தலைவி தன் நிலையை, தலைமகற்கு உரைக்க முற்படும் நிலை
- புனத்தில் கதிர் முற்றாத நிலை
- வரைவோடு வாராதநிலை
- வரைவோடு வந்தால் நலமென எண்ணும் நிலை,

என்பன அமைகின்றன. இவற்றின் துணைகொண்டு,‘இற்செறித்தலில் - தன்னிலை கூறல் (நற் -287: குறுந் -57, 141, 306, 401: ஐங்குறு -224:), இற்செறிப்பு முயன்றமை கூறல் (ஐங்குறு -111), தலைவனின் திறம் உணர்த்துதல் (ஐங்குறு -115) என மூன்று துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**இற்செறித்தலில் தன்னிலை கூறல்**

தலைவியின் களவொழுக்கம் அறிந்த தாயர் அவளை இல்லில் இருத்திக் காவல் புரிந்தனர். அந்நிலையில் தலைவி மிகுந்த வருத்தத்துக்குள்ளாவள். தலைவன் வரும் வேளையில் அவனைக் காணமுடியாத நிலையிலும் தன்னிலையினைத் தோழிக்கு உரைப்பாள். அவள் வாயிலாகத் தலைமகற்கு உணர்த்தப்படும் தன்மைகளைக் கொண்டது இத்துறையாகும். இத்துறையில்,

- தலைவன் இல்லாதநிலையில் தலைவியின் வருத்தம்
- காதல் வேட்கையால் இறந்துபடுதலே நலமெனச் சிந்தித்தல்
- இரவுக்குறியில் தலைவன் வரும் வழியின் ஏதம் குறித்து அஞ்சல்
- தலைவனைக் காணும்முன் இருந்த தவறுகளைச் சுட்டிக் காட்டுந்தன்மை கண்டப்பின் மாறியதெனல்
- புணர்ச்சியால் தன் வேறுபாட்டினைத் தாய் அறிவாளோ என அஞ்சல்

என்பன தலைவியின் தன்னிலை கூறலாக அமைகின்றன.

இத்துறையிலமைந்த ‘காப்பு மிகுதிக்கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன்ன’ எனத் தொடங்கும் குறுந் -57ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘பூ இடைப்பட்ட மகன்றில் பறவைகள் ஓராண்டு கழிந்தாற்போல வருந்தும். யாமும் ஓருடலில் இரண்டு உயிர் வாழ்வதுபோல் வாழ்ந்து கொண்டிருக்கிறோம். தலைவன் பிரிந்தபோது அவர் வேறாக அமைந்து, ஓர் உயிர் ஓர் உடலில் வாழ்வது போன்ற இழிவு நேர்ந்துவிடும். இவ்விழிவினின்று நீங்குவதற்காக உயிர் போதலே சிறந்தது’ எனத் தலைவி, தலைவன் உடன் இல்லாத தன்னிலையைத் தோழிக்குக் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலின் பின்னை நான்கடிகள் இற்செறிக்கப்பட்ட தலைவியின் புலம்பலாகவே கொள்ளமுடிகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**ஒருவழித்தணத்தல்**

தலைமக்களின் களவொழுக்கம் புறத்தார்க்குப் புலனாக, அலரும் அம்பலும் உண்டாயிற்று. அவ்வொலிகள் அடங்கத் தலைவன் சிறிதுகாலம் தலைவியிடமிருந்து நீங்கித் தன்னூரில் இருத்தல் ஒருவழித்தணத்தல் துறையாகும். இதனைத் தொல்காப்பியர் *“இட்டுப்பிரிவு”*[10] எனவும், இறையனார் *“பொருள்வயிற் பிரியா தொருவழித் தணத்தலும்”*[11]எனவும் வரையறுப்பர். இவ் ஒருவழித்தணத்தலுக்கு *“பொருள்வயிற் பிரியாது ஓரிடத்தானாய் உறைதலும்”*[12] என உரை பகர்வர் நக்கீரனார்.

இத்துறையில் தலைவி, ஆற்றியிரு என்ற தோழியின் மொழிக்கு எதிரழிந்து கூறுதல், ஆற்றாமையால் தன்னுள்ளே புலத்தல், காமம் மிகுந்தவழி துயருற்று மொழிதல், இயல்பட மொழிந்தும் தன்னுணர்வுகளைப் புலப்படுத்துதல் என்னும் தன்மையினள். இத்துறைப்பொருண்மையில் பத்தொன்பது பாடல்கள்[13]காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தோழி ஆற்றுவிக்கும் நிலையிலிருத்தல்
- வேட்கை மீதுற்றிருத்தல்
- தலைவனின் இயல்பினை அறிந்திருத்தல்

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் துணைகொண்டு கையாறு எய்திடு கிளவி முதலாக ஐந்து துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**கையாறு எய்திடு கிளவி**

தலைவன் பிரிந்தமையால் தலைவி செயலற்று மொழிதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தன்னுட் கையாறு எய்திடு கிளவி' என்னும் துறைக்குறிப்பிற்கு 'யாரணங் குற்றனை கடலே பூழியர்' எனத் தொடங்கும் குறுந் -163ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் தன் துயரைக் கடலின்மேல் ஏற்றிக் கூறுகிறாள் தலைவி. 'கடற்கரைச் சோலையில் வீசும் புலால் நாற்றத்தைப் போக்கும் தாழைமலரைக் கடலலை வருத்தும்' என்னும் பொருண்மை,'தன் உணர்வொடு ஒன்றிச் செயல்படுந் தோழியையும், தன் துன்பம் வருத்துகிறது' எனத் தலைவி வருந்துந்தன்மையில் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. இவ்வாறு நோக்கின் இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவுநீடல்**

காதல் தலைவன் களவின்மீது வேட்கை கொண்டு, வரையுங் காலத்தை நீட்டித்தல், வரைவுநீடல் துறையாகும். இத்துறையில் தலைவி, தலைவன் வரையாமையினால் ஆற்றாமை கொண்டு, எழில் நலம் தொலைந்ததெனக் கூறுதல், பொழுதினைக் கடிந்துரைத்தல், வாடை மற்றும் தலைவனின் கொடுமை கூறல், தலைவனை வரைவொடு வருக என உரைத்தல், தோழி ஆற்றாநிலையிலும் தன் ஆற்றாநிலையிலும் வருந்தியுரைத்து, தன்னுணர்வுகளை விளித்துரைத்தல் ஆகிய தன்மையினள். இத்துறையில் தலைவி மொழியும் தன்மையில் முப்பத்தொரு பாடல்கள்[14]காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவன் வரைதலை நினையாமையால் தலைவியின் ஆற்றாமை மிகுந்திருத்தல்
- தலைவி ஆற்றாமை கண்டு தோழி துயருறுதல்
- அலரால் இற்செறிப்பிற்கு உள்ளாதல்
- தலைவனின் கொடுமை கூறல்
- வாடைப் பொழுது கண்டு அஞ்சுதல்

- ஆற்றுவிக்கும் தோழிக்குப் பதிலுரைத்தல்

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் 'ஆற்றாமை கூறல்' முதல் 'இயல்பட மொழிதல்' வரை பதினொரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**ஆற்றாமை கூறல்**

தலைவன் களவுப்புணர்ச்சியை விரும்பி வரைவினை நினையாதிருந்தான். அதனால் தலைவி ஆற்றாமையைக் கூறலும், தோழி வினாவ தன் ஆற்றாமையைக் கூறலும் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வரைந்து கொள்ள நினைக்கிலன்' என்று வேறுபட்ட தலைமகள்,'அவன் நின்மேல் விருப்புடையன், நீ நோகின்றது என்னை?' என்ற தோழிக்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு அமைந்த பாடலில்,

'சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுகல் அடுக்கத்துத் துணையொடு வதியும்' (ஐங்குறு -262:1-2)

நிலை கண்டும் தலைவன் வரைவினை எண்ணாதிருக்கிறானெனத் தலைவி வருந்துவது புலப்படுகிறது. இங்கு,*"பெண்மை, காதலைத் தவிர வேறறியாதாதலால் ஆற்றாமை கொள்ள, தலைவனின் வாழ்வில் காதல் ஒரு பகுதியாக இருக்க வரைவு நீட்டிக்கிறான்"*[15]எனச் சரளா ராசகோபாலன் மொழிவது ஒப்பு நோக்கத்தக்கது. 'மருந்தும் அறியும்கொல் தோழிஅவன் விருப்பே'(ஐங்குறு -262:4) என்புழி,'ஆற்றியிரு' என்ற தோழிக்குப் பதிலுரைப்பதும், தலைவன் வரைவு நீட்டித்திருப்பதைத் தெளிவுறுப்பதுடன் துறையையும் விளக்குகிறது.

**தோழியின் ஆற்றாமை கண்டு தலைவி ஆற்றுவித்தல்**

தலைவன் வரைவு நீட்டியமையால் தலைவி துயர்மிக்கு ஆற்றாதிருந்தாள். அதனைக் கண்ட தோழி, துன்பம் நீங்கி ஆற்றியிரு என ஆற்றுவித்தாள். தலைவி மேலும் ஆற்றாதிருந்தாள். அதனைக் கண்ட தோழி ஆற்றாளாகித் தலைவியை எண்ணி வருந்தினாள். தோழியின் துயர் கண்ட தலைவி அவளை ஆற்றுவித்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வரைவு நீட ஆற்றாளாகிய தோழிக்குத் தலைமகன் சிறைப்புறமாகத் தலைவி சொல்லியது. மனையுள் வேறுபடாது

ஆற்றினாய் என்றாற்குத் தலைமகள் சொல்லியதூஉம் ஆம்’ என்ற துறைக்குறிப்புகளுக்கு ‘அம்ம வாழி தோழி நன்னுதற்கு’ எனத் தொடங்கும் நற் - 388ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘அம்ம வாழி தோழி நன்னுதற்கு யாங்கா கின்றுகொல் பசப்பே……..’ (நற் -388:1-2),‘பெரிய மகிழும் துறைவன்எம் சிறிய நெஞ்சத்து அகல்வு அறியானே’ (நற் -388:9-10) என அமையும் இவ்வடிகள், தலைவியின் துயர் கண்டு ஆற்றாதிருந்த தோழிக்குத் தலைவி கூறும் ஏற்புடைப் பதிலுரையாக அமைவது விளங்கும்.

இப்பாடலின் ஏனைய அடிகளில் ‘பரதவர் படகொடு சென்று மீன் பிடித்து உப்பங்கழிச் சோலையில் குவித்துப் புன்னையின் நிழலிலே சுற்றத்தாருடன் கள்ளுண்டு மகிழும் துறை’ என்னும் பொருண்மையை, தலைவன் தன் தேருடன் சென்று பொருளீட்டி கொணர்ந்து முன்றிலிலே குவித்துத் தலைவியின் சுற்றத்தாருடன் மனையிருந்து மகிழ்ந்து தலைவியை மணந்து அவள் நலம் நுகர்வான்’ என்னும் உள்ளுறை துறையின் பொருண்மையைத் தெள்ளிதிற் புலப்படுத்தும்.

**அலர்**

களவொழுக்கத்தையே விரும்பிய தலைவனின் வருகை நீடித்துழி, அதனை அறிந்த ஊரார் அலர் தூற்றுவரெனத் தலைவி அஞ்சுதல் இத்துறையாகும். இதனை இறையனார் *“அம்பலும் அலரும் களவு”*[16]என வரையறுப்பதற்கு, நக்கீரனார் *“களவொழுக்கினது நெடுங்காலச் செலவின்கண் இவர்க்கு நிகழும் உள்ளநிகழ்ச்சி இன்னதென் றுணர்த்துதல்”*[17] எனத் தெளிவுறுப்பர். இவ்வுரையும் ஏற்புடைத்தே. அலர் இல்லையேல் அன்னையர்க்குப் புலப்படாதிருக்கும். வரைவுகடாதல், அறத்தொடுநிற்றல், உடன்போக்கு, வரைவு போன்ற நிகழ்வுகள் நிகழாதிருக்கும். களவுக் காதலுக்கு அலரும் நல்லதே. இத்துறையில், தலைவி தன் ஆற்றாமையை, ஆற்றுவிக்கும் தோழிக்குக் கூறலும், ஆற்றுவிக்கும் தோழிக்குப் பதிலுரைத்தலையும் செய்வாள். இப்பொருண்மையில் மூன்று பாடல்கள்[18] காணப்படுகின்றன. அப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவி அலருக்கு அஞ்சியிருத்தல்
- தலைவனின் வரைவே அலரை அடங்கச் செய்யுமெனத் தலைவி எண்ணியிருத்தல்

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் அலரஞ்சி ஆற்றாமையுரைத்தல் முதலாக இரு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**அலரஞ்சி ஆற்றாமையுரைத்தல்**

களவில் தலைவன் தன்னைக் காண வந்ததைத் தன் ஆயத்தாரும் அறிந்தனர். அதனால் எழும் அலர்மொழிகள் எவ்வாறு அடங்குமெனத் தலைவி ஆற்றாது உரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'அலரஞ்சிய தலைமகள், தலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழிக்குச் சொல்லுவாளாய்ச் சொல்லியது.' என்னுந் துறைக்குறிப்பிற்கு குறுந்தொகை 311-ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் 'அலர்யாங்கு ஒழிய தோழி ……'(குறுந் -311:1),'நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர் யான்கண் டன்றோ இலனோ ……..'(குறுந் -311:3-4),'ஆயம் எல்லாம் உடன்கண் டன்றே?'(குறுந் -311:7) என்புழி, களவில் காணவந்த தலைவனை, ஒன்றித் தோன்றும் தோழி அல்லாத பிற ஆயத்தாரும் கண்டனர். அதனால் ஊரில் எழும் அலரை எவ்வாறு ஒழிப்பது என்று அஞ்சுகிறாள். தலைவன் தன்னை மணந்தால் மட்டுமே ஒழியும் எனத் தலைவி குறிப்பால் உணர்த்துவது தெளிவு. இப்பொருண்மை துறைக்குறிப்புடன் ஒன்றியமைகிறது.

**நொதுமலர்**

களவுத் தலைவிக்குத் தலைவனல்லாத வேறொரு நொதுமலாளன் வரைவிற்காகத் தலைவியின் இல்லிற்கு வருதலை நொதுமலர் வரைவென உரைப்பர். அவ்வேளையில் தலைவி தானே அறத்தொடு நின்று தன்னுள்ளக் காதலைத் தோழிக்குப் புலப்படுத்தும் நிலையும் இத்துறையிலடங்கும். இப்பொருண்மையில் இரு பாடல்கள் (குறுந் -31: ஐங்குறு -201:) காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மைகளை ஆராயுமிடத்து,

- நொதுமலர் வரைவு வருதல்

என்னும் பின்னணிச்சூழல் அமைகிறது. இதனடிப்படையில் 'தலைவி அறத்தொடுநிற்றல் (குறுந் -31: ஐங்குறு -201:)' என்னும் துறை வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**தலைவி அறத்தொடுநிற்றல்**

களவுத் தலைவிக்கு தலைவனல்லாத வேறொரு நொதுமலாளன் வரையும் நோக்கில் தலைவியின் இல்லிற்கு வர, தலைவி அதனை மாற்ற வேண்டுமெனத் தோழிக்கு அறத்தொடுநிற்றல் இத்துறையாகும். தலைவியின் ஆற்றாமைக் காலமும், நொதுமலாளன் வரைவும் அறத்தொடுநிற்கும் காலங்களாகச் சுட்டப்படுகின்றன

இத்துறையிலமைந்த 'நொதுமலர் வரைவுழித் தோழிக்குத் தலைவி அறத்தொடுநின்றது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'யானுமோர் ஆடுகள மகளே என்கைக் கோடீர் இலங்குவளை நெகிழ்ந்த பீடுகெழு குரிசிலும் ஓராடுகள மகனே' (குறுந் -31:4-6) எனப் பாடல் அமைகிறது.. இப்பாடலில்,'களவுத் தலைவன் வீரனாதலின் விழாக் காலங்களில் புறப் பெண்டிரோடு துணங்கைக் கூத்தாடுவதில் வல்லவன். ஆதலின் கற்புடைத் தலைவியாகிய யானுந் தலைவனுக்காகச் செல்லாவிடங்களிலும் சென்று தேடி அலைந்தேன்' எனத் தலைவி உரைக்குமிடத்து தோழியிடம் அறத்தொடுநிற்பது தெளிவு. தலைவனைத் தேடி அலைந்தமையால் தானும் அவ்வியல்பினைப் பெற்றவளாகிறேன் என உரைப்பது, தலைவன் தனக்குத் தேவை என்பதைத் தோழிக்குத் தெளிவுபடுத்தும் தலைவியின் உத்தியாகும். இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வெறியாடல்**

களவொழுக்கத்தில் ஒழுகும் தலைவி இயல்புவழக்கத்திலிருந்து விலகியும், மேனி மாறுபட்டும் காணப்படுவதைக் கண்டு தாயர் துயருறுவர். தலைவியின் இம்மாறுபாட்டுக்குக் காரணமறிதற் பொருட்டு வெறியாட்டினை நடத்த விழைவர். இந்நிகழ்வினை வெறியாடல் என்பர். இதனை ஈ.கோ.பாஸ்கரதாஸ்,*"வெறியாடலாவது மனநோயினை அறியும் முயற்சியேயாகும்."*[19] என உளவியல் நோக்கில் உரைப்பர்.இத்துறையில் தலைவி, களவொழுக்கம் அறிந்த தாயர் வெறியாடல் நிகழ்த்த இருப்பதனையும், தலைவன் வரும்வழியின் இயல்பு தனக்கு அச்சமளிப்பதாகவும், அவன் அறியுமாறு தோழிக்கு மொழிகிறாள். இப்பொருண்மையில் நான்கு பாடல்கள் காணப்படுகின்றன. எனினும் ஒரு பாடல்[20] தவிர்த்து ஏனைய பாடல்கள் இரவுக்குறியில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தன் மேனி மாறுபாடு, வெறியாட்டு நிகழ்தற்கு ஏதுவாக அமைந்தநிலை

என்னும் பின்னணிச் சூழல் அமைகிறது. இதன் அடிப்படையில்,‘வெறியச்சம் உரைத்தல்(அகநா -292)’ என்னும் துறையாக வகைப்படுத்தப்படுகிறது.

**வெறியச்சம் உரைத்தல்**

சிறைப்புறமாகத் தலைவன் வருவதை அறிந்த தலைவி, அலர் மற்றும் மேனி வேறுபாடறிந்த தாய் வெறியாடல் நிகழ்த்தப்போவதாக அவன் கேட்குமாறு தோழிக்குக் கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘வெறி அச்சுறீஇ, தலைமகள் தோழிக்குச் சொல்லியது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு அகநானூற்று 292ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,‘கூறாய் செய்வது தோழிவேறு உணர்ந்து அன்னையும் ........... வெறிகுறி ஏதில் வேலன் .........’ (அகநா -292:1-5) என்னுமடிகளில் தன் நிலை கண்டு அன்னை வெறியாட்டு மேற்கொள்ள இருப்பதையும், அவ்வெறியாட்டின் நிகழ்வு முறையையும் தலைவி கூறுவது புலனாகிறது.

இப்பாடலில் பிற்பாதி எட்டடிகளில், இரவில் யானையின் வருகையும் அதன்மேல் கானவன் எய்யும் கவணின் கல்லானது பக்கமலையின் வேங்கையின் வெள்ளிய மலர்களைச் சிதறச் செய்து, தேனடைகளின் தேனினைச் சிதைத்து, பலாவின் பழத்துள் தங்கும் என்னும் பொருண்மை கொண்டது. இப்பொருண்மை ‘தலைவனின் வருகையை அலரின்மூலம் தாய் அறிந்தமை, அதன்வழி நொதுமலர் வருகையும், தன்னெழில் சிதைவும், நின் வரைதலின்மை ஆகியவைகளே நம் தாயின் வெறியாடலுக்குக் காரணமாக அமைந்தன’ எனக்கூறும்வழி தலைவியின் அலரச்சம் புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல்**

களவில் காதல் பூண்டொழுகிய தலைவன், தன் இனிய தலைவியை இல்லாளாக்க முயல்வான். அதற்குமுன் செல்வப் பெருங்குடியில் தான் பிறந்திருந்தாலும், தன் இல்லற வாழ்விற்குத் தேவையான செல்வத்தைப் பெறவும், தலைமகளை மகட்கொடையாகப் பெறுதற்கு வேண்டிய பெரும்பொருளைப் பெறவும், தலைவன் பொருள்வயிற் பிரிவான். இப்பிரிவினை ‘வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு’ எனக் குறிப்பிடுவர். இதனைத் தொல்காப்பியரும் தலைவி

கூற்றுக்குப்பின், அவள் ஆற்றாமையைப் புலப்படுத்துமிடத்தில்,*“வரைவிடை வைத்த காலத்து வருந்தினும்”*[21]என்றுரைப்பர். இதற்குத்*“தலைவன் இயற்கைப்புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான். இன்னநாள் வரைந்து கொள்வல் எனக்கூறித் தோழியிற் கூட்டத்திற்கு முயலாது தணந்தவழி யதனைத் தோழி ஐயப்படுங் குறிப்புத் தோன்றாமை மறைத்தொழுகிய தலைவி அவன் வருந்துணையும் ஆற்றாது வருத்தமுறினும் ……..”*[22] என இளம்பூரணரும்,*“தலைவன் வரைபொருட்குப் பிரிந்தவழி அவன் குறித்துச் சொன்ன நாள் கடந்த காலத்து, அதனை எண்ணி வருந்துமிடத்தும்”*[23] என ச.பாலசுந்தரமும் உரை கூறுவர். இவற்றில் ஒருவழித் தணத்தலின் தொடர்ச்சியாக வரைவிடைப் பிரிவு நிகழும் என்பதும், வரைவிடைவைத்து பொருள்வயிற் பிரிந்தவிடத்து தலைவி வருந்துவாள் தலைவி என்பதும் தெளிவு. தலைவனின் இல்லத்தாளுமையைப் பறைசாற்றும் இப்பிரிவு, தலைவிக்கு மனமகிழ்ச்சியைக் கொடுத்திருக்க வேண்டும். எனினும், சங்க அகப்பாடல்களில் தலைவி வருந்துவதாகவே படைக்கப்பட்டுள்ளது. இப்பொருண்மையில் ஐம்பத்து நான்கு பாடல்கள்[24]காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவி இளமை பொருந்தியவளாதலால் இல்லறச் செம்மை குறித்த தெளிவின்மை
- தலைவனின் காதல் அருகாமையை மட்டும் நோக்குந்தன்மை
- பருவ மாற்றத்தினை ஏற்புடையின்மை
- தலைவனின் வரவை மகிழ்வுடன் எதிர்பார்த்திருத்தல்
- தலைவனின் பிரிவை ஏற்காதிருத்தல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில்,‘தலைவி இரங்குதல்’ முதல் ‘பருவங் கண்டழிதல்’ வரை ஒன்பது துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவிடைவைத்துப் பிரிந்தவிடத்து முனிந்துரைத்தல்**

களவுத் தலைவன் பொருள்வயிற் பிரிந்தவிடத்து மாலைப் பொழுதில் தன் நிகழ்வுகளை அ.்.றிணை உயிர்களும் மாந்தரும் அமைத்துக்கொள்வதைக் கண்டு வருந்தி முனிந்து கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘வரைவிடை முனிந்து கிழத்தி தோழிக்கு உரைத்தது.’ என்னுந் துறைக்குறிப்பிற்கு ‘புள்ளும்

புலம்பின பூவும் கூம்பின கானலும் புலம்புநனி உடைத்தே வானமும்'என அமையும் குறுந் 310ஆம் பாடல் 'பறவைகள் தனிமையுறுதல், பகலில் பூக்கும் கடற்பூக்கள் கூம்புதல், கடற்கரைச் சோலைகள் தனிமை பெறுதல், வானம் மயங்கிப் பொலிவிழத்தல்' போன்ற மாலைநேர நிகழ்வுகள் இயல்பாக நிகழ்கின்றன. ஆனால் தலைவன் மட்டும் தன்னை மணந்து கொள்ளுந் திறம் நின்று நீங்கி ஒழுகுவானாயினான். அவனுக்குத் தன் நிலையைக் கூறுவாரில்லையே' எனத் தலைவி வருந்தி, தோழியிடம் உரைக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில், தலைவனின் பிரிவால் வருந்திய தலைவி 'தண்ணந் துறைவற்கு உரைக்குநர்ப் பெறினே'(குறுந் -310:7) என உரைக்குமிடத்து'தலைவனில்லாது தன்னால் வாழ இயலாது. ஆதலின் தோழியே நின் உதவி தேவை' எனத் தலைவியுரைப்பது தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் விளக்குகிறது.

**வந்துழி மகிழ்வு**

வரை பொருட்குப் பிரிந்த தலைவன் மீண்டுவந்துழி தலைவி மகிழ்ந்து கூறலும், முனிந்து கூறுவதுபோல் மகிழ்ந்துரைத்தலும் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வரைவிடை வைத்துப் பிரிந்த தலைமகன் சிறைப்புறத்தானாகத் தலைமகள் தோழிக்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நல்ல ஆயின அளியமென் தோளே ............ மெல்லம் புலம்பன் வந்த மாறே' (ஐங்குறு -120:2-4) எனப் பாடல் அமைகிறது. இப்பாடலில், முதல் இரு அடிகளில், தலைவி தன் தோள் பொலிவு பெற்றன என உரைக்குமிடத்து, பிரிந்த தலைவன் மீண்டு வந்துள்ளான் என்பதும், நான்காமடியில் அதற்கான காரணத்தை உரைப்பதும் அறியமுடிகிறது. தலைவியின் தோள் தலைவன் மணப்பின் மாணலம் எய்தலும் தணப்பின் நெகிழ்தலும் இயல்பு என்னும் இப்பொருண்மை துறையை விளக்குகிறது.

இவ் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதலில் ஏனைய துறையிலமைந்த பாடல்களும் அவற்றின் துறைக்குறிப்பினுள் அமைந்து துறையின் பொருண்மையைச் சுட்டுகின்றன.

**அறத்தொடு நிற்றல்**

தலைவியின் களவொழுக்கத்தை தாயர்க்கு முறையாக வெளிப்படுத்தும் முறைமை தோழிக்கே உண்டெனினும் தொல்காப்பியர்,

*"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி*
*அறத்தியல் மரபிலள் தோழி என்ப"[25]*

எனத் தலைவி அறத்தொடுநின்ற பின் தோழி அறத்தொடுநிற்பாள் என்பர். திருவாரூர் வைத்தியநாத தேசிகர், தலைவி தன் தோழிக்கு அறத்தொடுநிற்பதற்கு அறிவுறுத்தினால் அன்றி, தோழி அறத்தொடுநில்லாள் என்பதையும், தலைவி தோழிக்கு அறிவுறுத்துதலே அறத்தொடுநிற்றலில் அமையும் என்பதையும் (இலக்.விளக் -416) மொழிவர். தலைவி அறத்தொடுநிற்கும் பொருண்மையில் ஆறு பாடல்கள்[26] காணப்படுகின்றன. இப்பாடல்களில் இரு பாடல்கள்(குறுந் -31: ஐங்குறு - 201:) நொதுமலர் வரைவில் நோக்கப்பட்டுள்ளன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தோழி அறத்தொடு நிற்கக் கருதியதைத் தலைவி ஊகித்தறிதல்
- தலைவி அறியாமுன் தோழி அறத்தொடுநின்றமை
- தலைவி ஆற்றாது தன் நிலையைப் புலப்படுத்தல்
- நொதுமலர் வரைவு வந்துற்ற நிலையில்
- தலைவனின் வருகை தடைபட்ட நிலையில்

என்பன பின்னணிச்சூழல்களாக அமைகின்றன. இவற்றின்அடிப்படையில் தோழி அறத்தொடு நிற்றல் நலமென உள்ளுதல் முதலாக மூன்று துறைகள் வகுக்கப்பட்டுள்ளன.

**தோழி அறத்தொடுநிற்றல் நலமென உள்ளுதல்**

காப்புமிகுதிக்கண் ஆற்றாத தலைவி, தன் துயர் நீங்க தோழி அறத்தொடுநிற்றல் நலமென நினைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'காப்புமிகுதிக்கண் தோழி அறத்தொடு நிற்பாளாக, தனது ஆற்றமை தோன்றத் தலைமகள் தன்னுள்ளே கூறியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'கண்தர வந்த காம ஒள்ளெரி' எனத் தொடங்கும் குப்பைக் கோழியாரின் குறுந் -305ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'கண்ணில் தோன்றிய காதல் தன்னில் நிலைபெற்றதையும்

அதனால் தானுற்ற துயரினைப் போக்க, வரைவுடன் வந்து வருத்தத்தை நீக்குதலை அவரும் செய்திலர். குப்பைக் கோழியின் போர் போல் முடியுங் காலத்தன்றி முடிந்தாலன்றி, யானுற்ற நோய் களைவார் ஒருவரும் இல்லாமை தனக்கு இயலாமையைத் தருகிறது.' எனத் தலைவி தன்னுள் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்

'உய்த்தனர் விடாஅர் பிரித்திடை களையார்
குப்பைக் கோழித்தனிப் போர்போல
களைவோர் இலை யானுற்ற நோயே' (குறுந் -305:5-7)

என்புழி, குப்பைக் கோழியின் போரை வருத்தமும் மகிழ்வுமின்றி காண்போர்போல, தோழி தன் வருத்தத்திற்கு வருந்தாமலும், மகிழ்விற்கு வழிவகுக்காமலும் இருப்பதுகண்டு தலைவி வருந்தியுரைப்பது தெள்ளிது. தோழி தனக்காகக் குரவோரிடம் அறத்தொடு நின்றால் நலமென எண்ணுவதும் வெள்ளிடைமலை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தோழிக்கு அறத்தொடுநிற்றல்**

களவொழுக்கத்தின்போது தலைவனின் வருகையில் தடை ஏற்பட்டது. அதனால் வருந்திய தலைவி தன் குரவருக்கு அறத்தொடுநிற்குமாறு தோழியிடம் உரைப்பது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தோழிக்குத் தலைவி அறத்தொடு நின்றது' என்னும் துறைக்குறிப்பிற்கு அகநானூறு 82ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் அ) '...... நாடன் உருவ வல்விற் பற்றிஅம்பு தெரிந்து செருச்செய் யானை செல்நெறி வினாஅய்' (அகநா -82:10-12) என உரைக்குமிடத்து, தலைவனுக்கும் தனக்குமான நட்பு 'களிறுதரு புணர்ச்சி'யால் வந்ததெனத் தோழியிடத்து உரைப்பதும்,'ஒருசிறை மலர்தார் மார்பன் நின்றோற் கண்டோர் ........... நீர்வார் கண்ணொடு நெகிழ்தோ ளோனே' (அகநா -82:13-18) என்னுமடிகள்,'தலைவனைக் கண்டோரில் அவன் காதல் பார்வை தன்னை மட்டுமே நோக்கியதால் தான் மட்டும் காதலுற்று நோயுற்றேன்.' எனத் தலைவி உரைக்குமிடத்து, தன் ஆற்றாமைப் போக்க நீ அறத்தொடுநிற்றல் வேண்டுமெனத் தலைவி தோழியிடம் வேண்டுவது தெளிவு. இவ்வாறு இப்பாடலின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையோடு ஒன்றி விளங்குகிறது.

**உடன்போக்கு**

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவி பெற்றோர் அறியாது தோழியின் உதவியால் தலைவனுடன் தன் இல்லைவிட்டு நீங்கி வேற்றிடம் செல்லுதல் உடன்போக்குச் சூழலாகும். இச்சூழலில் தலைவி, உடன்போக உடன்பட்டதையும், உடன்சென்ற நிலையில் வழியில் வருவோரிடம் தன் தோழியர்க்குச் சொல்லிவிடுதல், மீண்டபின் தோழிக்கும் ஆயத்தார்க்கும் சொல்லிவிடுதல் போன்ற நிலைகளில் தன் உணர்வுகளை வெளிப்படுத்துவாள். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் பத்து பாடல்கள்[27] காணப்படுகின்றன. இப்பாடல்களின், துறைக்குறிப்புப் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவியின் வேட்கை மீதுற்றநிலை
- தலைவி தன் காதல் இனிமை சுட்டல்
- தலைவன் உடன் கொண்டு செல்லாவிடில் தன் எழில் நலமின்மையாக்குமெனல்
- தன் போக்கைத் தோழியர்க்கும் தாயர்க்கும் உரைக்க எண்ணல்
- தலைவியின் எழிலழிவு கண்டு தோழி வருந்தும்நிலையில்
- பெற்றோரால் மீட்டுவந்தநிலையில்
- தலைவிக்கு அவள் இல்லத்தில் இன்னல்கள் மிகுந்தநிலையில்
- தலைவன் உடன்கொண்டு செல்ல தவிர்த்தநிலையில்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன.இவற்றின்அடிப்படையில் 'நாண் அழிவு இரங்கல்' முதல் 'வழிவரல் வருத்தம் கண்டு வருந்திய தோழிக்குக் கூறல்' வரை ஏழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தமர் வந்துற்றவழி உதவிய மலையை வாழ்த்திக் கூறல்**

உடன்போன தலைவி மீண்டு வந்துற்றவழி, தோழி வழியில் நடந்தவற்றை வினவ, தலைவற்கு உதவிய மலையை வாழ்த்தித் தலைவி கூறல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'உடன்போயின தலைமகள் மீண்டுவந்துழி,'நின் ஐயன்மார் பின் தொடர்ந்து வந்த இடத்து நிகழ்ந்தது என்னை?' என்ற தோழிக்கு நிகழ்ந்தது கூறி, தலைமகன் மறைதற்கு உதவி செய்த மலையை வாழ்த்தியது' என்னும் துறைக்குறிப்பிற்கு ஐங்குறு -312ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

‘வாள்வனப் புற்ற அருவிக்

கோள்வல் என்னையை மறைத்த குன்றே.’ (ஐங்குறு -312:3-4)

எனப் பேராற்றல் மிக்க தலைவனை மறைத்த மலையைத் தலைவி வாழ்த்துகிறாள். இவ்வடிகள் தலைவன் போர்வீரன் என்பதும், மலை மறைத்தமையால் தன் ஐயர்களிடமிருந்து தலைவனையும், தலைவனிடமிருந்து தன்னையர்களையும் காத்தமையால் தலைவி அம்மலையை வாழ்த்தினாள் என்பதும் தெளிவு. இவ்வாறு இப்பாடலின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையோடு ஒன்றி விளங்குகிறது.

**வழிவரல் வருத்தம் கண்டு வருந்திய தோழிக்குக் கூறல்**

உடன்போகிய தலைவி மீண்டும் தம்மில்லத்திற்கு வந்திருந்தாள். அவளின் உடல் வாட்டங்கண்டு தோழி வருந்தினாள். தோழியின் வருத்தங் கண்ட தலைவி அவட்கு ஆறுதல் கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘உடன்போய் மீண்டுவந்த தலைமகள் வழிவரல் வருத்தம் கண்டு ஆற்றாளாகிய தோழிக்குச் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ஐங்குறு -392ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘வேய்வனப் பிழந்த தோளும் வெயில்தெற ஆய்கவின் தொலைந்த நுதலும் நோக்கிப்’ (ஐங்குறு -392:1-2) இவ்வடிகளில் தலைவியின் களைப்பு மிகுதியும்,‘பரியல் வாழி தோழி பரியின் எல்லைஇல் இடும்பை தரூஉம் நல்வரை நாடனொடு வந்த மாறே’ (ஐங்குறு -392:3-5) என அமையும் அடிகள் தலைவனுடனான வழிவந்த துன்பமும், தலைவியைக் கண்ட தோழி துன்பமுறுவதைக் கண்ட தலைவி நீ வருந்தாதே என உரைப்பதும் பொருண்மையாக அமைகின்றன. இங்கு தோழியின் பரிவு இல்லத்திலுள்ளார்க்கும் துன்பம் விளைவிக்கும் என்பதை நினைத்துருகினாள் என்பது புலப்படுகிறது. இவ்வாறு, இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையை விளக்குவதுடன் துறையையும் சுட்டுகிறது.

**வரைவு**

களவுத் தலைவி, தலைவன் தன்னை மணந்து கொள்வானோ என அஞ்சியிருத்தலும், அஞ்சிய தோழிக்கு தலைவன் மணக்கும் திறம் குறித்து கூறலும், தலைவனின் வரைவுத் துணிவு குறித்து வினவிய தோழியிடம் உரையாடலும் எனத் தலைவியின் கூற்று மொழிகள் அமைவது வரைவுத் துறையாகும். இத்துறை தலைவியின் வரைவினை எதிர்நோக்கிய மகிழ்வுணர்வும் அச்சவுணர்வும் கலந்த துறையாக அமைகிறது. இப்பொருண்மையில் ஏழு

பாடல்கள்[28] காணப்படுகின்றன. இப்பாடல், துறைக்குறிப்பகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- காமமும் நாணமும் செறிவுற்றநிலை
- தலைவனின் காதல் நினைந்து தலைவி காத்திருந்த நிலை
- தன் ஆற்றாமை கண்டு தோழி வருந்தியநிலை
- தலைவியின் ஐயத்தை தோழி போக்கியநிலை
- தோழி தலைவனை வரைந்து கொள்ள வலியுறுத்திய நிலை

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின்அடிப்படையில்,'வரையும் திறம் தெளிதல்' முதல் 'வரைவு மலிதல்' வரை ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

**வரையும் திறம் தெளிதல்**

தலைவன் வரைவானோ என அஞ்சியிருந்தாள் தோழி. அந்நிலையில் தலைவன் தோழிக்குத் தன் வரைவு குறித்த சிந்தையைக் கூறித் தெளிவிக்க, தெளிந்த தலைவி கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'களவு நீடுவழி, வரையலன் கொல்? என்றஞ்சிய தோழிக்குத் தலைமகன் வரையுந் திறம் தெளிக்க, தெளிந்த தலைமகள் சொல்லியது.' என்ற துறைக்குறிப்பிற்கு 'அம்ம வாழி தோழி பாசிலைச்' எனத் தொடங்கும் ஐங்குறு -112ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'தலைவன் தானே வரைதலை மேற்கொள்வான். அவன் முன்பு கூறிய தேறுதல் மொழிகளை நாம் தான் மறந்தொழிந்தோம்.' எனத் தலைவி கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,'... நாமே மறந்தோம் மன்ற நாணுடை நெஞ்சே'(ஐங்குறு -112:3-4) என்புழி, தலைவன் முன்பு கூடலின்போது தலைவியைத் தலையளி செய்து வரைவு கூறிச் சென்றமையும், அதனைத் தோழியர் இருவருமே மறந்தமையும் தெளிவு. மறந்தமைக்குக் காரணம் தம் நாணுடைமையே எனவும் தலைவி உரைப்பதும் வெள்ளிடை. '... சேர்ப்பன் தான் வரக் காண்குவம் நாமே' (ஐங்குறு -112:2-3) என்புழி, தலைவன் சொல் மாறுவானல்லன். அவன் தானே வந்து வரைதலை மேற்கொள்வான் எனத் தோழியிடம் உரைக்குமிடத்து, தலைவன் தோழியிடமே தெளிவித்திருக்கிறான் என்பதும், அத்தெளிவின் பின் தலைவனின் முந்தைய தேறுதல் மொழிகள் தலைவியின் சிந்தைக்கு வந்தன என்பதும், மறந்தது

தன் தவறு மட்டுமல்ல நின்னையும் சார்ந்தது எனத் தலைவி தோழியையும் இணைத்துக் கொண்டதும் இத்துறையை விளக்குவனவாகும்.

**வரைவு மலிதல்**

தலைவியின் ஆற்றாமையைக் கண்டு தலைவன் வரைவு மலிதலும், தோழி வரைவு மலியச் செய்தலும் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘வரைவு மலிந்தவழித் தோழி நன்கு ஆற்றினாய் என்றாட்குக் கிழத்தி சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு அமைந்த பாடலில்(குறுந் -361) ‘இல்உய்த்து நடுதலும் கடியா தோளே’(குறுந் -361:6) என்புழி, தலைவன் தலைவியின் இல்வந்து வரைவு பேசிச் சென்றமையால், தாய் தலைவியின் செயலைக் கடியாதிருக்கின்றாள் என்பது விளங்கும். ‘… அன்னைக்கு உயர்நிலை உலகமும் சிறிதால் ….’(குறுந் -361:1-2) என்புழி, தலைவியின் தாய் தொட்டதற்கெல்லாம் குறை காண்பவள் என்பதும், அவள் தலைவியின் செயற்கு கடியாதிருந்தமைக்கு, தலைவனின் வரைவு மலிவே காரணம் என்பது வெள்ளிடைமலை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**மலிவு**

தலைமக்கள் கொடுப்போரின்றியும், கொண்டுதலைக் கழிந்தும் வரைந்தபின், இருவரும் இல்லுறைந்து இன்புற்றிருத்தல் மகிழ்தலாகும். இதனைப் பேராசிரியர் *“மலிதல் என்பது இல்லொழுக்கமும் புணர்ச்சியும் முதலிலாயவற்றால் மகிழ்தல்”*[29] என உரைப்பர். இம்மலிவுச் சூழலில் தலைவி, தலைவனால் கிடைக்கப்பெறும் இன்பத்தை நினைத்தும், இன்புற்றிருக்கும் நிலை குறித்தும், தன் வேட்கையைப் புலப்படுத்தியும், தன்னால் கிடைக்கப்பெறாத இன்பம் தலைவற்குக் கிடைத்தமையால் மகிழ்வுற்றும் தலைவி தன்மொழிகளை வெளிப்படுத்துவாள். இச்சூழலில் தலைவி தன்னுடைய மகிழ்ச்சி மட்டுமல்லாது தலைவன் பெறுமின்பத்தை நினைத்து இன்புறும் தன்மையினள். இம்மலிவுப் பொருண்மையில் ஏழு பாடல்கள்[30] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தன் காதலைத் தலைமகற்கு உணர்த்துதல்
- தலைவனுடனான கூட்டமிகுதியை விரும்பும் நிலை

- தலைவனின் மாறா காதலை நினைத்திருத்தல்
- நற்சொல் கேட்டு இன்புற்றிருத்தல்
- தலைவன் நெஞ்சிற்கு அணிமையராய் காதலினையுடையவன் எனல்
- தலைவனின் உணர்வை மதித்தொழுகும்நிலை
- தோழியின் துணையொடு வரைவு நிகழ்ந்திருத்தல்

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினஅடிப்படையில் காமம் மிக்க கழிபடர் கிளவி முதலாக துணைகொண்டு ஏழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**காமம்மிக்க கழிபடர் கிளவி**

பொருள்வயிற் பிரிந்து மீண்ட தலைவனுடன் தலைவி இன்புற்றிருந்தாள் தலைவி. பொழுதுபுலரும் வேளையை உணர்த்தியது சேவல். காமம் பெருகிய நிலையிலிருந்த தலைவி, தலைவனுடனான இனிய துயிலை நீடிக்கவிடாது செய்த அச்சேவலைக் கடிந்துரைத்தல் இத்துறையாகும். இதனை நக்கீரனார் *“காமமென்பது வேட்கை, மிகுதலென்பது பெருகுதல், கழியென்பது சிறத்தல், படர் என்பது நினைத்தல், கிளவியென்பது சொல்: வேட்கைமிக்குச் சிறப்பச் சிந்தித்துச் சொல்லுஞ் சொல்”*[31] எனவும் மொ.அ.துரை.அரங்கசாமி,*“காமம் என்பதனை ஒன்றுகூடி நிறைவு எய்துதற்குரிய இருபாலர் ஒன்றுபட்டு நிறைவெய்தும் ஒழுக்கம்”*[32] எனவும் வரையறைத்துரைப்பர். இத்துறையிலமைந்த ‘பொருள்முற்றி வந்த தலைமகனை உடைய கிழத்தி காமம் மிக்க கழிபடர் கிளவியால் கூறியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந்தொகை 107-ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,‘பிள்ளை வெருகிற்கு அல்குஇரை ஆகி கடுநவைப் படீஇயரோ நீயே ……….’(குறுந் -107:4-5) என்னுமடிகளில், பெடையுடன் வலிந்து புணரும் சேவலின் செயலைச் சுட்டிக்காட்டும்வழி, தலைவியின் வேட்கைப்பெருக்கையும், அச்சேவலுக்கு அவள் கூறும் தண்டனை, அவளின் ஆற்றொண்ணா துயரையும் புலப்படுத்துகிறது. ‘…… நெடுநீர் யாணர் ஊரனொடு வதிந்த ஏம இன்துயில் எடுப்பி யோயே’(குறுந் -107:5-7) என்புழி, பொருள்வயிற் பிரிந்து வந்த புதுவருவாயினையுடைய தலைவனொடு தலைவி வதிந்திருந்தாள் என்பது தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையைச் சுட்டுகிறது.

**பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவையால் தலைவி உவந்து கூறல்**

தலைவன், முதல் மனைவி இருக்கும்பொழுது தம் குடிப் பெருமைக்கு ஒத்தாள் ஒருத்தியை வதுவையயர்ந்து அழைத்து வந்தனன். அப்பொழுது 'எம் நலம் சிறக்கவந்த இவ்வினியாள் நும்மினும் எமக்கினியள்' எனத் தலைவி உவந்து கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பின்முறை ஆக்கிய பெரும்பொருள் வதுவை முடித்தவளை இல்லத்துக் கொண்டு புகுந்துழி, தலைமகள் உவந்து சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு ஐங்குறு -292ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்

'நின்னினும் சிறந்தனள் எமக்கே நீநயந்து
நன்மனை அருங்கடி அயர
எம்நலம் சிறப்பயா மினிப்பெற் றோளே' (ஐங்குறு -292:3-5)

எனத் தலைவனின் மறுமுறை வதுவையால் தலைவி மகிழ்வது, மகப்பேற்றிற்காகவே தலைவனின் மறுவதுவை நிகழ்ந்தது. தன்மேல் தலைவனின் காதல் என்றும் நிலையானது என்ற தலைவியின் நினைவு போன்றவை புலப்படுகின்றன. இப்பாடலும் துறையின் பொருண்மையை விளக்குகிறது.

**பூப்பு**

கற்புக்காலத்தில் தலைமக்கள் கூடியிருந்த இரவுப் பொழுதில், கூடல் நீட்டிக்காதவாறு தலைவிக்குப் பூப்புத் தோன்றியது. இப்பூப்பினைப் *"பெண் உடல்ரீதியாகக் குழந்தைப் பருவத்திலிருந்து கருத்தரிக்கும் தகுதியை அடைகிற நிலைக்கு மாறிச் செல்வதைக் குறிப்பது பூப்பு (ரீடிநசவல) இது முதல்நிலை"*[33]என்பர் ராஜ் கௌதமன். இப்பூப்பு நிகழும் காலங்களில் தலைமக்களிடையே கூடுதல் நிகழா. எனினும்,*"பூப்பின் புறப்பா டீரறு நாளும் நீத்தகன் றுரையா ரென்மனார் புலவர்"*[34]எனத் 'தலைமக்கள் பிரிதற்கூடாது' என்னும் பொருள்படுமாறு தொல்காப்பியர் உரைத்திருப்பர். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் ஒரு பாடல்[35] அமைந்துள்ளது. இப்பாடல், துறைக்குறிப்பினை ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழலாக, தலைவனுடன் கூடாமை நிகழுமோ என்ற அச்சவுணர்வு தோன்றுதல் அமைகிறது.

**பூப்பிடைப் பிரிவு**

பூப்புக் காரணமாகப் பிரிவு நிகழுமோ என்ற அச்சவுணர்வு தலைவியின் உள்ளத்தில் தோன்றி, அதனைத் தன்னுள்ளே கூறிக்கொள்வது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பூப்பு எய்திய தலைமகள் உரைத்தது.' என்னும் துறைக்குறிப்பிற்கு,'கோழி குக்கூ என்று கூவிற்று. எனது தோளை மணந்த காதலரைப் பிரியச் செய்யும் வாளைப் போல வைகறைப் பொழுது வந்தது. அதனால், என் தூய நெஞ்சம் துட்கென அச்சம் கொள்கிறது' எனத் தலைவி கூறும் பொருண்மை கொண்ட குறுந் -157ஆம் பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலின் பொருண்மை நேரடியாகப் பூப்பினைக் குறிப்பிடவில்லை. எனினும் உரையாசிரியர்களும் துறையாசிரியர்களும் பூப்பிடைப் பிரிவாகக் குறிப்பிட்டுள்ளனர். அதற்கு 'வைகறை' என்ற சொல்லை 'வை கறை' எனப் பிரித்து,'வைதற்கு உரிய பூப்பு' என உரையாசிரியர்கள் பொருள் கொண்டும்,'தூய நெஞ்சம்' என்ற தொடருக்கு 'உடல் தூய்தலில்லாமையை உணர்த்தும்' எனவுரை கொண்டும் துறைக்கேற்ப பொருள் வரைந்துள்ளனர். இப்பாடலில்,'தோள்தோய் காதலர் பிரிக்கும்' (குறுந் -157:3) என்புழி 'உடனிருக்கும் காதலர் பிரிதற்குரிய பிரிவு, பூப்பிடைப் பிரிவு' என்பதை உய்த்தறிய முடிகிறது. இவ்வாறு இப்பாடல்,துறைக்குறிப்புடன் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**ஊடல் புலவி துனி**

தலைவன் தன் பரத்தமையொழுக்கத்தை மறைத்தோ மறுத்தோ ஒழுகும் காலங்களில் தலைவி கொள்ளும் சிறு பிணக்கம் ஊடல் ஆகும். தலைவனின் இச்செயல்கள் தலைவியை மனக்கலக்கமடையச் செய்யும். அதனைத் தலைவி தலைவனிடம் நேரடியாக வெளிப்படுத்துதல் உணர்த்த உணரும் ஊடல் ஆகும். தலைவி தலைவனை வெளிப்படையாக ஏற்றுக்கொண்டு, பின் பிறர் கூறுவதாகக் கூறியும், பரத்தையர்க்குப் பரிந்து பேசுவதுபோல் பேசியும், தன் மனக் குமுறலை மறைமுகமாக உணர்த்துவது வெளிப்படுத்தா ஊடலாக அமைகிறது. இந்நிலைகளை நோக்குமிடத்து ஊடல் காலங்களில் தலைவி தன் உள்ளத்தில் பெரும் போராட்டத்தைத் தன்னுள்ளே நிகழ்த்துவது சங்கப் பாடல்கள்வழி அறியமுடிகிறது.

தலைவி, தன் ஊடலை நேரடியாக உணர்த்துமிடமாக வாயில் மறுத்தல் அமைகிறது. இது புறத்தார்க்கும் புலப்படுகிறது. தலைவன், தன் புதல்வன் வாயிலாக வாயில் புகுந்தநிலையிலும், விருந்துவாயிலாக வாயில் புகுந்தநிலையிலும் தலைவி தன் ஊடலைத் தலைவன் மட்டுமே உணரும்வண்ணம் வெளிப்படுத்தும் தன்மை உள்ளது. இவ்வூடலினால் வெளிப்படும் உணர்வைப் 'புலத்தல்' எனவும்: இவ்வூடலின்போது தலைவியின் கோபம் மிகுதியாகவும், உணர்வு மிக்கதாகவும் அமையும் நிலையினை 'துனி' எனவும் பகுக்கமுடிகிறது.

**சங்க இலக்கியத்தில் ஊடல்**

சங்க இலக்கியத்தில் ஊடற்பொருண்மையினுள், தலைமகள் ஊடல் கொள்ளும் வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயிற்புகுதல் போன்ற சூழல்களில் தலைவியின் கூற்றுமொழிகளாக 102 பாடல்கள் அமைகின்றன. தலைவி ஊடல்கொள்ளும் பொருண்மையில் முப்பத்தைந்து பாடல்கள்[36] காணப்படுகின்றன. ஆனால், தலைவி ஊடல்கொள்ளும் பொருண்மையில் நாற்பத்தேழு பாடல்கள் உள்ளன எனவுரைப்பர் க.மோகன். அவற்றுள், கலித்தொகையில் அமைந்த பத்துப் பாடல்களும் (80, 82-85, 93, 95-98): ஐங்குநூற்றில் 82ஆம் பாடலும் வாயில் மறுத்தல் துறையிலும் 292ஆம் பாடல் பின்முறையாக்கிய பெரும்பொருள் வதுவையினால் தலைவி உவத்தலாகிய 'மலிவு' பொருண்மையிலும் அமையும். வாயில் மறுத்தல் துறையில் ஐம்பது பாடல்களும்[37] வாயில் நேர்தல் துறையில் பதினொரு பாடல்களும்:[38] வாயிற் புகுதல் துறையில் ஆறு பாடல்களும்[39] இவ்வூடல் பொருண்மையில் அடங்கும். அப்பாடல்களின் பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மைகளை ஆராயின் இவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவன் பரத்தையுடனான நட்பை தலைவி அறிந்து வருந்துதல்
- ஆடவர் இயல்புதனை தோழி அறிந்திருத்தல்
- தன்னுடன் இருக்கையிலும் தலைவன் பரத்தையுடன் தொடர்பு கொண்டதை எண்ணி வருந்துதல்
- தலைவி, பரத்தையருடனான தலைவன் கொள்ளும் உறவுக்கும் பாணனே துணைநிற்றலால் தலைவி வருந்துதல்
- தலைவன் தலைவியுடனான கூடலை விரும்பி இல்லம் வருதல்
- தலைவன் பரத்தையருடன் நெடிதிருத்தல்
- இளைய பரத்தையரிடத்தில் கொண்ட உறவினை தலைவன் மறைத்தல்

- தலைவன் தனித்துப் புனலாடியபோது தலைவி வருந்துதல்
- சூளுரைக்கு மாறாக தலைவன் புற உறவு கொண்ட நிலையில் வருந்துதல்
- யாரையும் அறியேன் எனக் கூறும் தலைவனின் பொய்மை
- தலைவன் தெளியச் செய்தமையைத் தலைவி விலக்கல்

என்பன தலைவி ஊடல் கொள்ளும் நிலையிலும்,

- தலைவன் தனக்கு இன்பம் தராமல் பரத்தையுடன் இணங்கியிருத்தல்
- தலைவன் பரத்தைமை காரணமாகத் தன்னிலிருந்து வேறாயினான் எனத் தலைவி வருந்துதல்
- தலைவனைக் கவருந்தன்மை பரத்தையிடம் உள்ளதெனத் தலைவி வருந்துதல்
- தலைவன் தன்னைச் சார்ந்தார் எவருக்கும் நலம்புரியாது தன்னலம் பேணும்நிலை
- தலைவனின் இயல்புரைத்த வாயிலோர்க்கு எதிர்மொழிதல்
- தலைவனின் பொய்மைத் தன்மையை தலைவி அறிந்திருத்தல்
- தலைவனின் பிரிவால் தன் நெஞ்சம் உடைந்தமையைக் கூறல்
- தலைவனின் இயல்பு கூறிய தோழியிடம் பிற பரத்தையரை மணக்கும் இயல்பினனெனத் தலைவி கூறல்
- தலைவன் நிலைமாறும் இயல்பினனென உரைத்தல்
- தன்னையும் தன் மகனையும் துறந்து, காமம் துணிந்து சென்றானென வெறுத்துரைத்தல்
- தலைவனுடன் இணைந்த பரத்தையரின் இயல்புரைத்தல்

என்பன தலைவி வாயில்மறுத்த நிலையிலும்,

- யாரையும் அறியேன் என்றானிடம் நின் பரத்தையரை அறிவேனெனத் தலைவி சினந்துரைத்தல்
- தலைவன் தன்னுடன் இருக்கும்பொழுதும் பரத்தையருடன் நீராடியதை நினைத்து ஊடுதல்
- தலைவன் மேல் தலைவியின் உயர்சிந்தனை
- வாயில்நேரக் கூறுதல்
- தன் தோள் ஆற்றாமை கூறல்
- தன் நெஞ்சு அவன்பால் சென்றமையைக்கூறல்

- தலைமகன் கொடுமை கூறியாட்கு அவன் இயல்புரைத்தல்

என்பன வாயில்நேர்தல் நிலையிலும்,

- பரத்தையின் முயக்கத்தை விரும்புவோன் நீயென இடித்துரைத்தல்
- கூடியபொழுதும் முன்பு நிகழ்ந்தமை நினைத்து தலைவி வருந்துதல்
- பாணனின் இயல்புரைத்து நகையாடல்
- தலைவன் ஆற்றாமை கண்டு மனம் நெகிழ்ந்ததெனல்
- தான் தனிமையுற விரும்பாமையைக் கூறல்

என்பன வாயில்புகுந்த நிலையிலும் பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவ்வாறு தலைவி ஊடல் கொள்ளும் பொருண்மையிலமைந்த முப்பத்தைந்து பாடல்களின் பொருண்மையையும் துறைக்குறிப்புகளின் பொருண்மையையும் நோக்கி இருபத்திரண்டு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**செல்லாக் காலைச் செல்கென விடுத்தல்**

தலைவன் ஒரு பரத்தையை மணந்து பின் கைவிட்டு மீண்டும் புதிய பரத்தையை நாடி மணந்துகொண்டான் என்ற செய்தியை அறிந்திருந்தாள் தலைவி. இல்லத்திற்கு வந்த தலைவனிடம் தான் அறிந்திருந்ததை ஆதாரத்துடன் கேட்டாள். அது கேட்ட தலைவன் இந்நிகழ்ச்சியை இனி மறைத்தலரிது என்றுணர்ந்தான். ‘அப்பிழையை இனி செய்யேன் பொறுத்தருள்க’ என்று பணிமொழி கூறி மருட்டினான். அதுகேட்ட தலைவி,‘நீ பொய் கூறுவதில் வல்லை. நீ நாள்தோறும் புதிய புதிய பரத்தையரைத் தேடி மணப்பதையே தொழிலாகக் கொண்டுள்ளனை; அத்தொழில் நினக்கேற்றதே, எம்மை மருட்டற்க ஆண்டே செல்க’ என்று ஊடுதல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த ‘வதுவை யயர்ந்தாளொடு பரத்தையை சின்னாளில் விட்டு மற்றொரு பரத்தையை வதுவையயர்ந்தான் என்பதறிந்த தலைமகள் அவன் மனைவயிற் புக்குழிப் புலந்தாளாக, இது மறைத்தற்கரிது எனவுடம்பட்டு இனி என்னிடத்து இவ்வாறு நிகழாது என்றாற்கு அவள் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு, ஐங்குறு-61, 62 என்ற இரு பாடல்கள் காணப்படுகின்றன. அவற்றில், ஐங்குறு 61ஆம் பாடலில் பணிமொழி விளம்பிய தலைவனை நோக்கி,‘நல்லோர் நல்லோர் நாடி வதுவை யயர விரும்புதி நீயே’(ஐங்குறு -61:4-5) எனத் தலைவி பதிலுரைப்பதாக அமைகிறது. இப்பாடலில் முதல் இரண்டடிகளை,

பொ.வே.சோமசுந்தரனார் *“நறுவடி மாஅத்து விளைந்துகு தீம்பழம், அதற்கு உரிமையுடையோர்க்குப் பயன்படாமல் பொய்கையில் வீழ்ந்து ஆங்குவாழும் மீன்கட்கே இரையாதல் போன்று நீயும் இல்லறவுரிமையுடைய எனக்குப் பயன்படாமல் பரத்தையர் சேரியிற் சென்று ஆண்டுறையும் பரத்தையர் பலர்க்கும் பயன்படுவாயாயினை என்பது உள்ளுறையாகக் கொள்க. பரத்தையர் தொடர்பால் ஊரலர் எழுகின்றதென்றறிதற்குத் தீம்பழம் பொய்கையில் துடும் ஒலியை உண்டாக விழும் என்றாள்”*[40] என உரைக்குமிடத்தும் இத்துறை விளங்கும்.

இத்துறையிலமைந்த ஐங்குறு -62ஆம் பாடலின்,

‘இவ்வூர் மங்கையர்த் தொகுத்தினி

யெவ்வூர் நின்றன்று மகிழ்நநின் றேரே’ (ஐங்குறு -62:3-4)

இவ்வடிகள், தலைவன் தன்னூரிலுள்ள பரத்தையருடன் மட்டுமல்லாது வேற்றூரிலுள்ள பரத்தையருடனும் அலாவி மகிழுங் கொள்கையுடையவன் என்பதும் தெளிவு. இவ்வாறு இப்பாடல்கள், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள்ளும் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

**யாரையும் அறியேன் என்றாரிடம் புலத்தல்**

தலைவி, தலைவனின் பரத்தைமை எண்ணிப் புலந்திருந்தாள். தலைவன் அவள் புலவி நீக்க ‘யாரையும் அறியேம்’என்றுரைக்க, அவனுக்கு ‘நின் மார்பினில் துயிலும் இன்பம் பெறாது வருந்தும்நிலையில் தெருவழியில் செல்லும் அப்பரத்தையைக் கண்டேன்’ எனத் தலைவி உரைக்கும் பொருண்மை கொண்டது. இத்துறையிலமைந்த,‘பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் ‘யாரையும் அறியேன்’ என்றாற்குத் தலைவி சொல்லியது. வாயிலாகப் புக்க தோழி தலைவிக்குச் சொல்லியதூஉம் ஆம்’ என்ற துறைக்குறிப்புகளுக்கு நற் -20ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் தலைவி, தலைவனிடம் நின்னொடு முன்னர்ப் பிணிப்புற்ற பரத்தையைக் கண்டேன்; அவள் வாழிய! எனத் தலைவி உரைக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் ‘பூப்போல் உண்கண் பெயர்ப்ப நோக்கிச் சென்றனள் வாழிய மடந்தை’ (நற் -20:6-7) என்புழி, தலைவன் பரத்தையுடன் இல்லை. பரத்தை தனித்து, துனித்து சென்றனள். அதனைத் தலைவி கண்டனள் என்பதும் தெளிவு.

இப்பாடலுக்கு இரு துறைக்குறிப்புகள் வரையப்பட்டுள்ளன. முதல் துறைக்குறிப்பு, தலைவியின் ஊடல் மொழிகளாகவும், இரண்டாம் துறைக்குறிப்பு,

வாயிலாக வரும் தோழியின் மொழிகளாகவும் அமையும் பொருண்மையில் அமைந்துள்ளன. இப்பாடலின் பொருண்மையை நோக்குமிடத்து, தலைவியின் ஊடல் மொழிகளாக அமைகின்றன. வாயில்நேர வரும் தோழியின் மொழிகள், தலைவன் பரத்தையுடன் துய்த்திருந்த நிலையைப் புனைந்து கூறும் இயல்பிலிருக்கின்றன. இவ்வாறிருந்தால் தலைவியின் ஊடல் மிகுமேயொழிய எவ்வாறு நீங்கும். தலைவனிடம் புலக்கும் உரிமை இருவருக்கும் உண்டெனினும், இப்பாடலின் பொருண்மை தலைவியின் புலத்தல் மொழிகளாகவே அமைந்துள்ளமை தெளிவு. இந்நிலைகளை நோக்கின் இப்பாடல், முதல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த 'பரத்தையர் சேரியினின்றும் வந்த தலைமகன்,'யாரையும் அறியேன்' என்றாற்குத் தலைமகன் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நாயுடை முதுநீர்க் கலித்த தாமரைத்'எனத் தொடங்கும் அகநா -16ஆம் பாடல் அமைந்துள்ளது. இப்பாடலில்,'நீயும் தாயை இவற்கென யான்தற் கரைய'(அகநா 16:13-14) என்புழி, தலைமகனின் முந்தைய ஒழுக்கத்தை நினைவுகொண்டு தலைவி புலந்துள்ளமையும், அப்பரத்தை தலைவன்மீது மாறாப் பற்றுக் கொண்டவள் என்பதும் தெளிவு. '…மகிழ்ந! வானத்து அணங்கருங் கடவுளன் னோள்நின்'(அகநா -16:17–18) என்புழி, பரத்தை நிறைகற்பினள் என்பதும், தலைவன் பொய்யுரைத்தமையால் தலைவி புலந்துள்ளாள் என்பதும் வெள்ளிடைமலை. இவ்வாறு இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தெளிவிடை விலக்கல்**

தலைவன் தன்பால் பரத்தைமை இல்லையென்று தலைவியிடம் கூறித் தெளிவிக்குங்காலத்து, தலைவி அதனை ஏற்காது விலக்கல் இத்துறையாகும். இதனை உ.வே.சாமிநாதையர் *"தெளிவு - தலைவன் தான் யாதொரு குற்றமும் செய்யாமையை ஏதுவானும் சூளினாலும் தலைவியைத் தெளியச் சொல்லுதல். விளக்கியது - தலைவி மாறுபட்டது."*[41]என விளக்கியுரைப்பர். இத்துறையிலமைந்த 'கற்புக் காலத்துத் தெளிவிடை விலக்கியது. இனித் தோழி, வரைவு நீட்டித்தவழி வரைவுகடாயதூஉமாம்' என்ற துறைக்குறிப்புகளுக்கு,'சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டிற்' எனத் தொடங்கும் குறுந் -169ஆம் பாடல் 'தலைவ, நும் சொற்களை மெய்யென நம்பி சிரித்துப் பேசிய எம் பற்கள் வெம்பாறையில் குத்திய யானைத்

தந்தம்போல் இற்று வீழ்வதாக. பற்றுக்கொண்ட எம் உயிர், பாணர் தாம் பிடித்த புதிய மீன்களை இட்டு வைத்து உகுத்த மட்கலம்போல் வெறுப்பை நல்கியது. யாம் நும்மைப் பெறேமாய் அழிவதாக' எனத் தலைவி புலந்து கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடல் 'மற்றுயாம், எமக்கும், எம்முயிரே' என்ற தன்மைப்பன்மை சொற்களால், வரைவுகடாவும் தோழி கூற்றாயும் கொள்ளப்பெறுகிறது. எனினும், தலைவி தலைவனிடம் நேரிடையாக மொழியுந்தன்மை காணப்படுகிறது. அதாவது, தலைவன் தன்மீது தவறில்லையெனக் கூறத் தலைவி இருக்குமிடம் இருத்தல் வேண்டும். இப்பாடலிலும், அருகிலுள்ளோரிடம் கூறுவதுபோல் அண்மைச் சொற்களாக அமைந்துள்ளன. 'பாணர் பசுமீன் சொறிந்த மண்டைபோல' (குறுந் - 169:4) என வாயில்களாகும் பாணரின் வாழ்வியல் செயல் குறித்த உவமையை நோக்குமிடத்தும் இப்பாடல் கற்பின் நிகழ்வாகக் கொண்டு முதல் துறைக்குறிப்பின் பொருண்மையுடன் ஒத்துள்ளமையையும் அறியமுடிகிறது. இந்நிலை நோக்கின் இப்பாடல், முதல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. தன்மைப்பன்மை சொற்களால் இரண்டாம் துறைக்குறிப்பின் பொருண்மைக்குள்ளும் அமைகிறது.

**வாயில்மறுத்தல்**

வாயில்மறுத்தல் துறையிலமைந்த ஐம்பது பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மையையும் நோக்குமிடத்து,'தலைவனின் புறத்தொழுக்கம் கூறல்' முதல் 'தலைவனின் அன்பினைக் கூறியாட்கு அவன் பொய்யன் என அங்கலாய்த்துக் கூறல்' வரையிலான இருபத்து நான்கு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**ஆள்வினை குறித்து பிரிந்தவழி, ஆற்றாமை கூறி வாயில்மறுத்தல்**

தலைவன், சமூகக் கடமை காரணங்களுக்காகத் தலைவியைப் பிரிந்தனன். அப்பொழுது இல்லம் வந்த பாணன் தலைவியின் மேனி மெலிவைக் கண்டு, சின்னாள் பிரிந்தமைக்கு ஆற்றாது இங்ஙனம் வருந்தி மெலிதல் தகாது என்றுரைத்தனன். பாணனின் இம்மொழிகளுக்குத் தலைவி தன் ஆற்றாமையைக் கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வாயிலாகப் புகுந்த பாணன் தலைமகள் தோள் மெலிவு கண்டு,'மனைப்புறத்துப் போய் வந்த துணையானே

இவ்வாறு வேறுபடுவது தகாது' என்றாற்கு அவள் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'யான்எவன் செய்கோ பாண ஆனாது
மெல்லம் புலம்பன் பிரிந்தென
புல்லென் றனஎன் புரிவளைத் தோளே' (ஐங்குறு -133)

என்னும் பாடல் அமைகிறது. இப்பாடலில், தலைவன் பிரிந்துள்ள மெலிவுதான் தலைவியிடம் காணப்படுகிறதே தவிர, தன் அன்பினை வெறுத்து, பிற பெண்டிர்பால் காமம் கொண்டுள்ளான் என்னும் மனக்கலக்கம் இல்லை என்பது தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தன் அயன்மை கூறல்**

புறத்தொழுக்கம் மேற்கொண்ட தலைவனுக்காகத் தோழி வாயில் நேரக்கருதி,'நீ பரத்தைமை மறந்து ஏற்றுக் கொள்ள வேண்டும். இவ்வாறு புலத்தல் தகாது'எனக் தலைவியை வலியுறுத்தினாள். அதற்குத் தலைவி 'அன்பில்லாதாரிடத்து புலத்தலால் என்ன பயன்?' எனக் கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வாயிலாகப் புக்கத் தோழிக்கு வாயில் மறுத்தது.' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'நன்னலம் தொலைய நலம்மிகச் சாஅய்
இன்னுயிர் கழியினும் உரையல்அவர் நமக்கு
அன்னையும் அத்தனும் அல்லரோ?
புலவிஅ∴து எவனோ அன்பிலங் கடையே?' (குறுந் -93)

எனத் தவைி அன்பில்லா இடத்தில் புலத்தலும் அறிவுடைமையன்று எனத் துயர்கொள்ளும் பாடல் அமைகிறது. இப்பாடலில் முதல் இரு அடிகள் தலைவன் பிரிந்துள்ளமையால் தலைவிக்கு ஏற்பட்ட மனச்சோர்வையும், அடுத்த இரு அடிகள் நெடுநாள் பிரிந்திருந்து பரத்தைக்கு உரியவனாகி, தனக்கு அயன்மையானதைத் தலைவி தோழிக்கு உரைப்பதும் தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தனக்கு வேறு மகப்பேறு வேண்டாமெனல்**

பரத்தையிற் பிரிந்த தலைவனுக்காகத் தோழி தலைவியிடம் அவளின் கருவுறு காலத்தைக் காரணங் காட்டி வாயில் வேண்டி நின்றாள். அவளுக்குத் தான் களவுக் காலத்திலே பைஞ்சாய்ப் பாவையை மகப்பேறாகப் பெற்றவள். இனி வேறொரு மகப்பேறு தேவையில்லை எனக் கூறி வாயில்மறுத்தல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த 'பல வழியானும் வாயில் நேராளாகிய தலைமகள்,'மகப்பேற்றுக்கு உரித்தாகிய காலம் கழிய ஒழுகுகின்றாய்' என நெருங்கிய தோழிக்குச் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு,'வெள்ளாங் குருகின் பிள்ளை இறந்ததென மடப்பம் பொருந்திய நாரை பதைபதைத்து துடித்தமையால் அருகிலுள்ள நெய்தல் மலர்கள் சிதைவுற்றது. அம்மலர்கள் கழி வெள்ளத்தொடு இடம்பெயர்ந்து சென்றது. அந்நிலத்தின் தலைவன் பொருட்டாக யான் பைஞ்சாய்ப் பாவையை மகவாகப் பெற்றேன்'எனத் தலைவி தோழியிடம் வாயில்மறுக்கும் பொருண்மை கொண்ட ஐங்குறு -155ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,'பைஞ்சாய்ப் பாவை ஈன்றனென் யானே'(ஐங்குறு -155:5) என்புழி, தலைவி கருவுறுங்காலத்தில் உள்ளாள். எனினும் தலைவனின் பரத்தைமை காரணமாக அவனுக்கு வாயில் நேராது அவனால் பெறலாகும் மகப்பேற்றையும் விரும்பாதிருக்கிறாள் என்பதும் தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் நேர்தல்**

தலைவி வாயில் நேர்தல் பொருண்மையிலமைந்த பதினொரு பாடல்களின் பொருண்மையையும், துறைக்குறிப்பின் பொருண்மையையும் நோக்குமிடத்து,'வாயில் நேர வருவானென அஞ்சியிருத்தல்' முதல் 'பரத்தமையை அறிவேன் எனப் புலத்தல்' வரையிலான பத்துத் துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தன் தோள் ஆற்றாமை கூறி வாயில் நேர்தல்**

பரத்தைமை ஒழுக்கம் பூண்ட தலைமகன் தன் மனைவியைக் கூட விரும்பினான். அதற்காக, பாணன், விறலி முதலியோரைத் தூதாக அனுப்பினான். தலைமகள் அவர்களுக்கு வாயில் மறுத்தாள். இது தகாதெனக் கடிந்துரைத்தான் தலைவனின் நண்பன். அவனுக்குத் தன் தோள் ஆற்றாமையைக் கூறி வாயில்

நேர்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பாணன் முதலாயினார்க்குத் தலைமகன் கொடுமை கூறி வாயில் மறுத்த தலைமகள் கழறிய பாங்கற்கு வாயில் நேர்வாள் சொல்லியது. 'தலைவன் எவ்வாறு தப்பி ஒழுகினும், அவன் கொடுமை நின்னாற் புலப்படுத்துதல் தகாது' என்று கழறிய பாங்கற்குத் தலைமகள் சொல்லியது' என்ற துறைக்குறிப்பிற்கு,

'மனைநடு வயலை வேழம் சுற்றும்
துறைகேழ் ஊரன் கொடுமை நாணி
நல்லன் என்னும் யாமே
அல்லன் என்னுமென் தடமென் தோளே'(ஐங்குறு -11)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடலில் தலைவி தன் தோள் மெலிவு கூறுதல் நன்கு தெளிவாகிறது. துறையின் பொருண்மைக்குள்ளும் அமைகிறது.

**பாணன் இயல்பு கூறி வாயில் நேர்தல்**

தலைவி தலைவனின் பரத்தைமை ஒழுக்கத்துக்குத் துணைபோகும் பாணன்,'இளமையில் பொலிவிழந்து காணப்பட்டாலும், அவன் சொல்வன்மை, கேட்டார்ப் பிணிக்கும் தகையவாய் இருந்தது. தன் ஊரல்லா பிற ஊராகிய இவ்வூரிடத்தே அவன் சொல்வன்மை செல்வாக்குப் பெற்றுத் திகழ்கிறது. பலரும் அழைத்து விருந்தினராய் ஏற்றுக்கொண்டு அவர்கள் கொடுக்கும் பரிசுகளை ஏற்றுக்கொள்ளும் தலைமையுடையவன்' எனத் தலைவி மகிழ்ந்து கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வாயிலாகப் புக்க பாணன் கேட்ப, தோழியை நோக்கி தலைமகள் வாயில் நேர்வாள் கூறியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'அன்னாய் இவனோர் இளமா ணாக்கன்
தன்னூர் மன்றத்து என்னன் கொல்லோ?
இரந்தூண் நிரம்பா மேனியொடு
விருந்தின் ஊரும் பெருஞ்செம் மலனே.' (குறுந் -33)

எனப் 'பாணனின் கல்விச் சிறப்பு, சொற்றிறம், நல்லோரால் அழைத்துப் பேணப்படும் தன்மை' போன்ற பாணனின் இயல்புகளைத் தலைவி உரைக்கும் பொருண்மை கொண்ட பாடல் அமைகிறது. இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் புகுதல்**

வாயில் புகுதல் துறையிலமைந்த ஆறு பாடல்களின் பொருண்மைகளையும், அவற்றின் துறைக்குறிப்புகளையும் நோக்குமிடத்து,‘தலைவன் தன் ஆற்றாமை கூறினமையால் வாயில் நேர்ந்தமை கூறல்’ முதல் ‘பாணன் இயல்பு கூறித் தலைவனை இடித்துரைத்தல்’ வரையிலான ஐந்து துறைகளாக அமைகின்றன.

**தலைவியின் ஆற்றாமை உள்ளி வாயிற்புக உள்ளியானுக்கு உரைத்தல்**

பரத்தை மனையிலிருந்த தலைவன் தனக்குப் புதல்வன் பிறந்த அணிமைக் காலத்தில் தன் இல்லிற்கு திரும்பினான். தலைவி ஆற்றாதிருந்தாள். அதனைப் பயன்படுத்தி அவளிடம் நெருங்க முயன்றானிடம் தலைவி கடிந்துரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகற்குத தலைமகள் சொல்லியது’ என்னுந் துறைக்குறிப்பிற்கு,

‘கரும்புநடு பாத்தியிற் கலித்த வாம்பல்
சுரும்புபசி களையும் பெரும்புன லூர
புதல்வனை யீன்றவெம் மேனி
முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே’ (ஐங்குறு -65)

எனப் பாடல் அமைகிறது. பொ.வே.சோமசுந்தரனார் *“கரும்பு நடுபாத்தியில் கலித்த ஆம்பல் சுரும்பு பசி களையும் பெறும்புனலூர என்றது, நாம் இல்லறஞ் செய்தற் கியற்றிய இவ்வில்லத்திலே பரத்தையர் குழுமி அவர் சுற்றத்தாரை ஓம்பா நிற்பர் என்னும் குறிப்புடையது”*[42]என உரை பகர்வர். இவ்வுரை ஏற்புடைத்தாகக் கொண்டு இப்பாடலுக்குத் துறைப் பொருத்தப்பாடு பகரப்பட்டுள்ளது. அ·தாவது, பாத்தியின் முதன்மைப் பயிரான கரும்பினைத் தலைவியாகக் கொண்டு, தலைவி வாழும் இல்லத்தில் பரத்தையர் ஊடாடுதல் தகாது எனத் தலைவனிடம் முனிந்துரைப்பது கொள்ளப்பட்டுள்ளது. இதன்வழி, புதல்வனைப் பயந்த தலைவியின் இல்லிற்கு வந்த தலைவனிடம் தன் ஊடலைப் புலப்படுத்தியுள்ளாள் என்பது அறியமுடிகிறது. துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பாணன் இயல்பு கூறித் தலைவனை இடித்துரைத்தல்** துறையில் ஐங்குறு - 139ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘பாணன் நல்லோர் நலம்சிதைக்கும்’ (ஐங்குறு -139:3) என்னுமடிகளில் ‘பாணன் நினக்காக பல பெண்டிரை வரித்துக்

கொடுக்கும் தன்மை கொண்டவன். இப்பாணனே நின்னின் புறத்தொழுக்கத்துக்குக் காரணமானவன். இத்தகைய பாணனை நீ அருகிலே வைத்துள்ளாய்' எனத் தலைவி தலைவனை இடித்துரைப்பது துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுடன் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பிரிவு**

களவுப் பிரிவில் தலைவி ஊராரின் கௌவை மொழிக்கும், தாயாரின் இறசெறிப்புக்கும் அஞ்சும் தன்மையில் ஆற்றவொண்ணாதிருப்பாள். கற்புப் பிரிவில் தன் ஆற்றாமையும், தலைவனுடனான புணர்வின்பப் பெருக்கும், தன் இளமை பேணப்படாது வீணே கழியும் என்னும் உணர்வும் மோலோங்கி இருப்பாள். பிரிவு தன்னில் தலைவி ஆற்றுவிக்கப் பெறுபவளாக விளங்குகிறாள். ஆற்றுவிப்பவள் தோழியாக அமைதலின், அவள் தன் தோழியிடமே அதிகம் பேசுபவளாகக் காணப்படுகிறாள். தலைவன் பிரிந்துறையும் பொழுது தலைவி தூதுவிடக் கருதுபவளாகவும் அமைகிறாள். தூதிற்குப் பாணன் துணைபுரிபவனாகின்றான்.

இப்பிரிவுப் பொருண்மையில் தலைவி கூற்றில் இருநூற்றுப் பன்னிரண்டு பாடல்கள்[43]காணப்படுகின்றன. இப்பாடல்களில் கடற்வயிற் பிரிவு (அகநா - 255), பகைவயிற் பிரிவு (ஐங்குறு - 451, 452, 460 அகநா - 194) என ஐந்து பாடல்கள் நீங்கலாக ஏனைய பாடல்கள் பொருள்வயிற் பிரிவுப் பாடல்களாக அமைதலை அறியமுடிகிறது. இப்பாடல்களின் துறைக்குறிப்புகளின் பொருண்மைகளை ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- பிரிந்து விடுவானோ என்று அஞ்சுதல்
- தலைவன் இல்லாத நிலைக்கு அஞ்சித் துயர்கொள்ளல்
- செயலில் செம்மை கொண்டவர். எம் துயருக்கு அஞ்சும் தன்மை கொண்டவர் எனவுரைத்தல்
- ஆண்மைக் கடமை குறித்து உவத்தல்
- பொருளின்மீது தலைவனின் எண்ணம் குறித்து வருந்துதல்
- இளமை நில்லா என்பதறிந்தும் தலைவன் செயல் குறித்து வருந்துதல்
- பொழுது கண்டு வருந்துதல்
- தலைவியின் ஆற்றாமை குறித்து தோழி வருந்ததல்
- பிரிவின்போது தலைவன் தனித்திருப்பதைத் தலைவி உணர்ந்து அறிந்து ஆற்றாதிருத்தல்

- ஆற்றிய தோழிக்குத் தன் வருத்தம் கூறல்
- ஆற்றிய தோழிக்குப் பொருளே துணையாகப் பிரிந்தார் எனல்
- தலைவன் குறித்த பருவம் வந்தபின்னும் வாராதிருந்தமை கண்டு வருந்துதல்
- இளவேனிற் கால மலர்கள் கண்டு வருந்துதல்
- சொல்லாது பிரிந்த தலைவனின் வருத்தம் எண்ணி வருந்துதல்

போன்றவை அமைகின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புப் பொருண்மை கொண்டு 'பிரிவுணர்தல் (அ) பிரிவுணர்ந்து வேறுபடல்' முதல் 'வினைமுற்றி மீண்ட பின் இனிதிருத்தல்' வரையிலான பதினெட்டுத் துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பிரிவுணர்தல் (அ) பிரிவுணர்ந்து வேறுபடல்**

செலவு மேற்கொள்ள எண்ணிய தலைவன் தலைவியிடம் இணக்கமாக இருந்தனன். தலைவி அவன் செயல்மாற்றங் கண்டு அவன் செலவினை ஊகித்தறிந்தனள். அவ்வேளைதனில் அவள் மனத்துயருற்றனள். மேனி மாறுபட்டு வெய்துயிர்த்தனள். இவ்வாறு தலைவனின் செலவு குறித்த உணர்தலும் மேனி வேறுபடலும் இத்துறையாகும். இத்துறையில் ஆறு பாடல்கள் காணப்படுகின்றன.

இப்பாடல்களில் 'செலவுக் குறிப்பு அறிந்து வேறுபட்ட தலைவி சொல்லியது' என்ற துறைக்குறிப்பிற்கு 'பேய்கள் உணவு விரும்பி தன் இடத்தினின்று எழுகின்ற மாலைப்பொழுது. அவ்வஞ்சத்தக்க மாலைப்பொழுதில் தலைவன் உடனிருப்பினும் அச்சம் உண்டாகும். அவ்வாறிருக்க, அவர் பிரிந்து செல்வராயின் என்னால் அம்மாலைக் காலத்தில் உயிருடன் இருக்கவியலாது' எனத் தலைவி அஞ்சும் பொருண்மை கொண்ட நற் -73ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,'நுதற்கவின் அழிக்கும் பசலையும் அயலோர் தூற்றும் அம்பலும் அளிதே' (நற் -73:10-11) என்புழி, மேனி மாறுபாட்டினால் அயலோர் தூற்றும் நிலை ஏற்படலாம் என்றுரைக்கும் இடத்து, தலைவன் பிரியாதிருக்கும் நிலையில் பிரிந்தால் ஏற்படப்போகும் நிலை குறித்து வருந்தினாள் என்பதும்,

'மன்றம் போழும் புன்கண் மாலை
தம்பொரும் அஞ்சும் நம்இவண் ஒழியச்
செல்ப என்ப ...............' (நற் -73:4-6)

என்புழி, தலைவன் உடனிருக்கும்பொழுதில் தலைவி செலவினை அறிந்துகொண்டாள் என்பதும், மாலை வருத்துமெனத் துயருறுவதும் புலப்படுகிறது.

இத்துறையிலமைந்த நற் -177 ஆம் பாடலின் 4-10 அடிகளின்வழி தலைவனின் அன்புப் பெருக்கான செயல் மாற்றத்தால், அவனின் செலவினைத் தலைவி உணர்ந்து கொண்டதாகத் தோழியிடம் கூறுவது புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல்கள், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுடன் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**சொல்லாது பிரிந்தவழி கூறல்**

தலைவியின் ஆற்றாமையை நினைந்து சொல்லாது பிரிந்தனன் தலைவன். தலைவனின் இப்பிரிவினால் வருந்திய தலைவி தோழியிடம் தன் ஆற்றாமையைக் கூறல் இத்துறையாகும். இத்துறையில் ஐந்து பாடல்கள் காணப்படுகின்றன. ‘தலைமகன் பிரிந்துழி அவன் உணர்த்தாது பிரிந்தமை கூறிய தோழிக்குத் தலைமகள் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘கண்கள் பொறுக்க முடியா வெயில் மிகுந்த இடங்களையும், மரங்கள் உலர்ந்துபோன கானகத்தையும், தம்மை ஒரு போதும் மறவாத நம்மை மறந்து கடந்து சென்றுவிட்டாரோ’ எனத் தன் நிலையைத் தோழியிடம் தலைவி கூறும் பொருண்மை கொண்ட ஐங்குறு -319ஆம் பாடல் அமைந்துள்ளது.

இப்பாடலில் இறுதி இரு அடிகளில் ‘இறந்தனரோ மறந்தனரோ’ என்ற ஓகார வினாப்பொருள் சொற்கள், தலைவியின் ஏமாற்ற உணர்வையும், ஏங்கும் மனதையும் தெளிவுபடுத்துவதாக அமைந்துள்ளன. இத்தலைவியின் மனவுணர்வை,

*“எம்மை நினையாது விட்டாரோ விட்டகல்க*
*அம்மென் இணர அரும்புகால் அன்னங்கால்*
*நம்மை மறந்தாரை நாம்மறக்க மாட்டேமால்”*[44]

என மாதவியின் மனவுணர்வுடன் ஒத்துள்ளமையை அறிய முடிகிறது.

‘பிரிவிடை மெலிந்த கிழத்தி சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு,

‘‘செல்வார் அல்லர்’ என்றுயான் இகழ்ந்தனனே
‘ஒல்வாள் அல்லள்’ என்றவர் இகழ்ந்தனரே
ஆயிடை இருபேர் ஆண்மை செய்தபூசல்
நல்லராக் கதுவியாங்கு என்
அல்லல் நெஞ்சம் அலமலக் குறுமே” (குறுந் -43)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடலின் பொருண்மை. துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியமைகிறது. இவ்வாறு இத்துறையிலமைந்த பாடல்களின் தலைவி,'செல்லாமை யுண்டேல் எமக்குரை' என்னும் கோட்பாட்டினைக் கொண்டிருத்தலின் தலைவன் சொல்லாது சென்றமையும், துறைக்குறிப்புகளொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

**பிரிந்தவழி மகிழ்தல்**

தலைவன் தன் செலவு குறித்து தோழியிடம் உரைத்தனன். நன்றென உடன்பட்டனள் தோழி. அதனை அறிந்த தலைவி பொருள்பொருட்டுப் பிரிதல் ஆடவர் பண்பு. அதனை ஏற்றலும் நலமெனக் கூறித் தலைவி உவந்துரைத்தல் இத்துறையாகும்.

இத்துறையில் ஒரு பாடல்(நற் -24) அமைந்துள்ளது. இத்துறையிலமைந்த 'பொருட் பிரிவுக்கு உடன்பட்ட தோழியைத் தலைவி உவந்து கூறியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'…………………….. வேற்றுநாட் டாரிடைச்
சேறும் நாமெனச் சொல்ல சேயிழை
நன்றெனப் புரிந்தோய் நன்றுசெய் தனையே' (நற் -24:5-7)

என அமையும் பாடலில் 'தலைவனின் பிரிவிற்கு தோழி உடன்பட்டமையும், வினையே ஆடவர்க்குயிர் என்பதை உணர்ந்த தலைவியின் உவகையும்' புலப்படுகிறது. நச்சினார்க்கினியர்,

*"வடுவறு சிறப்பிற் கற்பில் திரியாமைக்*
*காய்தலு முவத்தலும் பிரித்தலும் பெட்டலு*
*மாவயின் வரூஉம் பல்வேறு நிலையினும்"*[45]

என்பதன் உரையின்கண் *"எஞ்ஞான்றும் குற்றமின்றி வருகின்ற பிறப்பு முதலிய சிறப்பிடத்துங் கற்பிடத்துத் திரிவுபடாதபடி, தோழி கூற்றினை வெகுளலும் மகிழ்தலும் அவளைப் பிரித்தலும், பின்னும் அவள் கூற்றினைக் கேட்டதற்கு விரும்புதலுமாகிய நிலையின்கண்ணும்"*[46]என உரைத்துப் பின் இப்பாடலைச் சான்று காட்டி(நற் -24),'இது செய்தனையெனத் தலைவி உவந்து கூறியது' என மொழிந்திருப்பதன்வழியும் இப்பாடலின் துறையை அறிந்து கொள்ளமுடிகிறது.

இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பிரிந்தவழி ஆற்றாமை**

தலைவன், பொருள்வயிற் பிரிந்தவழி தலைவி ஆற்றாளாகிறாள். தன் ஆற்றாமையைத் தோழியிடமும் தன்னெஞ்சிற்குள்ளும் கூறுதல் இத்துறையாகும். இப்பிரிந்தவழி ஆற்றாதிருத்தலை முல்லையின் உரிப்பொருளான 'இருத்தலுக்குள்' அடக்குவர். அ.விசுவநாதன்,*"தலைவனும் தலைவியும் இல்லத்தில் இருத்தல். தலைவனும் தலைவியும் பிரிந்து இருத்தல் - கடமைகளை ஆற்றியிருத்தல். தலைவனும் தலைவியும் ஆற்றாதிருத்தல். வினைமுடிந்த தலைவன் தலைவியுடன் சேர்ந்திருத்தல்"*[47] எனப் பகுத்திருப்பர். இத்துறையில் நாற்பது பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை நோக்கின்,'தலைவி தன் துயர் கூறுதல், தலைவன் வருந்தாது செலல் வேண்டுமெனல், சுரத்தின் வெம்மை நினைந்து வருந்துதல், பிற உயிர்களை நொந்து கூறல், பிற பெண்டிர் கொடுமை கூறல்' போன்ற நிலைகளில் தலைவி தன் ஆற்றாமையைப் புலப்படுத்தும் முறைகளாக அமைகின்றன.

பிரிவிடை வேறுபட்ட தலைமகள் ஆற்றாமை மீதூரத் தோழிக்குச் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'உலககிளர்ந் தன்ன உருகெழு வங்கம்' எனத் தொடங்கும் அகநா -255ஆம் பாடல்,'வேகமாக வீசும் காற்றே பெரிய நாவாயினை அசைத்துச் செலுத்த, இரவுபகலாக ஓரிடத்தும் நிற்காது கடற்பரப்பைக் கிழித்துக் கொண்டு சென்றது. நாவாய் ஓட்டியும், விளக்கு செல்லும் இடமறிந்து செலுத்த, அந்நாவாயில் பொருளீட்டும் முயற்சியின்பொருட்டு நம் காதலர் நம்மை விட்டுப் பிரிந்து சென்றனர். இரவெல்லாம் வீசிய வாடையால் அணிகள் நழுவி வீழ்ந்தன. பேரழகும் அழிந்து போயிற்று.' என்ற செய்தியை உரைப்பாரில்லை. உரைத்தால் நாள் பல கடத்தாமல் விரைந்து வருவார்' எனத் தோழியிடம் தலைவி உரைக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில், தலைவன் பொருளீட்ட கடல்வழிப் பிரிவு மேற்கொண்டான் என்பதும், தோழியானவள் தலைவனிடம் சென்று நம் நிலை குறித்து எடுத்துரைக்கவில்லையே எனத் தலைவி குறிப்பால் உரைப்பதும் புலப்படுகிறது. அவ்வாறு சொல்லுநர் பெற்றிருந்தால் எம் தலைவர் 'நாள் பல கழியாமை, அழிபடர் அகல வந்திருப்பர்' என வருந்துவதும்

புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வன்புறை எதிர்மொழிதல் (எதிரழிதல்)**

தலைவன் பிரிந்தமையால் தலைவி ஆற்றாளாயினள். அதனைக் கண்டே தோழி, அவன் குறித்த பருவம் வருந்துணையும் நீ ஆற்றியிருத்தல் நலம்பயக்குமென ஆற்றுவித்தனள். அதற்குத் தலைவி அவளிடம் புலந்து கூறுதல் இத்துறையாகும். இத்துறையில் நாற்பத்தெட்டு பாடல்கள் காணப்படுகின்றன.

'பிரிவிடை மெலிந்த தலைமகள் வன்பொறை எதிர்மொழிந்தது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'மரம்சா மருந்தும் கொள்ளார் மாந்தர்' எனத் தொடங்கும் நற் - 226ஆம் பாடல் 'மருந்தெடுக்கும் மாந்தர், அம்மரம் பட்டுப்போகும்படி கொள்ளார். தவத்தோர், தம் உரனழியும் அளவுக்குத் தவம் மேற்கொள்ளார். மன்னர், குடிகளின் வளங்கெட வரி வாங்குபவரல்லர். இவையெல்லாம் அறிந்தும் நம் தலைவர், தாமே வருத்தம் கொள்ளுமாறு நீண்ட பாலை வழியில் எம்மைத் தனித்துவிட்டுப் பிரிந்து அகன்றனர். அவரைப் பிரியாதிருப்பின் உயிர் வாழ்வோம். பிரிந்தால் இறந்துபடுவோம் என்பதை அறிந்தவராகார். இதுவே ஆடவரியல்பு என்றுரைப்பர் சான்றோர். உலகத்தினரும் இதனை அறிவர்.' எனத் தலைவி தோழியிடம் வருந்தியுரைக்கும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில் முன்னை மூன்றடிகளை எதிர்மறைப் பொருளாகக் கொண்டு பாடலின் துறைக்குறிப்பின் பொருண்மையை உணரமுடிகிறது. அ∴தாவது *"மரம் சாகுமாறு கொள்ளுதல் தலைவியின் நலன் முற்றிலும் கெடுமாறு நுகர்ந்தனன் என்பதனை உவமித்தது. தவம் வருந்துமாறு செய்தல், தலைவன்பாற் கொண்ட அன்பால் உளமழிந்து வருந்தினள் என்பதனை உவமித்தது, வளங்கெடப் பொன்னும் கொண்டு தம் குடிகளைக் கருதா கொடுங்கோல் அரசர் என்பது தலைவனும் தலைவியைப் புணர்ந்துபின் அருளானாயினான் என்பதை உவமித்தது,"*[48] என்ற கு.வெ.பாலசுப்பிரமணியன் எதிர்மறைப்பொருளை விரித்துரைப்பதும் ஏற்புடைத்து. இப்பாடலின் பொருண்மையை நோக்க, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

‘பிரிவிடை ஆற்றாளாகி நின்ற தலைமகளை வற்புறாநின்ற தோழிக்கு ‘ஆற்றுவல்’ என்பதுபடச் சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘தோளும் அறிவும் நாளும் சென்றென’ எனத் தொடங்கும் நற் -397ஆம் பாடல்,‘வினை காரணமாகத் தலைவன் பிரிந்தான். தலைவி ஆற்றாளாயினாள். தோழி ‘ஆற்றியிரு’ என்றாள். அதற்கு ‘அவர்சென்ற பாதையை நோக்கி நோக்கிக் கண்கள் ஒளியற்றுப் போயின. என் அறிவும் என்னைக் கைவிட்டு மயக்கமுற்று வேராகி நின்றது. காம நோயும் பெருகிற்று. மாலையும் வந்தது. இனி என்னாகுவேனோ? இறப்ப யான் அஞ்சவில்லை. அதன் பின் நேரும் பிறப்பில் வேறுபட்டுப் போனால் என் காதலனை மறந்துவிட நேருமோ என்றே அஞ்சுகிறேன்.’ எனத் தலைவி கூறும் காதல்மொழிகளைப் பொருண்மையாகக் கொண்டது. இப்பாடலில்,‘பிறப்புப் பிறிது ஆகுவது ஆயின் மறக்குவேன் கொல்என் காதலன் எனவே’(நற் -397:8-9) என்புழி. தலைவன் வரும்வரை யான் துயர் பொறுத்து ஆற்றியிருப்பேன் எனத் தலைவி கூறுவது தெளிவு. இப்பொருண்மை நோக்கின்,

*“இம்மை மாறி மறுமை ஆயினும்*
*நீயாகியர் என் கணவனை*
*யான் ஆகியர் நின் நெஞ்சு நேர்பவளே”*[49]

எனக் கூறும் நெய்தல் நிலத் தலைவியின் மொழியும் நினைவுகூரத் தக்கது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பருவங்கண்டழிதல்**

தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவன் குறித்த காலத்தில் வருவதாகக் கூறிச் செல்வான். அக்காலம் கார் அல்லது கூதிர் காலமாக அமையும். அவ்வாறு தலைவன் குறித்துச் சென்ற பருவம் வந்தபோதும், அவன் வராதநிலையில் அப்பருவம் குறித்தும், தன்னிலை குறித்தும் வருந்திப் புலம்புவது பருவங்கண்டழிதல் துறையாகும். இத்துறையில் அறுபத்தொன்பது பாடல்கள் காணப்படுகின்றன. தலைவியின் பருவகாலத் துயரினைக் *“காலம் என்னும் பெருந்தோழி கடமை என்னும் விசிறி கொண்டு வீச, தனிமைத் துயரைத் தலைவி ஒருவாறு ஆற்றியிருத்தல் உண்டு: எனினும் தலைவன் குறித்த பருவக் கூத்து ஆடியும் அசைந்தும் வனப்பொடு வருங்காலை அவளுக்கு உறக்கம் என்பது வருமோ?*

*காமவுணர்வு என்னும் அரும்பு முனைகள் தவிர்த்து அவளைக் கொல்லுமன்றோ"*[50]என்றுரைப்பர் வ.சுப. மாணிக்கம்.

'பருவம் கண்டு அழிந்த கிழத்தி தோழிக்கு உரைத்தது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'முகை முற்றினவே முல்லை முல்லையொடு
நகை முகிழ்த்தனவே தண்கார் வியன்புலம்
வாலிழை நெகிழ்ந்தோர் வாரார்
மாலை வந்தன்றென் மாண்நலம் குறித்தே' (குறுந் -188)

என அமையும் பாடல் 'மாலை வந்தும் என் அணிகலன் நெகிழப் பிரிந்தோர் இன்னும் வந்திலர்?' எனத் தலைவி தவிக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் முதல் இரண்டடிகளில் கார்ப்பருவத்தில் முல்லைநிலப் பொலிவும், பின்னிரண்டடிகளில் கார்ப்பருவத்தில் வருந்தும் தலைவியின் நிலையும் குறிப்பிடப்படுகிறது. பாடலின் இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

'தலைமகன் பிரிந்துழிக் குறித்த பருவம் வரக் கண்ட தலைமகள் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'இளவேனிற் பத்தில்' அமைந்த 'அவரோ வாரார்' எனத் தொடங்கும் பத்துப் பாடல்களும் அமைந்துள்ளன. இப்பாடல்களில்,

'திணிநிலைக் கோங்கம் பயந்த
அணியழகு கொழுமுகை உடையும் பொழுதே' (ஐங்குறு -343:2-3)

என்புழி, அழகிய இனிய இளவேனிற் பருவத்தில் எம்மை இன்புறுத்துதலை விடுத்து, மனம் உடையும்படி செய்கின்றன எனத் தலைவி புலம்புவது தெளிவு. இதற்குத் *"திணிநிலைக் கோங்கம் ஈன்ற அரும்பு உடையும் பொழுதென்றால், யானும் எம்பெருமான் சொல் தேறி இதுகாறும் திண்ணிய நிலையினையுடையேன்மன், அந்நிலை தானும் இப்பொழுது உடைந்தது காண் என்னும் இறைச்சிப் பொருள் பயந்து நிற்றற் கென்க"*[51] என இறைச்சிப் பொருண்மையில் புலப்படுத்தும் பெருமழைப்புலவர் உரையும் இத்துறையைப் புலப்படுத்துகிறது. இவ்விளவேனிற் பத்துப் பாடல்களில் இளவேனிற் பருவ மலர்களின் மலர்ச்சி கூறி, அக்காலத்தில் எம் நலம்பேணும் எம்பெருமான் வந்திலரே என வருந்தும் தலைவியின் வருத்தம்,அதன் இறைச்சிப் பொருண்மையில் கூறப்படுகின்றது. இப்பாடல்களின்

பொருண்மைகள், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும். பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

பருவங் கண்டழிதலில் அமைந்ததலைவன் செலவு மேற்கொண்ட நிலையில் மீண்டு உடன்சென்றார், நும் தலைவர் கடுக வருவாரென உரைத்துழித் தலைவி உவந்து கூறும் கடுக வருவரென உவந்து கூறல் துறையிலமைந்த 'மெல்லிறைப் பணைத்தோட் பசலை தீரப்' எனத் தொடங்கும் ஐங்குறு -459ஆம் பாடலில் வேந்தனின் அணுக்கத்தில் பணியாற்றும் பெருமை வாய்ந்தவன் எம் தலைவன் என்னும் தலைவியின் பெருமிதவுணர்வும், தலைவனின் வருகையால் தாம் பெறப்போகும் இன்பப் பெருக்கையும் நினைவுகூறும் தலைவியின் மொழிகளும், வினைமுற்றிய தலைவனின் விரைந்த வருகையைப் புலப்படுத்துகின்றன. இப்பருவங்கண்டு கிழத்தி உரைத்த பத்துப் பாடல்களில் இப்பாடல்(ஐங்குறு -459) தவிர்த்த ஏனைய பாடல்கள் 'பருவங்கண்டு வருந்தியுரைக்கும் தலைவியின் கூற்றாக அமைந்து, அவ்வவற்றின் துறைக்குறிப்புகளின் பொருண்மையையும், துறையையும் விளக்குகின்றன.

**மீட்சி**

செலவு மேற்கொண்ட தலைவன் மீண்டு வருதல் 'மீட்சி' என உரைப்பர். இம்மீட்சிக் காலங்களில் தலைவன் வருகையை உரைத்த தோழியிடம் சொல்லாமல் தான் ஆற்றாதிருந்த நிலையைத் தலைவனிடம் உரைத்தல், அவன் உடனிருக்கும் காலங்களில் மகிழ்ந்திருத்தல் போன்ற நிலைகளில் தலைவியின் கூற்றுமொழிகள் நிகழும். இப்பொருண்மையில் ஐந்து பாடல்கள்[52] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மையை ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- பரத்தைமை உறவு குறித்து தலைவி வருந்துதல்
- பாணனின் சொல்லில் தலைவி தெளியாமை
- தலைவனின் வருகையை விரும்பியுரைத்தல்
- தலைவனுடனான இருக்கையை உள்ளுதல்
- தன் ஆற்றாமையை உணர்த்துதல்

போன்றவை அமைகின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புப் பொருண்மை கொண்டு 'வரவுணர்த்தியாற்கு உரைத்தல்' முதல் 'தலைவனுடன் கூடியுறைதல் இன்பமென மகிழ்தல்' வரையிலான நான்கு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரவுணர்த்தியாற்கு உரைத்தல்**

வினைமேற்கொண்ட தலைவன் மீண்டு வந்தனன். அவன் வருகையை அறிந்த பாணன் தலைமகட்கு உரைத்தனன். அவன் உரையை ஏற்க இயலாத் தலைவி, அவற்கு உரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தலைமகன் வரவுணர்த்திய பாணற்குத் தலைமகள் கூறியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'நீகண் டனையோ? கண்டார்க் கேட்டனையோ?
ஒன்று தெளிய நசையினம் மொழிமோ?
வெண்கோட்டு யானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார்வாய்க் கேட்டனை காதலர் வரவே?' (குறுந். -75)

எனப் பாடல் அமைகிறது. இளம்பூரணர்,*"வாயிலின் வரூஉம் வகையொடு தொகைஇக் கிழவோள் செப்பல் கிழவ தென்ப"*[53]என்பதற்கு உரைப் பகருமிடத்து, இப்பாடலை(குறுந் -75) மேற்கோளாகச் சுட்டி,*"இது வருகின்றான் என்ற உழையர்க்குக் கூறியது"*[54] என உழையரைக் கேட்போராக உரைப்பர். நச்சினார்க்கினியர்,*"பல்வேறு நிலையினும்"*[55]என்ற நூற்பாவுக்கு உரை பகருமிடத்து, தலைவி கூற்றுகள் நிகழும் சூழல்களைக் குறிப்பிட்டு *"அவன் வரவு தோழி கூறியவழி விரும்பிக் கூறுவனவும்"*[56]எனப் பொருளுரைத்து, தொடர்ந்து வரும்நிலையில் இப்பாடலைச் (குறுந் -75) சான்று காட்டி,*"இது, தலைவன் வரவை விரும்பிக் கூறியது."*[57] எனக் கூறுவோர் யாரெனச் சுட்டாது உரை பகர்வர். இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கேட்போராக,'உழையர், தோழி' என இருவரை முன்னிறுத்த, துறையாசிரியர்கள் 'பாணன்' எனவுரைத்திருப்பது ஆய்வுக்குரியது. இப்பாடற்குத் துறைக்குறிப்பு உரைத்த துறையாசிரியர்கள் 'பாணற்குச் சொல்லியது' என்று கேட்போராகப் 'பாணனை'க் குறிப்பிட்டுள்ளனர். தலைவியின் மொழிகளும் பாணனை நோக்கிய ஐயக் கிளவியாகவும், அவள் தலைவனின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருக்கும் பேரவா கொண்டவளாகவும் இருப்பதைக் காணமுடிகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**காமம்மிக்க கழிபடர் கிளவி**

பொருள்முற்றி மீண்டுவந்த தலைவன் தன் இல்லத்தில் தலைவியுடன் இன்புற்றிருந்தான். தலைவனுடனான கூடலின் காலம் முடிவுறும்வேளையில் வேட்கை ஆற்றாநிலையில் சினங்கொண்டு தலைவி உரைப்பது இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த 'பொருள்முற்றி வந்த தலைமகனை உடைய கிழத்தி காமம்மிக்க கழிபடர் கிளவியால் கூறியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு அமைந்த 'குவியிணர்த் தோன்றி ஒண்பூ அன்ன' எனத் தொடங்கும் குறுந் -107ஆம் பாடல் 'கோழிக் கூட்டங்களை வலிந்துகொள்ளும் சேவலே, பிரிந்துவந்த தலைவனுடனான இன்பத்திற்கு இரவுத் துயிலினின்று எம்மை எழுப்பிய நீ, காட்டுப்பூனையின் குட்டிக்கு உணவாகி மிக்கத் துன்பத்தினை அடைவாயாக' எனத் தலைவி கழறிக் கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,

'……. ……. …….. நெடுநீர்
யாணர் ஊரனொடு வதித்த
ஏமஇன் துயில் எடுப்பி யோயே!' (குறுந் -107:5-7)

என்புழி,'பிரிந்து மீண்டுவந்த தலைவனுடன் இன்புற்றிருந்த தலைவி துயில் நீங்க, ஆற்றாது வருந்துவது புலப்படுகிறது. இங்கு 'நெடுநீர்' என்பதற்கு 'நெடுங்காலத் தாமதம்' எனப் பொருள் கொள்ளுமிடத்து, நீண்ட காலப் பிரிவிற்குப்பின் வந்த தலைவன் என்பதும்,'ஆழமான நீர்' எனப் பொருள் கொள்ளுமிடத்து,'கடல்வழிப் பிரிவு' மேற்கொண்டு மீண்ட தலைவனுடன் இன்புற்றிருந்த தலைவியின் ஏக்கவுணர்வும் தெளிவு. 'பிள்ளை வெருகிற்கு அல்குஇரை ஆகி கடுநவைப் படீஇயரோ நீயே ……..' (குறுந் -107:4-5) என்புழி, தலைவனுடனான இன்பத்தினை இழக்கச் செய்து குற்றம் புரிந்த நீ இறந்துபடுவாயாக எனத் தலைவி வருந்தி தண்டணையுரைப்பது புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தொகுப்புரை**

தலைவியின் கூற்றுகள் தோழியிற் கூட்டத்திலமையும் பின்னிற்றலில் தொடங்குகின்றன. இப்பின்னிற்றலில் அமைந்த மூன்று பாடல்களும் குறைநயந்தமை துறையில் அமைகின்றன. தொல்காப்பியர் குறிப்பிடாத இத்துறை 'உய்த்துணருந்

துறையாக ஆராயப்பட்டுள்ளது. இங்கு,நற் -128ஆம் பாடல் தவிர்த்த இரு பாடல்கள், தோழியர் இருவரின் கூற்றாக அமைந்துள்ளமையும், அவற்றின் துறைக்குறிப்புகள் மாறுபடுந் தன்மையும் ஒப்பு நோக்கப்பட்டுள்ளன. சேட்படுத்துதல் துறையிலமைந்த ஒரு பாடலைத் 'தையல் மறுத்தல்' உட்துறையில், தலைவனின் தழுவலைக் காட்டிலும், அவன் நினைப்பில் எம்முதுகினை கைகளால் சுற்றிக் கொள்ளும் இன்பம் இனிதாயிருக்கிறது' எனத் தலைவியின் மொழிகள்(அகநா -58) துறையினை விளக்குவது ஆராயப்பட்டுள்ளது.

இருவகைக் குறியில் நாற்பத்தாறு பாடல்கள் 'பகற்குறி, இரவுக்குறி, சிறைப்புறம், அல்லகுறி' என்னும் நான்கு பெரும் பிரிவுகளாகப் பகுத்து, அவற்றின் இருபத்தொன்பது உட்துறைகளில் சில ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. இப்பாடல்களில் பகற்குறியில் தன்னின் காப்புமிகுதிக்கு தலைவன் வருகையின் தேரொலியே காரணமென மொழியும் காப்பு மிகுதி கூறல் துறையிலமைந்த குறுந் - 246ஆம் பாடலின் பொருண்மையும் துறைக்குறிப்பும் நோக்கப்பட்டுள்ளது. தலைவன் 'நம் தமர் எமைக் கொடுக்கத் தான் பெற்றால் யான் மகிழ்வேன் தோழி' எனத் தலைவி தன் அவாவை வெளிப்படுத்தும் நற் -275ஆம் பாடலமைந்த சிறைப்புறமாக வரைந்தால் நலமெனக் கூறல் துறை, அவற்றின் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் வந்துள்ளமை மொழியப்பட்டுள்ளது..

இரவுக்குறியில் அகநா-72 ஆம் பாடலில் முதல் பதினைந்து அடிகள் தலைவி, தோழி கூற்றாய் அமைந்தும், அடுத்த ஏழு அடிகள் தலைவி கூற்றாக மட்டுமே அமைந்தமையைப் புலப்படுத்தி, முதல் துறைக்குறிப்பினொடு ஒன்றி,'வழியின் ஏதம் கூறல்' துறையில் அமைந்தமை ஆராயப்பட்டுள்ளன. சிறைப்புறமாக தன் ஆற்றாமை கூறல்' உட்துறையிலமைந்த குறுந் - 158 ஆம் பாடலின் துறைக்குறிப்பில் தோழியாக இல்லாமல் 'மாமழை'யாக இருந்திருக்கக் கூடும் எனவும், அதன்வழித் 'தலைமகன் இரவுக்குறி வந்துழி, அவன் கேட்ப மாமழைக்குச் சொல்லியது' எனத் துறைக்குறிப்பு அமைந்திருத்தல் சாலுமெனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

அல்லகுறியிலமைந்த ஐங்குறு -272 ஆம் பாடல்,'என் பிழைப்பன்று என்று தலைவி நோதல்' துறையில் அமைந்தமையும், இப்பாடலின் துறைக்குறிப்பில் 'அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்பறத்தானாக, முன்னைநாள்

நிகழ்ந்ததனைத் தோழிக்குக் கூறுவாள் போன்று தலைமகள் சொல்லியது’என்றமைந்த துறைக்குறிப்பு, பாடலின் பொருண்மைக்கேற்ப ‘அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகன் ....’ என மாற்றியமைக்கப்பட்டமையும், அதன் காரணங்களும் மொழியப்பட்டுள்ளன. ‘இற்செறித்தல்’ என்னும் பெருந்துறையிலமைந்த உட்துறைகள் வரைவினை முடுக்கும் பொருண்மை கொண்டமைவது எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

ஒருவழித்தணத்தலில் அமைந்த உட்துறைகளில் ஒன்றாகிய ‘கையாறு எய்திடு கிளவி’ உட்துறையில் ‘தன் துயர் தனக்காக வருந்தும் தோழியையும் வருத்துகிறது’எனத் துயர் கொள்ளும் தலைவியின் மொழிகள்(குறுந் -163) ஆய்ந்து குறிப்பிடப்பட்டுள்ளன. வரைவு நீடல் துறையிலமைந்த தோழியின் ஆற்றாமை கண்டு தலைவி ஆற்றுவித்தல் துறையில் நற் -388ஆம் பாடலில் தோழியைத் தலைவி ஆற்றுவிக்கும் பதிலுரை மொழியப் பெற்றுள்ளது. அலர் துறையினில் பகல் வரும் தலைவனை யான் கண்டேனோ இல்லையோ, தோழியர் அல்லாத பிற ஆயத்தாரும் கண்டமையால் உறுதியாக அலரெழும் எனத் தலைவி அஞ்சி மொழிந்து, துறையினைச் சுட்டும் குறுந் -311 ஆம் பாடல் ஆராயப்பட்டுள்ளது. நொதுமலர் துறையில் தலைவி தோழிக்கு அறத்தொடு நிற்குந் துறை பொருத்தப்பாடு ஆராயப்பட்டுள்ளது. வெறியாடல் துறையில் ‘வெறியச்சம் உரைத்தல்’ என்னும் உட்துறையில் அமையும் பாடலின்(அகநா -292) முற்பாதி வெறியாட்டு நிகழ்ச்சி முறையையும், பிற்பாதி தலைவனின் வருகையைத் தாய் அறிந்தால் ஏற்படும் விளைவுகளைக் கூறி அலரச்சம் உரைக்கும் தன்மையையும் புலப்படுத்துதல் நோக்கப்பட்டுள்ளது.

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவில் வரைவிடை வைத்து பிரிந்தவிடத்து முனிந்துரைத்தல் துறையிலமைந்த குறுந் - 310ஆம் பாடல் மாலைப் பொழுது நிகழ்வுகளை அஃறிணை உயிர்களும் மாந்தரும் புரிவன கண்டும்,தலைவன் தன் செயலான வரைதலை மேற்கொள்ளாது இருக்கிறான் என முனிந்துரைக்கும் பொருண்மையில் அமைந்துள்ளமைப் புலப்படுத்தப்பட்டுள்ளன. வரைவிடைப்பிரிவு பிரிந்த தலைவன் வந்த பின் மகிழ்ந்துரைக்கும் (ஐங்குறு -120) பொருண்மையும் ஆராயப்பட்டுள்ளது.

அறத்தொடுநிற்றல் துறையில் மூன்று உட்துறைகளில் காப்புமிகுதிக்கண் தோழி தனக்காக அறத்தொடுநிற்க வேண்டுமெனத் தலைவி நினைக்கும்

பொருண்மையில் குப்பைக் கோழியாரின் பாடலும்(குறுந் -305), தோழிக்கு அறத்தொடு நிற்குந் தன்மையில் அகநா -82ஆம் பாடலும் அப்பாடல்களின் துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன. உடன்போக்குச் சூழலில் அமைந்த ஏழு உட்துறைகளில்,'தமர் வந்துற்றவழி உதவிய மலையை வாழ்த்திக் கூறும் உட்துறையில் ஐங்குறு -312 ஆம் பாடலில் தலைவி தன் கற்பறம் பேணலொடு, தலைவனின் போராண்மையினையும் விதந்தோதும்விதமாகத் தோழியிடம் கூறும் தன்மையுடன் துறையைச் சுட்டுவதையும், தன் துன்பங்கண்டு வருந்தும் தோழியின் பரிவு பிறர்க்குப் புலனாகினால் அவர்களுக்குத் துன்பம் விளைவிக்கும் என அஞ்சுந் தலைவியின் கனிவுள்ளமும் இங்குத் துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன.

வரைவுத் துறையில், தலைவியின் வரைவினை எதிர்நோக்கிய மகிழ்வுணர்வும், நிகழுமோ என்ற அச்சவுணர்வுங் கலந்த ஏழு பாடல்கள் ஐந்து உட்துறைகளில், தலைவனின் அன்பு பொதிந்த இனிய சொற்களே தம்மை ஆற்றியிருக்கச் செய்திருக்கின்றன எனத் தலைவி கூறும்வழி தலைவன் வரைவு மலிந்திருந்தான் என்பது ஆராயப்பட்டுள்ளன.

இதுகாறும் களவுப் பொருண்மையில் மொழியப்பட்ட துறைகள் அனைத்தும் வரைவினை எதிர்நோக்கிய தலைவியின் உணர்வுகள் பொதிந்தவைகளாகவும், வரைவு முடுக்கும் நோக்கினையும் உள்ளடக்கியவை. வரைவின் வாயிலாக, கற்பின் திறவுகோலாக 'அலர், நொதுமலர், அறத்தொடுநிற்றல், உடன்போக்கு' துறைகள் அமைகின்றன. இவ்வழியில் தலைமக்களின் களவு, கற்பாக அமைந்த வாழ்வில், இல்லுறைந்து இன்புற்ற மகிழ்தலை 'மலிவு' எனச் சுட்டுவர் இலக்கண நூலார். இம்மலிவுச் சூழலில் தலைவி தன் மகிழ்வு, வேட்கையுணர்வு மட்டும் எண்ணாது தலைவனின் மகிழ்வையும் பெரிதும் உள்ளுபவளாகக் காணப்படுகிறாள். இம்மலிவுப் பொருண்மையிலமைந்த ஏழு பாடல்களும், ஏழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டு அவற்றின் துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன.

காமம்மிக்க கழிபடர் கிளவித் துறையில்(குறுந் -107) தலைவனுடனான இன்பப்புணர்ச்சி நெடிதுநீள எண்ணிய தலைவியின் உள்ளத்துக்கு, இயல்பான பொழுது புலர்தலை அறிவிக்கும் சேவலின் கூவல் துன்பத்தை அளிப்பதால், அச்சேவற்குக் கேடு நேரும் சொற்களைத் தலைவி கூறுவது துறைப் பொருத்தையும், அவளின் உள்ள வேட்கையையும் புலப்படுத்துகிறது. உடனிருக்கும்

காதலரைப் பிரிக்கும் பிரிவாகப் பூப்பு வந்தமையை எண்ணித் தலைவி வருந்துவதும்(குறுந் -157) மொழியப்பட்டுள்ளது.

கற்புக்காலங்களில் தலைவியின் கற்பொழுக்கத்தைச் சிறக்கச் செய்யும் சூழலாக 'ஊடல்' கொள்ளும் நிகழ்வுகள் அமைகின்றன. இவை தலைவியின் கற்பொழுக்கத்திற்குச் சான்றுகோள்கள். தலைவன் பரத்தை ஒழுக்கத்தை மேற்கொண்டொழுகும்நிலையில் தலைவியின் உள்ளத்தில் தோன்றும் சிறு கலக்கம் 'ஊடல்' என்றும், ஊடலினால் தோன்றும் உணர்வு 'புலத்தல்'எனவும், ஊடலின்போது தலைவியின் கோபம் மிகுஉணர்வுடனும் நீடியதாகவும் வெளிப்படின் 'துனி' எனவும் கொள்வர். தலைவி ஊடல் கொள்ளும், வெளிப்படுத்தும், தணியும் சூழல்களைக் கொண்டதாக 101 சங்கஅகப் பாடல்கள் காணப்படுகின்றன. பரத்தையுடன் நட்புப் பூண்டொழுகிய தலைவனிடம், தலைவி ஊடல் கொள்ளும் முப்பது பாடல்கள் இருபத்திரண்டு துறைகளாக வகைப்படுத்தப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. தன்னூர்ப் பரத்தையருடன் மட்டுமல்லாது வேற்றூர்ப் பரத்தையுடனும் நட்புக்கொள்ளும் தலைவனைச் செல்கவென விடுத்தல் (ஐங்குறு - 61,62),'தெளிவிடை விலக்கல்' என்னும் இரு துறைக்குறிப்பிலமைந்த பாடலின் (குறுந் -169) பொருண்மை ஆராயப்பட்டு, அதன் துறைக்குறிப்புப் பொருத்தப்பாடு குறிப்பிடப்பட்டுள்ளன. வாயில் மறுத்தல் துறையில் 24 உட்துறைகள் வகைப்படுத்தப்பட்டு மூன்று துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. சமூகக் கடமையாற்றப் பிரிந்த தலைவன் சார்பாக வாயிலாய் வந்த பாணனுக்குத் தன் ஆற்றாமை கூறி வாயில்மறுக்கும் (ஐங்குறு -133)உட்துறையும், அன்பில்லாதவரிடம் புலந்து பயன் யாது? எனப் புலந்துரைக்கும் தன் அயன்மை கூறல்(குறுந் -93) துறையும், கருவுறுங் காலஞ்சுட்டி வாயில் வேண்டிய தோழியிடம், தன் களவுகாலப் பைஞ்சாய்ப் பாவையே போதும், தனக்கு வேறு மகப்பேறு வேண்டாமெனக் கூறும் (ஐங்குறு -155)உட்துறையும் நோக்கப்பட்டுள்ளன.

வாயில்நேர்தல் துறையிலமைந்த பதினொரு பாடல்கள் பத்து உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டு ஆராயப்பட்டுள்ளன. அவற்றுள் தலைவனின் பாணனிடம் தலைவனின் கொடுமையை உள்ளினும் எம் தோள்கள் ஆற்றாமை கொள்கின்றன எனத் தலைவி மொழியும் துறையும்,'கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்ச் சொற்றிறங் கொண்ட பாணனின் இயல்புரைத்து வாயில்நேரும் (ஐங்குறு -11) துறையும் பாணன் இயல்பு கூறி வாயில் நேரும் (குறுந் -33) துறையும் ஆராயப்பட்டுள்ளன.

வாயில்புகுதல் துறையிலமைந்த ஆறு பாடல்கள் ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்பட்டு நோக்கப்பட்டுள்ளன. இத்துறை பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை அடிப்படையில் வருவித்துக்கொள்ளப்பட்டது. தலைவியின் மகப்பேற்றின் ஆற்றாமையையே வாயிலாகக் கொண்டு வாயிற்புக எண்ணியானுக்குத் தலைவி,'முயங்கன்மோ தெய்யநின் மார்பு சிதைப்பதுவே'(ஐங்குறு -65:4) எனக் கடிந்துரைக்கும் துறையும் நோக்கப்பட்டுள்ளது. இப்பாடலுக்கு ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை, பொ.வே.சோமசுந்தரனார் ஆகியோரின் உரை நோக்கப்பட்டு துறையின் பொருண்மை தெளிவுறுத்தப்பட்டுள்ளது. தன் ஆற்றாமை துணையாகக் கொண்டு வாயில் புகுந்த தலைவனின் 'நல்லோர் நலம்சிதைக்கும்' பாணனின் இயல்புரைத்து(ஐங்குறு -139) தலைவனை இடித்துரைக்கும் துறையும் நோக்கப்பட்டுள்ளன.இல்லுறைந்து மகிழ்ந்திருந்த தலைவன் இல்லறக் கடமையாற்ற பொருள்வயிற் பிரிதலுற்ற நிலையில், தலைவி அவன் பிரிவிற்கு ஆற்றாது துன்புறும் துறைகளே பெரிதும் அமைகின்றன. ஆற்றுவிக்குந் தோழிக்கு எதிர்மொழிதலும், தலைவி, தலைவனினுடனிருக்க எண்ணும் உணர்வும் புலப்படுகிறது. இங்கு, கடற்வயிற் பிரிவிற்கு ஒரு பாடலும்(அகநா -255), பகைவயிற் பிரிவாக நான்கு பாடல்களும்(ஐங்குறு -451,452,460: அகநா -194:) அமைந்து, இங்கும் தலைவனின் பிரிவினால் தலைவிக்கு உண்டான கலக்கம் வெளிப்படுத்தப்படுகின்றன. பிரிவுணர்த்திய தோழியிடம் தான் பிரிதலை அறிந்துகொண்டதையும், அதனால் ஏற்படும் அலரை எண்ணி வருந்தும் தலைவியின் மொழிகள்(நற் -73) அமைந்து துறையைப் புலப்படுத்துகின்றன.

'செல்வார் அல்லர்' என்றுயான் இகழ்ந்தனனே'(குறுந் -43:1) என்னுந் தலைவியின் மொழிதனில், தலைவன் செலவு சொல்லாது பிரிந்தமை என்பது புலப்பட்டு துறையின் பொருண்மையைச் சுட்டுதல் ஆராயப்பெற்றுள்ளன. 'செயல்படு மனத்தர் செய்பொருட்கு அகல்வர், ஆடவர் தன் பண்பே'(நற் -24:8-9) எனத் தலைவன் பிரிவிற்கு மகிழும் தலைவியின் உணர்வு 'பிரிந்தவழி மகிழ்தல்'துறைப்பொருண்மையைச் சுட்டுவதும் நோக்கப்பட்டுள்ளது. இப்பிரிவிலமைந்த ஏனைய துறைப் பாடல்கள் தலைவியின் துயர்ப்பெருக்கைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளமை ஆராயப்பெற்றுள்ளன.

மீட்சித் துறையில், தலைவனின் வருகைக்காகக் காத்திருக்கும் தலைவியின் உணர்வு வெளிப்படுத்தப்படுகிறது. 'நீ கண்டனையோ கண்டார்க்

கேட்டனையோ'(குறுந் -75) எனக் குறுந்தொகைத் தலைவி கூறும்வழி 'வரவுணர்த்தியாற்கு உரைத்தல்' துறை புலப்படுத்துவது நோக்கப்பட்டுள்ளது. இப்பாடலில் கூறுவோர் தலைவியாக இருக்க, கேட்போராக 'உழையர், தோழி'என இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் உரைக்க, துறையாசிரியர்கள் 'பாணர்' என உரைத்தமை தெளிவுறுத்தப்பட்டுள்ளன. கூடலின்பொழுது நீளாமையைச் செய்த சேவலைக் கடிந்துரைக்கும் தலைவியின் காமம்மிக்க கழிபடர் கிளவியும் ஆராயப்பட்டுள்ளன.

## சான்றெண் விளக்கம்

1. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், பக் -375-376
2. பின்னிற்றல்: (நற் -128: அகநா -32, 180:)
3. சேட்படுத்துதல் - தையல் மறுத்தல்: (அகநா -58)
4. இருவகைக் குறி - பகற்குறி பதினெட்டுப் பாடல்கள் (நற்-17, 68, 147, 187, 275: குறுந் -150, 109, 219, 239, 246, 269, 299, 311, 326, 327: ஐங்குறு -116, 215: அகநா- 348:) இரவுக்குறி இருபத்திரண்டு பாடல்கள் (நற் -51, 104, 236, 252, 255: குறுந் -121, 158, 161, 185, 261, 340: அகநா -72, 102, 128, 138, 260, 290, 328, 332, 378, 388: ஐங்குறு -142:)
5. சிறைப்புறம்: ஐந்து பாடல்கள் (நற் -31, 94, 136: ஐங்குறு -222:அகநா -122:)
6. அல்லகுறி : ஒரு பாடல் (ஐங்குறு -272)
7. வெள்ளைவாரனார், தொல்.பொருள்., ப -156
8. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்., ப -78
9. இற்செறிப்பு (நற் -287: குறுந் -57, 141, 306, 401: ஐங்குறு -111, 115, 224:)
10. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -109:6
11. இறையனார், இறையகப் நூ.எ -25:3
12. நக்கீரனார், இறையகப்., ப -161
13. ஒருவழித்தணத்தல் பத்தொன்பது பாடல்கள் (நற் -54,70, 102, 303, 332, 338, 348, 378, 382: குறுந் -102, 163, 175, 243: ஐங்குறு -161, 162, 163, 221: அகநா -170, 398:)
14. வரைவு நீடல் முப்பத்தொரு பாடல்கள் (நற் -116, 117, 272, 304, 309, 322, 327, 347, 357, 388: குறுந்- 25, 38, 54, 97, 105, 112, 118, 125, 133, 152, 153, 160, 187, 399: ஐங்குறு -113, 117, 119, 144, 204, 262, 278:)
15. சரளா ராசகோபாலன், சங்க இலக்கியம் (அகம்), ப -75
16. இறையனார், இறையகப்., நூ.எ -22
17. நக்கீரனார், இறையகப்., ப -141
18. அலர் மூன்று பாடல்கள் (குறுந் -311, 320: ஐங்குறு -181:)
19. ஈ.கோ.பாஸ்கரதாஸ், சங்க இலக்கியத்தில் தோழி, ப -52
20. வெறியாட்டு (அகநா -292)
21. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -110:1
22. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -209

23. ச.பாலசுந்தரம், தொல்காப்பியம் ஆராய்ச்சிக் காண்டிகையுரை, ப -66
24. வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு: ஐம்பத்து நான்கு பாடல்கள் (நற் -38, 56, 87, 133, 196, 218, 219, 238, 249, 277, 335, 358, 364, 369: குறுந் -5, 6, 28, 36, 134, 145, 170, 171, 172, 205, 208, 223, 226, 240, 241, 245, 249, 264, 301, 302, 304, 310, 315, 316, 334, 371, 377, 395: ஐங்குறு -120, 141, 183, 192, 209, 253, 263, 274, 286, 295: அகநா -22:)
25. தொல்காப்பியர், தொல்.பொருள்.பொருள்.,நூ.எ -207
26. அறத்தொடு நிற்றல்: ஆறு பாடல்கள் (நற் -244: குறுந் -31, 305: ஐங்குறு -201: அகநா -52, 82:)
27. உடன்போக்கு: பத்துப் பாடல்கள் (குறுந் -149: ஐங்குறு -203, 286, 312, 384, 385, 392, 397: அகநா -95, 325:)
28. வரைவு: ஏழு பாடல்கள் (குறுந் -257, 361, 368:ஐங்குறு -112, 146, 181, 213:)
29. பேராசிரியர், தொல்.பொருள்.., ப -578
30. மலிவு: ஏழு பாடல்கள் (குறுந் -49, 107, 193, 201, 228: ஐங்குறு -292: அகநா -352:)
31. நக்கீரனார், இறையகப்., ப -172
32. மொ.அ.துரை.அரங்கசாமி,பண்டைத் தமிழ்நெறி, ப -19
33. ராஜ் கௌதமன், பாட்டும் தொகையும் தொல்காப்பியமும் தமிழ்ச் சமூக உருவாக்கமும், ப -79
34. தொல்காப்பியர், தொல்.பொருள். நூ.எ -185
35. பூப்பு (குறுந் -157)
36. ஊடல் முப்பத்தைந்து பாடல்கள்(நற் -20, 260, 340, 350: குறுந் -60, 169, 181: ஐங்குறு -12, 14, 15, 17, 49, 61-71, 83, 85, 150, 164, 165, 369, 370: அகநா -6, 16, 36, 196, 266:)
37. வாயில் மறுத்தல்: ஐம்பது பாடல்கள் (நற் -74, 217, 280, 350: குறுந் -50, 93, 202, 203, 231, 271, 293: ஐங்குறு -13, 18, 19, 20, 22, 23, 31-35, 41, 42, 43, 47, 48, 64, 82, 95, 131-133, 136, 151-155, 169, 160, 170, 184, 265: அகநா -36, 56, 66, 146, 206: பரிபா -6:)
38. வாயில் நேர்தல் பதினொரு பாடல்கள் (நற் -20, 260, 340: குறுந் -33, 91: ஐங்குறு -11, 36, 157, 167: அகநா -6, 16:)
39. வாயிற் புகுதல்: ஆறு பாடல்கள் (ஐங்குறு -65, 137-139: அகநா -26, 236:)
40. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு ப -86

41. உ.வே.சாமிநாதையர், குறுந்தொகை, ப -330
42. பொ.வே.சோமசுந்தரனார், குறுந்தொகை, ப -90
43. பிரிவு இருநூற்றுப் பன்னிரண்டு பாடல்கள் (நற் -1, 24, 64, 69, 73, 79, 84, 97, 107, 109, 118, 130, 153, 174, 177, 186, 193, 199, 214, 224, 225, 226, 238, 240, 241, 243, 281, 289, 296, 302, 314, 343, 381, 397: குறுந் -12, 20, 21, 24, 27, 35, 39, 41, 43, 46, 64-68, 75-77, 79, 82, 86, 94, 98, 103, 104, 106, 107, 108, 110, 122, 126, 140, 148, 154, 155, 174, 183, 186, 188, 190-192, 194, 195, 197, 200, 207, 216, 218, 220, 221, 224, 234, 254, 278, 279, 281, 283, 285, 288, 289, 290, 307, 314, 319, 325, 329, 330, 341, 344, 352, 386, 387, 391, 398: ஐங்குறு -311, 314, 317-320, 332-340, 341-350, 451-460, 473-476: அகநா -1, 11, 23, 31, 37, 40, 45, 53, 67, 74, 97, 103, 113, 115, 133, 135, 139, 141, 147, 151, 155, 157, 163, 175, 183, 184, 185, 187, 194, 205, 217, 229, 235, 241, 243, 247, 249, 255, 264, 265, 267, 273, 277, 281, 293, 294, 301, 303, 305, 309, 329, 331, 333, 341, 345, 349, 355, 364, 367, 368, 375, 389, 391, 395:)
44. இளங்கோவடிகள், சிலம்பு. -7:2-4
45. தொல்காப்பியர்,தொல்.பொருள்., நூ.எ -109:39-41
46. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்., ப -487
47. அ.விசுவநாதன், சங்க இலக்கியச் சிந்தனைகள், ப -88
48. கு.வெ.பாலசுப்பிரமணியன், நற்றிணை மூலமும் உரையும், ப -417
49. அம்மூவனார், குறுந் -49:3-5
50. வ.சுப.மாணிக்கனார், தமிழ்க்காதல், ப -77
51. பொ.வே.சோமசுந்தரனார், ஐங்குறுநூறு, ப -480
52. மீட்சி: ஐந்து பாடல்கள் (நற் -174: குறுந் -75, 107, 288: அகநா -303)
53. தொல்காப்பியர், தொல்.பொருள்..நூ.எ -145:42-43
54. இளம்பூரணர், தொல்.பொருள்., ப -281
55. தொல்காப்பியர், தொல்.பொருள்., நூ.எ -1091:41
56. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்., ப -488
57. நச்சினார்க்கினியர், தொல்.பொருள்., ப -490
58.

# இயல் - 4

## தோழி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

சங்க இலக்கியத்தில் புலவர்தம் உள்ளத்தை நுதலி மெய்யின்பப் பொருட்குச் செவ்வி சேர்ப்பவள் தோழியாவாள். தாம் கூறவிழையும் இன்பச் செய்தியையும், பிறர்க்கு அறிவுறுத்தி இடித்துரைக்கும் மொழிகளையும் தோழி வாயிலாகப் புலப்படுத்துவளாதலின் தோழியின் கூற்றுமொழிகள் சங்க இலக்கியத்தில் மிகுத்துள்ளன. தோழி, தலைமக்கள், தாயர், பிறர் என அனைத்து மாந்தருடனும் உரையாடும் உரிமை பெற்றவளாதலின் அவளின் மொழிபொருட்கள் மிகுந்துள்ளன. இத்தோழியின் கூற்றுமொழியமைந்த பாடல்களின் பொருண்மைகளை அவற்றின் துறைக்குறிப்புவழி ஆய்வது இவ்வியலின் நோக்கமாக அமைகிறது.

**தோழி**

சங்க இலக்கிய மாந்தருள் நுண்மாண்திறன் கொண்ட வலிமைவாய்ந்த பாத்திரம் தோழியாவாள். 'கேட்டார்ப் பிணிக்கு தகைமொழியாளா'கிய தோழியை,*"தாங்கருஞ் சிறப்பின் தோழி"*[1],*"தோழி தானே செவிலி மகளே"*[2]என அவளின் சிறப்பைச் சுட்டியும், அவளை இனங்காட்டியும் மொழிவர் தொல்காப்பியர். இத்தோழி தலைவியின் உடன்பிறவா ஒன்றியுறையும் பிறப்பினள். ஆகையினால் தலைவி இவளின் அசைவினையும் தன் அசைவாகக் கொண்டமைபவள். இவளும் தலைவியையே தன்னிலும் மேலாக உள்ளுபவள். தலைவியின் தேவையை அவளினும் மேலாக கூர்ந்து நோக்குபவள். அவளின் வாய்மொழியாக அமைபவள். அவளின் உணர்வு வயத்தளாதலின் தலைவன் உள்ளிட்ட பிறரிடமும் உரையாடுபவள். அவளின் உணர்வுக்கும் உணர்விலெழும் தடுமாற்றங்களுக்கும் தீர்வு காண்பவள். இதனாலேயே இலக்கணிகள் முதற்கொண்டு இன்றைய திறனாய்வாளர்கள் வரை தம் மொழிப்புலமையை மெய்ப்பிப்பதற்கு தோழியின் மொழித்திறனையே தம் களமாகக் கொண்டாய்ந்துள்ளனர். அவர்களின் சங்க ஆய்வு மோகத்திற்குத் தோழியே களிப்பினை நல்குபவள். *"தலைவியைச் சுற்றியுள்ள தொழுதியாம் ஆயக் கூட்டத்தின் முதல்வியைத் தோழி எனலும் உண்டு."*[3] என அ.நாராயணசாமி மொழிவதும் (நற் -267) இக்கருத்தினொடு ஒத்துள்ளமையை அறியமுடிகிறது. சரளா ராசகோபாலனும் *"தலைவன் தலைவியைக் கூட்டுவிக்கும் பாலமாக அன்றித் தலைவன் தலைவியின் பண்பு விளக்கக் கண்ணாடியாகவும் தோழி விளங்குகிறாள்."*[4] எனத் தோழியின் நிலைப்பாட்டினை மொழிவர்.

**தோழியிற் கூட்டம்**

தலைமக்கள் தோழியின் துணைகொண்டு கூடி இன்புறுதல் தோழியிற் கூட்டமாகும். இத்தோழியிற் கூட்டங்களாகக் களவறிதல், முதல் வரைவு வரையிலானவற்றைக் குறிப்பிடுவர். மலிவு, ஊடல், செலவழுங்குவித்தல், பிரிவு என்ற கற்புக்குரிய துறைகளிலும் தோழிக்குரிய மொழித்திறன்கள் அமையும்.

**களவறிதல்**

இயற்கைப்புணர்ச்சியின் பின்பு தலைவியின் செயல், மேனி மாறுபாடுகளைக் கண்டு, மாற்றத்துக்குக் காரணம் தோழி வினாவ, அதனை மறைக்கிறாள் தலைவி. அந்நிலையில் தோழி, களவினை ஊகித்தறிதலும், அறிந்ததைக் குறிப்பால் தலைவிக்கு உணர்த்துதலும் 'களவறிதல்' துறையாகும். இப்பொருண்மையில் ஒரு பாடல்[5] காணப்படுகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவி தனிமை விரும்பல் மற்றும் வேறுபாடுகள்

என்னும் பின்னணிச்சூழல் அமைகிறது.இத்துறையிலமைந்த '..... வேறுபாடு கண்ட தோழி, தலைவி மறைத்தற்குச் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'எழாஅ யாகலின் எழில்நலந் தொலைய' எனத் தொடங்கும் நற் -13ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் கிளிகள் தினையைக் கவர்ந்து சென்றதால் தினைக்கதிர்களும் அழிகின்றன. கிளிகளை ஓட்டாமல் அழகிய நலம் கெடும்படியாக, அயலாரிருக்கும் இடத்தில் அழாமல் இருத்தல் நலம்' எனத் தலைவியின் களவொழுக்கத்தை அறிந்தேனெனத் தோழி உணர்த்தும் பொருண்மை கொண்டது.

மயிலறியாது கிளிகள் தினையைக் கவரும் செயலினை(நற் -13:7-9) உள்ளுறுத்து,'நின்னுடன் தலைவன் புணர்ச்சியை மேற்கொண்டு ஒழுகுகின்றான். நின் நலமும் மாறுபட்டது. நின் உள்ளத்தினை மாற்றானொருவன் கவர்ந்து கொண்டதை யான் அறிந்துகொண்டேன். இது மரபுடைத்து' எனத் தோழி தலைவியிடம் களவினைத் தான் அறிந்துகொண்டதைப் புலப்படுத்துவது தெளிவு. மற்றையோர் இருக்குமிடத்தில் நீ அழாதிருக்க வேண்டும் எனத் தோழி உரைத்தல்(நற் -13:1-2), களவொழுக்கத்தால் தலைவியின் செயல், மேனி மாறுபட்டுள்ளது என்பதும், தலைவி அழுதால் புறத்தார்க்குப் புலனாகி இடையூறு ஏற்படுமெனத் தோழி

எண்ணுவதும் வெள்ளிடைமலை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையைச் சுட்டுகிறது.

**மதியுடன்பாடு**

தலைவன் பாங்கனாற் பெறலாகும் கூட்டம் இனியும் தொடர வாய்ப்புகள் அரிதென எண்ணுகிறான். தோழியிற் கூட்டத்துள் தலைவியின் ஒன்றித்தோன்றும் உயிரனையாள் யாரென அறிந்து, அத்தோழியின் உடன்பாடு பெற்றுத் தலைவியை எதிர்ப்பட்டுக் கூடிவருவது தோழியிற் கூட்டம் ஆகும். இக்கூட்டத்தின் முதல் நிகழ்வாக மதியுடன்பாடு அமைகிறது. இம்மதியுடன்பாட்டுப் பொருண்மையில் ஐந்து பாடல்கள் அமைந்திடினும், ஒரு பாடல்[6] மட்டுமே தோழி கூற்றாக அமைகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவன் தன் துன்பம் கூறல்

என்னும் பின்னணிச் சூழலாக அமைகிறது. இதனடிப்படையில்,'இறைவனை நகுதல்' துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**இறைவனை நகுதல்**

தலைவன், தலைவியால் ஏற்பட்ட காதல் துன்பத்தைத் தோழியிடம் உரைக்கிறான். தோழி, தலைவியின் எழினலனைக் கண்ணுற்று நின் துயருக்கு நீயே காரணம் எனக் கூறித் தலைவியை நோக்கி நகைப்பது இத்துறையாகும். தன் உதவியால் களவுக்கூட்டம் நிகழ்ந்து அது ஊரார்க்குத் தெரிந்தால், அப்பொழுதும் அலர் தூற்றி நகையாகுமெனவும் அமையும்.

இத்துறையில் 'தலைமகளும் தோழியும் ஒருங்கு நின்றுழி அவள் என்னை வருத்துதற்குச் செய்த தவறு என்ன? என்று வினாய தலைமகற்குத் தோழி நகையாடிச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'தவறில ராயினும் பனிப்ப மன்ற' எனத் தொடங்கும் ஐங்குறு -177ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'தொண்டி அன்னாளைக் கண்டவர் துன்புறுவர். நீயே அவள் தோளை அடைந்தனை. அதனால் நின் துன்பத்திற்கு நீயே காரணம்' எனத் தோழி கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில், தலைவன் எம்முடைய தவறு யாது என வினாவியவழி 'தவறில ராயினும் பனிப்ப மன்ற' எனத் தோழி பதிலுரைக்கிறாள்.

அதாவது,*“நின்பால் தவறிலை யாயினும் தவறுண்டு போலும் எனக் கருதிப் பனித்தல் நின்மாட்டே அமைந்தது என்றாளாம்”*[7] என்பர் ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை. இதனால் தோழி மாட்டு நகை தோன்றியதாக அமைகிறது. ‘தொண்டி யன்னோள் தோள் உற்றோர்’ என்புழி, தலைவனே நீயும் இவளும் முன்னரே கூடி மகிழ்ந்தீர் என மறைமுகமாகத் தோழி புலப்படுத்துகிறாள். இது ‘முன்னுறு புணர்ச்சி முறை நிறுத்துரைத்தலாக’ அமைகிறது. ‘இவறுதிரை திளைக்கும் இடுமணல்’ என்புழி, தலைவியின் பெற்றோரும் இவ்விடம் வருவதும் போவதுமாக இருப்பர். அதனால், நீ தலைவியைக் காண்பதரிது’ எனத் தோழி கூறுவதாக இவ்வுள்ளுறை அமைந்துள்ளது. இவ்வாறு நோக்கின் இப்பாடலின் பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மைக்குப் பதிலுலுரைப்பதுபோல் அமைந்து, பின்னணிச் சூழலுடன் ஒன்றித் துறையை விளக்குகிறது.

**பின்னிற்றல்**

‘உயிர்ப் பகுத்தன்ன’ தோழியை மதியுடன்படுத்தி தோழியிற் கூட்டம் வேண்டி நின்றான் தலைவன். தோழியும் அவர்களின் காதல் உண்மையென அறிகிறாள். இருந்தும் அவனின் காதலின் ஆழ்நிலையை அறிதற்பொருட்டு அமைதி காக்கிறாள். அவளிடம் தலைவன் தன் காதலுறுதியைப் புலப்படுத்துகிறான். அவ்வேளையில் தோழி, தன் நுண்மாண்நுழைபுலங் கொண்டு தலைவனை ஆராய்ந்தும், அவனைச் சேட்படுத்தியும், அவன் காதலுறுதி அறிந்து அவனுக்காகக் குறைநேர்ந்தும், தலைவி உடன்படாநிலையில் அவனுக்காக வருந்தியுமெனப் பலநிலைகளில் தனது சேவையைப் புரியத் தொடங்குகிறாள். இச்செயல்கள் அனைத்தும் ‘இரந்து பின்னிற்றல்’ துறையிலடங்கும். இப்பொருண்மையில் தோழி கூற்றில் இருபத்தொரு பாடல்கள்[8] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மைகளை ஆராயின்,

- தோழியின் குறிப்பை தலைவி உணராதிருத்தல்
- விரைந்து குறைமுடிக்க எண்ணுதல்
- ‘நட்டபின் ஆராய்தல் நட்பன்று’ எனத் தோழிக்கு உணர்த்துதல்
- தலைவனின் தடுமாற்றத்தை உண்ர்த்துதல்
- தலைவன் காதல் மிக்கிருக்கும் வேளையிலேயே தலைவியை குறைநயக்கக் கூறல்
- தலைவன் காதல் மிகுதியினால் படுந்துயர் கூறித் தான் வருந்துதல்

- தலைவி நாணமிக்கவளாய் இருத்தல்
- தலைவன் இல்லற மாண்புடைவனாய் இருத்தல்
- தலைமகள், தலைவன் பிரிவாரோஎன அஞ்சும் நிலை
- தலைவன் மணக்க எண்ணாதிருந்த நிலை

எனப் பின்னணிச்சூழல்கள் அமைகின்றன. இதனடிப்படையில் பதினொரு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இக்குறைநயப்பித்தலை நேர்க்கூற்றாகக் குறைநயப்பித்தல், படைத்துமொழிந்து குறைநயப்பித்தல் என்ற நிலைகளிலும் வகைப்படுத்தமுடிகிறது.

**தலைவி தன் குறிப்பினளல்லள் என்றல்**

தோழி, தலைவனுடன் கூட்டுவிக்கத் தலைப்பட்டுத் தலைவிக்குக் குறிப்புமொழிகளைக் கூறினாள். ஆனால் தலைவியிடமிருந்து பதிலுரைகள் வாராதிருக்க, அதனைக் கண்டு சோர்வுற்ற தோழி, தலைவி தன் குறிப்பினுக்குள் இல்லையென வருந்துவது இத்துறை. இத்துறையை நம்பியகப் பொருள் 'தலைவியை முனிதல்' எனச் சுட்டுகிறது. நக்கீரனார்,*"அவளைக் கண்ணிற் கண்டு கையிற் கூப்பித் தலையிற் பணிந்து வழிபடச் செல்வதல்லது எம்போல்வார்களால் ஒரு குறையுணர்த்துந் தன்மையளோ என்று சொல்லும்."*[9] எனத் தோழி வருந்திக் கூறுவதாக மொழிவதும் இத்துறைக்கு வரையறை கூறுவதுபோல் அமைந்துள்ளது.

'குறைநேர்ந்த தோழி, தலைமகளை முகம்புக்க தன் சொல் கேளாதுவிடலின், இறப்ப ஆற்றாள் ஆயினாள் என உணர்ந்து, ஆற்றாளாய்த் தன்னுள்ளே சொல்லியது. தலைமகனுக்குக் குறைநேர்ந்த தோழி, தலைமகளை முகம்புக்கலளாய் ஆற்றாது தன்னுள்ளே சொற்றதூஉமாம்' என்ற துறைக்குறிப்புகளுக்கு 'மாவென மதித்து மடலூர்ந் தாங்கும்' எனத் தொடங்கும் நற் -342ஆம் பாடல் அமைகிறது.

இப்பாடல், தோழியிடம் தலைவன் குறையுற, அவனுக்குக் குறைநேர்ந்த தோழி, தலைவியிடம் 'நீ அவனுக்கு அருளல் வேண்டும்' என்று மொழிந்தும், குறிப்புமொழிகள் காட்டியும் பதில் வாராதிருக்க வருந்தினாள். அவளின் சேவடியில் என் சென்னி சேர்த்தால் தலைவன் கூறியது யாதென மொழிவாள் போலும்' என ஆற்றாது தன்னுள்ளே கூறுவதாகப் பொருண்மை அமைந்துள்ளது. இப்பொருண்மை தோழியின் ஆற்றாமொழிகளாய் அமைகின்றன. இங்குத் தோழியின் குறிப்பினை

அறியாமைக்கு, தலைவி தன் காதலைத் தோழியிடம் கூறாமல் மறைந்தொழுகினமையும், அதனால் தோழி கூறிய மொழியும் காட்டிய குறிப்பும் உணராதிருந்தமையும் காரணங்களாக அமைகின்றன. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்புகளின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**முகம்புகல்**

தோழி, தலைவியிடம் குறை நேரும்பொழுது அவள் முகத்தை நேர்க்கு நேர் நோக்கி விளம்புவன விளம்புதல் முகம்புகல் துறையாகும். இதனை எச்.வேங்கடராமன் *“புகுதல் - தலைவி நோக்கிய நோக்கெதிர் சென்று புகுதல். முகம் என்பது அங்ஙனம் புகுதற்கு இடமாகிய நோக்கு.”*[10] என உரைப்பர். இத்துறையிலமைந்த ‘இது குறை நேர்ந்த தோழி தலைமகளை முகம்புக்கது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘நகையா கின்றே தோழி தகைய’ எனத் தொடங்கும் நற் -245ஆம் பாடல் அமைகிறது.

இப்பாடல் ‘விளையாடிக் கொண்டிருந்த நம்மிடம் வந்து ‘யாரையோ என் அரிதுபெறல் இன்னுயிர் வௌவிய நீ’ எனக் கூறித் தேரில் ஏறிச் சென்றுவிட்டான். அவன் கூறிய வார்த்தைகள் நம்மையும் வருத்தும் என்பதை அறியாமல் சென்றுவிட்டான். அதை நினைக்கும்பொழுது நகையாகின்றது’ எனத் தோழி கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,

‘தான்நம் அணங்குதல் அறியான் நம்மின்
தான்அணங் குற்றமை கூறிக் கானற்
சுரும்பிமிர் சுடர்நுதல் நோக்கிப்
பெருங்கடற் சேர்ப்பன் தொழுதுநின் றதுவே’ (நற் -245:9-12)

என்புழி, தோழி தலைவியின் களவொழுக்கத்தை அறிந்து கொண்டமையைப் புலப்படுத்துகிறாள். ‘தலைவன் நம்மிடம் வந்து நும்மால் வருந்தினம் எனக் கூறுவது நகைப்பிற்குரியதாக அமைகிறது’ எனத் தலைவியிடம் கூறுவது, அது நமக்கும் வருத்தம் மிகுப்பது எனத் தலைவியிடம் கூறுவதாகவும் தலைவனிடம் குறைநயத்தலைக் கூறுவதாகவும் அமைந்துள்ளதை அறியமுடிகிறது. இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**கையுறை**

கையுறை என்பது தலைவன் தலைவிக்காகத் தோழி வாயிலாகக் கொடுக்கும் பரிசுப்பொருள். இது அவன் சார்ந்த பகுதிகளில் கிடைக்கும் நல்மலர்களாகவோ தழையாகவோ அமையும். கையுறைப் பொருளை ஏற்பது, மறுப்பது, ஏற்கச் செய்வது போன்ற செயல்பாடுகளின் ஊக்கியாகத் தோழி அமைவாள். தோழியின் இச்செயல்பாடுகள் தலைவியின் அருமையைத் தலைவன் உணர வேண்டும். தலைவனின் உறுதியைத் தான் அறிந்துகொள்ள வேண்டுமென்ற இரு நோக்கங்களைத் தெளிவுபடுத்தும் தன்மையில் அமைகின்றன. இப்பொருண்மையில் நான்கு பாடல்கள்[11] காணப்படுகின்றன.

**கையுறை மறுத்தல்**

தலைவன், தலைவிக்காகத் தோழியிடம் கொடுக்கும் கையுறையைத் தோழி மறுப்பது இத்துறையாகும். இத்துறையை வ.சுப.மாணிக்கனார் *"தலைவனோடு தலைவியின் உறவை அறிந்துகொண்ட பின்னும் தோழி தலைவனுக்கு இடையூறுபோலக் காட்டிக்கொள்வாள். அவனது பொங்கி வரும் காதலுக்குச் செவிசாயாள். அவன் அரிது முயன்று ஆர்வத்தொடு கொண்டுவரும் கையுறையை ஏற்க மறுப்பாள்."*[12] என நிகழ்ச்சிப்படுத்துவர். இப்பொருண்மையில் இரு பாடல்கள் (குறுந் -1: ஐங்குறு -187:) காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தாயும் மற்றாரும் அறிந்துகெள்வர் என்ற அச்சவுணர்வு எழும்நிலை
- தலைவனின் காதலுணர்வை அறிய முற்படும்நிலை

என்பன பின்னணிச் சூழல்களாக அமைவது புலனாகும்.

'தோழி கையுறை மறுத்தது' என்னும் துறைக்குறிப்பிற்கு,'நொதும லாளர் கொள்ளார் இவையே' எனத் தொடங்கும் ஐங்குறு -187ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'தலைவனே! நீவிர் கொணர்ந்த மலரையும் பறியார். அம்மலர்களால் தொடுக்கப்பட்ட மாலையையும் தம் விளையாட்டுப் பாவைக்கும் சூடார். மாலை தொடுப்பவர்களும் இம்மலரைப் பயன்படுத்துவதில்லை.' எனத் தோழி கையுறை மறுக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,'கொள்ளார், புனையார், கொள்வார் இன்மை' என எதிர்மறை அன்மைச் சொற்களில் தோழி குறிப்படுவது, தலைவன் கொணர்ந்த கையுறையை மறுப்பதாக அமைகிறது. தலைவன் கொணர்ந்த

மாலையை இழித்துரைப்பது, அவனின் காதலுணர்வின் திறத்தை அறிந்து கொள்வதற்காகவெனப் புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல்கள், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

**கையுறை ஏற்றல்** துறையில் 'தலைவன் கொணர்ந்த அசோக மரத் தழை எளிதில் வாடிவிடும் இயல்பினையுடையது தோழி' எனத் தோழி கூறும் பொருண்மையில் ஐங்குறு -211ஆம் பாடலும், தலைவன் கொணர்ந்த தழையாடையை உடுப்போமெனில், அன்னை காணின் வெகுளுவள் என்ற அச்சம் ஒருபால் தோன்றுகிறது: வேண்டாவென மறுப்பின் இனிய கேண்மை செய்தொழுகும் மகிழ்நன் மனம் சோர்வான் என்ற அச்சம் மறுபால் துன்புறச் செய்கிறது: காலம் தாழ்த்துவோமெனில் இத்தழையுடை வாடிவிடும்: இதனால் என் செய்வோம்' எனத் தோழி, தலைவியின் குறிப்புணர்ந்து கூறும் பொருண்மையில் நற் -359ஆம் பாடலும் பொருத்தமுற அமைந்துள்ளன.

**சேட்படுத்துதல்**

தலைமக்களின் காதல் ஒழுக்கம் புறத்தார்க்குப் புலப்பட்டு அலராகுமென அஞ்சிய தோழி, தலைமகனைத் தலைவியிடமிருந்து சேய்மைப்படுத்துவாள். இந்நிகழ்வைச் சேட்படுத்துதல் என இலக்கண நூலார் குறிப்பிடுவர். இச்சேட்படுத்துதல் தலைவி மீது தலைவன் கொண்டுள்ள காதற்பிணைப்பையும், தலைவியின் காதல் ஆழத்தையும், தோழி அறிந்துகொள்ளும் வாய்ப்பாக அமையும். அந்நிலையில் தோழி தலைவனுக்குத் தன் தோழியின் அருமையை எடுத்துரைத்தும், பெருமையைச் சுட்டியும், பேதைமையுடையாள் என விளம்பியும் தலைவியின் இன்றியமையாமையைத் தலைவனுக்குப் புலப்படுத்துவாள் தோழி.

**சங்க இலக்கியத்தில் சேட்படுத்துதல்**

சேட்படுத்தல் பொருண்மையில் சங்க இலக்கியத்தில் தோழி கூற்றில் மூன்று பாடல்கள்[13] காணப்படுகின்றன. இப்பாடல்களில் நற்றிணை 301ஆம் பாடல் தோழி தன்னுள்ளே கூறிக் கொள்வதாக அமைந்துள்ளது. இப்பாடல்கள் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைமக்களிடையே குலவேறுபாடுகள் இருந்தாலும் அவர்கள் இணைய வேண்டுமென எண்ணுதல்

- தலைவியின் இளமைத் தன்மை மாறாதவள் ஆதலால், நின்னுணர்வை உணராள் என்றுரைத்தல்
- தலைவனின் காதலையும், தாயின் பேரன்பையும் ஒருங்கே பெற்ற தலைவியின் காதல் நிலையில் தோழி தடுமாறுதல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினடிப்படையில் மூன்று துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பெருமையிற் பெயர்த்தல் (குலமுறை கூறி மறுத்தல்)**

தலைமக்களின் காதலை உணர்ந்த தோழி, அவர்களின் காதலின் புரிதல் தன்மையைப் புலப்படுத்துவதற்காகச் சிறிது காலம் சேய்மைப்படுத்துவாள். இச்சேய்மைப்படுத்துதலுக்கான காரணங்களில் ஒன்றாக 'பெருமைதனை எடுத்து மொழிதலை' மேற்கொள்வாள். இப்பெருமையிற் பெயர்த்தலில் தலைவியின் பெருமைதனைத் தலைவனுக்கும், தலைவனின் பெருமைதனைத் தலைவிக்கும் உணர்த்தி, அதனால் நினக்கு ஒப்பானவள் எம் தலைவி அல்லள் எனத் தோழி மொழிவது இத்துறையாகும். இத்துறையில், தலைவனின் பெருமையைப் புலப்படுத்துவதாக ஒரு பாடல்(நற் -45) அமைந்துள்ளது.

'குறை வேண்டிய தலைமகனைச் சேட்படுத்தியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'இவளே, கானல் கண்ணிய காமர் சிறுகுடி' எனத் தொடங்கும் நற் -45ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல்,'எம் தலைவி பரதவ மகள். நீயோ மன்னனின் மகன். நும்மால் உண்டாகும் பெருமைக்கு யாங்கள் தகுதியுடையேம் அல்லேம். ஆதலின் நீவிர் செல்வீராக' எனத் தோழி தலைமகனைச் சேட்படுத்தும் பொருண்மையில் அமைந்துள்ளது.

'மீனெறி பரதவர் மகளே நீயே
நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்
கடுந்தேர்ச் செல்வர் காதல் மகனே' (நற் -45:3-5)

என்ற செய்யுளடிகள், தலைவனின் பெருமையினைச் சுட்டுவதாக அமைந்திடினும், இகழ்ச்சிக்குறிப்பாக, தலைவன் சிறிது காலம் தலைவியை மறந்திருந்ததால் உண்டான தோழியின் சினமொழிகளாக அமைந்துள்ளதை அறியமுடிகிறது. பொ.வே.சோமசுந்தரனார் இப்பாடலின் 3,4 அடிகளில்,

*"மீனெறி பரதவர் காதல் மகளே*

*நீயே, நெடுங்கொடி நுடங்கும் நியம மூதூர்க்"*[14]

எனவும் துறைக்குறிப்பில் *"குறைவேண்டி நின்ற தலைவனைத் தோழி சேட்பட உரைத்தது"*[15] எனவும் சிறு மாற்றங்கள் செய்திடினும், பாடலின் பொருண்மையும், துறைக்குறிப்பின் பொருண்மையும் சேட்படுத்துதல் துறைக்குள்ளேயே அமைந்துள்ளதை அறியமுடிகிறது.

**தலைவியின் அருமை உள்ளல்**

களவொழுக்கத்தில்பெரிதும் ஈடுபாடு கொண்ட தலைவனிடம் தோழி 'தலைவி காண்பதற்கு அரியள். மிக்கோளினும் மிக்கோள். ஆதலின் காண்பதரிது' எனக் கூறி அவனைச் சேட்படுத்துதல் 'அருமை சாற்றல்' துறையாகக் கொள்வர் இலக்கணிகள். மாறாக, சேட்படுத்தும் பொருண்மையிலமைந்த இப்பாடலில் (நற் -301) தலைமகனைச் சேட்படுத்திய பின் தோழி,'இளமைப் பருவத்தள், குறிஞ்சி மலர் போன்ற தண்ணிய மேனியள், குவளைக் கருங்கண்ணள், அழகுமயில் சாயலள், கிளிப் பேச்சினள்,……. எனப் பலவாறாகத் தம் மகளின் அழகினைப் பாராட்டி மகிழ்கிறாள் அவள் தாய். யான் அத்தலைவியின் மகிழ்விற்காகத் தலைவனுடன் கூட்டுவிப்பதை அறிந்தாள் அத்தாய் என்னாவாளோ?' எனக் கவன்றுரைப்பதால் இத்துறைக்குத் 'தலைவியின் அருமை உள்ளல்' என்னும் துறையாக வருவிக்கப்பட்டுள்ளது.

இத்துறையிலமைந்த 'சேட்படுத்து,'பிரிவின்கண் அன்பின் இயற்கையில் தகுவகையதோர் ஆற்றாமையினான்' என்று தோழி தன்னுள்ளே சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நீன்மலைக் கலித்த கருங்கோற் குறிஞ்சி நாண்மலர் புரையும் மேனிப்' எனத் தொடங்கும் நற் -301ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'தலைவியின் இளமை, அழகு, சாயல், மொழியினைத் தலைவன் தன் காதற் பெருக்காற் பாராட்டினான். அதே காதலை யாயும், யானும் அவளிடம் கொண்டுள்ளோம். யான் தலைவனுடன் கூட்டுவிப்பது அறிந்தால் தாய் என்னாவாளோ?' எனத் தோழி தன்னுள் கவன்றுரைப்பதாக, ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையின் பாடலடிக்கேற்ப பொருண்மை சுட்டுவர். இப்பாடலின் துறைக்குறிப்பிலும்,*"இ:து, அன்பின் இயல்பினால் தகுவதோர் ஆற்றாமையினான் என்று தோழி தன்னுள்ளே யாய் மறப்பருமை சொல்லிச் சேட்படுத்தது"*[16] எனப் பாடலடிக்கேற்ப மாற்றியமைத்திருப்பர். இவ்வாறு இப்பாடல்,

துறைக்குறிப்புகளின் பொருண்மை ‘தலைவியின் அருமை உள்ளல்’ துறையில் அமைந்து சிறக்கிறது.

**இருவகைக்குறி**

களவுக்கால வாழ்வில் தலைமக்களின் செயல்பாடுகள் பெரும்பான்மை தோழியின் பார்வையிலேயே அமைகின்றன. அவ்வகையில் தலைமக்கள் இருவரும் பகல், இரவுப் பொழுதுகளில் காணுதலும் நிகழும். இங்ஙனம் காணும் இடத்தை முடிவு செய்பவர்கள் தலைவியும் தோழியும் ஆவர். இக்காணுதல் பற்றி *“களவு நீட்டிக்க வேண்டும் என்பதும், காதலராயினார் இருவகைக் குறிகள் நிகழ்த்த வேண்டும் என்பதும் அகத்திணையின் நோக்கம் இல்லை. பாலதாணையால் தாமே கண்டு தம்முட் புணர்ந்த களவுக் காதலர்கள் வெளிப்படையாக மணந்து இல்லறம் நடத்த வேண்டும் என்பதே அதன் நோக்கம். இந்த நோக்கம் நிறைவேறத் தக்க காலம் வாயாவிடின் களவு நீடிக்கும். களவு நீளுங் காலத்தில் பகற்புணர்ச்சி இரவுப்புணர்ச்சிகள் நடைபெறும்”*[17] என்பர் ந.சுப்புரெட்டியார். இதன்வழி களவு கற்பாவதற்குரிய கால இடைவெளியில் இக்குறிகள் நிகழ்கின்றன என்பது தெளிவு.

**பகற்குறி**

தலைமக்கள் பகற்பொழுதில் காணும் இடத்தைப் பகற்குறி என்பர். அவ்வாறு காணுமிடம் தலைமக்களின் புழங்கிடமாக அமையும். அதாவது, அவள் அறிந்த பழகிய இடமாகவும், அச்சமின்றி உலாவும் இடமாகவும் இருத்தல் நலம். ஒரே இடத்தில் தினமும் காணுதல் நிகழாமல் வெவ்வேறிடமாக மாற்றம் நிகழ்வதும் உண்டு. இதனைத் தொல்காப்பியர்,

*“பகற்புணர் களனே புறனென மொழிப*
*அவனறி வுணர வருவழி யான”*[18]

என உரைப்பர். இப்பகற்குறிப் பொருண்மையில் ஐம்பத்து நான்கு பாடல்களில் நாற்பத்து இரண்டு பாடல்கள்[19] தோழி கூற்றாக அமைகின்றன. இப்பாடல்களின் பொருண்மையை ஆராயின்,

- பகற்பொழுதில் தலைவனைக் காணாநிலை ஏற்படல்
- களவை வெளிப்படுத்த, வெளிப்படாதிருக்க எண்ணல்
- எம் மொழியால் அன்னை அறிந்தாளென மருட்டியுரைத்தல்
- உடன்போக்கு நேரக் கூறல்

- தலைவனின் அன்பினை அறிய எண்ணல்
- தலைவி, தலைவனின் வருகையை எதிர்ப்பார்த்திருத்தல்
- தலைவன், தலைவியைக் காணவரும் எண்ணத்துடன் இருத்தல்
- தலைவி ஆற்றாதிருத்தல்
- தலைவன், தலைவியை மணக்க வேண்டும் என எண்ணுதல்
- களவு வெளிப்பட்டதெனல்
- தலைவி பாதுகாப்பில் இருத்தலைக் கூறல்
- நீண்ட இடைவெளிக்குப் பின் தலைவன் வந்த நிலை
- தலைவியை வரைந்துகொள்ள தூண்டும் நிலை
- தலைவி வேட்கை மிகுந்திருக்கும் நிலை

போன்றவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் 'சிறைப்புறமாகப் படைத்துமொழிதல்' முதல் 'குறி நீடல்' வரையிலான இருபத்தொரு துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**படைத்து மொழிதல்**

களவில் நெடுநாளொழுகும் தலைவன், தலைவியை வரையும் நோக்கின்றி அமைகின்றான். அவனை வரைவில் கருத்தூன்றும்விதமாகத் தோழி, சில செய்திகளைத் தானே உருவாக்கி விதந்து கூறுதல் படைத்துமொழிதல் துறையாகும்.

இத்துறையில் இரு பாடல்கள்(நற் -147: அகநா -358:) உள்ளன. இப்பாடல்களில் 'பகலே சிறைப்புறமாகத் தோழி தலைமகட்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'நீலத்து அன்ன நிறம்கிளர் எருத்தின்' எனத் தொடங்கும் அகநா -358ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல், தோழி 'மெல்லிய தாளத்திற்கேற்ப ஆடும் தோகைமயில் போல் நீயும் ஆழ்ந்த சுனையில் தோழியருடன் சேர்ந்து நீராடுவாய் என்று கருதியிருந்தேன். ஆனால் நீ, தலைவனைக் காணாத வருத்தத்தால் நீராடாது இருக்கின்றாய். நின் மேனியும் வேறுபாடு கண்டது. தலைவனால் உண்டான வேறுபாடு கண்டு, தாய் காரணம் கேட்பாள். நான் யாதொரு பதிலுரைப்பேன்' என எதிர் நிற்கும் தலைவியிடம், இனிமேல் நடப்பதைப் படைத்து மொழியும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் எதிர்நிற்கும் தலைவியின் நிலையும் தோழியால் படைத்து மொழிந்தனவேயாகும். பின்

அன்னைக்கான பதிலையும் அவளே படைத்து மொழிவாள்' என்பதையும் ஊகித்தறிய முடிகிறது.

இத்துறையிலமைந்த நற் -147ஆம் பாடலில் 'தினைப்புனத்தில் கிளி கடியாநிலையில் நீ எங்கு சென்றாய் என அன்னை வினவினள். அதற்கு நீ 'முழங்கும் அருவியில் மலைநாடனைக் காணவில்லை. பூக்கொய்து அவனுடன் சுனையாடவுமில்லை' என உண்மையை மறைக்காமல் கூறிவிட்டனையோ?. அதனால் வெட்கித் தலை கவிழ்ந்த தாயின் சினத்துக்கு முன் நாம் யாது செய்ய முடியுமோ? எனத் தோழி புனைந்துரைத்த மொழிகளால் அதட்டிக் கூறும் பொருண்மையிலும் தோழியின் படைத்து மொழிதல் திறன் தெளிவு. இவ்வாறு இப்பாடல்கள், அவ்வத் துறைக்குறிப்பிற்குள் அமைந்தும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையைச் சுட்டுகின்றன.

**ஏகிடு கிளவி**

தலைவன் இருக்கும்பொழுது பிறிதின்மேல் வைத்துத் தோழி கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'பகற்குறி வந்து நீங்கும் தலைமகன் போக்கு நோக்கி, தோழி மாவின் மேல் வைத்துச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'பெருமுது செல்வர் பொன்னுடைப் புதல்வர்' எனத் தொடங்கும் நற் -58ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல், மாலைப் பொழுதில் நாங்களும் வருந்திய மனத்தையுடையவர்களாய்ப் பெயர்ந்து போகும்படி, தலைவனின் ஓடுகின்ற தேரின் நுகத்திற் பூட்டப்பெற்ற குதிரைகள் வரும். செல்வந்தர்களின் புதல்வர், தம் தோளில் மாட்டிய செம்மையாக ஒலிக்கும் பறையின் நடுவில் வரையப்பட்ட குருவியைக் கோலால் புடைப்பர். சிறுவர்தம் கோலால் இக்குருவி அடிபடுதல் போல தலைவனின் தேரில் பூட்டிய குதிரைகளும் துன்பப்படட்டும்' எனத் தோழி கூறும் பொருண்மை கொண்டது. இங்கு, தலைவன் துன்பப்பட்டு தங்களுடன் இருக்க வேண்டும் என எண்ணாது, அவனின் குதிரைகள் துன்பத்திற்கு உள்ளாக்கப்பட்டு தலைவன் தங்களுடன் இருக்க வேண்டுமெனத் தோழி உரைப்பது தெளிவு. இப்பொருண்மை ஏகிடு கிளவித் துறையில் அமைகிறது.

**இரவுக்குறி**

பகற்குறியில் நீர்த்துறை, விளையாடுமிடம், தினைப்புனம் என அறிந்த பழக்கப்பட்ட இடங்களில் கண்டு மகிழ்ந்த தலைமக்களுக்கு இடையீடு ஏற்படுகிறது.

குறிப்பாக, தினைமுற்றின காலத்து, தலைமகள் தினைக்காவற்கு வர இயலாது. அக்காலங்களில் தலைவன், தோழியிடம் இரவுக்குறி வேண்டி நிற்பான். தோழியும் தலைவனின் காதலாழம் அறிந்து, தலைவியின் வீட்டினரின் பேச்சொலி கேட்கும் இடத்தில் இரவில் காணுதற்கான இடத்தைக் குறிப்பாள். இதனை இரவுக்குறியெனக் குறிப்பர். தொல்காப்பியர்,

*"இரவுக் குறியே இல்லகத் துள்ளும்*
*மனையோர் கிளவி கேட்கும்வழி யதுவே*
*மனையகம் புகாஅக் காலை யான"*[20]

என இரவுக்குறி இல்லத்துள்ளும் நிகழும் எனக் குறிப்பிடுவர். இறையனார் *"இரவுக் குறியே இல்வரை இகவாது"*[21] என இரவுக்குறி இல்லத்தின் அருகில் நிகழும் என்பர்.

**சங்க இலக்கியத்தில் இரவுக்குறி**

சங்க இலக்கியத்தில் இரவுக்குறிப் பொருண்மையில் அமைந்த 73 பாடல்களில், நாற்பத்தேழு தோழி கூற்றுப் பாடல்கள்[22] காணப்படுகின்றன. இப்பாடல்களின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- களவு வெளிப்பட்டு அலரான நிலை
- தலைவி இற்செறிக்கப்பட்டமையைக் கூறும்நிலை
- தலைவியின் வரைவு நோக்கினைப் புலப்படுத்தல்
- அலருக்கு அஞ்சாதிருத்தல்
- தலைவியின் மேனி வேறுபாடு கண்டு வரைவு வேண்டல்
- வழியின் ஏதம் குறித்து அஞ்சும் நிலை
- தினை முற்றினமையை உரைக்கும்நிலை
- தலைவியின் ஆற்றாமை கூறும்நிலையில்
- தலைவியின் எண்ணமதை அறிய முற்படும்நிலை
- வழியின் ஏதம் கூறித் தலைவனை ஏற்கச் செய்தல்
- குறியின் ஓசை கேட்காதநிலை
- பகற்குறியில் கண்ட இடந்தன்னில் தலைவன் நின்றிருத்தல் காணல்
- வரைவு முடுக்கும் நிலை, வரையும் நாள் உணர்த்தும் நிலை

- செவிலி ஐயுற்ற நிலை - அறிந்த நிலை

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினதனடிப்படையில் பதினெட்டு உட்துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**வரைவது கிளத்தல்**

இரவுக்குறி வரும் தலைவனிடம் தலைவியும் தோழியும் தமது ஆற்றாமை கூறி வரைவு கடாவுதல் 'வரைவது கிளத்தல்' துறையாகும். இத்துறையிலமைந்த 'இரவுக்குறி வந்து தலைமகளைக் கண்ணுற்று நீங்கும் தலைமகனை எதிர்ப்பட்டு நின்று, தோழி சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'வான்கடற் பரப்பிற் தூவற்கு எதிரிய' எனத் தொடங்கும் அகநா -10ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

'நெய்தல் உண்கண் பைதல கலுழ
பிரிதல் எண்ணினை ஆயின் நன்றும்
அரிது உற்றனையால் பெரும உரிதினின்
கொண்டு ஆங்குப் பெயர்தல் வேண்டும்…' (அகநா -10:5-9)

என்னுமடிகளில், இரவுக்குறியில் வந்த தலைவனிடம்,'தலைவியின் ஆற்றாமையும் பிரிந்தால் இறந்துபடுவாள் எனவும், அதனால் இவளை மணந்துகொண்டு செல்க' எனவும் தோழி கூறுவது தெளிவு. இங்கு, வேட்கையால் வராமல், கரையில் ஒதுங்கிய சுறாமீனைப் பகிர்ந்து, பலரையும் அழைத்து கொடுப்பதுபோல்(அகநா - 10:11-13),*"நீயிரும் நுமக்கு உறுதியாக ஆக்கிக் கொள்ளப்பட்ட நன்மைகளான நுமக்கு ஒழுக்கமாகிய நல்வழியில் ஒழுகாது, கண்டோர் இகழ்ந்த களவொழுக்கிலே ஒழுகி இக்களவினைப் பரப்பிப் பலரும் அலர் கூறும்படி பண்ணா நின்றீர்"*[23] எனப் பழைய உரைகாரர் கூறியதை உள்ளுறையாகக் கொள்ளினும் ஏற்புடைத்து. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தாய் உணர்ந்தமை நட்புற உணர்த்தல்**

களவினைத் தாய் அறிந்தமையைத் தோழி தலைமகற்கு உணர்த்துதல் இத்துறையாகும். இத்துறையில் இரு பாடல்கள்(அகநா -248, 272) உள்ளன. இத்துறையிலமைந்த 'இரவுக்குறிச் சிறைப்பறமாகத் தலைமகட்குச்

சொல்லுவாளாய்த் தலைமகன் கேட்ப, தோழி சொல்லியது' என்னுந் துறைக்குறிப்பிற்கு இவ்விரு பாடல்களும் அமைகின்றன. அவற்றுள்,

'வல்லே என்முகம் நோக்கி

நல்லை மன்என நகூப்பெயர்ந் தோளே' (அகநா -248)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடல் தலைவியின் களவுத் தலைவன் அவள் இல்லிற்கு வந்தனன். அவனைத் தாய் அறிந்துகொண்டதை 'நல்லைமன்' என்னுஞ் சொல்லால் புலப்படுத்தியமையையும், தன்னை நோக்கி தாய் மெல்ல நகை செய்தமையால் தலைவி இற்செறிக்கப்படுவாளோ? எனத் தோழி உணர்ந்தமையையும் பொருண்மையாகக் கொண்டமைகிறது.

இதேபோல் அகநா -272ஆம் பாடலிலும்(அகநா -272:11-15) தலைவன் தலைவியின் இல்லிற்கு வந்ததால், தாய் உணர்ந்து கொண்டாளென்பதும், அதனால் தலைவி இற்செறிக்கப்படுவாள் என்று தோழி அஞ்சுவதும், அதனைத் தலைவிக்குக் கூறியவழி தலைவனுக்கு உரைப்பதும் தெளிவு. இந்நிலை நோக்கின் இவ்விரு பாடல்களும், அவ்வத் துறைக்குறிப்புகளின் பொருண்மைக்குள் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

இரவுக்குறியில் 'தாய் தூங்கிவிட்டாளா என்பதறிய மதிநுட்பம் கொண்ட அகநானூற்றுத்(அகநா -68) தோழி,'நம் தோட்டத்திலுள்ள கூதளச் செடியின் இனிய ஓசையைக் கேட்பாயாக! அசோக மரத்தின் ஓங்கிய கிளையில் கட்டப்பட்டிருந்த ஊசலின் கயிற்றைப் பாம்பு என்றெண்ணி, அம்மரத்தின் பெரிய அடிப்பகுதி துனிபடுமாறு இடி வீழ்ந்தது. அதனையும் கேட்டனையோ? எனச் சொல்லாடி, தலைவன் வரும் காலம் வந்துவிட்டது எனத் தலைவிக்கு உணர்த்தும் பொருண்மை **தலைவன் வரவு உரைத்தல்** துறையில் அமைகிறது. **ஆற்றது தீமை அறிவுறு கலக்கம் உரைத்தல்** துறையில் தோழி 'வானத்து விண்மீன்களையும், கீழ்நிலத்தையும் காண முடியாத இரவுப்பொழுதில் நீ வந்துள்ளாய்,'வேங்கை கமழும் எம்சிறுகுடி யாங்கு அறிந்தனையோ? நோகோ யானே' (குறுந் -355:6-7) என வழியின் தன்மையையும் தன்னுடைய அச்சத்தையும் உணர்த்துகிறாள். இவ்வாறு இப்பாடல்களின் துறைக்குறிப்புகளும் துறையின் பொருண்மையைச் சுட்டுகின்றன.

**அல்லகுறி**

தலைவியைக் காண இரவுக்குறியில் வரும் தலைவன், தான் வந்ததை தலைவி, தோழிக்கு உணர்த்த சில ஓசைகளை எழுப்புவான். இதனை முன்பே அறிந்த தோழி, தலைமக்களின் கூட்டத்திற்கு உதவுவாள். அவ்வாறு அறியாநிலையில் தோழி, தலைவன் மீண்டும் வந்துழி, அவனிடம் 'நீவிர் வாராநிலையில் தலைவியின் துயர் அதிகமாயிற்று' என மொழிவாள். தலைமக்கள் இருவரும் குறியொலி தப்புதல் 'அல்லகுறி படல்' ஆகும். இப்பொருண்மையில் தோழி கூற்றில் ஒரு பாடல் (ஐங்குறு -237) காணப்படுகிறது. இப்பாடலின் பின்னணிச் சூழலாக,

- தலைவியின் ஆற்றாமை கூறி, வரைவிற்குத் தூண்டுதல்,

அமைகிறது.

**இறைவியின் ஆற்றாமை உரைத்தல்**

தோழி குறியிடம் மயங்கிய நிலையில், மீண்டும் வந்த தலைவனிடம் நின்னைக் காணாமையால் தலைவி மிகவும் துயருற்றாள் எனத் தோழி கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'அல்ல குறிப்பட்டு நீங்கிய தலைமகனை வந்திலனாகக் கொண்டு, அவன் பின்பு வந்துழி அவற்குத் தோழி சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'காமம் கடவ உள்ளம் இளைப்ப
யாம்வந்து காண்பது ஓர்பருவம் ஆயின்
ஓங்கித் தோன்றும் உயர்வரைக்கு
யாங்கெனப் படுவது நும்ஊர் தெய்யோ' (ஐங்குறு -237)

என்னும் பாடல் அமைகிறது. இப்பாடல் 'வேட்கை கொள்ளும் வேளையில் தலைவி நின்னை கண்டு நின் தோளணைதல் அவட்கு இன்பம் பயக்கும். ஆதலின் நின் ஊர் எவ்விடத்தில் உள்ளது என மொழிக' எனத் தோழி தலைவனிடம் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில் இறுதி மூன்றடிகளில் 'யாம் வரும்வேளையில் அல்லகுறிப்பட்டு நும்மைக் காணாநிலை ஏற்படுகிறது. இருப்பிடத்தையும் அறிய இயலவில்லை. தலைவியும் நும்மைக் காணும் ஆவலில் உள்ளாள்' எனத் தோழி, தலைவனிடம்

மொழிவது தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையைச் சுட்டுகிறது.

**இற்செறிப்பு**

களவொழுக்கம் அறிந்த தாயர், தலைவியை இற்செறித்தனர். தினைப்புனத்தில் தொடங்கிய களவு ஒழுக்கம் தோழியின் உதவியால் குறியிடங்களில் தலைப்பட்டு இன்பம் நல்கியது. இதனால் உண்டான தலைவியின் மேனி கதிர்ப்பு இற்செறிப்பிற்கு ஏதுவாக அமைகிறது. இதனைத் தா.ஏ.ஞானமூர்த்தி *"தினைப்புனத்துள் தினைக்கதிர்கள் அறுவடையாகிவிடும். அதன்பிறகு தலைவிக்குத் தினைப்புனத்தைக் காவல்புரியும் தொழில் இன்மையால் அவள் வீட்டினின்று வெளிச் செல்லமாட்டாள். இதனை 'இற்செறிப்பு' என்பர்."*[24] என இயல்பாக நிகழ்வதாக உரைப்பர். இற்செறிக்கப்பட்ட பின்னர் தலைவனால் தலைவியைக் காண இயலாது. அந்நிலையில் தோழி 'தலைவன், தலைவி, செவிலி' ஆகியோரிடம் கூற்று நிகழ்த்துவாள். இத்தகைய தோழி கூற்றாக 25 பாடல்கள்[25] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- அன்னை துயிலாதநிலை
- அன்னையின் ஐயப்பாட்டினைத் தலைமகற்கு உணர்த்தவிரும்பும் நிலை
- வரைதலை வேண்டுதல் வேற்றுவரைவை உணர்த்த விரும்புதலும்
- தலைவியின் வருத்தங்கண்டு தோழி வருந்தும்நிலை
- தினைப்புனம் அழிந்தநிலையில் இற்செறிப்பர் எனத் தலைவி அஞ்சுதல்
- அலருக்கு அன்னை அஞ்சியது உரைத்தல்
- வெறியாடலுக்கு அன்னை முற்பட்டமைக் கூறல்
- இற்செறித்தமையை உணர்த்த விரும்பும்நிலை
- அறத்தொடு நிற்க விழைதல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றின் அடிப்படையில்,'அலர் ஆயிற்று என்றாட்குக் கூறல்' முதல் 'காப்பு இடையீட்டின் கையறு கிளவி' வரை ஆறு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**அலர் ஆயிற்று என்று ஆற்றாட்குக் கூறல்**

தலைவன் பிரிவால் மேனி வேறுபாடு அடைந்த தலைவியைக் கண்ட ஊரார் அலர் தூற்றினர். அது கேட்டு ஆற்றாமை கொண்ட தலைவியிடம் 'நின் களவினைப் பிறர் அறியார். ஆதலின் நீ ஆற்றாமை கொள்வானேன்' எனத் தோழி வருந்திக் கூறுவது இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'அலர் ஆயிற்று' என ஆற்றாளாய தலைமகட்குத் தலைவன் சிறைப்புறமாகத் தோழி சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு 'உவர்விளை உப்பின் குன்றுபோல் குப்பை' எனத் தொடங்கும் நற் -138ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'நிலையில்லா வாழ்க்கை கொண்ட உப்பு வணிகர் கூட்டம், இயல்பு கெட்டு அழிந்த வண்டியின் அச்சாணியை எறிந்தபடி செல்வர். வீசி எறிந்த பழம்பாரமாகிய அச்சில் வெள்ளிய நாரை தன் முட்டையை ஈனும் கடற்கரையையுடையவன் நம் தலைவன். அவன் நினக்குச் சூட்டிய நெய்தல் மாலை பிறர் அறியாதது ஆதலின், நீ கலங்காதொழிக' எனத் தோழி தலைவியை ஆற்றுவிக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில்,

'................................. நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇ
கண்ணறி வுடைமை அல்லது ......' (நற் -138:6-8)
'அழுங்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே' (நற் -138:11)

என்னும் அடிகள் அலராயிற்று என அஞ்சிய தலைவியை ஆற்றுவிக்கும்விதமாகத் தோழி உரைப்பது,'பிறர் அறியுமுன் மணம்புரிதல் வேண்டுமெனத் தலைவனை அறிவுறுத்துதல் பொருட்டு' என்பதை அறியமுடிகிறது. இப்பாடலில்,

'கணங்கொல் உமணர் உயங்குவயின் ஒழித்த
பண்ணழி பழம்பார் வெண்குருகு ஈனும்' (நற் -188:3-4)

என்ற அடிகளை உள்ளுறையாக நோக்குமிடத்து,

உமணர் வீசிய பழம்பாரம் - வெண்குருகு - முட்டை இடுதல்
⇩ ⇩ ⇩
தலைவனால் கைவிடப்பட்ட தலைவி ஊரார்அலர் தூற்றுதல்

என அறியமுடிகிறது. 'முழங்குதிரை இன்சீர் தூங்கும்' (நற் -188:10) என்றது, அலரும் வேகமாகப் பரவும், இற்செறிப்பு நேரும். அதற்குள் தலைவியை வரைந்து காத்தல் நலம் பயக்கும் எனத் தான் எண்ணுவதைத் தோழி தலைவனுக்குப் புலப்படுத்த முற்படுவது புலப்படுகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின்

பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**இற்செறிப்பர் என அஞ்சியாட்கு உரைத்தல்** துறையிலமைந்த ‘‘இற்செறிப்பார்’ என ஆற்றாளாய தலைவியை அஃது இலர் என்பதுபடத் தோழி சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பின்(நற் -134) பாடல், புறத்திருக்கும் தலைவன் உணருமாறு தினையிடம்,‘தினையே, யாம் மலைநாடனை விரும்புவதாலேயே இங்கு நின்னையும் காக்கின்றோம். எம் நட்பு அன்னை அறியின் இற்செறிப்பினை மேற்கொள்வாள். வெறியாட்டயர்வாள். ஆதலின் நீ பிற்காலத்து விளைவாயாக’ எனச் சொல்லா மரபினொடு சொல்லும் பொருண்மை கொண்டது. இங்கு துறைக்குறிப்பில் கேட்போராக ‘தலைவி’ சுட்டப்பட்டுள்ளாள். ஆனால் பாடலில் தினையிடம் தோழி மொழிவதாக அமைந்துள்ளமையால் இத்துறைக்குறிப்பு ‘‘இற்செறிப்பார்’ என ஆற்றாளாய தலைவியை அஃது இலர் என்பதுபடத் தினையிடம் தோழி சொல்லியது’ என அமைதல் நலம். இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றிக் காணப்படுகிறது.

**ஒருவழித்தணத்தல்**

களவுக் காலத்தில் தலைமக்களின் ஒழுக்கம் வெளிப்பட்டு, ஊர்தனில் தலைவியின்மீது அம்பலும் அலரும் தோன்றியவிடத்து, தலைவன் அவை தணியும்வரை தன்னூரில் சில நாள் தங்குவதாகக் கூறுதலும், தங்கி மீண்டு வருவதும் ஒருவழித்தணத்தல் துறையாகும். இதனை *“வரைவுகடாவிய தோழியோடு வரைதற்கு உடன்பட்ட தலைவன், தனது ஊருக்கு ஒரு வழிப்போய் வருகிறேன் என்று போதல் ஒருவழித்தணத்தல் எனப்படும்”*[26] என வரைவுக்குப் பின் நிகழ்வதாகக் குறிப்பிடுவர் க.சுந்தரபாண்டியன். எனினும், இருவகைக்குறி இடையீட்டிற்குப் பின்னும், அம்பல், அலர் தோன்றி, அதனால் இற்செறித்தல், வெறியாட்டு முதலியவை நிகழ்வதற்கு ஏதுவான காலங்களில் நிகழும் நிகழ்வு. அவ்வாறு ஒருவழித்தணந்து வந்த தலைவனிடம் தலைவியின் நிலை குறித்து தோழி விளிக்குந் தன்மையினள்.

**சங்க இலக்கியத்தில் ஒருவழித்தணத்தல்**

ஒருவழித்தணத்தல் துறையில் சங்க இலக்கியத்தில் தோழி கூற்றில் பதினைந்து பாடல்கள்[27] காணப்படுகின்றன. இப்பாடல்கள்,துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவன் தலைவியின் நிலையை உள்ளாமை
- தலைவன் தலைவியைக் காணாதிருக்கும் நிலை
- பிரிவின்கண் தலைவி ஆற்றாதிருக்கும் நிலை
- பிரிவு உள்ளும் தலைவனின் உள்ளம் தலைவிக்கு உரைத்தல்
- தலைவியின் ஆற்றாமை அவனுக்கு உரைத்தல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினடிப்படையில்,'செலவழுங்குவித்தல்' முதல் 'அன்னலும், நொந்தவள் தன்னொடு வினாதல்' வரையிலான ஏழு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவியின் ஆற்றாமை கூறிச் செலவழுங்குவித்தல்**

தலைவனின் பிரிவைக் குறிப்பால் அறிந்துகொண்ட தலைவி ஆற்றாமை கொண்டு மேனி வாடலுற்றாள். இதனைத் தலைவனிடம் கூறித் தோழி செலவைத் தவிர்க்க முயலுதல் இத்துறையாகும். இத்தவிர்ச்சி 'மென் சொல் விலக்கல்'என்னுந் துறையாகவும் அமையும். இத்துறையில் மூன்று பாடல்கள்(ஐங்குறு -233, 297, 368) அமைகின்றன. இத்துறையிலமைந்த பாடல்களின் பொருண்மையை ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழலாக,

- பிரியும் எண்ணத்துடன் தலைவன் இருத்தல்

என்பது அமைகிறது. இத்துறையிலமைந்த 'ஒருவழித்தணந்து வரைய வேண்டுமென்ற தலைமகற்குத் தோழி கூறியது' என்னும் துறைக்குறிப்பிற்கு இரு பாடல்கள் (ஐங்குறு -233, 297) அமைகின்றன. இப்பாடல்களில் ஐங்குறு -233ஆம் பாடல்,'வருவை அல்லை வாடைநனி கொடிதே' என்னும் தொடக்கத்தைக் கொண்டது. இப்பாடல் 'வாடையின் கொடுமை கூறி, அதனால் தலைவி வருந்துவாள். நின் நாட்டிற்குச் செல்லல் வேண்டா. இவளை மணந்து உடன் அழைத்துச் செல்க' எனத் தோழி கூறும் பொருண்மை கொண்டது. இப்பொருண்மை, ஒருவழித்தணத்தலில் செலவழுங்குவித்தலை நேரடியாகச் சுட்டுகிறது. ஐங்குறு -297ஆம் பாடல் ஒருவழித் தணத்தலைக் குறிப்பாகச் சுட்டுந் தன்மையிலமைகிறது.

**தலைவிக்கு அவன் செலவு உணர்த்துதல்**

‘சில நாள் பிரிந்து பின் மீண்டும் வருவேன். அதுவரை தலைவியை ஆற்றியிரு’ என்ற தலைவன் கேட்குமாறு, தோழி அவன் செலவினைத் தலைவி உணருமாறு அவட்குக் கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘தலைமகன்,‘ஒருவழித்தணப்பல்’ என்று கூறியதனை அவன் சிறைப்புறத்தானாக, தலைமகட்குத் தோழி சொல்லியது’ என்ற துறைக்குறிப்பிற்கு ‘சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்’ எனத் தொடங்கும் ஐங்குறு -214ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் ‘மலைச்சாரலின் இனிய பலாவானது மலைப்பிளவின் முழஞ்சில் வீழ்ந்து, அங்குள்ள தேனடையையும் சிதைக்கிறது. அம்மலையின் தலைவன் நம்மைவிட்டு பிரிந்து, நும் கண்களில் நீர் வடிய தம் நன்னாட்டிற்குச் செல்கின்றானாம்.’ எனத் தோழி, தலைவிக்கு உணர்த்தும் பொருண்மை கொண்டது. இப்பொருண்மை துறையின் பொருண்மையை நேரடியாக வெளிப்படுத்துகிறது. இப்பாடலில்

‘சாரற் பலவின் கொழுந்துணர் நறும்பழம்
இருங்கல் விடரளை வீழ்ந்தென வெற்பில்
பெருந்தேன் இறாஅல் சிதறும் நாடன்’ (ஐங்குறு -214:1-3)

என்னும் அடிகள்வழி, தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து செல்வது, அவனும் துன்பம் அனுபவிப்பதோடு தலைவியையும் துன்பத்திற்கு உள்ளளாக்கும் செயல் எனத் தோழி, தலைவிக்கு மொழிவதன்வாயிலாகத் தலைவனுக்கும் உணர்த்துகிறாள் என்பது தெளிவு.

**வரைவுநீடல்**

தலைவன் களவின் மகிழ்வை நீட்டிக்க வேட்கும் நிலையிலும், அம்பலும் அலரும் தோன்றியபொழுது சிலநாள் இட்டுப்பிரியும் நிலையிலும் வரைவின் காலம் இடையீடுபட்டு நிற்கும். இந்நிகழ்வை வரைவுநீடல் என்பர். தலைவியின் நலனுள்ளுந் தோழி இக்காலங்களில் தலைவனிடம் தலைவியை வரைந்து வரையவேண்டுமெனவும், தலைவியிடம் நின் வருத்தம் கூறி அவனை வரைவினை முடுக்கச் செய்க எனவும் உரைத்து வரைவு நோக்கிக் களவின் செயல்களை ஈர்த்துச் செல்வாள். இத்துறையில் இருபது பாடல்கள்[28] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவி ஆற்றாதிருத்தல்
- தலைவி தன் வருத்தத்தை தன்னுள்ளே கொண்டழுந்துதல்
- தலைவன் அலர் பற்றி வருந்தாதிருத்தல்
- தலைவன் வரைவு மலிந்ததைத் தலைவவியிடம் உரைத்தல்

போன்றவை அமைகின்றன. இவற்றினடிப்படையில் தலைவியிடம் 'தலைவனை வரையக் கூறல்' முதல் 'வரைவு மலிந்தது கூறல்' வரை எட்டு வழிநிலைத் துறைகளாக வகைப்படுத்தப் பட்டிருக்கின்றன.

**நின் வருத்தம் தலைமகற்கு உரையெனல்**

வரையாது வந்தொழுகுந் தலைவன் நிற்ப, அவன் கேட்குமாறு தலைவியிடம், பகல், இரவுக்குறிகளில் வரையாது வருதல் தலைவனின் தகுதிக்கு ஏற்றதன்று எனவும், அதனால் நீ உறுந் துன்பமிகுதியையும் நீயே உரையெனத் தோழி உரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வரையாது வந்தொழுகாநின்ற காலத்து, கிழவன் கேட்பக் கிழத்திக்குத் தோழி கூறியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -332ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'களிறானது, தன் மணம் நாறும் உயிர்ப்பினையுடைய பிடியினைத் தழுவிக் கொண்டு குன்றில் உள்ள குறிச்சியில் இறங்கும். களிறுந் தாங்கா வாடைக் காலத்து, நீ உறும் துன்பந்தன்னை நீங்கும்வண்ணம் நீ விரும்பிக் கூறினால் யாதாகுமோ?' எனத் தோழி, தலைவிக்கு உரைக்கும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் 'மன்றம் நண்ணிய மலைகிழ வோற்கே' என்னும் இறுதி அடி, யானைகள் தழுவுதற்கு இடனான பொதியில் அம்பலம் எனவும், தலைவன், தலைவி ஆகிய இருவரையும் ஒன்றாகக் காணவல்லார் மன்றத்திலிருக்கும் சான்றோர் எனவும் இரு பொருள்பட அமைந்துள்ளமையை அறியமுடிகிறது. *"பலரும் காணத் தலைவன் தன்னை மணம் முடிக்க வருதல் வேண்டும் என்ற தலைவியின் வேட்கை இதனால் புலப்படும்."*[29]என வி.நாகராஜன் மொழிவதன்வழியும், தலைவியின் ஆவலை அவள் வாயின்மொழியாக வெளிப்படுத்த வேண்டுமெனத் தோழி விளைவது தெளிவு. இப்பாடல் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

வரைவுநீடல் பொருண்மையிலமைந்த ஏனைய துறைகளிலமைந்த பாடல்களும் அவ்வத் துறைகளை விளக்கும் தன்மையில் அமைந்துள்ளன.

**அலர்**

தலைமக்களின் களவு வெளிப்பட்டு, மூக்கின்மேல் விரல் சுட்டும் மகளிர் அலர்மொழி பரப்பினர். இதனால் தலைவி ஆற்றாதாகினாள். அவட்குக் காதலின் உறுதியைத் தோழி உரைத்தல் இத்துறையாகும். இத்துறையில் ஒரு பாடல்[30] அமைகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழலாக,

- அலர் மலிந்தமையால் தலைவி ஆற்றாதிருத்தல்

என்பது அமைகிறது. இதனடிப்படையில்,'காதற் திண்மையுரைத்தல்(குறுந் -373)' என்னுந் துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**காதற் திண்மையுரைத்தல்**

தலைமக்களின் களவினால் உண்டான அலர் கண்டு ஆற்றாளாயினாள் தலைவி. அவளுக்கு 'உலகின் நிலைப்புத் தன்மைகளின் இயல்பு மாறிடினும் நும் காதல் திண்மை வாய்ந்தது. வெவ்வாய்ப் பெண்டிரின் அலர்மொழிகளால் நும் காதலின் திறம் கெடாது' என உரைத்து, தேற்றுவது காதற் திண்மையுரைத்தல் துறையாகும். இத்துறையிலமைந்த 'அலர்மிக்கவழி ஆற்றாளாகிய தலைமகட்குத் தோழி சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -373ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

'நிலம்புடை பெயரினும் நீர்திரிந்து பிறழினும்
இலங்குதிரைப் பெருங்கடற்கு எல்லை தோன்றினும்
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை அஞ்சிக்
கேடுஎவன் உடைத்தோ தோழி ………..' (குறுந் -373:1-4)

என்புழி, தலைவியின் காதலாழத்தைத் தோழி அறிந்து அதனை உரைத்து, அலருக்கு அஞ்சிய தலைவியைத் தேற்றுவது தெளிவு. ஊகம் மறைவில் தோண்டிய பலாவின் மணம் அவ்வூர் முழுவதும் கமழுவது என்பது களவில் தலைவன் தலைவியை நுகர்ந்தமை பலராலும் அறியப்பட்டது என்பதையும், ஊகம் பலாவினைத் தொடுவதைக் கண்டு, அதனைக் காப்போர் போல, தலைவனின் வருகையை அறிந்து தலைவியின் தமர் அவளை இற்செறிப்புக்கு உட்படுத்துவர் எனத் தோழி ஊகிப்பதும் வெளிப்படை. இவ்வாறு இப்பாடலின் பொருண்மை,

துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**நொதுமலர் வரைவு**

தலைவன் அல்லாத புதியவர் தலைவியை மணக்க முயலுதலை நொதுமலர் வரைவு என மொழிவர். இத்துறையில் பன்னிரு பாடல்கள் அமைந்திடினும் ஒரு பாடல்[31] ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றது. ஏனைய பாடல்கள் வரைவு கடாவுதல், அறத்தொடு நிற்றல் துறைகளில் வகைப்படுத்தப் படுகின்றன. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவன் வரைவொடு புகுந்த நிலை

பின்னணிச் சூழலாக அமைகிறது. இதனடிப்படையில் ‘நொதுமலர் வரைவு மாற்றியது’ (குறுந் -385) என்னுந் துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**நொதுமலர் வரைவு மாற்றியது உரைத்தல்**

தலைவியின் களவறியாது அயலார் வரைவொடு வந்தமையும், தலைவன் வரைவொடு வருவதறிந்து அவ்வரைவு மாறியமையைத் தலைவியிடம் தோழி உரைத்தலும் இத்துறையாகும். இத்துறைப் பொருண்மையிலமைந்த ‘வேற்று வரைவு மாற்றியது’ என்னுந் துறைக்குறிப்பிற்கு குறுந் -385ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

‘……………… கிழவோன் என்றும்
அன்றை அன்ன நட்பினன்
புதுவோர்த்து அம்ம இவ்வழுங்கல் ஊரே’ (குறுந் -385:5-7)

என்புழி, தலைவனுடனான தலைவியின் நட்பு இயற்கைப்புணர்ச்சியினின்று தொடர்ந்தது என்பதும், அதனால் ஊரில் அலர் உண்டானமையும், அயலார் வரைவு வந்தமையும் தெளிவு.

இப்பாடலில் முதல் ஐந்து அடிகளில் ‘பலாவினை உண்ண வந்த கருங்குரங்குக் கூட்டமானது, குறவனின் சிலைக்கின்ற வில்லிலிருந்து தமக்கு நேராகப் புறப்பட்டுவரும் அம்பிற்கு அஞ்சி, மலைச்சாரலில் வளர்ந்துள்ள திண்ணிய மூங்கிலும், நீண்ட குழல் மூங்கிலும் போர் உற்ற குதிரை போல உயர எழுந்து, அசையுமாறு பாயும்’ என உரைக்குமிடத்து,‘தலைவியை மணமுடிக்க வந்த அயலார், தலைவன் வரைவொடு வரும் முரசொலி கேட்டு தம் வந்த செயலினைக் கைவிட்டனர்’ என்பது வெளிப்படை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வெறியாடல்**

தலைவியின் நலனழிவு கண்ட தாயர், தலைவி யாதுற்றனள் என்பதறிய வேலனை அழைத்து வெறியாட்டயர உள்ளினர். தலைவியிடம் வெறி விலக்கியதை உரைத்தும், தலைவனிடம் வெறியாட்டெடுப்பதை வெளிப்படுத்தியும் தோழி தலைவனை வரைவுச் சிந்தனை கொள்ளுமாறு செய்தல் இத்துறையாகும். இத்துறைப் பொருண்மையில் இருபத்தெட்டுப் பாடலகள் அமைந்திடினும், இங்கு ஏழு பாடல்கள்[32] ஆய்வுக்குட்படுத்தப்படுகின்றன. ஏனைய பாடல்கள் ‘இரவுக்குறி, வரைவு நீடல், வரைவு கடாதல், அறத்தொடு நிற்றல்’ துறைகளில் வகைப்படுத்தப்பட்டு ஆய்வுக்குட்படுத்தப் பட்டுள்ளன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவியின் நலனழிவு கண்டு தாயர் வருந்தும்நிலை
- தலைவி வெறியஞ்சியிருத்தல்
- தலைவனின் களவு விருப்பம்
- தலைவியின் காதலுள்ளத்தை வேலன் அறியாதிருத்தல்

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில்,‘அன்னை வெறியெடுப்பல் எனல்’ முதல் ‘வேலனின் பொய்மையுரைத்தல்’ வரையிலான ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**அன்னை வெறியெடுப்பல் எனல்**

களவுத் தலைவியின் மெலிவு கண்டு, அதன் காரணமறிய தாய் வேலனை அழைத்து வெறியெடுக்கக் கருதினள். அதனையறிந்த தோழி அவ்வெறியாட்டினைத்

தடுத்து நிறுத்த யாது செய்யலாமெனத் தலைவன் அறிய, தலைவியிடம் உசாவுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ''அன்னை வெறிஎடுக்கக் கருதாநின்றாள். இனியாம் இதற்கு என்கொலோ செயற்பாலது?' எனத் தோழி தலைமகட்குத் தலைமகன் சிறைப்புறமாகக் கூறியது.' என்னுந் துறைக்குறிப்பிற்கு,

> 'மறிக்குரல் அறுத்து தினைப்பிரம்பு இரீஇ
>
> ………………. ……….. ……….
>
> பிழையேம் ஆகிய நாம்இதற் படவே' (குறுந் -263)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடல் 'நாம் தலைவனுக்குத் தவறிழையாதிருத்தல் பொருட்டு, களவிற்கு உடன்பட்டு நின்றோம். இதனை அறியாது நம் தாய், வெறியாட்டயரும் பொழுது வேலன் 'இவள் அணங்கால் கொள்ளப்பட்டாள்' என்று சொல்வானாயின், அதற்கு நாம் உடன்படுதல் வருத்தத்திற்கு உரியதாகும்.' எனத் தோழி உரைக்கும் பொருண்மை கொண்டது. இங்கு, வேலன் உரைப்பதற்கு உடன்படுவோமாயின், நாம் கொண்ட காதலுக்கும் தலைவனுக்கும் பிழை செய்தவர் ஆவோம்' என எண்ணும் தோழியின் உள்ளக்கிடக்கை வெள்ளிடை. இப்பொருண்மை, இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையைத் தெளிவுறுத்துகிறது.

**வரைவுகடாதல்**

வரைவு என்பது திருமணம். கடாதல் என்பது சொல்லுதல் எனப் பொருள். களவுப்புணர்ச்சியிலே நாட்டம் கொண்ட தலைவனிடம், தலைவியை விரைவில் வரைந்து கொள்ளுமாறு தோழி அறிவுறுத்துதல் வரைவுகடாதல் துறையாகும். இத்துறை தோழிக்கே உரித்தான துறை. அவளின் மதிநுட்பத்துடன் கூடிய சொல்லாற்றல் வெளிப்படும் துறை. எவ்விடத்திலெல்லாம் தலைவனின் சிந்தையை வரைவினை நோக்கிச் செலுத்த முடியும் என ஆய்ந்து அதனை உத்தியாகச் செயல்படுத்தும் தோழியின் எண்ணம் வலுவூட்டம் பெறும் துறை. இதனை,*"களவுகாலத்தை மேலும் நீட்டித்தால் ….. பல்வேறு வழிகளிலும் தலைவனை வற்புறுத்துவாள். 'இனியும் இவ்வாறெல்லாம் களவிலேயே வந்து தலைவியைக் கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்து கொள்ள வேண்டும்' என்று தலைவனை வேண்டும் முறையில் அவளது உரையாடல்கள் அமையும். தோழியின் இம்முயற்சியே வரைவுகடாதல் ஆகும்"*[33] எனத் தோழியின் செயல்பாடுகளை விரித்துரைப்பர் இராம.சண்முகம். இத்துறையில் தலைவிமாட்டுள்ள

தோழியின் பேரன்பினை உணரமுடிகிறது. தலைவிக்கு, தன்னையொத்த தாயாகத் தோழி பொலிவுறுவதை அறியமுடிகிறது.

**சங்க இலக்கியத்தில் வரைவுகடாதல்**

தலைவியின் உணர்வுகளைத் தன்னுணர்வாகக் கொண்டு தலைவனிடம் வரைவுமொழியும் இத்துறையில் எண்பது பாடல்கள்[34] காணப்படுகின்றன. இப்பாடல்கள் மற்றும் துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவன்மேல் தலைவி கொண்டிருக்கும் காதல் மிகுதி
- தலைவனின் தலைவியைக் காண வேண்டுமென்னும் பேராவல்
- குரவரால் தலைவிக்கு ஏற்படுத்தப்படும் காவல்
- ஊரவரால் எழுப்பப்படும் அலரொலி
- தலைவி, தலைவனுடன் இருந்த நிலையை எண்ணி வருந்தும்நிலை
- தலைவியின் வனப்பிழத்தல்
- வரைவு நீட்டித்தநிலை
- நொதுமலர் வரைவு
- தலைவனின் காதல் குறைந்திருக்குமோ என்ற அச்சம்

எனப்பின்னணிச் சூழல்கள் அமைகின்றன. இவற்றினடிப்படையில் பதினாறு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**ஆற்றது தீமை அறிவுறு கலக்கம்**

வரைவினை உள்ளாக் களவுத் தலைவன், தலைவியைக் காண இரவிலும், அடர்ந்த மலைப்பகுதியிலும் வருகிறான். அதனை எண்ணித் தோழியர் இருவரும் வருந்தி, அவ்வழியின் இடர்பாடுகளை முன்மொழிந்து தோழி வரைவுகடாதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'தோழி தலைமகனது ஏதம் சொல்லி வரைவுகடாயது' என்னுந் துறைக்குறிப்பிற்கு,'விளிவுஇல் அரவமொடு துளிசிறந்து உரைஇ' எனத் தொடங்கும் நற் -257ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'பெருத்த ஆரவாரத்துடன் பெய்த மழையினால் குளிர்ச்சி பொருந்திய மலை, மூங்கில் செறிந்துயர்ந்து விண்ணுற உயர்ந்த சிகரத்தையுடையது. அச்சிகரத்தினின்று வெள்ளிய அருவி வீழும். இத்தகைய வழியில் போய் வருவார் யாருமில்லை. அவ்வழியில் சிங்கம் முதலான கடுமையான விலங்குகள் திரியும். அதனை அறிந்தும் அவ்வழியில் வருகிறாய். அதனால் யான் மிகவும் வருத்தத்துக்கு

உள்ளாகிறேன்.' எனத் தலைவியின் அச்சத்தைத் தன் அச்சமாகத் தோழி விளம்பும் பொருண்மை கொண்டது. இப்பொருண்மை, தலைவன் இரவில் வரும் வழியின் ஏதம் குறித்துத் தோழி அஞ்சுவதும், தன் அச்சத்தைப் போக்கத் தலைவன் தலைவியை வரைந்து கொள்ளுதலே நன்றெனவும் வரைவுகடாவுதல் தெளிவு. இப்பாடலில் முதல் ஆறு அடிகள் தலைவன் வரும் வழியின் இயல்பைக் கூறுகின்றன. இப்பொருண்மை பாடலின் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இத்துறையிலமைந்த ஏனைய பாடல்களும் இவ்வாறே விளக்குகின்றன. வரைவுகடாதலிலமைந்த ஏனைய வழிநிலைத் துறைகளில் அமைந்த பாடல்களும் அவ்வத் துறைக்குறிப்புடன் ஒன்றியமைதலை அறியமுடிகிறது.

**வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு**

'கற்பெனப் படுவது களவின் வழித்தே' என்கிறது இறையகப் பொருள். களவில் காதல் பூண்டொழுகிய தலைவன், தன் இனிய தலைவியை இல்லாளாக்க முயலுவான். அதற்குமுன் தான் செல்வப்பெருங்குடியில் பிறந்திருந்தாலும், தன் இல்லற வாழ்விற்குத் தேவையான செல்வத்தைப் பெறவும், தலைமகளை 'மகட்கொடை'யாகப் பெறுதற்கு வேண்டிய பெரும்பொருளைப் பெறவும் தலைவன் பொருள்வயிற் பிரிதல் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவுத் துறையாகும். இத்துறையில் பிரிவு மேற்கொள்ள எண்ணும் தலைவனிடம் தலைவியின் நிலையுரைத்து செலவிற்கு உடன்படாமை. தலைவியிடம் படைத்து மொழிந்து அவளை ஆற்றுவித்தல், தலைவன் வந்தவிடத்து மகிழ்ந்துரைத்தல் போன்ற நிலைகளில் தோழி, தன் செயற்திறனை வெளிப்படுத்துவாள். இப்பொருண்மையில் இருபத்தொன்பது பாடல்கள்[35] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சுழல்களாக,

- தலைவனின் பிரிவினால் தலைவி ஆற்றாமை கொள்ளல்
- ஆற்றியிருக்குமாறு வலியுறுத்தல்
- விரிச்சி பார்த்தல்
- தலைவி, தலைவன் திரும்பும் காலமறியாதிருத்தல்
- தலைவி வரைவினை எதிர்ப்பார்த்திருத்தல்
- தலைவன் களவினை விரும்பியிருத்தலால், அவன் இயற்பழித்தல்

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில்,‘பிரிவுணர்த்திய தலைவனுக்குத் தலைவியின் நிலையுரைத்தல்’ முதல் ‘வந்துழி மகிழ்வு’ வரையிலான பதினொரு துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பிரிவுணர்த்திய தலைவனுக்குத் தலைவியின் நிலையுரைத்தல்**

வரைவிடைவைத்துப் பிரிய எண்ணிய தலைவன், தான் வரும்வரை தலைவியை ஆற்றுவி எனத் தோழியிடம் மொழிகிறான். அவற்கு, நீ வரும்வரை உயிருடன் இருக்குந் தன்மையளல்லள் தலைவி, நீ இன்னாமை செய்தாலும் நின்னையே உள்ளுந் தன்மையள் எனத் தோழி உரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘வரைவிடைவைத்துப் பிரிவான்,‘இவள் வேறுபடாமை ஆற்றுவி’என்றாட்குத் தோழி நகையாடி உரைத்தது.’ என்னுந் துறைக்குறிப்பிற்கு குறுந் -236 ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

‘விட்டென விடுக்கும் நாள்வரும் அதுநீ
நொந்தனை ஆயின் தந்தனை சென்மோ!’ (குறுந் 236:1-2)
‘தண்கடற் சேர்ப்பநீ உண்டஎன் நலனே’ (குறுந் -236:6)

என்னுமடிகள் பொருள்வயிற் பிரிய எண்ணிய தலைவனிடம், தலைவி உயிர் விடுக்கும் நாளது எனவும், நீ உண்ட தலைவியின் நலனைத் தந்து செல்வாயாக எனவும் தோழி வினாவுவது தெளிவு. இப்பாடலில் மருத நிலத்து நாரை நெய்தல் நிலத்து மீனை வயிறார உண்டு, புன்னையின் கிளையில் இனிது தங்குதலைக் குறிப்பிடுவதில், வெவ்வேறிடத்தில் வாழும் தலைமக்கள் மணம்புரிந்து இனிமையான இல்லற வாழ்வினை வாழவேண்டும் எனத் தன் ஆவலைப் புலப்படுத்துதல் வெள்ளிடை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்கள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**செலவழுங்குவித்தல் (செலவு உடன்படாமை)**

வரைவுக்குரிய பொருள் கொடுப்பதற்காகத் தலைவன், செலவு மேற்கொள்ள முயல்கிறான். இதனை அறிந்த தலைவி ஆற்றாமை கொள்கிறாள். அதனால் தோழி தலைவனின் செலவினைத் தவிர்க்க முயற்சித்தல் இத்துறையாகும். இத்துறையில் ஆறு பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புப் பொருண்மையை ஆராயின்,

- தலைவியின் நலனழிவு கூறல்

- பிரிவெண்ணித் தலைவி துயருறும் நிலை
- உடன்பட்ட தலைவி, செலவின்பின் துயருறுவாள் எனத் தோழி கலங்குதல்
- தலைவியின் துன்பத்தை ஆற்றா நிலை
- பொழுது இவளைத் துழைக்கும் எனக் கூறல்

என்பன பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினடிப்படையில்‘தலைவியின் ஆற்றாமை கூறிச் செலவழுங்வித்தல்’ துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**ஆற்றாமை கூறல்**

செலவு மேற்கொள்ள விரும்பும் தலைவனிடம் தோழி, தலைவியின் ஆற்றாமையைக் கூறிச் செலவினைத் தவிர்த்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘இது, வரைவிடைவைத்துப் பிரியக் கருதும் தலைமகற்குத் தோழி சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பிற்கு,

‘பிணங்கரில் வாடிய பழவிறல் நனந்தலை
உணங்குஊண் ஆர்த்தோ ரான் தெண்மணி
………. ……….. ……….. …………
ஆர்கலி நல்லேறு திரிதரும்
கார்செய் மாலை வரூஉம் போழ்தே’ (நற் -37)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘தலைவனே, நீவீர் செல்வீராயின் தலைவியையும் உடனழைத்துச் செல்க. பிரிந்து செல்வீராயின், கலைமானைப் பிரிந்த பெண்மானைப் போல, இவள் வருந்திக் கண்களில் நீர் வடிக்கும் நிலையை என்னால் தாங்குதற்கு இயலாது. பாம்பும் அஞ்சி தலை கவிழ்க்கும்படி இடி முழங்கும் கார் காலத்துக்குரிய மாலைப் பொழுதும் வந்துவிட்டது’ எனத் தோழி, தலைவியின் ஆற்றாமையை அதிகப்படுத்தும் பருவம் குறித்துக் கூறும் பொருண்மை கொண்டது. இங்கு,

‘இவளொடும் செலினோ நன்றே ……’ (நற் -37:4)

‘அன்பிலிர் அகறிர் ஆயின் எம்பாடு
ஆகுவ தன்று இவள் அவலம் ………’ (நற் -37:7-8)

என்புழி, தலைவன் பிரிந்து செல்ல எண்ணுவதும், அதனால் தலைவி எய்தப்போகும் துயரமும், அப்பொழுது தன் நிலையையும் குறித்து தோழி, தலைவனிடம்

உரைப்பது தெளிவு. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இப்பாடலுக்கு மேற்குறித்த துறைக்குறிப்பை *ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை*[36] உரைப்பர். கு.வெ.பாலசுப்பிரமணியன் “*வரைவிடை வைத்துப் பிரிவின்கண் தோழி சொல்லியது*”[37] என உரைப்பர். ஏனைய உரையாசிரியர்களும் இத்துறையையே உரைத்திருப்பர். துறைக்குறிப்பு உரைக்கும்முறை வேறுபடினும் பொருண்மை ‘செலவழுங்குவித்தலாக’ அமைவது குறிப்பிடத்தக்கது.

**விரிச்சி**

களவில் பொருள்வயிற் பிரிந்த தலைவன் பருவம் வந்தும் வாராதொழிந்தான். அதனால் தலைவி ஆற்றாதிருந்தாள். அவளிடம் தோழி,‘தலைவியே நானும் கவலை கொண்டிருந்தேன். அப்பொழுது அவன் வருவான் என்னும் நற்சொல் கேட்டேன் வருந்தற்க. தலைவன் இப்பொழுதே வருவான்.’ என மொழிவது இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த ‘இது விரிச்சி பெற்றுப் புகன்ற தோழி தலைமகளுக்குச் சொல்லியது.’ என்னுந் துறைக்குறிப்பிற்கு நற் -65ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் ‘அமுதம் உண்க நம்அயல் இலாட்டி’(நற் -65:1),‘பெருமலை நாடனை ‘வரூஉம்’ என்றோளே’(நற் -65:9) என்புழி, தலைவி தலைவனின் வருகையை எண்ணி உண்ணாமல் காத்திருக்கிறாள் என்பதும், தோழி அயல் வீட்டுப் பெண்டிரின் ‘அவன் வருவான்’ என்னும் நற்சொல் கேட்டதாகக் கூறும் பொருண்மையும், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இவ்வரைவுகடாதல் துறையிலமைந்த ஏனைய உட்துறைகளின் பாடல்களும் தத்தம் துறைக்குறிப்புடன் ஒன்றியமைந்து துறையை விளக்குகின்றன

**அறத்தொடுநிற்றல்**

தலைமக்களின்களவொழுக்கத்தைத் தலைமகளின் கொடைக்குரியோரிடத்தில் தெரியப்படுத்துதல் அறத்தொடுநிற்றலாகக் கொள்வர் இலக்கணிகள். அதாவது தலைமக்களின் களவினைக் கற்பாக மாற்றுவதற்காக அறமுணர்த்தும் பாத்திரமாகத் தோழி படைக்கப்பட்டிருக்கிறாள். இதனை “*அறம் எனப்படுவது பல பண்புகளையும் தழுவிய பொதுச் சொல்லாயினும் ஈண்டு பெண்ணுக்குரிய முதற்பண்பான கற்பையே குறிக்கும். கற்பென்னும் கடைப்பிடியில் நின்று களவொழுக்கத்தைப் பெற்றோருக்கு*

*வெளிப்படுத்துதல் என்பது இத்துறையின் பொருள். பெற்றோருக்கு அறிவித்தல் என்பது தோழியின் நோக்கம் இல்லை. அங்ஙனம் அறிவிப்புழி தலைவி ஏற்கனவே கற்பு நெறிப்பட்டு விட்டாள் என்பதனை முதன்மையாக வலியுறுத்துவதே அவள் நோக்கமாம்."*[38]என்பர் வ.சுப.மாணிக்கனார். இவ்வறத்தொடுநிற்றல் துறையில் தோழியின் அறிவார்ந்த சொல்லாற்றலின் நிலைப்பாடே மிகுதியாகத் தலைவியின் மகிழ்வுக்கு வித்தாக அமையும். தலைவிக்காக இவள் மொழியுந்தன்மையில் தலைவியின்மீது தோழி கொண்டிருக்கும் அன்பின் ஆழமும், தலைவியின் உணர்வுகளை ஊகித்தறியும் நுட்பமும், தலைவியின் துயரை அவளுரைக்காமலே உணரும் தாயுள்ளமும் வெளிப்படை. அறத்தொடுநிற்றல் துறையில் ஐம்பத்தைந்து பாடல்கள்[39] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவி தோழியின் உதவியை நாடியிருத்தல்
- அயலார் வரைவு வருகை
- தலைவியின் மேனி வேறுபாட்டினைக் குரவர் அறிந்துற்ற நிலை
- வெறியாட்டு நிகழ்த்த தாயர் தலைப்படுதல்
- காப்பு மிகுதல்
- தாயர் காரணம் வினாவும் நிலை
- தமர் வரைவிற்கு மறுத்தநிலை
- தலைவன் பரிசத்தொடு வரைவுக்கு வரத் துணிந்த நிலை
- தலைவி தன் காதலுறுதியை வெளிப்படுத்தும் நிலை

என்பன பின்னணிச்சூழல்களாக அமைகின்றன. இவற்றினடிப்படையில் 'அறத்தொடு நின்றமை கூறல்' முதல் 'நற்றாய் அறத்தொடு நிற்றல்' வரையிலான இருபது துறைகள் வகைப்படுத்தப்படுகின்றன.

**அறத்தொடு நின்றமை கூறல்**

தலைவன் வரவொடு வரத் தமர் ஏற்று, தலைவியைக் கொடுக்க முற்பட்டனர். அதனைத் தோழி தலைவியிடம், யான் நும்மின் களவொழுக்கத்தை நம் குரவரிடம் வெளிப்படுத்தி அறத்தொடுநின்றமையால், தலைவன் தமருடன் வரைவு வேண்டி வர நும் தந்தையரும் இசைந்தனர் என மொழிதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'அறத்தொடு நின்றமை தோழி கிழத்திக்கு உரைத்தது.' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -374 ஆம் பாடல் காணப்படுகிறது.

இப்பாடலில்,‘எந்தையும் யாயும் உணரக் காட்டி ஒளித்த செய்தி வெளிப்படக் கிளந்தபின்’(குறுந் -374:1-2) என்புழி, தலைவன் வரைவொடு வரும்முன்னே தோழி தலைவியின் களவொழுக்கத்தை வெளிப்படுத்தி அறத்தொடுநின்றமையையும்,‘மலைகெழு வெற்பன் தலைவந்து இரப்ப நன்றுபுரி கொள்கையின் ஒன்றாகின்றே’(குறுந் -374:3-4) என்புழி, தலைவன் தன் தமருடன், அவரை ஒத்த சான்றோரையும் அழைத்து வந்து தலைவியை மகட்கொடையாக வேட்டனன் என்பதும்,‘முடங்கல் இறைய தூங்கணங் குரீஇ நீடுஇரும் பெண்ணைத் தொடுத்த கூடினும் மயங்கிய மையல் ஊரே’ (குறுந் -374:5-7) என்புழி, தலைவியின் களவொழுக்கத்தால் ஊரில் தோன்றிய அலர், தலைவனின் வரைவினால் அடங்கியது என்பதும் அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**தமர் மறுத்துழி அறத்தொடு நிற்றல்**

களவுத் தலைவன் தலைமகளின் தமரிடம் வரைவிற்குப் பெண்கேட்டு தூதனுப்பியபோது, கொடைக்குரியோர் உடன்படாது மறுத்தனர். இந்நிலையில் தோழி, தலைவியின் கற்பிற்குச் சிதைவு வராமல் காக்கும்பொருட்டுத் தோழி, தலைவிக்குக் கூறுவாள்போல் தமருக்கு அறத்தொடுநிற்பது இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘தலைமகன் வரைவு வேண்டிவிடத் தமர் மறுத்துழி, அவர் கேட்குமாற்றால் தலைமகட்குச் சொல்லுவாளாய், தோழி அறத்தொடுநின்றது.’ எனும் துறைக்குறிப்பிற்கு,

‘அம்ம வாழி தோழி நம்ஊர்
நிரந்து இலங்கு அருவிய நெடுமலை நாடன்
இரந்து குறையுறாஅன் பெயரின்
என்ஆவது கொல்நம் இன்னுயிர் நிலையே’ (ஐங்குறு -228)

எனப் பாடல் அமைகிறது. இப்பாடல் ‘வரைவொடு வந்த தலைவன் நம் சுற்றத்தாரை வேண்டிக் குறைமுடிக்காவிடில், நம் நிலை என்னாகுமோ?’ எனத் தோழி தலைமகட்கு மொழியும் பொருண்மை கொண்டது. இங்கு தோழி நேரடியாகத் தமரிடம் அறத்தொடுநிற்காமல், தோழியராகிய தம் நிலை பிறரால் நோக்கப்படும் நிலைக்குத் தள்ளப்படுவோம் எனக் குறிப்பாக அறத்தொடுநிற்கும் தோழியின்

அறிவாற்றல் புலப்படுகிறது. ‘தோழி செவிலிக்கு அறத்தொடுநிலை குறித்துக் கூறியது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு ஐங்குறு -107ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில், தலைவியின் மேனி வேறுபாடு கண்டு வருந்திய செவிலியிடம், எம் தோழி ‘தண்கடற் படுதிரை கேட்டொறும் துஞ்சாள் ஆகுதல் நோகோ யானே’ (ஐங்குறு -107:3-4) எனக் குறிப்பாகத் தலைவியின் காதலன் கடற்கரைத் தலைவன் என மொழிந்து அறத்தொடுநிற்பதும் தெளிவு. இவ்வாறு இப்பாடல்களின் பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

அறத்தொடுநிற்றல் முதன்மைத் துறையிலமைந்த ஏனைய வழிநிலைத் துறைகளில் அமைந்த பாடல்களின் பொருண்மை அவ்வத் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றித் துறையை விளக்குந் தன்மையில் அமைந்துள்ளன.

**உடன்போக்கு**

தலைமக்களின் காதல் கற்பில் திளைப்பதற்கு இடையூறு ஏற்படுமெனத் தோழி கருதினால், அத்தலைமக்களை உடன்செல்லுமாறு கூட்டுவிக்கும் நிகழ்வு உடன்போக்காகும். தலைவியின் மிகுஆற்றாமை, அலர், நொதுமலர் வரைவு, பிரிவாரோ என்ற தலைவியின் அச்சம், காவல் மிகுதி, கற்பின்மீது தலைவி கொள்ளும் விருப்பம், அறத்தொடுநிற்கும் சூழல் வாய்க்காத நிலை ஆகியன தோழியின் உடன்கூட்டுவிக்கும் நிலைக்குக் காரணமாக அமைவதை அறியமுடிகிறது. இந்நிகழ்வானது *“அருகிய வழக்கு”*[40] என எஸ்.இராமகிருஸ்ணனும்,*“பெருகிய வழக்கு”*[41] என க.ப.அறவாணனும் உலகில் வேறுபட நிகழும் தன்மையை எடுத்துரைப்பர். சங்க இலக்கியத்தில் இப்பொருண்மையில் இருபத்து நான்கு பாடல்கள்[42] காணப்படுகின்றன. இப்பாடல்களின் துறைக்குறிப்புப் பொருண்மை கொண்டு ஆராயின், அவற்றின் பின்னணிச்சூழல்களாக,

- தலைவனின் பெருமையைத் தோழி தலைவிக்கு உணர்த்துதல்
- தலைவியின் பெருமையைத் தலைவனுக்கு உரைத்தநிலை
- தலைவி பெற்றோரால் செறிக்கப்பட்ட நிலை
- தலைவன் வரும்வழியின் கொடுமையை உள்ளும் நிலை

- ➢ தலைவியின் அலர் அச்சமும், தலைவனின் உடன்போக்குத் துணிவும்
- ➢ தாயாரால் தலைவி அலைக்கப்பட்ட நிலை
- ➢ தலைவியின் தனிமைத் துயர் மிகும் நிலை

என்பன அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் ஒன்பது துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**ஓம்படை கூறி விடுத்தல்**

தலைவியைத் தன்னுடன் அழைத்துச் செல்லும் தலைவனிடம் அவன் கைகளில் கொடுத்து, இம்மை மாறி மறுமையாயினும் நீவீர் இவளைக் கைவிடாது பாதுகாப்பாயாக என ஒப்படைத்து, ஒருப்படுத்தி, தோழி கூறுவது இத்துறையாகும். இத்துறையில் இரண்டு பாடல்கள் (நற் -10: குறுந் -115:) காணப்படுகின்றன. இத்துறையிலமைந்த 'உடன்போக்கும் தோழி கையடுத்தது' துறைக்குறிப்பிற்கு நற் - 10ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

'அண்ணாந்து ஏந்திய வனமுலை தளரினும்
பொன்நேர் மேனி மணியின் தாழ்ந்த
நல்நெடுங் கூந்தல் நரையொடு முடிப்பினும்
நீத்தல் ஓம்புமதி பூக்கேழ் ஊர' (நற் -10:1-4)
'………. ………. ……….. நின்
பிழையா நல்மொழி தேறிய இவட்கே' (நற் -10:9)

என வரும் அடிகளின் பொருண்மை, துறைக்குறிப்பின் அடிகளொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த 'உடன்போக்கு ஒருப்படுத்து மீளும் தோழி, தலைமகற்குக் கூறியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் -115ஆம் பாடலில் 'ஒருநன்று உடையள் ஆயினும்'(குறுந் -115:2) எனக் குறிப்பிடுவது, தலைவனுக்குத் தலைவியால் கிடைக்கப்பெறும் நன்மைகள் இரண்டு. அவை இல்லறம் பேணும் நல்லறங்களைக் கடைபிடித்தல், இல்லற வாழ்வின் இன்பத்தைப் பெருக்கும் நன்மக்கட்பேறு என்பவையாம். இவற்றில் ஒன்று மட்டும் பெற்றிருந்தாலும் அவளைக் காத்தலைக் கைவிடாது வாழ்வாயாக எனத் தோழி ஓம்படுத்துதல் தெளிவு.

**கற்பொடு புணர்ந்த கவ்வை**

தலைமக்கள் உடன்போயப்பின் அறத்தொடுநின்ற தோழி தலைவி கற்புநெறிப்பட்டு விட்டமையைத் தாயர்க்கு உணர்த்துதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'உடன்போயின பின்றை, தோழி செவிலிக்கு அறத்தொடுநின்றாள். நிற்ப, செவிலித்தாய், நற்றாய்க்கு அறத்தொடு நின்றது.' என்னும் துறைக்குறிப்பிற்கு,

'பறைபட பணிலம் ஆர்ப்ப இறைகொள்பு
தொல்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நல்ஊர்க் கோசர் நல்மொழி போல
வாயா கின்றே தோழி ஆய்கழல்
சேயிலை வெள்வேல் விடலையொடு
தொகுவளை முன்கை மடந்தை நட்பே' (குறுந் -15)

என்னும் பாடல் அமைகிறது. இப்பாடல் 'உடன்போன தலைவி குறித்து அயலார் மொழியும் அலர் மொழிகள் ஊரெங்கும் ஒலிப்பதாகத் தோழி, தாயர் வருந்திக் கூறும் பொருண்மை கொண்டது. தலைமக்கள் இருவரும் ஒரு மனையில் தங்கியமையால் அவர்களின் நட்பு உண்மையாயிற்று எனத் தலைமக்கள் கற்புக்கடம் பூண்டமையைத் தெளிவுறுத்துகிறாள் தோழி. இங்கு 'தோழி' என்றது தலைவியின் தோழிக்கும், நற்றாயின் தோழிக்கும் பொதுவாக நின்றது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வரைவு**

தலைமக்களின் களவுக்காதல் கற்பில் முடிவதற்கான ஏதுக்களையும், தலைவியின் உணர்வுகளைத் தோழி தன் உணர்வாக வெளிப்படுத்தும் சூழல்களைக் கொண்ட வரைவு முதன்மைத் துறையாகக் கொள்ளப்பெறுகிறது. இங்கு தலைவனின் செயல்பாடுகளை உற்றுநோக்கி, அதன்வழித் தலைவியை ஆற்றுவிக்கும் தோழியின் ஆய்தலறிவுத் திறன் கொண்டவளாகத் தோழி திகழ்வதை அறியமுடிகிறது. தலைமக்களின் வரைவினைத் தோழி மொழியும் பொருண்மையில் முப்பத்தைந்து பாடல்கள்[43] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின், அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவியின் வரைவு வேட்கையைத் தோழி அறிந்திருத்தல்

- தலைவியின் துயரினை அறிந்து அதனைப் போக்க தலைவன் முற்படுதல்
- தலைவன் விரைவில் வரைவானெனத் தலைவிக்கு நம்பிக்கையை ஊட்டல்
- தலைவி, தலைவன் பிரிவால் துயருறுதல்
- தலைவனின் பொருளீட்டும் நாட்டம்
- தலைவி பிற செயல்களில் ஈடுபாடு இல்லாதிருத்தல்
- தலைவனின் வரைவு முயற்சியால் தோழி மகிழல்

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில் 'வரைவு மலிவு' முதல் 'பொருளீட்டலில் நாட்டமுடையனெனல்' வரையிலான ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

**வரைவு மலிவு**

தலைவன் தலைவியை விரைவில் மணம் முடிக்க வருவான் எனவும், வந்துள்ளான் எனவும் தோழி, தலைவிக்கு மொழிதல் இத்துறையாகும். இம்மலிவுக்கு, தோழி தலைவனை வரைவுக்கு முடுக்குதல், தலைவியின் துயர் கண்டு தலைவன் தமருடன் மணம் பேச வருதல் ஆகியன நிகழ்ந்த நிலையில் தோழி தலைவிக்கு உரைத்து தானும் மகிழிதல் இத்துறையாகும். இத்துறையில் பதினேழு பாடல்கள் (நற் -22, 78, 91, 163, 367, 393: குறுந் -34, 51, 83, 297: ஐங்குறு -145, 147, 202: அகநா -42, 70, 160, 178:) காணப்படுகின்றன.

இத்துறையிலமைந்த 'தலைமகன் வரைவு மலிந்தமையைத் தோழி தலைமகட்குச் சொல்லியது' என்னும் துறைக்குறிப்பிற்கு அகநா -42, 70ஆம் பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களில்,

> 'செவ்வெரிந் உறழும் கொழுங்கடை மழைக்கண்
> தளிர்ஏர் மேனி மாயோயே!' (அகநா -42:3-4)
> 'பெரும்பெயல் பொழிந்த ஏம வைகறை
> பல்லோர் உவந்த உவகை எல்லாம்
> என்னுள் பெய்தந் தற்றே ……' (அகநா -42:10-12)
> 'வான்தோய் வெற்பன் வந்த மாறே' (அகநா -42:14)

என்னுமடிகளில் தலைவன் வரைவொடு வந்திருத்தலால், தன் மனம் மிகுந்த மகிழ்வில் திளைப்பதாகத் தோழி தலைவியிடம் மொழிகிறாள். இப்பாடலில் 'தளிர்மேனி மாயோயே' என்றது, ஏற்கனவே அழகு பொருந்திய நின் மேனி,

தலைவனின் வரைவுமலிவால் மேலும் பொலிவு பெறுமெனத் தோழி உரைக்கிறாள். தனக்கே மகிழ்வு தரும் இவ்வரைவு மலிவு, தலைவிக்கு மிகுமகிழ்வைக் கொடுக்கும் எனத் தோழி எண்ணுவது தெளிவு. அகநா -42:10-14 அடிகளில், வறண்ட கோடைகாலத்தில் இவ்வறட்சியொல்லாம் போக்குமாறு தண்மழை பெய்தால், அவ்வூர் மக்கள் எல்லாரும் பேருவகைக் கொண்ட பெருமகிழ்வை தான் ஒருத்தியே பெற்றாற்போல் தலைவனின் வரைவுமலிவால் மகிழ்வதாகத் தோழி தன் மகிழ்வைப் புலப்படுத்துகிறாள்.

அகநா -70 ஆம் பாடலில் ‘அலர் ஒழிய நெய்தல் நிலத் தலைவன் வரைவொடு வந்தமையால் இவ்வூரில் அலர் ஒழிந்தது(அகநா -70:14-17) எனத் தலைவி உரைக்கிறாள். அகநா -70:3-4 அடிகளில், தலைவரும் தன் முயற்சியானே வரைவு கூடிற்றாயினும், துணை நின்ற என்னைக் கொண்டாடினர் எனவும், நின்னை நின் உறவினரிடமிருந்து நீக்கித் தம்மூரின்கண்ணே கொண்டு போய்த் தம்மூரிலுள்ள யாவரையும் மகிழ்விப்பர் எனவும் தோழி தலைவியிடம் மொழிகிறாள். இவ்வாறு இப்பாடல்கள் துறைக்குறிப்போடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன.

**அவன் மலையே எம்முயிர் காவலெனல்**

தலைவன் வரைவு மலிந்தும் தமர் மறுத்தனர். அவர்க்குத் தலைவனின் மலையைக் காண்டலே எம் தலைவி உயிர்க்குக் காவல் எனத் தோழி கூறல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த ‘வரைவு வேண்டிவிட மறுத்துழித் தமர்க்கு உரைப்பாளாய், வரையாது வந்தொழுகும் தலைமகற்குத் தோழி, அவன் மலை காண்டலே பற்றாகத் தாங்கள் உயிர் வாழ்கின்றமை தோன்றச் சொல்லியது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘குன்றக் குறவன் காதல் மடமகள்’ எனத் தொடங்கும் ஐங்குறு -258ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் ‘நீ வரைய விரும்பி வரைவு வேண்டிய பொழுதும் நாமும் தலைவியை விரும்பிக் கொடுத்தால் நன்றாம் என்றெண்ணாது எம் தமர் மறுத்தனர். ஆதலின் எம் துயரம் மென்மேலும் பெருகும். எனினும் நும் மலையைக் காண்டலே எம்முயிர்க்குப் பற்றுக்கோடாகும்’ எனத் தோழி தமர் கேட்குமாறு தலைமகற்கு உரைக்கும் பொருண்மை கொண்டது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**மலிவு**

தலைமக்களின் கற்பு வாழ்வில் நிகழவிருக்கும் மகிழ்வையும், நிகழ்கின்ற மகிழ்வையும், இம்மகிழ்விற்குமுன் தலைவி இருந்த நிலையையும் தோழி இன்புறக் கூறுவது மலிவுப் பொருண்மையாக அமைகிறது.மலிவு என்பதற்கு மகிழ்வு என்று பொருள். தலைவிக்கான மகிழ்வு நெருங்கி வருகிறது எனவும், தலைமக்கள் மகிழ்ந்திருக்கும் திறங்கண்டு தோழி மகிழ்ந்துரைப்பதும் எனவும் பொருள் கொள்ளமுடிகிறது. சங்க இலக்கியத்தில் இப்பொருண்மையில் பதினைந்து பாடல்கள்[44] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் இவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவனின் தலையளியால் தலைவி மகிழ்ந்திருத்தல்
- தலைவியிடம் புதிதாய்த் தோன்றிய மேனி வனப்பு
- களவின் வழிவந்த காதலர்களின் மகிழ்வு
- தலைவனின் வரைவுமலிவால் அலரடங்கியமை

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில் ‘தலைவனைப் பாங்கி வாழ்த்தல்’ முதல் ‘தலைவி ஆற்றாதிருந்த நிலையைத் தலைமகற்குக் கூறல்’ வரையிலான ஒன்பது துறைகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

**புணர்ச்சி விதும்பல் கண்டு மகிழ்வில் தோழி அழிந்து கூறல்**

கற்புக்காலத்தில் தலைவியின் நன்மனை சென்ற தோழி, அங்கு தலைமக்களின் கூடுகை விதும்பலைக் கண்டு, களவில் தொழுந்தன்மை வாய்ந்த பிறை நிலாப் போல் சிறிது நேரமே வந்து தோன்றினம். அதனைப் பொருத்துக் கொண்ட நீவீர். அப்பிழைக்காக யான் வருந்துகிறேன் எனத் தோழி தன்னுள் மகிழ்ந்து அழிந்து கூறுதல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘கடிநகர் புக்க தோழி தலைமகன் புணர்ச்சி விதும்பல் கண்டு, முன்னர்க் களவுக்காலத்து ஒழுகலாற்றினை நினைந்து அழிந்து கூறியது.’ என்னும் துறைக்குறிப்பிற்கு குறுந் - 178ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

‘ஆம்பல் குறுநர் நீர்வேட்டாங் கிவள்
இடைமுலை கிடந்தும் நடுங்கல் ஆனீர்
தொழுதுகாண் பிறையின் தோன்றி யாம்நுமக்கு

அரியம் ஆகிய காலைப்

பெரிய நோன்றனிர் நோகோ யானே' (குறுந் -178:3-7)

என்னும் அடிகள் கூடுகையில் தலைவனின் நிலையையும் விருப்பையும் புலப்படுத்தும் பொருண்மை கொண்டன. தலைவனின் மகிழ்வுக்குக் காரணம் தலைவி உடனிருத்தலே. *"களவினுள் பகற்குறி, இரவுக்குறி என வரையறுக்கப்பட்ட பொழுதுகள், கற்பு வாழ்வில் இல்லை. தலைவி, எக்காலத்தும் தலைவனுக்கு உரியவளாதல் கூடும். இதனால் தலைவன் உள்ளத்தில் ஏற்படும் மகிழ்ச்சி,'பொழுது மறுப்பு ஆக்கம்' எனப்படும்"*[45] எனத் தலைவனின் மகிழ்ச்சிக்குப் பெயர் உரைப்பர் வீ.நாகராசன். இத்துடன் பேராசிரியர், நச்சினார்க்கினியரை ஒப்பு நோக்கி *"பேராசிரியர், தோழி தன் ஒழுகலாற்றை நினைந்து அழிந்து கூறியதாகவும், நச்சினார்க்கினியர், தோழி, தலைவன் ஒழுகலாற்றை நினைந்து அழிந்து கூறியதாகவும் பொருள் கொண்டனர்."*[46] எனத் திறனாய்ந்திருப்பர். எனினும் இப்பாடலில் இருவர் நிலையுமே வெளிப்படுவதை அறியமுடிகிறது. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இம்மலிவுப் பொருண்மையில்,

'இனிது செய்தனையால் நுந்தை வாழியர்

நல்மனை வதுவை அயரஇவள்

பின்னிருங் கூந்தல் மலரணிந் தோயே' (ஐங்குறு -294:3-5)

எனத் தோழி தலைவனை வாழ்த்தும் பாடலும் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒத்துக் காணப்படுதலை அறிய முடிகிறது.

**ஊடல்**

தலைமக்களின் கற்பு வாழ்வில் தலைவனுக்குப் புறத்தொழுக்கம் உண்டாயின் தலைவியின்பால் ஊடல் பிறக்கும். தலைவியின் ஊடல் காலங்களில் தோழி தலைவனின் பரவொழுக்கத்தை அவனுக்கு உணர்த்தியும், தலைவியின் ஊடலுக்காகத் தான் வெகுண்டுரைத்து ஊடல் காலத் தடுமாற்றங்களைச் சீர்செய்யும் தன்மை கொண்டவள். தோழி ஊடலில் மொழியும் பொருண்மையில் சங்க இலக்கியத்தில் ஐந்து பாடல்கள்[47] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் இவற்றின் பின்னணிச்சூழல்களாக,

- தலைவனின் புறத்தொழுக்கம்

- தலைவியின் ஊடல்

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில் 'தலைவியின் ஆற்றாமை கூறல்' முதல் 'உணர்ப்புவயின் வாரா ஊடலுற் றோள்வயின் உணர்த்தல் வேண்டிய கிழவோன் பால்நின்று தான்வெகுண் டாக்கிய தகுதிக் கண்ணும்' வரையிலான ஐந்து துறைகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

**தலைவியின் ஆற்றாமை கூறல்**

பரத்தையிற் பிரிதலுற்ற தலைவனின் தலைவி, தான் ஆற்றாது வருந்தியதைப் பிறரறியாமல் மறைத்தொழுகினாள். அதனைக் கண்டு வருந்திய தோழி, பாணனிடம் தலைவியின் வருத்தத்தைத் தலைவனுக்குக் கூறும்பொருட்டு உரைத்தல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த 'தோழி பாணனுக்குச் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு அகநா -50ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில் களவுக்காலத்தில் காதலினால் காத்திருந்து அலர் உண்டான நிலையிலும் நீங்காதிருந்தான். ஆனால் இப்பொழுது காமவேட்கை நீங்கியமையால் தாம் சென்றிருக்கும் இடத்தைக் கடந்து இங்கு வாராது ஒழிகுவர். எனினும், இவள் 'வாராதோர் நமக்கு யாஅர்' என கூறினாளில்லை. மாறாக வீட்டுப் பனையில் வாழும் அன்றில் கூடியிருக்கும் நிலையிலிருந்து சிறிது பிரியினும் கண் துஞ்சாது விழித்திருப்பாள். தலைவியின் கண்களில் நீர் தொடர்ந்து சுரந்து கொண்டே இருக்கின்றது. இதனைப் பிறரறியாமல் மறைத்தொழுகுகிறாள். தலைவனின் இம்மாற்ற நிலையையும், தலைவியின் துயர் நிலையையும் தலைவற்கு உரை நீ பாண' எனத் தோழி உரைக்கிறாள். இப்பாடலில்,

> 'மல்லல் மூதூர் மறையினை சென்று
> சொல்லினோ எவனோ பாண! ……..' (அகநா -50:9-10)

என்றுரைக்குமிடத்து,'நாங்கள் ஊரார்க்கு மறைத்ததை, நீ மற்றையோர் அறியத் தலைவனிடம் உரையாமல், யாருமறியாமல் தனித்திருக்கும்பொழுது உரை' என்பது தலைவியின் கற்பொழுக்கத்துக்கும், தலைவனின் பெருமைக்கும் கேடு நேராது காக்க வேண்டிய கடப்பாடு தனக்கிருப்பதாகத் தோழி உணருவது தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மைக்குள் ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் வேண்டல்**

தலைவனின் புறத்தொழுக்கம் காரணமாகத் தலைவி ஊடல் கொண்டிருந்த நிலையிலும், தலைவியின் ஆற்றாமையை உள்ளித் தோழி அவளுக்காக வாயிலாகப் புகுந்த தலைவனிடம் வாயில் வேண்டல் இத்துறையாகும். இத்துறைப்பொருண்மையில் இரு பாடல்கள்(குறுந் -196, 295) காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின்,

- தலைவியின் ஆற்றாமையும், தலைவனின் ஏக்கமும்

பின்னணிச் சூழலாக அமைவது புலனாகும். இத்துறையிலமைந்த ‘வாயில் வேண்டிப் புக்க கிழவற்குத் தோழி கூறியது’ என்னுந் துறைக்குறிப்பிற்கு,

‘வேம்பின் பைங்காய் என்தோழி தரினே
தேம்பூங் கட்டி என்றனிர் இனியே
பாரிபறம் பிற்பனிச் சுனைத் தெண்ணீர்
தைஇத் திங்கள் தண்ணிய தரினும்
‘வெய்ய உவக்கும்’ என்றனிர்
ஐய! அற்றால் அன்பின் பாலே’ (குறுந் -196)

என்னும் பாடல் அமைகிறது. இப்பாடல்,‘புறத்தொழுக்கம் காரணமாகப் பிரிந்த தலைவன் இல்லறக் கடமைகளுக்காகத் தன்னில்லிற்கு வாயிலாக வந்தனன். வந்த தலைவனிடம், களவுக்காலத்தில் இனிமையாய் தெரிந்த எம் தலைவி, இப்பொழுது நினைவிற் பெறாதவளாய் இருக்கிறாள். நின் அன்பின் நிலைப்பாடு இத்தகையதோ?.’ எனத் தலைவனின் போற்றா ஒழுக்கத்தைச் சுட்டிக் காட்டி அவனை வாயில் நேருந்தன்மை வெளிப்படை. இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் மறுத்தல்**

புறத்தொழுக்கங் காரணமாகத் தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் இவ்விடமே நீட்டித்திருப்பதில்லை. இல்லறக் கடமை காரணமாகத் தலைவன் தன்னில்லிருக்குந் தலைவியிடமே திரும்ப விழைவான். எனினும் தோழியர் இருவரும் அவனின் வருகையை விரும்பாதொழிவர். அவனின் பரவொழுக்கத்தை அவ்வளவு எளிதாக மன்னிப்பதில்லை. தலைவியின் உள்ளவுணர்வை அறிந்து மீண்டு வரும்

தலைவனுக்கு வாயில் நேராது தோழி மறுத்துரைப்பாள். தோழி வாயில் மறுக்கும் பொருண்மையில் சங்க இலக்கியத்தில் ஐம்பத்தைந்து பாடல்கள்[48] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் இவற்றின் பின்னணிச்சூழல்களாக,

- தலைவனின் புறத்தொழுக்கம்
- தலைவி தலைவனின் அன்பினை எதிர்பார்த்திருத்தல்
- தலைவியின் மிகு ஊடல்
- தலைவன்மீது தலைவிக்குள்ள உரிமை
- பாணனின் இயல்பால் தலைவனிடம் மாற்றம் நிகழ்ந்தது
- வாயில்களின் தனி வாழ்வினை உற்றுநோக்கல்
- பரத்தையரின் இயல்பை அறிந்திருத்தல்,
- தலைவனின் நிலையில்லா மனம்
- தலைவன்மீதான பரத்தையின் உரிமை

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில் பத்தொன்பது துறைகளாக வகைப்படுத்தப் பட்டுள்ளன.

**தனித்துறையப் பழகினள் எனல்**

தலைவன் பொருட்டு வாயிலாய் வந்தாரிடம்,'தலைவன் பரத்தையிற் பிரிந்திருந்தாலும், தலைவி தம் உள்ளக் கேண்மையால் சிறந்து விளங்கினமையால் மேனியின் வனப்பில் மாறுபாடின்றி இருக்கிறாள். அவள் தனித்துறையப் பழகினள்' எனத் தோழி கூறல் இத்துறையாகும். இத்துறையில் ஆறு பாடல்கள் (நற் -127, 230: குறுந் -61: ஐங்குறு -143, 153, 156:) காணப்படுகின்றன.

இத்துறையிலமைந்த 'தோழி, தலைமகன் வாயில்கட்கு உரைத்தது' என்னுந் துறைக்குறிப்பிற்கு 'தச்சன் செய்த சிறுமா வையம்' எனத் தொடங்கும் குறுந் - 61ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் 'சிறுவர்கள், தச்சரால் செய்யப்பட்ட குதிரையில் ஏறி அமர்ந்து இன்புறாவிட்டாலும், அதனைக் கையால் இழுத்து இன்புறுவர். அதுபோல், தலைவனை மெய்யுற்று இன்பமடையாவிட்டாலும், அவன் நட்பினை உள்ளத்துக்குள் வளர்த்து இன்பமடைந்தோம். அதனால் கைவளையல்கள் கையில் நெகிழாமல் செறிந்தன.' எனத் தோழி வாயிலாய் வந்தாரிடம் தோழி கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,'பொய்கை ஊரன் கேண்மை செய்து இன்புற்றனெம் செறிந்தன வளையே'(குறுந் -61:5-6) என்புழி, தலைவனை உடலால் பிரிந்தாலும், அவன்மேல் கொண்ட நட்பை உள்ளத்தில் பெருக்கித் தலைவி தனித்து வாழப் பழகினள். தலைவியின் காதல் திண்மையானது எனத் தோழி கூறி வாயில் மறுத்தல் தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பரத்தையொடு புனலாடியமை கூறி வாயில் மறுத்தல்**

பரத்தையுடன் புனலாடினான் தலைவன் என்பதறிந்து தலைவி ஊடலில் இருந்தாள். அப்பொழுது தலைவன் இல்லிற்கு வந்தான். தலைவி ஊடலில் இருப்பது அறிந்து தோழியிடம் வாயில் வேண்டினான். தலைவன் பரத்தையுடன் புனலாடினமையைக் கூறித் தோழி வாயில் மறுத்தல் இத்துறையாகும். இத்துறையில் ஆறு பாடல்கள் (அகநா- 116, 226, 246, 256, 296: பரிபா -16) அமைகின்றன.

இத்துறையிலமைந்த 'காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில்வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயின்மறுத்தது.' என்னும் துறைக்குறிப்பிற்கு பரிபா -16 ஆம் வையை பாடல் அமைகிறது. இப்பாடலில்,

'கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா வொளிகிளருண் கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்
சென்னீர் வீவயிற் றேன்சோரப் பன்னீர்
அடுத்தடுத் தாடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தா ரகலத்தான்' (பரிபா -16:39-44)

என்னுமடிகள் வையையில் வெள்ளம் பெருக்கெடுத்து வரும் புதுப்புனலில் தலைவன் பரத்தையரை அடிக்கடி புல்லுதலால், அவர் மேனியில் பூசப்பட்ட வாசனைக் குழம்புகள் தலைவன்மீதும் படிந்தது எனவும், அம்மார்புடனே தலைவன் தன் இல்லிற்கு வந்து வாயில் வேண்ட, தலைவியின் உள்ளமறிந்து தோழி வாயில் மறுத்தமையைப் புலப்படுத்துகிறது. இப்பொருண்மை, துறைக்குறிப்புடன் ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

இத்துறையிலமைந்த 'தலைமகற்குத் தோழி வாயில் மறுத்தது' என்னும் துறைக்குறிப்பிற்கு மூன்று பாடல்கள் (அகநா -226, 246, 256) காணப்படுகின்றன.

அகநானூறு 226ஆம் பாடலில், தலைவியின் ஊடல் அறிந்த தலைவன் அவளின் ஊடல் தீர்க்க தோழியிடம் வாயில் வேண்டினான். அதற்குத் தோழி ‘கழாஅர் என்னுமிடத்தில் பெருக்கெடுத்து ஓடிய புனலில், நீ பரத்தையொடு ஆடிய புனல் விளையாட்டால் அவ்வூரெங்கும் அலர் எழுந்தது. அவ்வலரொலி(அகநா -226:10-12), கட்டி என்பான் போரில் தோற்றோடியபோது எழுந்த ஆரவாரத்தினும் பெரிதாய் இருந்தது.(அகநா -226:16-17)’ எனக் கூறித் தலைவனுக்கு வாயில் மறுப்பது வெளிப்படை. இவ்வாறு இப்பாடல், அவற்றின் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இத்துறையிலமைந்த ஏனைய பாடல்களும் வாயில் மறுத்தல் துறைப் பொருண்மையை வெளிப்படுத்துகின்றன.

**வாயில் நேர்தல்**

தலைவனின் புறத்தொழுக்கத்தால் தலைவி ஊடல் கொண்டிருந்தாள். அவ்வூடலைப் போக்கத் தலைவன் தோழியின் உதவியை நாடினான். தோழியும் தலைவன், தலைவியின் குறிப்புக்கள், நிலைகளை அறிந்து அவனுக்கு வாயில் நேர்வாள். இவ்வாயில் நேரும் பொருண்மையில் இருபத்தெட்டுப் பாடல்கள்[49] காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவனின் ஆற்றாமை
- தலைவியின் ஆற்றாமை
- தலைவி, தலைவன் உடனிருந்தால் நலமென எண்ணுதல்
- தலைவியின் இயல்பினைத் தலைவன் உணராத நிலையில்
- தலைவியின் வாயில் நேரும் நோக்கம்
- தலைவனின் புறத்தொழுக்கத்தின் எல்லை விரிவடையும் நிலை
- தலைவியின் இல்லறக் கடமை ஆற்ற முற்படும் நிலை

என்பன அமைகின்றன. இவற்றின் அடிப்படையில் ‘தலைமகள் குறிப்பறிந்து வாயில் நேர்தல்’ முதல் ‘பிறர் நலம் காக்க வாயில் நேர்வேனெனல்’ வரையிலான பத்தொன்பது துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தலைமகள் குறிப்பறிந்து வாயில் நேர்தல்**

வாயில் நேர எண்ணுந் தலைவியின் குறிப்பறிந்த தோழி, தலைவனின் வாயிலாக வந்த பாணனிடம், தலைவியின் நிலையுரைத்து வாயில் நேர்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த 'வாயிலாகப் புக்க பாணற்குத் தோழி தலைமகளது குறிப்பறிந்து நெருங்கிச் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு நற் -291ஆம் பாடல் அமைகிறது. இப்பாடலில்,

'தண்பெரும் பௌவநீர்த் துறைவற்கு நீயும்
கண்டாங்கு உரையாய் கொண்மோ –பாண' (நற் -291:5-6)
'பல்ஆன் கிழவரின் அழிந்தஇவள் நலனே' (நற் -291:9)

என்னும் அடிகளில் தோழி, பாணனிடம் தலைவியின் இழந்த நலனைக் கண்டவாறு தலைவனிடம் உரைப்பது தெளிவு. தலைவி, தலைவனை வாயில் நேரும் குறிப்பில் இருந்திருக்கிறாள் என்பதை அறியமுடிகிறது. இப்பொருண்மை, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும் பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**காத்திருந்த திறம் கூறல்**

புறத்தொழுக்கம் மேற்கொண்ட தலைவன் மீண்டும் இல்லம் வந்து தலைவியொடு இன்புற்ற போது வந்த தோழியிடம்,'தான் பிரிந்திருந்தபொழுது நீவீர் ஆற்றியிருந்த திறம் யாது?' என வினவிய தலைவனிடம் 'நின்னையும் இவ்வூர் மன்னனையும் வாழ்த்தி ஆற்றியிருந்தோம்' எனத் தோழி உரைத்தல் இத்துறையாகும். இத்துறையில் ஐந்து பாடல்கள் (ஐங்குறு -1-5) காணப்படுகின்றன.

இத்துறையிலமைந்த 'புறத்தொழுக்கத்திலே நெடுநாள் ஒழுகி,'இது தகாது' எனத் தெளிந்த மனத்தானாய் மீண்டு …., நீயிர் நினைத்த திறம் யாது?' என்றாற்கு அவள் சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பிற்கு ஐந்து பாடல்கள்(ஐங்குறு -1-5) காணப்படுகின்றன. இப்பாடல்களில் 'வாழி ஆதன் வாழி அவினி' எனத் தொடங்கும் ஐங்குறு -1ஆம் பாடலில் 'தலைவி நின்நலம் பேணி வேண்ட, நாங்கள் நாட்டின் நலத்தையும், நின் பாணனின் நலத்தையும் வேண்டி நின்று காத்திருந்தோம்' எனத் தோழி தலைவனுக்குப் பதிலுரைப்பது, துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது. இத்துறையிலமைந்த ஏனைய பாடல்களும் துறையின் பொருண்மைக்குள் அமைகின்றன.

**வயில் நேர்வித்தல்**

தலைவனுக்கு வாயில் நேர்ந்த தோழி, தலைவியிடம் அவனை ஏற்குமாறு கூறுதல் இத்துறைப்பொருண்மையாகும். இத்துறையில் சங்க இலக்கியத்தில் மூன்று பாடல்கள்[50]காணப்படுகின்றன. இப்பாடல்கள், துறைக்குறிப்புகளின் பொருண்மை கொண்டு ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவிக்கு தலைவன்மீது இருந்த ஆறாச் சினம்
- தோழி தலைவியின் குறிப்பறியாது தானே வாயில் நேர்ந்தநிலை

என்பன அமைகின்றன. இதனடிப்படையில் 'தலைமகள் ஊடல் தனியாதிருந்த நிலையில் தோழி தன்னிலை கூறல்(நற் -180), குறிப்பறியாது இருந்தேனெனல்(நற் - 386), பரத்தமை நீங்கி வந்தானை ஏற்றல் நலமெனல்(அகநா -316)' என மூன்று துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தலைமகள் ஊடல் தனியாதிருந்த நிலையில் தோழி தன்னிலை கூறல்**

தலைவன் வாயில் வேண்ட தோழி வாயில் நேர்ந்தாள். தோழி தலைவியை வாயில் நேர்விக்க முயன்றபொழுது அவள் அதனை ஏற்காது மறுத்தாளுக்குத் தோழி பதிலுரைத்தல் இத்துறையாகும். இத்துறையில் ஒரு பாடல் (நற் -180) அமைகின்றது. இத்துறையிலமைந்த 'தலைமகற்கு வாயில் நேர்ந்த தோழி, தலைமகளிடத்துப் பொறாமை கொண்டு சொல்லியது.' என்னும் துறைக்குறிப்பமைந்த நற் -180ஆம் பாடலில்,

'………. ……….. ……… ஊரன்
பலர்ப்பெறல் நசைஇ நம்இல் வாரலனே
மாயோள் நலத்தை நம்பிவிடல் வாரலனே' (நற் -180:4-5)
என்னோடு கழியுமிவ் இருவரது இகலே' (நற் -180:9)

என்னுமடிகளில், தலைவி வாயில் நேர மறுத்ததும், அதனால் தோழி வருந்தியதும் வெள்ளிடைமலை. இப்பொருண்மை துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**வாயில் புகுதல்**

தலைவன் தான் விடுத்த வாயில்களுக்கு வாயில் மறுத்தநிலையில் தானே வாயிலாகப் புகுந்தனன். வாயிலாகப் புகுந்த தலைவனிடம் தோழி, தலைவியின்

கற்புநிலையைக் கூறும் பொருண்மை கொண்டது வாயில் புகுதலாகும். இப்பொருண்மையில் சங்க இலக்கியத்தில் ஒரு பாடல்[51] காணப்படுகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையை நோக்கின் அவற்றின் பின்னணிச்சூழலாக,

- தலைவன் இல்லறத்தின் மேன்மை உணர்ந்த நிலை

என்பது அமைகிறது. இதனடிப்படையில் ‘கற்பருமை கூறல்(குறுந் -359)’ என்னும் துறையாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

**கற்பருமை கூறல்**

பரத்தையிற் பிரிந்துவந்த தலைவன், தன் மனைவி புதல்வனுடன் இனிதிருத்தலைக் கண்ட தோழி, பாணனிடம் இல்வாழ்வின் இனிமை உரைத்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ‘பரத்தையிற் பிரிந்து வந்த தலைமகன் வாயில் வேண்டிப் பெறாது தானே புக்குக் கூடியது கண்டு, தோழி பாணற்குச் சொல்லியது’ என்னுந் துறைக்குறிப்பிற்கு குறுந் -359ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் தலைவனுடன் வந்த பாணனிடம் ‘நிலவொளியில் குறுங்கால் கட்டிலின்கண் தலைவன் அன்புடைமை தோன்ற தன் புதல்வனைத் தழுவிக் கிடக்க, தலைவி அவ்விருவரையும் தழுவிப் பாயல்கொள்ளும் இன்பமே இல்வாழ்க்கையின் சால்பு. இந்நிலையைக் காண்பாயாக’ எனத் தோழி கூறும் பொருண்மை கொண்டது. இப்பாடலில் ‘குறுங்காற் கட்டில் நறும்பூஞ் சேக்கை பள்ளி யானையின் உயிர்த்தனன் நசைஇ’(குறுந் -359:3-4) என்புழி, தலைவன் தன் புதல்வனைப் பார்க்க வேண்டுமென்ற பேராவலுடன் இருந்திருக்கிறான் என்பதும், புதல்வனைக் கண்டவுடன் அவ்வாசை பேருயிர்ப்பாக வெளிப்பட்டமையும் தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**செலவழுங்குவித்தல்**

தலைவன் பொருள், போர் காரணங்களுக்காகத் தலைவியைப் பிரியக் கருதுகிறான். இதனைக் குறிப்பாக, கூற்றாகத் தோழி அறிகிறாள். *“தலைவன் தவிர்க்கவியலாது பிரியக் கருதும் காலத்தும், பிரிகின்ற காலத்தும் தலைவியின் தோழி தலைவனின் பிரிவினைத் தவிர்க்கச் செய்வாள். இது ‘செலவழுங்குவித்தல்’ என்னும் அகத்துறையாக அமையும்”*[52] என்பர் மு.மணிவேல். தலைவனின் பிரிவைத் தவிர்க்கும் இந்நிலையைத் தொல்காப்பியர் ‘தவிர்ச்சி’ என்றே குறிப்பர். அதாவது,

செலவை ஒழித்தல் அன்று. தற்காலிக செலவுத் தவிர்ச்சி. இத்தவிர்ச்சிக்குத் தோழி, தலைவியின் இளமைப்பருவம், ஆற்றாமை, பருவகாலம் போன்றவற்றை ஏதுக்களாகச் சுட்டுவாள்.

சரளா ராஜகோபாலன், ஐங்குறுநூற்றின் நான்கு (ஐங்குறு -239, 257, 273, 297) களவுப் பாடல்கள் ஒழித்து ஏனைய 53 பாடல்கள் கற்புக்குரியன[53] என உரைப்பர். கலித்தொகையிலமைந்த 13 பாடல்கள் உட்பட. ஆயினும் (நற் -37, 183: குறுந் -236, 390: ஐங்குறு -233, 368: அகநா -300:) இன்னும் ஏழு பாடல்கள் காணப்படுவதை அறியமுடிகிறது. கற்புப் பாடல்களாக 31 பாடல்கள்[54] காணப்படுகின்றன. செலவழுங்குவித்தல் துறையில் குறிப்பிடப்பட்ட,'விரைவில் மீள்க' எனத் தோழி கூறும் பொருண்மையிலமைந்த ஐங்குறு 318 ஆம் பாடலையும் விடுத்து, ஐங்குறு -310 ஆம் பாடல் சேர்க்கப்பட்டுள்ளது. குறுந் -390ம் பாடல் உடன்போக்கின்போது வழியின் ஏதம் கூறி கண்டோர் செலவழுங்குவித்தலாகவும், அகநா -300 ஆம் பாடல் பகற்குறி வந்த தலைவனிடம் தங்கிச் செல்க எனக் கூறுதலாலும் இப்பாடல்கள் தவிர்க்கப்பட்டுள்ளன. களவுப்பாடல் அவ்வப் பெருந்துறைகளில் ஆராயப்பட்டுள்ளன. அவை நீங்கலாக இப்பாடல்கள் துறைக்குறிப்புகளை ஆராயுமிடத்து,

- தலைவியின் சோர்வு, ஆற்றாமை காணுதல்
- தலைவன் பிரியும் எண்ணத்துடன் இருத்தல்
- தலைவன் பொருளின் மேன்மை கருதுதல்
- சுரம் நினைத்து தலைவி வருந்தும் நிலை
- தலைவனின் அருகாமையைத் தலைவி உள்ளுதல்
- பருவத்தினால் தலைவி துன்பமுறுதல் காணுதல்
- முன்நிகழ்ந்தது மீண்டும் நினைவில் வருதல்
- பொருள்நாடும் உலக இயல்பை தலைவன் பெறுதல்
- பாலை நில அன்புறு காட்சியைக் கூறல்
- தலைவி செலவிற்கு உடன்படாத நிலை
- சுரத்தருமை தலைவன் கூறுதல்
- தலைவனின் காதலாழம் அறிதல்
- தலைவனின் பிரிவைத் தலைவி அறிந்தமை கூறல்
- தலைவியின் பண்புநலன் கூறல்

என்பவை பின்னணிச் சூழல்களாக அமைகின்றன. இவற்றினடிப்படையில் ‘தலைவியின் இளமை – ஆற்றாமை கூறல்’ முதல் ‘இயற்கை சாற்றல்’ வரையிலான ஒன்பது துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**தலைவியின் இளமை – ஆற்றாமை கூறல்**

போர், வினை காரணமாகத் தலைவன் பிரியக் கருதுவதைத் தோழி குறிப்பாகவோ, கூற்றாகவோ அறிந்துகொள்கிறாள். தலைவன் பிரிந்தால் தலைவியின் இளமை நலம் கெடும், மிகவும் ஆற்றாது வருந்துவாள் எனத் தலைவனிடம் தோழி உரைத்து, அவனது செலவினைத் தவிர்க்கச் செய்தல் இத்துறையாகும். இத்துறையில் பதினாறு பாடல்கள் (நற் -26, 43, 46, 71, 325: ஐங்குறு -302, 304, 305, 306: அகநா -13, 143, 161, 179, 215, 271, 319:) காணப்படுகின்றன.

இத்துறையிலமைந்த ‘பிரிவுக் குறிப்பு உணர்ந்து தலைவி வேறுபட்டமை சொல்லித் தோழி செலவழுங்குவித்தது’ என்னும் துறைக்குறிப்பிற்கு ‘நோகோ யானே நெகிழ்ந்தன வளையே’ எனத் தொடங்கும் நற் -26ஆம் பாடல் அமைகிறது. இப்பாடல் ‘நின்னோடு முடமுதிர் பலா நிறைந்த காட்டில் துணையாக வந்த தவற்றினால், இப்பொழுது, நீ செலவு மேற்கொள்வேன் எனக் கூறுகிறாய். இது கூறியதற்கே இவள் மெய் சோர்ந்து வளையல்கள் நெகிழ்ந்தன. நீவீர் வருமளவும் ஆற்றியிருப்பாளோ?’ எனத் தலைவனிடம் கூறும் பொருண்மை கொண்டது.

இப்பாடலில்,‘… தாய்மனை ஒழிய … முடமுதிர் பலவின் அத்தம் நும்மொடு கெடுதுணை ஆகிய தவறோ? …’(நற் -26:4-7) என்னும் இவ்வடிகளின்வழி,‘தலைவி நின்னொடு உடன்போக்காக வந்தது நும்மொடு இணைந்து வாழும் பேற்றை உள்ளியே. நீ பிரிதல் தகுமோ?’ எனத் தோழி செலவழுங்குவித்தமை புலப்படுகிறது. இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**புதல்வன் முறுவல் இனிமை கூறல்**

போர்வயிற் பிரிய விரும்பும் தலைவனிடம், அதனினும் இனிது புதல்வனின் முறுவலினிமை காண்டல் என மொழிந்து செலவினை விலக்கல் இத்துறையாகும். இத்துறையில் ‘‘போர்வயிற் பிரிவல்’ என்ற தலைமகற்குத் தோழி சொல்லியது’ என்னும் துறைக்குறிப்பமைந்த ஐங்குறு -309ஆம் பாடலில் ‘வேனிற் காலத்தில் பிரிந்து சென்று பொருள் தேடும் தலைவனிடம்,‘நின்நயந்து உறைவி கடுஞ்சூற்

சிறுவன் முறுவல் காண்டலின் இனிதோ'(ஐங்குறு -309:3-4) எனத் தோழி தலைவனிடம் கேட்கும் பொருண்மை கொண்டது. இங்கு ஆண்மகனுக்குத் தந்தை தகுதி வழங்கினமையால் அம்முதற் புதல்வன்மீது அவனுக்கு மிகுபற்று இருக்கும். அதனையே தோழி கூறிச் செலவழுங்குவித்தமை தெளிவு. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகிறது.

**பிரிவு**

களவுத் தலைவனின் செலவும் தொடர்பும் பொறுப்பும் குறைவு. அதனால் அலர் அடங்குவதற்கும், தலைவியை மணப்பதற்கும் மட்டுமே பொருள்தேட முயல்வான். கற்புத் தலைவனுக்குத் *"தன் குடும்பம் என்ற கட்டு ஏற்படுவதால் உறவுகள் பெருகுகின்றன. உலகத் தொடர்புகள் விரிகின்றன. பழியின்றிப் புகழ்பெறும் எண்ணங்கள் மலர்கின்றன. பெற்றோர், மனைவி, மக்கள் இவர்களைப் போற்றவும், உறவினர்க்கும், ஊரார்க்கும் உதவவும், வறியவர்க்கு வழங்கவும், தம்மை இகழ்ந்து செருக்கித் திரிவாரை அடக்கவும் பொருளின் துணைவேண்டும்."*[55]அதற்காகத் தலைவன் பொருள்வயிற் பிரிய முற்படுவான். அவன்தன் செலவை, தலைவியிடம் குறிப்பாகவும், தோழியிடம் குறிப்பு மற்றும் கூற்றாகவும் வெளிப்படுத்துவான். தலைவி, தலைவனின் பிரிவு ஆற்றாமையைத் தோழிக்குக் குறிப்பாகவும் கூற்றாகவும் உணர்த்துவாள். இந்நிலையில் தோழி, தலைவனின் செம்மைச் செயலைச் சீர்தூக்கியும், தலைவியின் காதல் ஆற்றாமை கடந்து போகாதிருக்கும்வகையில் காத்திருத்தல் கடனென இயற்பட மொழிந்தும், பிரிவுக் காலங்களில் இருவரின் உணர்வுகட்கும் ஊட்டங் குறையாது செயல்படுவாள்.

**சங்க இலக்கியங்களில் பிரிவு**

தலைவனின் காதலுடன் கூடிய கடமையுணர்வும், தலைவியின் கற்பின் காதலாழமும் ஒருங்கு வெளிப்படும் உணர்வுப் பெருக்குமிக்க பிரிவுக் காலங்களில் தோழியின் செம்மாந்த அறிவார்ந்த மொழிகளைத் தோழி புலப்படுத்துவாள். இத்தோழி கூற்றில் 136 பாடல்கள்[56] காணப்படுகின்றன. இப்பாடல்களில் பகைவயிற் பிரிவுப் பொருண்மையில் ஒரு பாடல்(ஐங்குறு -465) காணப்படுகிறது. இப்பாடல்களின் துறைக்குறிப்பு, பொருண்மைகளை ஆராயின் அவற்றின் பின்னணிச் சூழல்களாக,

- தலைவனின் செலவு குறித்த செயல்பாடுகள்
- தலைவியின் நிலை குறித்த அச்சம்

- தலைவியின் காதலாழம்
- பிரியும் சூழல் அறிந்த தலைவியின் மேனி வேறுபாடு
- பிரியான் என்னும் தலைவியின் நம்பிக்கை
- பிரிவுணர்ந்த தலைவி, அவன் அருகிலிருந்தால் நலமென எண்ணுஞ் சிந்தை
- பிரிந்தபின் தலைவி ஆற்றாமை கொள்ளல்
- தலைவனின் மீட்சியைத் தலைவி எதிர்நோக்கல்
- தலைவி தலைவனுடனான ஏற்படும் மகிழ்ச்சியை எதிர்நோக்கல்
- தலைவன் தலைவியுடனான மகிழ்ச்சியை எதிர்நோக்கல்

என்பன அமைகின்றன. இவற்றினடிப்படையில் 'பிரிவுணர்தல் (அ) பிரிவுணர்ந்து வேறுபடல்' முதல் 'குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை கூறி மகிழ்தல்' வரை பத்தொன்பது துறைகளாக வகைப்படுத்தப்பட்டுள்ளன.

**பிரிவு உணர்த்தியாற்குக் கூறல்**

தலைவன் தான் பொருள்வயிற் பிரிய எண்ணுவதைத் தோழிக்கோ, தலைவிக்கோ தெரியப்படுத்துதல் பிரிவு உணர்த்தப்படல் துறையாகும். அவ்வாறு பிரிவை உணர்த்தும் தலைவனிடம், நின் பிரிவால் இவள் வருந்தியிருக்கும் பொழுது பொருள்வயிற் பிரிய எண்ணும் நின்னை 'இன்பம், பொருள்' நிலையாமையைக் கூறித் தடுக்க இயலுமோ?' எனத் தோழி கூறல் இத்துறையாகும்.

இத்துறையிலமைந்த 'பிரிவுணர்த்திய தலைமகற்குத் தோழி சொல்லியது.' என்னுந் துறைக்குறிப்பிற்கு இரு பாடல்கள் (அகநா -46, 48) காணப்படுகின்றன. இப்பாடல்களில்,

'வைகல் தோறும் இன்பமும் இளமையும்
எய்கணை நிழலின் கழியுமிவ் வுலகத்து' (அகநா -46:1-2)

என்னுமடிகளில்,'இவ்வுலக வாழ்க்கை நிலையில்லாதது. இன்பமும் இளமையும் எய்யும் கணையின் நிழல் போன்று விரைவில் மறையக்கூடியது. காலங்களும் இழந்ததை மீட்பதில்லை. அவ்வாறிருக்க எம் தோழியைப் புலம்பவிட்டு செலவு மேற்கொள்வானேன்' எனத் தோழி உரைப்பதும்,'மன்னாப் பொருட்பிணிப் பிரிதும்யாம் எனவே'(அகநா -46:9-11) என்னுமடியின்வழி, நிலையில்லாத பொருட்காக அருஞ்சுரம் கடந்து செல்ல வேண்டுமா?' தலைவியின் எழினலம் இன்பமல்லவா?' எனத் தோழி தலைவனிடம் மொழிவதும் வெளிப்படை. இவ்வாறு இப்பாடல், துறைக்குறிப்பின்

பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச் சூழலுக்குள் அமைந்தும் துறையைச் சுட்டுகின்றது.

**உடன்பாடு பெற்றுப் பிரிதல் (ஆற்றுவித்தல்)**

தலைவன் தோழியிடம் செலவினை உணர்த்திச் சென்றான். உடன்பட்டும் ஆற்றாளாயின தலைவியிடம், ஆற்றாளாயினமைக்குக் காரணம் வினாவ,'சுரம் போகற்கரியது' என்றனள். அதற்குத் தோழி 'வேனிற் காலம் கழிந்தது. அச்சுரம் நன்று' எனக்கூறி ஆற்றுவித்தல் இத்துறையாகும். இத்துறையிலமைந்த ''பிரிவு உடம்பட்டும் ஆற்றாய் ஆகின்றது என்னை?' என்று வினாவியவழி,'அவர் போன சுரம் போகற்கு அரிது என்று ஆற்றேனாகின்றேன்' என்றாட்கு 'வேனிற் காலம் கழிந்தது: கார்ப்பருவத் தோற்றத்திலே பிரிந்தாராகலான் அச்சுரம் நன்று' எனத் தோழி சொல்லி ஆற்றுவித்தது.' என்னும் துறைக்குறிப்பிற்கு எட்டுப் பாடல்கள் அமைந்துள்ளன. இப்பாடல்களில்,

'நன்றே காதலர் சென்ற ஆறே
அணிநிற இரும்பொறை மீமிசை
மணிநிற உருவின தோகையும் உடைத்தே' (ஐங்குறு -431)
'நன்றே காதலர் சென்ற ஆறே
நிலன்அணி நெய்தல் மலர
பொலன்அணி கொன்றையும் பிடவமும் உடைத்தே' (ஐங்குறு -435)

என இப்புறவு அணிப் பத்தில் அமைந்த பாடல்கள் அனைத்தும் தலைவன் சென்ற சுரத்தின் கார்காலக் கவினை உரைப்பதாக அமைந்துள்ளதைத் தலைவிக்கு உரைத்து, ஆற்றுவிக்கும் பொருண்மையைக் கொண்டமைகின்றன. இப்பொருண்மைகள், துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றியும், பின்னணிச்சூழலுக்குள் அமைந்தும் துறையை விளக்குகின்றன. இப்பிரிவுப் பொருண்மையிலமைந்த ஏனைய துறையிலமைந்த பாடல்களும் அவ்வவற்றின் துறைக்குறிப்புடன் ஒன்றியமைந்து துறையை விளக்குகின்றன.

**தொகுப்புரை**

சங்கப் பாக்களில் தோழி கூற்று மிகுந்திருப்பதற்கு, புலவர்தம் உள்ளம் உள்ளும் பொருட்கு இடமளிப்பவள், அனைத்து மாந்தரிடமும் கூற்று நிகழ்த்தும் நல்வாய்ப்புப் பெற்றவள் போன்றவை ஏதுக்களாக அமைகின்றன. 'தாங்கருஞ்

சிறப்பின் தோழி' எனத் தொல்காப்பியரும் விதந்தோதும் பேறுபெற்றவள். தோழி, தலைமக்களின் இல்லற இன்பத்திற்கு இனிமையாய்த் துணை நிற்பவள். அவர்கள் இன்ப துன்ப உணர்வுகளுக்கு உயிரோட்டமாக அமைபவள். தலைமக்களின் உள்ள உணர்வுகளைப் பிரதிபலிக்கும் அழகிய மொழியள். செயற்திறம்மிக்க சிந்தையள். தலைவியின் உடன்பிறவா ஒன்றியுறையும் பிறப்பினள். தோழியின் மொழிகள் ஒலித்த பின்னரே தலைமக்களின் காதலின் உள்ளக் கேண்மை நிலைநிறுத்தப் பெறுகின்றன.

தோழியால் கூட்டப்பெறும் கூட்டம் தோழியிற் கூட்டம் என்றாதலினும், களவொழுக்கத்தை மறைத்த தலைவியிடம் தான் அறிந்து கொண்டதைத் தோழி விளம்பல் 'களவறிதல்' துறையில் நோக்கப்பட்டுள்ளது. மதியுடன்பாட்டுத் துறையிலமைந்த 'இறைவனை நகுதல்' என்னும் உட்துறையில் எம் தலைவியைக் கண்டவரே துன்புறுவர். நீயோ அவள் தோளை அடைந்தனை. நின் துன்பத்திற்கு நீயே காரணம் எனத் தோழி நகைப்பது துறைப் பொருத்தத்திற்குக் காரணமாக அமைந்ததும் ஆராயப்பட்டுள்ளது.

பின்னிற்றல் என்னும் முதன்மைத் துறையில், தலைவனின் காதலாழம் அறிந்து, அவனுக்கு உதவ முற்படுகிறாள். அவ்வகையில் பதினொரு துறைகள் வகைப்படுத்தப்பட்டு ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. தலைவி தன் குறிப்பினளல்லள் துறையில் நற் -342 ஆம் பாடல் இரண்டு துறைக்குறிப்புகளைக் கொண்டது. தலைவனின் வருத்தமும், தோழியின் வருத்தமும் வெளிப்படுத்தப்பட்டு, இரு துறைக்குறிப்புகளுக்கும் பொருந்துவது ஆய்வில் மொழியப்பட்டுள்ளது.

கையுறை என்னும் முதன்மைத் துறையில் 'கையுறை மறுப்பது, கையுறை ஏற்பது, கையுறையை ஏற்குமாறு மொழிவது' என்ற மூன்று வழிநிலைத்துறைகள் ஆராயப்பெற்றுள்ளன. சேட்படுத்துதல் முதன்மைத் துறையிலமைந்த 'பெருமையிற் பெயர்த்தல்' வழிநிலைத் துறையில், நற் -45 ஆம் பாடலில் பொ.வே.சோமசுந்தரனார் 3, 4 ஆம் பாடலடிகளிலும், துறைக்குறிப்பிலும் சிறு மாற்றங்களைச் செய்து துறையை விளக்கியுள்ளமை ஆய்வில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

'தலைவியின் அருமை உள்ளல்' துறையிலமைந்த நற் -301 ஆம் பாடற்கு ஔவை.சு.துரைசாமிப்பிள்ளை உள்ளிட்ட உரையாசிரியர்களின் உரை, துறைக்குறிப்பிலும் மாற்றங்களை மொழிந்து, அவை மாறுபடினும் துறையின் பொருண்மை மாறாது அமைந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது.

இருவகைக்குறியில் ‘பகல், இரவு, அல்ல குறி’ என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இவற்றிற்கு வகைப்படுத்தப்பட்ட நாற்பது உட்துறைகளில் சில உட்துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. பகற்குறியில் அமைந்த ‘ஏகிடு கிளவி’த் துறையிலமைந்த நற் -58 ஆம் பாடலில் தலைவன் துயரங்கொள்ளாமல் தம்முடன் இருக்க வேண்டும் எனத் தோழி மொழிவதன்வழி துறை புலப்படுவது எடுத்துரைக்கப் பெற்றுள்ளது.

இரவுக்குறியிலமைந்த ‘வரைவது கிளத்தல்’ துறையில் அகநா -10 ஆம் பாடலுக்குப் பழைய உரைகாரர் குறிப்பிடும் உள்ளுறை ஒப்பு நோக்கி, துறைப்பொருண்மையை சுட்டப்பட்டுள்ளது. அல்லகுறியில் ‘இறைவியின் ஆற்றாமையுரைத்தல்’ என்னும் வழிநிலைத் துறை எடுத்துரைக்கப்பட்டுள்ளது. இற்செறிப்பு என்னும் முதன்மைத் துறையில் அமைந்த இற்செறிப்புக்கு அஞ்சியாட்கு உரைத்தல் என்னும் வழிநிலைத் துறையில், தலைமகட்கு அது நிகழாது எனத் தோழி ஆறுதல் கூறும் பொருண்மையில் நற் -134ஆம் பாடல் அமைந்துள்ளமை தெளிவுறுத்தப்பட்டுள்ளது.

‘ஒருவழித்தணத்தல்’ என்னும் முதன்மைத் துறை வரைவுக்குப் பின் நிகழ்தலும், அத்துறை நிகழும் காலம், களவுக்குரிய தலைவியை வருத்தும் பொருண்மைகளிலமைந்த நிகழ்வுகளாகிய குறியிடையீடு, அம்பல், அலர், இற்செறிப்பு, வெறியாட்டு முதலிய துறைகள் நிகழ்வதற்கு ஏதுவான காலங்கள் என்பதும் சுட்டப்பட்டுள்ளது. இவ்வொருவழித்தணத்தல் துறையில் ஐங்குறு -233 ஆம் பாடல் நேரடியாகச் சுட்டுதலும், ஐங்குறு -297 ஆம் பாடல் குறிப்பாகச் சுட்டுதலும் நோக்கப்பட்டுள்ளன.

‘வரைவுநீடல்’ என்னும் முதன்மைத் துறையில் எட்டு வழிநிலைத் துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. வரைவுநீடலின் ஏதுக்கள் குறிப்பிடப்பட்டு, அதன்வழி துறைகள் ஆராயப்பட்டுள்ளன. ‘அலர்’ என்னும் வழிநிலைத் துறையில் ‘காதல் திண்மையுரைத்தல் (குறுந் -373) உட்படுத்தப்பட்டுள்ளன. ‘நொதுமலர் வரைவு’ என்னும் முதன்மைத் துறையில் ‘நொதுமலர் வரைவு மாற்றியது உரைத்தல்’ வழிநிலைத் துறை ஆய்வில் அறியப்பட்டு, துறைக்குறிப்பு ஒன்றியமையை சுட்டப்பட்டுள்ளது.

‘வெறியாடல்’ என்னும் முதன்மைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட அன்னை வெறியெடுப்பல் எனல் என்னும் வழிநிலைத் துறை உட்படுத்தப்பட்டுள்ளது. ‘வரைவுகடாதல்’ என்னும் முதன்மைத் துறை தோழிக்கே உரித்தான துறை. தலைவன் வரும் வழியின் ஏதம் கூறி (நற் -257) வரைவுகடாவும் ‘ஆற்றது தீமை அறிவுறு கலக்கம்’ என்னும் வழிநிலைத் துறை ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. இத்துறைகளில் தோழியின் வரைவு நோக்கம், தலைவனை வரைவு தூண்டச் செய்துள்ளமை நோக்கப்பட்டுள்ளன.

வரைவிடைவைத்துப் பொருள்வயிற் பிரிவு என்னும் முதன்மைத் துறையில் தலைவனின் மேன்மைத் தன்மை, தலைவியின் வரைவு எதிர்பார்ப்பு, தோழியின் தலைவியை நோக்கியதான சிந்தை போன்றவை, துறைக்குறிப்பின் பொருண்மையுடன் ஒன்றியமை ஆய்வில் சுட்டப்பட்டுள்ளன. வகைப்படுத்தப்பட்ட பதினொரு வழிநிலைத் துறைகளில் ‘பெருமலை நாடனை ‘வரூஉம்’ என்றோளே’(நற் -65:9) என விரிச்சி உள்ளிட்ட துறைகள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளன. இங்கு ‘செலவழுங்குவித்தல்’ என்னும் வழிநிலைத் துறையில் ‘ஆற்றாமை கூறல்’ உட்துறையும் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. ‘அறத்தொடுநிற்றல்’ முதன்மைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட இருபது வழிநிலைத் துறைகளில் மூன்று துறைகள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளன. இங்கு தலைவன் வரைவுடன் வருவதற்கு முன்பே தான் அறத்தொடு நின்றதைத் தோழி உரைக்கும்(குறுந் -374) அறத்தொடு நின்றமை கூறல் வழிநிலைத் துறை நோக்கப்பட்டுள்ளது.

‘உடன்போக்கு’ என்னும் முதன்மைத் துறையில் உடன்போக்கிற்கான சூழல்களையும், ஏதுக்களையும் எடுத்துரைத்து, அத்துறைப்பாடல்கள் துறைக்குறிப்புடன் ஒன்றியமை ஆராயப்பட்டுள்ளது. ‘ஓம்படை கூறி விடுத்தல்’ துறையில் (நற் -10: குறுந் -115:) தோழியின் சொல்லாட்சியில் அவளின் தாய்மையுள்ளமும், தலைவி என்றும் மகிழ்வுடன் இருக்க வேண்டுமென்ற அக்கறையும் தொனிப்பதும், துறைக்குறிப்புடன் ஒன்றியுள்ளமையும் ஆய்வில் மொழியப்பட்டுள்ளது. ‘கற்பொடு புணர்ந்த கவ்வை’ துறையிலமைந்த குறுந் -15 ஆம் பாடல் தலைவியின் தோழி நோக்கிலும், தாயின் தோழியின் நோக்கிலும் ‘தோழி’ என்னுஞ் சொல் ஆராயப்பட்டுள்ளது.

‘வரைவு’ என்னும் முதன்மைத் துறையில் ‘வரைவு மலிவு’ என்னும் வழிநிலைத் துறையில் தலைவியின் வரைவு தனக்கு மகிழ்வைத் தருவதாகத்

தோழி மொழியும் அகநா -42, 70 ஆம் பாடல்கள் துறைக்குறிப்புடன் ஒன்றியுள்ளமை ஆய்வில் தெளியப்பட்டுள்ளன. ‘மலிவு’ என்னும் முதன்மைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட ஒன்பது வழிநிலைத் துறையில் புணர்ச்சி விதும்பல் கண்டு மகிழ்வில் தோழி அழிந்து கூறல் துறை(குறுந் -178) ஆய்வில் தெளியப்பட்டுள்ளது. அவற்றில் மணநாளின்போது தலைவன், தலைவிக்கு மலர் சூட்டும் நிகழ்வு கண்டு மகிழ்ந்த தோழி தலைவனை வாழ்த்துதல் ஆராயப்பட்டுள்ளது.

‘ஊடல்’ என்னும் முதன்மைத் துறையில் ஐந்து பாக்களை தனியே ஆராய்ந்து ,‘வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயில் நேர்வித்தல், வாயில் புகுதல்’ போன்ற வழிநிலைத் துறைகளாக வகைப்படுத்தப்பட்டு, அவற்றின் உட்துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. ‘வாயில் வேண்டல்’ துறையில் தலைவனின் புறத்தொழுக்கத்தைச் சுட்டியுரைத்தே,அவனிடம் தோழி வாயில் வேண்டுவதும்,‘வாயில் மறுத்தல்’ வழிநிலைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட பத்தொன்பது உட்துறைகளில் இரு உட்துறைகள் உட்படுத்தப்பட்டுள்ளன. அவற்றில், தலைவனின் பரத்தையுடனான புனல் விளையாட்டிலமைந்த பாடல்கள் விளக்கப்பட்டுள்ளன.

‘வாயில் நேர்தல்’ வழிநிலைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட பத்தொன்பது உட்துறைகளில் இரண்டு உட்துறைகள் உட்படுத்தப்பட்டுள்ளன. ‘காத்திருந்த திறம் கூறல், தலைவி, தோழியரின் பிறர்நலம் பேணும் பண்பும், அவை துறைக்குறிப்புடன் ஒன்றியமைவதும் ஆராயப்பட்டுள்ளன. ‘வாயில் நேர்வித்தல்’ வழிநிலைத் துறையில் ‘தலைமகள் ஊடல் தனியாதிருந்த நிலையில் தோழி தன்னிலை கூறல்’ துறையில் தான் நேர்ந்த வாயிலைத் தலைவி மறுத்துவிட்டாள் என்னும் தோழியின் வருத்தத்தொனி ஒலிப்பது ஆராயப்பட்டுள்ளது. ‘வாயில் புகுதல்’ துறையிலமைந்த குறுந் -359 ஆம் பாடல் நோக்கப்பட்டுள்ளது.

செலவழுங்குவித்தல் என்னும் முதன்மைத் துறையில், வகைப்படுத்தப்பட்ட ஒன்பது வழிநிலைத் துறைகளில் தலைவியின் இளமை – ஆற்றாமை கூறல் பதினாறு பாடல்களில் நற் -26ஆம் பாடலின் உடன்போக்காக நின்னுடன் வந்த தலைவி இணைந்து வாழ்வதற்கே என மொழிந்து செலவழுங்குவிக்கும் நிலை ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. இத்துறையில் தலைவியின் இளமை நிலையாமை, உடன்போய் மணந்த தலைவியின் உணர்வு குறித்து தோழி

- வெறியாட்டு வெளிப்படுத்தல் (ஐங்குறு -246)
- வேலனின் பொய்மையுரை (ஐங்குறு -349)
- தலைவனின் உள்ளக் குறிப்பு அறியமுயலான் (நற் -268)
- அன்னை வெறியெடுப்பல் எனல் (குறுந் -263: ஐங்குறு -244:)

  (இங்கு அறத்தொடு நிற்றல் துறையில் எட்டுப் பாடல்கள் ஆராயப்படவுள்ளன.)

➢ **வரைவுகடாதல் (76 பாடல்கள்)**

- ஆற்றது தீமை அறிவுறு கலக்கமும் (நற் -154, 257: அகநா -168, 202, 318:)
- காப்பின் கடுமை கையற வரினும்
- இற்செறிப்பு (நற் -57, 222, 253, 259, 267, 282. 295, 317, 354: குறுந் - 303, 324, 342, ஐங்குறு -186, 194, 245: அகநா -2, 60, 100, 118, 150, 288:)
- வெறியாட்டு (நற் -288)
- காவல் மிகுதி கூறல் (நற் -98)
- அலரச்சம் (நற் -4, 15: குறுந் -393:)
- களனும் பொழுது வரைநிலை விலக்குதல்
- குறிப்பெயர்த்திடுதல் (நற் -172, 188, 223, 261: குறுந் -353, 375: அகநா -218, 270:)
- தலைவனுடன் இருந்த நிலையை எண்ணி வருந்துதல் (நற் -96, 145)
- பகல் வருவானை இரவு வா எனல் (நற் -67: குறுந் -179: அகநா -92:)
- குறியிடையீடு கூறல் (குறுந் -244)
- தினைப்புனங் காவற்கு வாரோமெனல் (ஐங்குறு -260)
- காதல் மிகுதி கூறல் (நற் -19, 23, 93, 108, 159, 182, 203, 231, 326, 355: ஐங்குறு -179: அகநா -112:)
- கவின் அழிபு உரைத்தல் (நற் -395: ஐங்குறு -193. 238, 264:)
- நாடும் ஊரும் இல்லுங் குடியும் பிறப்பும் சிறப்பும் நோக்குதல் (அகநா -12, 132, 394)
- அனைநிலை வகையான்
- படைத்து மொழிதல் (அகநா -156)
- தலைவனின் காதலின்மை கூறல் (நற் -396: ஐங்குறு -277: அகநா - 172, 320:)

- வரைவு நீட்டித்த வழி (நற் -195, 283, 375:)
- நொதுமலர் வரைவு (ஐங்குறு -180, 266:)

- **வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவு (81**
- **தலைவன் கூற்றுப் பாடல்கள் (6**
    - பிரிவுழி கலங்கல் (ஆற்றிடை யுறுதல்) (ஐங்குறு -195)
    - வரைவிடை வைத்துப் பிரிந்து மீளும் தலைவன் கூறல் (ஐங்குறு -94, 291, 365: குறுந் -233:)
    - தலைவியின் வருத்தம் உரைத்தல் (குறுந் -235)

- **தலைவி கூற்றுப் பாடல்கள் (51**
    - வரைவிடை நயந்ததை குறிப்பினால் உணர்ந்ததை தோழிக்கு

உரைத்தல் (ஐங்குறு -286)

- அவள் இரங்குதல் - வருந்துதல் (நற் -56, 87, 133, 219: குறுந் -315, 316, 334:)
- வன்புறை (குறுந் -223)
- வன்புரை எதிரழிதல் (நற் -38, 218, 369: குறுந் -30, 175, 249, 304: ஐங்குறு -209, 274:)
- பிரிந்தவழிக் கலங்குதல் (நற் -196, 249. 277, 364: குறுந் -*5*, 6. 28, 36, 134, 145, 170, 171, 172, 205, 208, 226, 240, 241, 245, 264, 301, 302, 371, 377: ஐங்குறு -141, 183, 295:)
- வரைவிடை பிரிந்தவிடத்து முனிந்துரைத்தல் (குறுந் -310)
- இயற்பட மொழிதல் (அகநா -22)
- ஈ.17.2.8 வந்துழி மகிழ்வு (ஐங்குறு -120, 192, 253, 263)

  இங்கு வரைவிடத்து பிரிந்தவிடத்து முனிந்துரைத்தல் உய்த்துணரப்பட்ட துறையாகும்.

- **தோழி கூற்றுப் பாடல்கள் (24**
    - பிரிவுணர்த்திய தலைவனுக்கு தலைவியின் நிலையுலைத்தல் (நற் -247: குறுந் -236, 225, 397: ஐங்குறு -239:)
    - வரைவிடை உடன்படாமை (நற் -183: ஐங்குறு -257, 273:)
    - ஆற்றுவித்தல் அரிதெனல் (நற் -37)
    - இவளை இழந்தேனெனக் கவன்றுரைத்தல் (நற் -358)
    - படைத்து மொழிதல் (நற் -55)
    - வன்பொறை மொழிதல் -வற்புறுத்துதல் (நற் -115, 328: ஐங்குறு -219:)

- தோழி தானே வரைவிடைப் பிரிவு உடன்பட்டமையால் பிரிவு மேற்கொண்டானெனல் (குறுந் -265)
- வந்துழி மகிழ்வு (ஐங்குறு -189, 217, 223, 226, 229, 252, 270)
- விரிச்சி (நற் -65)
- பருவம் உரைத்து மணம்புரிவரெனல் (நற் -7)

- **அறத்தொடு நிற்றல் (56 பாடல்கள்)**
- **தலைவி கூற்றுப் பாடல்கள் (7)**

  - காரிகை நேர்தல் (நற் -244: குறுந் -31, 259, 305: ஐங்குறு -201: அகநா -52, 82:)

- **தோழி கூற்றுப் பாடல்கள் (49)**

  - அறத்தொடு நிற்றல் நலமெனல் (குறுந் -333)
  - அறத்தொடு நின்றமை கூறல் (குறுந் -374)
  - நொதுமலர் வரையுமிடத்து அறத்தொடு நிற்பேனல் (நற் -165, 297: குறுந் -321:)
  - காரிகை வேற்றுமை காரணம் வினாவியாட்கு உரைத்தல் (குறுந் -26: ஐங்குறு-366: அகநா -48, 110:)
  - கட்டுவிச்சியிடம் உரைத்தல் (குறுந் -23)
  - காப்பு மிகுதி கூறல் (ஐங்குறு -28: அகநா -190:)
  - வெறியாடல் (நற் - 173, குறுந் - 214, ஐங்குறு – 190, 210, 241, 250
  - வெறி விலக்கல் (நற் -34: குறுந் -362: ஐங்குறு -248:)
  - நொதுமலர் வரைவு வந்துழி அறத்தொடு நிற்றல் (நற் -207: குறுந் -379: ஐங்குறு -110, 168, 265, 220, 367:)
  - தெய்வத்தால் ஆயிற்று எனத் தமர் நினைத்தல் (ஐங்குறு -228)
  - தமர் வரைவு மறுத்துழி அறத்தொடு நிற்றல் (ஐங்குறு -29, 30, 212, 228, 271)
  - உடன் போயினபின் அறத்தொடு நிற்றல் (குறுந் -15: ஐங்குறு -379:)
  - பரிசமொடு வருதல் (ஐங்குறு -101, 102)
  - வரைவு மலிதல் (ஐங்குறு -105, 208)
  - காதலே காரணமெனச் செவிலியை வற்புறுப்பல் (ஐங்குறு -106, 107)
  - செவிலியின் ஐயம் போக்கல் (ஐங்குறு -108, 109)
  - தலைவியின் தோள் நலம் கூறல் (ஐங்குறு -108)

- அவனளிச் சிறப்புக் கூறல் (ஐங்குறு -109)
- வரைவு உடன்படல் (ஐங்குறு -103)
- அவன் ஊர் நன்மை காட்டல் (ஐங்குறு -104)
- நற்றாய் அறத்தொடு நிற்றல் (நற் -234)

இங்கு கட்டுவிச்சியிடம் உரைத்தல் துறை, கட்டுவி முருகு என மொழிதல் துறையிலிருந்து வருவிக்கப்பட்டது. அவன் ஊர் நன்மை காட்டல் கற்பிலும், ஆராயப்படவுள்ளன.

- **உடன்போக்கு (126 பாடல்கள்)**
- **தலைவன் கூற்று பாடல்கள் (16 பாடல்கள்)**
  - ஒன்றாப் பருவத்தும் (அகநா -121)
  - சுரத்தும் (நற் -9)
  - வலிப்பினும் (குறுந் -56)
  - விடுப்பினும் (உடன் கொண்டு சேரலுக்கு அருமை உரைத்தல்) (நற் -162)
  - அடிவழி நினைந்து நின்றவன் உளம் வாடல் (நற் -362)
  - அப்பாற்பட்ட ஒருத்திறத்தானும்
  - வழிவந்த நன்மை கூறி வருத்தம் போக்கல் (நற் -76, 202: ஐங்குறு -395, 396:)
  - மருட்டிக் கூறல் (அகநா -99, 257)
  - நாணிக் கண்புதைத்துழிக் கூறல் (ஐங்குறு -361)
  - நலம் பாராட்டல் (ஐங்குறு -363)
  - உண் மகிழ்ந்துரைத்தல் (நற் -384)
  - ஊர் சார்ந்தமை கூறல் (நற் -264)
  - தலைவன் வந்த திறம் உரைத்தல் (மீளவுரைத்தல்) (அகநா -261)
  - **தலைவி கூற்றுப் பாடல்கள் (10 பாடல்கள்)**
  - உடன்போதுவல் (நாண் அழிவு இரங்கல்) (குறுந் -149: அகநா -95:)
  - பிரிவு உணர்த்திய தோழிக்குக் கூறல் (ஐங்குற -286: அகநா -325:)
  - இடைச்சுரத்து ஆயத்தார்க்குச் சொல்லி விடல் (ஐங்குறு -384, 385)
  - மீளலுற்ற வழி ஆயத்தார்க்கச் சொல்லி விடல் (ஐங்குறு -397)
  - தமர் வந்துற்றவழி ஆண்டு நிகழ்ந்தது கூறல் (ஐங்குறு -312
  - மீண்ட தலைவி தோழிக்குக் கூறல் (ஐங்குறு -203)

- வழிவரல் வருத்தம் கண்டு வருந்திய தோழிக்குக் கூறல்

  (ஐங்குறு-392)

- **தோழி கூற்றுப் பாடல்கள் (26 பாடல்கள்)**
- தலைவரும் விழுமநிலையெடுத் துரைப்பினும்
- தலைமகற்குத் தலைமகளின் விழுமம் உரைத்தல்

  (குறுந் -124: ஐங்குறு -305: அகநா -65, 107:)

- தலைமகட்குத் தலைமகனின் விழுமம் உரைத்தல்

  (நற் -149: குறுந் -217:)

- போக்கற் கண்ணும் (குறுந் -388: ஐங்குறு -303: அகநா -283:)
- தலைமகட்கு போக்கு நேர்ந்தமையைக் கூறல் (குறுந் -262)
- உடன்போக்கிற்கு ஒருப்படக் கூறல் (குறுந் -343, 369, 383: ஐங்குறு

-200, 235, 236, 254, 364: அகநா -221, 259,285:)

- ஓம்படை கூறி விடுத்தல் (நற் -10: குறுந் -115:)
- நீக்கலின் வந்த தம்முறு விழுமம் (நற் -12)
- இயல்புறல் (ஐங்குறு -280, 398)
- கற்பொடு புணர்ந்த கவ்வை (குறுந் -15)
- **தாய் கூற்றுப் பாடல்கள் (32**
- தன்னும் அவனும் அவளும் சுட்டி

(நற் -271: ஐங்குறு -372: அகநா -203:)

- மன்னும் நிமித்தம் (ஐங்குறு -391)
- மொழிப்பொருள் தெய்வம் (அகநா -35, 195)
- நன்மை (ஐங்குறு -371)
- தீமை
- சுரம் நினைத்திரங்கல் (நற் -66, 179)
- அடிநினைந்திரங்கல் (நற் -279)
- அச்சம் (ஐங்குறு -374: அகநா -105:)
- முன்னிய காலம் மூன்றொடு விளக்குதல்

(நற் -110: ஐங்குறு -377: அகநா -383:)

- தோழி தேஎத்து(நற் -184: ஐங்குறு -378: அகநா -55:)
- போகிய திறத்து நற்றாய் புலம்பலும்

(நற் -27: அகநா -15, 275, 315: ஐங்குறு -372:)

- அன்ன பிறவும்
- நற்றாய் தலைவனின் தாயை வெகுண்டு கூறல்

(நற் -293: ஐங்குறு -373, 399:)

- தீவினையை வெகுண்டு புலம்பல் (ஐங்குறு -376)
- மீள வந்துழி சுற்றத்தார்க்குக் கூறல் (ஐங்குறு -394)
- செவிலியைப் போற்றல் (ஐங்குறு -313)
- சுரத்தும் (ஏமப்பேரூர் - தொல்.பொருள்.அகத் -40)
- தேடல் (ஐங்குறு -375)
- யானே குற்றமுடையள் எனல் (நற் -143)
- கற்பொடு புணர்ந்த கவ்வை (ஐங்குறு -379)

- **செவிலி கூற்றுப் பாடல்கள் (27**

- சுரத்திடை வருந்துதல் (நற் -198: குறுந் -44: ஐங்குறு -389:)
- எஞ்சியோர்க்கும்
- இடைச்சுரத்து நவ்வியிடம் கூறியது (அகநா -7)
- சுரம் நினைந்திரங்கல் (குறுந் -144, 356: அகநா -89, 397:)
- மனையின் கண் மயங்கிக் கூறல் (குறுந் -84: ஐங்குறு -380:

அகநா -15, 17, 49, 145, 153, 189, 207, 219, 321, 369, 385:)

- தெய்வத்திற்குப் பராயது (குறுந் -378)
- தலைவியின் இயல்பு வியத்தல் (குறுந் -396: அகநா -63:)
- தலைவனின் காதல் மிகுதி உரைத்தல் (அகநா -117, 263)
- தலைவி வருகைச் செய்தி கூறல் (ஐங்குறு -400)

- **கண்டார் கூற்றுப் பாடல்கள் (15**

- பொழுதும் ஆறும் வழுவினாகிய குற்றம் காட்டல்

(குறுந் -390: ஐங்குறு -382:)

- ○ புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சொடு அழிந்தெதிர் கூறி விடுப்பினும் (நற் -2: குறுந் -229: ஐங்குறு -381, 383:)
- ○ தாய்நிலை கண்டு தடுப்பினும் (ஐங்குறு -386, 387. 390)
- ○ விடுப்பினும் (ஐங்குறு -383)
- ○ சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும்

  (நற் -324: குறுந் -7: ஐங்குறு -387: அகநா -165:)
- ○ வரவினும் (ஐங்குறு -393)

- **வரைவு (45 பாடல்கள்)**
- **தலைவன் கூற்றுப் பாடல்கள் (3)**
  - ○ கடிதின் வரைவேனெல் (ஐங்குறு -259)
  - ○ வரைவு மறுக்கப்படல் (நற் -356)
  - ○ வரைவு மாட்சிமைப்படின் நேரில் வருவேனெனல் (ஐங்குறு -92)
- **தலைவி கூற்றுப் பாடல்கள் (8)**
  - ○ வரையும் திறம் தெளிதல் (ஐங்குறு -112)
  - ○ வரைவுத் துணிபு (வரைவொடு வருதலைத் துணிந்தானெனல்) (ஐங்குறு -181, 213)
  - ○ வரைவு தலைவந்துழி (ஐங்குறு -146)
  - ○ வரைவு உணர்த்திய தோழிக்கு உரைத்தல் (குறுந் -257, 367)
  - ○ வரைவு மலிந்த தோழிக்கு உரைத்தல் (குறுந் -361, 368)
- **தோழி கூற்றுப் பாடல்கள் (34)**
  - ○ வரைவு முடுக்கம் (ஐங்குறு -234)
  - ○ வரைவு மலிவு (நற் -22, 78, 91, 163, 278, 367, 393: குறுந் -34, 51, 52, 83, 247, 297, 351, 389:: ஐங்குறு -145, 147, 202, 218, 230, 267, 300: அகநா -42, 70, 160, 178:)
  - ○ கடிதின் வரைவு (குறுந் -55, 146: ஐங்குறு -218:)
  - ○ அவன் மலையே எம்முயிர் காவலெனல் (ஐங்குறு -258)
  - ○ வரையாமையின் தலைவி ஆற்றாலெனல் (குறுந் -365: அகநா -286:)
  - ○ பொருளீட்டலில் நாட்டமுடையனெனல் (ஐங்குறு -26)

➢ **கற்பு**

- **மலிவு**

- **தலைவன் கூற்றுப் பாடல்கள்**
    - தேர்ப்பாகனைத் தலையளித்தல் (குறுந் -400)
    - தலைவியின் பேதமை எண்ணி மகிழ்தல் (ஐங்குறு -97)
    - மகிழ்ந்துரைத்தல் (நற் -86, 89, 181, 139: குறுந் -99, 209, 210, 270,

      288: ஐங்குறு-324, 325, 351-354, 356, 491-495, 500:)
    - வந்த திறம் கூறல் (ஐங்குறு -350, 357, 359, 360, 362)
    - குறித்த பருவத்திற்கு முன்னே வந்தமை கூறி மகிழ்தல் (ஐங்குறு -411-420, 449, 496:)
    - எம்மையும் நினைத்தீரோ என்றாட்குத் என்றாட்குத் தலைவன் உரைத்தது (அகநா -29, 39)
- **தலைவி கூற்றுப் பாடல்கள்**
    - ஆற்றாமை நீங்கிய வழி கூறல் (குறுந் -49)
    - பூப்பு (குறுந் -157)
    - பிரிவின் கண் வருந்தாமைக்குக் காரணம் கூறல் (குறுந் -193)
    - வருவானென நற்சொல் கேட்டு மகிழ்ந்து கூறல் (குறுந் -201)
    - நெஞ்சிற்கு அணியராயிருந்த திறம் உணர்த்துதல் (குறுந் -228)
    - பரத்தை மரணத்தால் தலைவி உவந்து கூறல் (ஐங்குறு -292)
    - தலைவனின் இனிமையுரைத்தல் (அகநா -352)
    - காமம்மிக்கக் கழிபடர் கிளவி (குறுந் -107)

- **தோழி கூற்றுப் பாடல்கள்**
    - தலைவனைப் பாங்கு வாழ்த்தல் (நற் -131: ஐங்குறு -294:)
    - ஆற்றுவந்த விதம் கூறல் (நற் -35)
    - தலைவியின் கவின் கண்டு மகிழல் (நற் -294)
    - விருந்தயர விரும்பியல்கின்றமையைக் கூறல் (நற் -361)
    - புணர்ச்சி விதும்பல் கண்டு தோழி அழிந்த கூறல் (ஐங்குறு -178)
    - அலர் அடங்கியமை கூறி மகிழல் (அகநா -400)
    - இழைத்திருந்த திறம் எணர்த்துதல் (ஐங்குறு -6-10)
    - இனிதே இன்புறக் கூறல் (ஐங்குறு -148)
- **பிரிவில் மலிவு**

- தலைவி ஆற்றாதிருந்த நிலையைத் தலைமகற்குக் கூறல் (ஐங்குறு - 358)

- **செவிலி கூற்றுப் பாடல்கள்**
    - மீண்டவள் செல்வனும் செல்வியும் வியனகர் ஆண்டு அமைந்தனரென ஆய்ந்துரைத்தல் (ஐங்குறு -400)
    - நன்மனை வாழ்க்கைத் தன்மை உணர்த்தல் (நற் -110: குறுந் -167:)
    - அன்னவர் காதல் அறிவித்தல் (குறுந் -242: ஐங்குறு -401-409:)
    - அன்னவர் காதல் கண்டு மகிழல் (ஐங்குறு -410)
    - கிழத்தியின் மாண்பினைப் பாராட்டிக் கூறல் (ஐங்குறு -421)

இவ்வகைப்பாட்டில், முன்னை மூன்று துறைகளும், மாறனகப் பொருள், இலக்கண விளக்கம் போன்ற இலக்கண நூல்களிலிருந்து எடுத்தாளப்பட்டது. நான்காம் துறையாக அமைந்த **அன்னவர் காதல் கண்டு மகிழல்** எனத் துறை மேற்குறித்த இலக்கண நூல்களின்வழியும், பாடலின் பொருண்மை மற்றும் துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு புதிதாக வருவித்துக் கொள்ளப்பட்டது.

- **ஊடல்**
- **தலைவன் (8 பாடல்கள்)**
    - ஊடல் நீட ஆற்றானாய தலைமகன் கூறியது (நற் -370)
    - உணர்ப்புவயின் வாரா ஊடலில் தலைவன் அழிந்து கூறல் (குறுந் -19: அகநா -38,126, 136)
    - புலவி நீக்கிப் புனலாட வாருமெனல் (ஐங்குறு -72-74)
- **தலைவி(38 பாடல்கள்)**
    - பரத்தையர்க்குச் சிறப்புச் செய்தமை அறிந்து ஊடுதல் (ஐங்குறு -12)
    - பெட்பினும் (ஐங்குறு -14)
    - காய்தல் (ஐங்குறு -15, 164, 165)
    - ஆடவர் ஒழுகலாறு கூறியாட்குத் தலைவி கூறியது (ஐங்குறு -17)
    - கொடியோர் கொடுமை சுடுமெனக் கூறல் (ஐங்குறு -49, 48)
    - செல்லாக் காலைச் செல்கென விடுத்தலும் (ஐங்குறு -61, 62, 70, 83)
    - பல்வேறு நிலையினும்
    - புறத்துப் போய் வந்தானிடம் பரத்தை தடுத்தமை கூறிப்புலத்தல் (ஐங்குறு -63, 66)
    - பரத்தையை அணந்ததை மறுத்தானிடம் புலத்தல் (ஐங்குறு -69, 370)

- பரத்தை புறனுரைத்தாளெனத் தலைமகற்கு அறியக் கூறல் (ஐங்குறு-67, 68)
- தாய்போற் கழறித் தழீஇக் கோடல் (ஐங்குறு -85)
- வாயிலின் வருவும் வகை
- ஊடியதற்குக் காரணம் வினவிய தோழிக்குத் தலைமகன் கொடுமை கூறியது (ஐங்குறு -150)
- இயல்பட மொழிதல் (குறுந் -181)
- யாரையும் அறியேன் என்றாரிடம் புலத்தது (நற் -20: ஐங்குறு -369: அகநா -6,16:)
- பரத்தையருடனான நீராடல் நினைந்து ஊடல் கொள்ளல் (அகநா -6)
- பரத்தையுடன் நீராடியமை அறிந்து ஊடல் கொள்ளல் (அகநா -6)
- இல்லம் புகுந்தாரிடம் ஊடல் கொள்ளல் (அகநா -36, 196, 266)
- ஊடல் தணிதல் (நற் -260)
- பரத்தமை மறுத்தானிடம் வருந்தியுரைத்தல் (நற் -340)
- தெளிவிடை விலங்கல் (குறுந் -169)
- புனலாடியமை மறுத்த தலைவனிடம் ஊடல் (ஐங்குறு -71)
- புனலாடித் தாழ்ந்து வந்தமையை புலத்தல் (ஐங்குறு -80)
- ஆற்றிய தோழியிடம் வன்புறை எதிரழிதல் (நற் -225)
- பரத்தமையை அறிவேன் எனப் புலத்தல் (நற் -20, 340)

- **தோழி**
    - தலைவியின் ஆற்றாமை கூறல் (அகநா -50)
    - ஆ.3.2 யாரையும் அறியேன் என்றாற்கு யான் அறிவேன் எனல் (நற் -30)
    - உணர்ப்புவயின் வாரா ஊடலுற்றோட்கு உணர்த்தல் (ஐங்குறு -21, 27: பரிபா -7:)
- **ஊடலில் பரத்தை**
    - தலைவன் தனித்து புனலாடியமையைக் கண்டு வெகுளல் (ஐங்குறு -79)
- **பரத்தையர்**

- பாங்காயினர் கேட்பச் சொல்லியது (நற் -40, 100, 176, 216, 320, 390: குறுந் -8, 80, 164, 364, 370: ஐங்குறு -37, 39, 40, 87-90: அகநா -76, 106, 166, 186, 216, 276, 336)
- காதற்பரத்தை - தலைவியின் பாங்காயினார் கேட்ப உரைத்தல் (நற் - 216: குறுந் -8, 164: ஐங்குறு -37, 39, 87, 89, 90:)
- புதிய பரத்தையின் பாங்காயின வாயில் கேட்ப மொழிதல் (நற் -390)
- பரத்தை - தலைவியின் பாங்காயினார் கேட்ப உரைத்தல் (நற் -40, 100, 176: குறுந் -80, 370: ஐங்குறு -81, 88: அகநா -76, 106, 216, 276:)
- தன் பாங்காயினார்க் கேட்ப உரைத்தல் (நற் -320: அகநா -166:)
- அயற்பரத்தையின் பாங்காயினார்க் கேட்ப உரைத்தல் (ஐங்குறு -40)
- இற்பரத்தை - வேறொரு பரத்தையின் பாங்காயினார்க் கேட்ப உரைத்தல் (குறுந் -364: அகநா -186:)
- நயப்புப் பரத்தை -இற்பரத்தையின் பாங்காயினார் கேட்ப உரைத்தல் (அகநா -336)
- மனைவியைக் காய்வின் றவன்வயிற் பொருத்தல் (நற் -290, 315) (ஊடல் தீர்க்கும் பரத்தையர்)
- இவற்றொடு பிறவும் கண்ணிய காமக் கிழத்தியர் மேன என்பதன்வழி
- பரத்தை தன் தாயின் கோபம் கூறித் தலைவனை இகழ்தல் (நற் -150)
- தனக்கு தலைவன் இன்றியமையாமை கூறிப் புகழ்தல் (நற் -400)
- தலைவன் தன்மனத்து உவகை கூர்தல் (*ஐங்குறு -37)*
- தோழி பரத்தைக்குக் கூறுதல் (ஐங்குறு -38)
- பரத்தைப் புலந்து தலைவற்குக் கூறல் (ஐங்குறு -86)
- நின் மனைக்குச் செல்லாமையின் யான் நின்னொடு புனலாடுவேன் எனல் (ஐங்குறு -77, 78)
- காதற் பரத்தையின் புலவி (அகநா -376)
- அவள் ஊடல் கொள்ளல் (அகநா -396)
- தலைவியின் புலவியைத் தீர்க்க தோழியிடம் தலைவன் வேண்டுதல் (ஐங்குறு -121-128)

- **வாயில் வேண்டல்** (குறுந் -196, 295: ஐங்குறு -157:)
- **வாயில் மறுத்தல் (49, 54,**

❖ **தலைவி கூற்றுப் பாடல்கள் (49 பாடல்கள்)**

- தணியாளாகத் தலைவன் ஊடலும்,'அன்பனைப் பாங்கி அன்பிலை, கொடியை என்று இன்புறக் கூறல்
  (ஐங்குறு -20, 31,33-35, 41, 44, 47, 118, 151, 152, 154, 155, 160, 169, 170, 184, 265:)
- வாயிலாய் வருவோர் இயல்புலைத்தல் (அகநா -56:)
- பரத்தையர் இயல்புரைத்தல் (ஐங்குறு -13, 18, 32:)
- தலைவனின் புறத்தொழுக்கம் கூறி வாயில் மறுத்தல் (ஐங்குறு -22, 23, 64, 95: குறுந் -202, 271: அகநா -206:)
- பரத்தையின் புலவி கூறி வாயில் மறுத்தல் (ஐங்குறு -42: பரிபா -6:)
- புலவி நீங்கித் துய்த்தல் இன்பமெனல் (நற் -217)
- தன் காதல் மேன்மை கூறல் (நற் -350)
- அலர் கூறி வாயில் மறுத்தல் (நற் -74: ஐங்குறு -131, 132, 136,:)
- முன்பு நிகழ்ந்தது கூறி வாயில் மறுத்தல் (அகநா -66)
- தலைவன் தவறினைக் கூறி வாயில் மறுத்தல் (அகநா -146)
- ஆள்வினை குறித்து பிரிந்தவழி ஆற்றாமை கூறி வாயில் மறுத்தல் (பரத்தையல்லா பிரிவால் உண்டான புலவி) (ஐங்குறு -133)
- பரத்தையின் கொடுமை கூறி வாயில் மறுத்தல் (ஐங்குறு -82)
- இறைமகன் புறத்து ஒழுக்கு இறைமகள் உணர்த்தல் (ஐங்குறு -19)
- தெய்வம் அஞ்சல் (ஐங்குறு -43)
- விளைவு கூறி வாயின் மறுத்தல் (குறுந் -50)
- தன் அயன்மை கூறல் (குறுந் -93)
- கழிவிரக்கம் கொள்ளல் (குறுந் -203. 231, 293)
- வருவிருந்து ஒழிந்தேனெனல் (நற் -280)

- **தோழி கூற்றுப் பாடல்கள் (55 பாடல்கள்)**
  - தணியாளாகத் தலைவன் ஊடலும்,'அன்பனைப் பாங்கி அன்பிலை, கொடியை என்று இன்புறக் கூறல் (நற் -50, 90: குறுந் -85, 295, 384: ஐங்குறு -24, 25, 26, 54, 56, 240:)
  - தனித்துறையை பழகினள் எனல் (நற் -127, 230: குறுந் -61: ஐங்குறு -143, 153, 156:)
  - தலைவியின் ஈன்றணிமை கூறல் (நற் -380)

- நின் மொழிகள் பயனற்றவை எனல் (நற் -167)
- தலைவியின் காதற் பிணிப்புக் கூறல் (நற் -269)
- பரத்தையிற் சிறக்க எனல் (நற் -360)
- பாணர் இயல்பு இவ்வூர்க்கு உரையெனல் (நற் -200)
- வாயிலாய் வருவோர் இயல்புலைத்தல் (நற் -170: குறுந் -127:)
- பரத்தையர் இயல்புரைத்தல் (நற் -330:)
- நித்த கிழவினை நிகழுமாறு படீஇக்

காத்த தன்மையின் கண்ணின்று பெயர்த்தல்

(குறுந் -139: ஐங்குறு -84:)

- மாணலந் தாவென வகுத்தல் (குறுந் -238: ஐங்குறு -159:)
- தலைவனின் புறத்தொழுக்கம் கூறி வாயில் மறுத்தல் (அகநா -46, 176, 306, 326, 346, 366, 386:)
- தலைவியின் ஆற்றாமை கூறி வாயில் மறுத்தல் (ஐங்குறு -16, 98)
- சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறுத்தல் (ஐங்குறு -50)
- பிழைத்துவந்திருந்த கிழவனை நெருங்கி மறுத்தல் (ஐங்குறு -51: அகநா -96:)
- பரத்தையொடு புனலாடியமை கூறி வாயில் மறுத்தல் (அகநா -116, 226, 246, 256, 296: பரிபா -16:)
- பரத்தையின் புலவி அறிந்து வாயில் மறுத்தல் (ஐங்குறு -158)
- அலர் கூறி வாயில் மறுத்தல் (ஐங்குறு -55, 75, 76)
- இறைமகன் புறத்து ஒழுக்கு இறைமகள் உணர்த்தல் (ஐங்குறு -19)
- விறலி வாயில் வேண்டியவழி தோழி மறுத்தல் (நற் -310)

- **தலைவன்**
  - முன்பு நிகழ்ந்தது கூறல் (அகநா -86)
- **பரத்தை**
  - தலைவி இகழ்ந்தமையால் வாயில் மறுத்தல் (ஐங்குறு -81)
- **காதற்பரத்தை**
  - தாயின் சினம் உரைத்தல் (நற் -150)
- **விறலி**
  - பாணற்கு வாயில் மறுத்தல் (நற் -150)

- **வாயில் நேர்தல் (45 பாடல்கள்)**
- **தலைவி கூற்றுப் பாடல்கள் (8 பாடல்கள்)**
    - வாயில் நேர வருவானென அஞ்சியிருத்தல் (ஐங்குறு -167)
    - வாயில் நேரக் கூறல் (ஐங்குறு -36)
    - ஊடல் தணிதல் (நற் -260)
    - தன் தோள் ஆற்றாமை கூறி வாயில் நேர்தல் (ஐங்குறு -11)
    - இயல்பட மொழிந்தது கூறி வாயில் நேர்தல் (குறுந் -167)
    - பாணன் இயல்பு கூறி வாயில் நேர்தல் (குறுந் -33)
    - நெஞ்சு நெகிழ்ந்தமை கூறி வாயில் நேர்தல் (குறுந் -91)
- **தோழி (30 பாடல்கள்)**
    - தலைமகள் குறிப்பறிந்து வாயில் நேர்தல் (நற் -291)
    - தலைமகள் இயல்பு கூறி வாயில் நேர்தல் (குறுந் -9, 10, 309)
    - தலைமகள் வருத்தம் கூறி வாயில் நேர்ந்தத (குறுந் -45)
    - கடிந்துரைத்தல் (நற் -210)
    - பிரிவின் கொடுமை கூறல் (நற் -270)
    - காத்திருந்த திறம் கூறல் (ஐங்குறு -1-5)
    - சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறுப்பினும் (ஐங்குறு -44, 45)
    - வாயில் நேரும்பொருட்டு தோழி புலத்தல் (ஐங்குறு -46, 57, 59)
    - புறத்தொழுக்கம் இடிந்துரைத்து வாயில் நேர்தல் (ஐங்குறு -143)
    - வணங்கிய மொழியான் வணங்கற் கண்ணும் (ஐங்குறு -98)
    - சூள்நயத் திறத்தால் சோர்வுகண் டழியினும் (ஐங்குறு -53)
    - ‘பிறவும் வகைபட வந்த கிளவி எல்லாம்’ என்பதனுள்
    - தலைமகள் மாண்புணர்த்துதல் (ஐங்குறு -52)
    - குறைநேர உடன்பட்டமை கூறி ஊடல் தீரக் கூறல் (ஐங்குறு -198)
    - தலைவி வாயில் நேர்ந்தமையால் தோழி புலத்தல் (ஐங்குறு -283:)
    - ஊடிய தலைமகற்குப் பணிமொழி மொழிதல் (ஐங்குறு -58)
    - இயல்பட மொழிந்த திறமுணர்தல் (ஐங்குறு -100)
    - தலைவி வருத்தம் கூறி வாயிற் நேர்தல் (அகநா -50)
    - குலமகள் பெருங்குணத்தைப் பாராட்டியுரைத்தது (ஐங்குறு -96)
- **வாயில் நேர்தலில் தலைவன் (1 பாடல்)**

- தலைவி வாயில் நேர்ந்தமையால் தலைவன் உவந்து கூறுதல் (ஐங்குறு -99)

- **வாயில் நேர்தலில் காமக்கிழத்தி (1 பாடல்)**
  - காமக்கிழத்தி வாயில் நேர்வேனென மொழிதல் (நற் -390)
- **வாயில் நேர்தலில் வாயில்கள் (1 பாடல்)**
  - தலைவி வாயில் நேர்ந்தமை கண்ட வாயில்கள் தம்முள் கூறுதல் (ஐங்குறு -96)
- **வாயில் நேர்வித்தல்** (3 பாடல்கள்)
  - தலைமகள் ஊடல் தணியாதிருக்க நிலையில் தோழி தன்னிலை கூறல் (நற் -180)
  - குறிப்பறியாது இருந்தேனெனல் (நற் -386)
  - பரத்தமை நீங்கி வந்தானை ஏற்றல் நலமெனல் (அகநா -316)
- **வாயிற் புகுதல்**
- **வாயிற் புகுதலில் தலைவன் (8 பாடல்கள்)**
  - விருந்து வாயிலாக வாயிற் புகுதல் (நற் -120)
  - புதல்வன் வாயிலாக வாயிற் புகுதல்

    ஆற்றானாய் ஊடல் தணிய உரைத்தல் (நற் -250)
  - தலைவியின் இல்வாழ்க்கைச் சிறப்பு கண்டு மகிழ்தல் (ஐங்குறு -188)
  - வாயிற் புகுந்தானிடம் கற்பருமை கூறல் (குறுந் -359)
  - தலைவன் தன், ஆற்றாமை கூறி வாயிற் புகுதல் (அகநா -26, 236: ஐங்குறு -65)
  - பாணன் இயல்பு கூறித் தலைவனை இடித்துரைத்தல் (ஐங்குறு -139)
- **வாயிற் புகுதலில் தோழி (2 பாடல்கள்)**

  - வாயிற் புகுந்த தலைமகன் நீங்கியவழி வேறுபாடு வினவிய பாங்கற்கு உரைத்தல் (ஐங்குறு -137)
  - நகையாடி உரைத்தல் (ஐங்குறு -138)
- **செலவழுங்குதல் (50 பாடல்கள்)**
  - நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவழுங்குதல் (நற் -126, 205: குறுந் -267: அகநா -353:)
  - தலைவியின் அழகுநலஞ் சுட்டிச் செலவழுங்குதல் (நற் -52, 141: குறுந் -168, 376:)

- பொருட்கடைக் கூட்டிய நெஞ்சிற்குக் கூறிச் செலவழுங்குதல் (குறுந் - 71: அகநா -51, 245, 327, 335:)
- முந்தைய நிகழ்வைச் சுட்டிச் செலவழுங்குதல் (நிகழ்ந்தது நினைத்தல்) (நற் -3, 62: குறுந் -151: அகநா -3, 337, 379:)
- துயர்கூறிச் செலவழுங்குதல் (நற் -298, 308, 312, 366: குறுந் -256: அகநா -5, 75, 77, 149, 191:)
- பருவஞ் சுட்டிச் செலவழுங்குதல் (அகநா -43: நற் -312, 366:)
- வழியின் அருமை கூறிச் செலவழுங்குதல் (அகநா -131, 377)
- புணர்வும் பிரிவும் கூறிச் செலவழுங்குதல் (அகநா -167)
- தலைவியுடன் இருந்தலே இன்பமெனக் கூறிச் செலவழுங்குதல் (நற் - 16, 137, 262: குறுந் -63, 101, 274, 347: அகநா -193, 199, 225:)
- செலவொழிந்தமையைத் தலைவிக்குக் கூறல் (நற் -166, 256: ஐங்குறு -426-428, 430:)

**செலவழுங்குவித்தல்**

- தலைவியின் இளமை - ஆற்றாமை கூறி செலவழுங்குவித்தல் (நற் -26, 37, 183, 43, 46, 71, 325: குறுந் -235, 397: ஐங்குறு -301, 302, 304, 306: அகநா -13, 143, 161, 179, 275, 271, 319:)
- அவர் 'செல்லும் வழியின் இயல்புரைத்து செலவழுங்குவித்தல்' (நற் -33, 318: குறுந் -236, 363: அகநா -179, 307, 387:)
- கூதிர்ப்பருவம் வந்தமை கூறிச் செலவழுங்குவித்தல் (நற் -124: ஐங்குறு -423, 424:)
- தலைவியைக் காப்பதே கடமையெனக் கூறிச் செலவழுங்குவித்தல் (நற் -337)
- தலைவி தலைவனுடன் இருப்பதே இன்பம் எனக் கூறிச் செலவழுங்குவித்தல் (ஐங்குறு -303, 308)
- புதல்வன் முறுவல் இனிமை கூறிச் செலவழுங்குவித்தல் (ஐங்குறு - 309)
- தலைவியின் நலம் மீட்டல் அறிதெனல் (ஐங்குறு -310)
- களவில் நிகழ்ந்தது கூறல் (நற் -48)
- செலவு உடன்பட்டது (நற் -266)
- தலைவியின் ஆற்றாமை கூறி செலவழுங்குவித்தல் (அகநா -81)

- **பிரிவு**

  ❖ **தலைவன்**

  - உடன் வருமென்றாற்குத் தலைவன் உரைத்தல் (அகநா -121)
  - பருவங் கண்டழிதல் (நற் -157: குறுந் -131: ஐங்குறு -441-448, 478, 479: அகநா -24, 41:)
  - இடைச்சுரத்து அழுங்கல்˙(நற் -103, 105, 113, 284, 346, 353: ஐங்குறு -321, 322, 323, 324, 325, 326, 327, 328, 329, 330: அகநா -19, 21, 33,47, 57, 79, 83, 87, 93, 109, 123, 169, 181, 239, 279, 287, 289, 291, 299, 339, 343, 351, 361, 365, 371, 373, 381:)
  - வினைமுற்றி மீளும் தலைவன் தேர்பபாகற்கு உரைத்தல் (நற் -21, 42, 59, 81, 142, 161, 221, 321, 371: குறுந் -189, 237, 250, 323: ஐங்குறு -422, 425, 481-490: அகநா -9, 34, 44, 54, 64, 94, 114, 124, 134, 144, 154, 224, 234, 244, 274, 284, 344:)
  - வினைமுற்றி மறுத்துரா நின்றான் நெஞ்சிற்கு உரைத்தல் (நற் -169)
  - தலைமகன் தன் உணர்வு புலப்படுத்துதல் (நற் -374: குறுந் -41, 131: ஐங்குறு -162: அகநா -324, 351:)

- **தலைவி**
  - பிரிவுணர்தல் (அ) பிரிவுணர்ந்து வேறுபடல் (நற் -73, 79, 177, 256: குறுந் -76: அகநா -293, 345:)
  - பிரிவு உணர்த்தப்படல் (நற் -1, 224, 296: குறுந் -20, 174, 207, 398: அகநா -147, 157, 217, 305, 355:)
  - சொல்லாது பிரிதல் (குறுந் -79: ஐங்குறு -318, 319: அகநா -345:)
  - பிரிந்தவழி மகிழ்தல் (நற் -1, 24)
  - பிரிந்தவழி ஆற்றாமை

    (நற் -64, 73, 79, 84, 107, 109, 343: குறுந் -4, 5, 12, 27, 35, 43, 60, 64, 67, 68, 77, 102, 104, 140, 154, 190, 283, 330, 352: ஐங்குறு -311, 314, 317, 332, 334, 335, 336, 337, 338, 340, 475: அகநா -1, 31, 103, 113, 115, 139, 151, 155, 235, 255, 265, 329, 331, 341, 347, 349:)
  - தோழி நொந்தனள் உரைப்பவும் நோவாள் கூறலும்

    (குறுந் -12, 27, 41, 46, 86, 102, 191, 218, 224, 241, 264, 325, 329: அகநா -11, 133, 141, 267, 281,309:)

- வன்புறை எதிர்மொழிதல் - எதிரழிதல்

  (நற் -109, 130, 199, 225, 226, 241, 281: குறுந் -39, 192, 279, 281, 290, 307, 344, 386, 387, 398: அகநா -37, 40, 45, 53, 67, 74, 97,115, 159, 163, 175, 205, 229, 235, 241, 243, 265, 301, 333, 341, 367, 368, 375, 389, 391, 395:)

- பருவங் கண்டழிதல்

  (நற் -69, 97, 118, 193, 214, 238, 289, 302, 381: குறுந் -24, 65, 82, 98, 103, 108, 110, 126, 148, 155, 195, 197, 200, 216, 220, 221, 251, 254, 285, 314, 319, 382, 391: ஐங்குறு -338, 339, 341, 350, 451-458, 460, 473-476: அகநா -23, 139, 183, 185, 194, 264, 277, 364:)

- காமம் மிக்க கழிபடர் கிளவி (குறுந் -107)

- **தோழி**
  - பிரிவுணர்தல் (அ) பிரிவுணர்ந்து வேறுபடல்

    (நற் -5, 252: குறுந் -135, 171, 331, 348: அகநா -27, 137:)
  - பிரிவு உணர்த்தப்படல் (நற் -46, 48, 124)
  - செலவுடன்பட வேண்டியாற்கக் கூறல் (ஐங்குறு -302, 303, 429)
  - பிரிவு உணர்த்தியாற்குக் கூறல் (ஐங்குறு -368)
  - தலைமகள் குறிப்பறிந்து உரைத்தல் (நற் -33)
  - உடன்பாடு பெற்று பிரிதல் (ஆற்றுவித்தல்) (ஐங்குறு -431-440)
  - சொல்லாது பிரிதல் (ஐங்குறு -315)
  - தலைவியின் மெலிவு கண்டு கூறல் (ஐங்குறு -316)
  - மீள்வாரோ? ஏன்றாட்கு இரங்கிக் கூறல் (ஐங்குறு -331)
  - வருத்தம் தணித்தல் ஆற்றுவித்தல்

    (நற் -18, 41, 92, 148, 189, 246, 229, 274, 286, 316, குறுந் -16, 22, 37, 59, 180, 211, 213, 215, 232, 253, 255, 282, 317, 338, 350, 358, அகநா -59, 61, 85, 97, 111, 171, 173, 177, 197, 209, 211, 213, 223, 227, 231, 233, 237, 251, 253, 295, 311, 313, 323, 357, 359, 363, 393, 399, ஐங்குறு -431-440:)
  - பருவங்கண்டு அழிந்த தலைவியைத் தோழி ஆற்றுவித்தல் - கடிந்துரைத்தல்

(நற் -99, 112, 115, 248, 316, 329, 387: குறுந் -66, 251, 275, 277, 282, 380, 382: ஐங்குறு -461-472: அகநா -4, 25, 73:)

- மீண்டு வந்தனன் எனல் (நற் -164, 212: ஐங்குறு -357: அகநா -125:)
- வினைமுற்றி மீண்டப்பின் 'இனிதிருத்தல்'
  (நற் -86, 89, 181: குறுந் - 210: அகநா -104, 184, 314, 317:)

- **தேர்ப்பாகன்**
  - தேர்ப்பாகன் தலைவனுக்கு உரைத்தல் (நற் -121)

# சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை

அழகப்பா பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

சா.மங்களேஸ்வரி

(பதிவு எண்: 0388)

நெறியாளர்

முனைவர் சு.இராசாராம்




தமிழ்த்துறை

அழகப்பா பல்கலைக்கழகம்

(தேசியத் தர மதிப்பீட்டுக் குழுவின் மூன்றாம் சுற்று மதிப்பீட்டில் 3.64 தரப்புள்ளிகளுடன் A+ தகுதி மற்றும் மனிதவள மேம்பாட்டு அமைச்சகம் - பல்கலைக்கழக மானியக்குழுவின் முதல்தர பல்கலைக்கழகத் தகுதி பெற்றது)

காரைக்குடி - 3

தமிழ்நாடு

இந்தியா

செப்டம்பர் 2018

சங்க கால மக்கள் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வுகளையும் தொகுத்துரைக்கும் வாழ்வியல் பெட்டகமாக சங்க இலக்கியங்கள் அமைகின்றன. ஒவ்வொரு நிகழ்வுகளுக்குள்ளும் பல சிறுசிறு நிகழ்ச்சிக் கூறுகள் நிறைந்திருக்கும். இச்சங்கச் செய்யுட்களில் கூறுவோரின் எண்ணங்கள், உணர்வுகள், எதிர்பார்ப்புகள் போன்றவை வெளிப்பட்டும், எச்சூழல் என்பது புலப்படாதிருக்கும். அந்நிலையில் பாடலின் பொருண்மையை வெளிப்படுத்துவனவாகத் துறைக்குறிப்புகள் அமைந்து பாடலின் சூழலையும் பொருண்மையையும் தெளிவுபடுத்துகின்றன. அகவாழ்வின் கூறுகளாக அமையும் சூழல்களைத் 'துறை' யெனச் சுட்டுதல் மரபு. தொல்காப்பியர், முதல், கருப்பொருட்களின்வழி உரிப்பொருளை வெளிப்படுத்துவது துறையென மொழிவர்.

**'சங்க அக இலக்கியத் துறைக்குறிப்புகள் வகைப்பாடு'** என்பது முதலாமியலாகும். இவ்வியலில் துறை என்பதைச் வரையறுக்கும்விதமாகத் தொல்காப்பியர் மொழியும் தொல்.பொருள்.செய் -510ஆம் நூற்பா சுட்டப்பட்டுள்ளது. இந்நூற்பாவிற்குப் பொருளுரைக்கும் உரையாசிரியர்கள் வேறுபட்டுள்ளனர். இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் கூறும் உரைகளின்வழி 'புலவர்கள் முதற்-கருப்பொருட்களைப் பயன்படுத்திச் செய்யுள் யாக்க உதவுவதைத் துறை'யெனக் கொண்டுள்ளனர் என்பதும், மற்ற உரையாசிரியர்களான பேராசிரியர், க.வெள்ளைவாரணன், கு.சுந்தரமூர்த்தி ஆகியோரின் உரைவழி 'செய்யுளின்கண் பொருள் இதுவெனவும், இப்பொருள் இதன்பாற்படுமெனவும் மொழியப் பயன்படும் கருவி'என்பதும் புலப்படும்.

சொற்களின் பொருளைச் சுருக்கமாக, தேவைக்கேற்ப விரிவாகப் புலப்படுத்தும் தன்மை கொண்ட அகராதிகள்வழியும் துறை பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. தொல்காப்பியரை அடியொற்றி அ.சிங்காரவேலு முதலியார்,'அகப்பொருள் புறப்பொருள் துறைகளைக் குறித்து வரும் செய்யுள், தாம் சொல்ல விரும்பும் கருத்தை நேரிடையாகக் கூறாமல், அகப்பொருள் புறப்பொருள் செய்திகள் அமைந்த பாடல்களாக இயற்றி, அவற்றின் வாயிலாகத் தாம் தருவதைக் கவிஞர்கள் பெறப்பட வைக்கும் வகையில் அமையும் பாடல்கள்' என்பர். பா.ரா.சுப்பிரமணியன்,'வகைப்படுத்தப்பட்ட பகுப்பு அல்லது பிரிவு' துறையெனக் கூறுவதும் சாலப்பொருந்தும். பாலசுந்தரம், மு.இராமலிங்கனார், கு.பகவதி ஆகியோர் 'உரிப்பொருளைத் தெளிவுபடுத்துவதுவே துறை இது கூற்றுகளின் ஒருமுகப்படுத்தப்பட்ட தன்மையைக் குறித்து நிற்கிறது' எனப்

பதிவுசெய்கின்றனர். ‘செய்யுள் இயற்றிய புலவர்கள் கருத்து’ எனத் தமிழ் இலக்கணப் பேரகராதியும் உரைக்கின்றது.

தொல்காப்பியர் கூறும் துறையிலக்கணத்திலிருந்து தற்போதுள்ள துறையிலக்கணம் வேறுபாடுடையதாக அமைகின்றது. அதாவது, தொல்காப்பியர், முதற்கருப்பொருட்கள் செய்யுட்களில் பயன்படுமாற்றைக் குறிப்பிடுகிறார். திறனாய்வாளர்கள்‘உரிப்பொருளைத் தெளிவுபடுத்துவதுவே துறை: இது கூற்றுகளின் ஒருமுகப்படுத்தப்பட்ட தன்மையைக் குறித்து நிற்கிறது’ எனப் பதிவுசெய்கின்றனர். அவ்வகையில்,‘பாட்டின் அடிக்கருத்து துறை’(ழேநவழை வுாநஅந) என க.கைலாசபதியின் கருத்துக்கு,‘துறை என்பதுதான் ‘சூழல் என்றும்,(ழேநவழை ளுவைரயவழைெ) கூற்று என்பதுதான் அடிக்கருத்து (வுாநஅந)’ என்றும் தமிழண்ணல் மறுத்துரைத்துத் தெளிவுபடுத்துவர். தமிழண்ணலின் திறனுரையையொற்றி,‘ஐந்து வகையாகப் பிரித்தாலும் கதைபோலத் தொடர்ந்துவரும் காதல் வாழ்க்கையில் பல கட்டங்கள் இருக்கும், ஒவ்வொரு கட்டத்திலும் பல சிறுசிறு நிகழ்ச்சிகள் நிகழக்கூடும். அவற்றைத் ‘துறை’ என்று கூறுவர் இலக்கண நூலார்’ என ந.சுப்புரெட்டியாரும்,‘அகமாந்தர்களின் கூற்றுக்கள் சில சூழல்களில் கூறப்படுகின்றன்அச்சூழல்களைச் சுட்டுமிடத்து ‘துறை’ எனக் குறிப்பார் *என* செ.சாரதாம்பாளும் உரைப்பர். ‘சங்க இலக்கியத்துள் உரிப்பொருள் அடிப்படையில் திணைப்படுத்தும் அல்லது வகைப்படுத்தும் ஒருவழியே துறை எனப்படும்’ என சீனிவாசன் குறிப்பிடுகிறார்.இலக்கண ஆசிரியர்கள் நுதலிய துறை இலக்கணத்தையும், அதற்கு உரைவரைந்த உரையாசிரியர்களின் உரைப்பொருளையும் நுணுகித் திறனறிந்து எளிமையாகக் கூறியுள்ளனர் திறனாய்வாளர்கள். இத்திறனாய்வாளர்களின் கூற்றுக்கள் சிற்சில இடங்களில் வேறுபட்டாலும், தெளிவுபடுத்தும் தன்மை கொண்டனவாக அமைகின்றன.

அகவாழ்வில் குறிப்பிடப்படும் துறைகள் சூழல்களாகவும், கூற்றுகளாகவும் முதன்மை நோக்கங்களாகவும் அமைகின்றன. அகவாழ்வின் செய்திகளை விளக்கும் வகையில் அமைந்த சங்கப்பாடல்களுக்குத் துறைக்குறிப்புகள் மொழியப்பட்டுள்ளன. இத்துறைக்குறிப்புப் பற்றிய தெளிந்த சிந்தையே சங்கச் செய்யுட்களின் தெளிவு. கூர்ந்து நோக்கின் செய்யுட்களின் உரிப்பொருளே துறைக்குறிப்புகளாக வரையறுக்கப்பட்டுள்ளமை திண்மை. ஏனெனில் அகத்துறைகள், அகத்திணை உரிப்பொருள்களின் ஒவ்வொரு பகுதிகளையும் உள்ளடக்கியன.

தொல்காப்பியர் களவுக் கைகோளை, இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற்கூட்டம் என நான்கு நிகழ்வுகளாகவும், கற்புக் கைகோளை, மலிவு, புலவி, ஊடல், உணர்வு, பிரிவு என ஐந்து நிகழ்வுகளாகவும் சுட்டுவர். சங்க இலக்கியங்களை ஆராய்வோர் இதனையே வழிநிலையாகக் கொள்வர். அவ்வகையில் 1862 சங்கப் பாடல்களில் கலித்தொகை 149 பாடல்களுடன் சிதைவுற்ற மூன்று பாடல்கள்(நற் -385: ஐங்குறு -129, 130:) நீங்கலாக 1710 பாடல்களை, துறை வாரியாக வகைப்படுத்தும் பொழுது இயற்கைப்புணர்ச்சி முதல் வரைவு வரையிலான பாடல்களில் 326 துறைகளும், மலிவு முதல் பிரிவு வரையிலான பாடல்களில் 189 துறைகளும் காணக்கிடக்கின்றன. இத்துறைகள் முதன்மைத் துறைகள், வழிநிலைத் துறைகள், உட்துறைகள், வருவிக்கப்பட்ட துறைகள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன.

பாடல், துறைக்குறிப்பின் பொருண்மை கொண்டு வருவிக்கப்படுவது வருவிக்கப்பட்ட துறையாகும். அவ்வகையில்,‘வரைவிடை வைத்துப் பிரிந்தவிடத்து முனிந்து கூறல், அறத்தொடுநிற்றல் முதன்மைத் துறையிலமைந்த ‘கட்டுவிச்சியிடம் உரைத்தல்’ மலிவுப் பொருண்மையிலமைந்த இழைத்திருந்த திறம் உணர்த்தல் (தோழி),‘அன்னவர் காதல் கண்டு மகிழல்’ (செவிலி)’, ஊடல் பொருண்மையிலமைந்த ‘தலைவன் தன் மனத்து உவகை கூர்தலைத் தோழி பரத்தைக்குக் கூறுதல், நீ, நின் மனைக்குச் செல்லாமையின் யான் நின்னொடு புனலாடுவேன் எனல்’ (பரத்தை),‘அன்னவர் காதல் கண்டு மகிழல்’ (மலிவு - செவிலி) துறை வருவிக்கப்பட்ட துறையாகும். இவை போன்ற இன்னோரன்ன துறைகள் வருவிக்கப்பட்ட துறைகளாக ஆராயப்பட்டுள்ளன.

**தலைவன் கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற் பொருண்மை** என்னும் இரண்டாமியலிலமைந்த களவுப்பாடல்களுக்கு எழுபத்திரண்டு துறைகளும், கற்புப்பாடல்களுக்கு முப்பத்தைந்து துறைகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. தலைமக்கள் இருவரும் முதன்முதலில் காதற் குறிப்புடன் நோக்குதல் இயற்கைப்புணர்ச்சித் துறையாகும். தொல்காப்பியத்தில் சுட்டப்பெறாத ‘அருமையறிதல்’ என்னும் கலைச்சொல் துறையாக அமைத்துக்கொள்ளப்பட்டு இத்துறையிலமைந்த பாடல்கள் துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன. இத்துறை இறையனார் அகப்பொருளிலிருந்து பெறப்பட்டது

கருத்தொருமித்த காதலர்கள் தம் காதலின் நிலைப்புத் தன்மையை உறுதி செய்யும் துறையாக இடந்தலைப்பாடு அமைகிறது. இத்துறைக்கு மூன்று பாடல்கள் எனத் தமிழ் இலக்கிய அறிஞர்கள் மொழிவர். எனினும் இப்பொருண்மையில் அமைந்த ஏனைய நான்கு பாடல்களையும்(குறுந் -62, 70: ஐங்குறு -281 288:) சேர்த்து ஏழு பாடல்கள் மூன்று உட்துறையில் அமைந்துள்ளன. இங்கு இலக்கணங்களில் இப்பகுதியில் சுட்டப்படாத 'அஃறிணைகளை வாழ்த்துதல்' பொருண்மையில் 'மகிழ்தல்' என்னும் உட்துறையும் மொழியப்பட்டுள்ளது இத்துறையிலமைந்த பாடல்களும் துறைக்குறிப்பின் பொருண்மையொடு ஒன்றி, துறையை விளக்குவது குறிப்பிடப்பட்டுள்ளது.

இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு என்ற இரு துறைகளிலும் தலைவன் மட்டும் பேசும் துறைகளாக எதிர்மொழியில்லாத துறைகள், இனிவரும் துறைகளில் எதிர்ச் சொல்லாடல் இருக்குமாதலால் தோழிக்கோ, தலைவிக்கோ பதிலுரைத்தல், வினாவுதல் போன்ற நிலைகளில் துறைகள் அமைதலும் உண்டு.

இருவகைக் குறி முதல் வரைவு வரையிலான துறைகள் வரைவை எதிர்நோக்கிய துறைகளாகவும், அதன் பொருண்மையை நுதலும் துறைக்குறிப்புகளுடன் பாடல்களின் பொருண்மை ஒன்றும் விதம் எடுத்து மொழியப்பட்டுள்ளன. கற்பொழுக்க அக நிகழ்வுகளாக மலிவு, புலவி, ஊடல், துனி, பிரிவு என வரையறுத்துள்ளனர். மலிவு என்பது தலைமக்கள் இல்லிருந்து மகிழல். இம்மலிவில் பல்வேறு நிகழ்வுகள் அமைந்துள்ளன. உடன்போக்கு மேற்கொண்டு வரைந்து தன்னூர் திரும்புதல், தோழிக்குரைத்தல், பொருள்வயிற் பிரிந்து மீண்டு வந்து இனிதிருத்தல், புலவி ஊடலின் பின் மகிழல், தலைவியை விட்டு நீங்க மனம் வராமல் செலவழுங்குதல் போன்றவை 'மலிவுப்' பொருண்மையில் விளம்பப்பட்டுள்ளன. இம்மலிவில் அமைந்த பாடல்கள் பதினெட்டுத் துறைகளாக வகைப்படுத்தி ஆராயப்பட்டுள்ளன. 'நாளது சின்மையும் இளமையது அருமையும் கூறிச் செலவழுங்குதல்' துறையிலமைந்த நற் -205ஆம் பாடல் 'செலவழுங்குதல், செலவழுங்குவித்தல்' என்ற இரு துறைகளுக்கும் பொருத்தமாக அமைந்துள்ளது. துயர் கூறிச் செலவழுங்குதல் துறையில் தலைவியின் துயர் எண்ணியும், அதனால் தனக்கு ஏற்படும் துயர் எண்ணியும் என இருவேறு நிலைகளில் தலைவன் செலவழுங்கியது ஆராயப்பட்டுள்ளது.

'புலவி - ஊடல் - துனி' என்னும் மூன்றும் உணர்வுகளும் ஊடலின் தொடக்கநிலை – வளர்நிலை – முதிர்நிலைகளாகும். ஏனெனில் இம்மூன்றும்

‘ஊடல்’ பொருண்மைக்குள் அமைத்து ஆராயப்பட்டுள்ளன. இவ்வூடல் பொருண்மையில் தலைவன் கூற்றுப் பாடல்களாக எட்டுப் பாடல்கள் ஆராயப்பட்டுள்ளன. **வாயில் மறுத்தலில்** நிகழ்ந்தது நினைத்தல் முதலாக ஐந்து உட்துறைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. ‘வாயில் மறுத்தல்’ துறையில் அமைந்த அகநா -86ஆம் பாடல் இரு துறைக்குறிப்புகளுக்கும் பொருத்தமாக அமைவது விவரித்து மொழியப்பட்டுள்ளது. **ஊடல் நீடல்** துறையிலமைந்த நற் -370ஆம் பாடலின் இரு துறைக்குறிப்பையும் ஒன்றாக்கி,‘இ∴து ஊடல் நீட ஆற்றானாய் நின்றான் முன்னிகழ்ந்ததனைப் பாணற்குச் சொல்லியது’ என்று ஔவைசு.துரைசாமிப் பிள்ளையின் மாற்றத்திற்கேற்ப பாடலின் பொருண்மை அமைந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது. அதேபோல் அகநா -126ஆம் பாடலுக்கு ‘உணர்ப்புவயின் வாரா ஊடல், அல்லகுறி, பின்னிற்றல்’ என்ற மூன்று துறைகளுக்குரிய துறைக்குறிப்புகள் அமைந்திருந்தன. இப்பாடலுக்கு முதல் குறிப்பான ‘உணர்ப்புவயின் வாரா ஊடல்’ துறையின் பொருண்மையுடன் ஒன்றியுள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது.

**தலைவி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை** என்னும் மூன்றாமியலில், தலைவி கூற்றிலமைந்த களவுப் பாடல்களுக்கு 78 துறைகளும், கற்புப் பாடல்களுக்கு 29 துறைகளும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. தலைவியின் கூற்றுக்கள் பின்னிற்றலில் தொடங்குகின்றன. இப்பின்னிற்றலில் அமைந்த மூன்று பாடல்களும் **குறைநயந்தமை** துறையில் அமைகின்றன. தொல்காப்பியர் குறிப்பிடாத இத்துறை ‘உய்த்துணருந் துறை’யாக ஆராயப்பட்டுள்ளது. சேட்படுத்துதல் துறையிலமைந்த ஒரு பாடலைத் **‘தையல் மறுத்தல்’** உட்துறையில், தலைவனின் தழுவலைக் காட்டிலும், அவன் நினைப்பில் எம்முதுகினைக் எம் கையால் சுற்றிக் கொள்ளும் இன்பம் இனிதாயிருக்கிறது’ எனத் தலைவியின் மொழிகள் துறையினை விளக்குவது ஆராயப்பட்டுள்ளது.

இருவகைக் குறியில் நாற்பத்தாறு பாடல்கள் ‘பகற்குறி, இரவுக்குறி, சிறைப்புறம், அல்லகுறி’ என்னும் நான்கு பெரும்பிரிவுகளாகப் பகுத்து, அவற்றின் இருபத்தொன்பது உட்துறைகளில் சில ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.அல்லகுறியிலமைந்த ஐங்குறு -272ஆம் பாடல்,‘என் பிழைப்பன்று என்று தலைவி நோதல்’ துறையில் அமைந்தமையும், இப்பாடலின் துறைக்குறிப்பில் ‘அல்லகுறிப்பட்டு நீங்கும் தலைமகன் சிறைப்புறத்தானாக,

முன்னைநாள் நிகழ்ந்ததனைத் தோழிக்குக் கூறுவாள் போன்று தலைமகள் சொல்லியது'என்றமைந்த துறைக்குறிப்பு, பாடலின் பொருண்மைக்கேற்ப 'அல்லகுறிப்பட்டு நீங்கிய தலைமகன் ..' என மாற்றியமைக்கப்பட்டமையும், அதன் காரணங்களும் மொழியப்பட்டுள்ளன.

வரைவு நீடல் துறையிலமைந்த 'அவன் வரவே தன் ஆற்றாமைக்குக் காரணமெனல்' என்னும் உட்துறையில் குறுந் -153ஆம் பாடல் துறைக்குறிப்பின் முற்பகுதி, தோழியின் வினாவிற்கு தலைவி பதிலுரைப்பதுபோல் அமைந்ததும் பிற்பாதி பாடலின் பொருண்மையைச் சுட்டுவதும் குறிப்பிடப்பட்டுள்ளது. வரைவிடை வைத்துப்பிரிவுத் துறையில் 'தலைவி யிரங்கல்' உட்துறையில் குறுந் -315ஆம் பாடலில் தலைவி ஆற்றியிருந்தாலும்,'ஞாயிறு அனையன் தோழி' எனத் தலைவி, தலைவனைப் பெருமைப்படுத்தியதால் வரைவிடைப்பிரிவாக அமைந்துள்ளமை நோக்கப்பட்டுள்ளது.

உடன்போக்குச் சூழலில் அமைந்த ஏழு உட்துறைகளில்,'தமர் வந்துற்றவழி உதவிய மலையை வாழ்த்திக் கூறும்' உட்துறையில் ஐங்குறு -312ஆம் பாடலில் தலைவி தன் கற்பறம் பேணலொடு, தலைவனின் போராண்மையினையும் விதந்தோதும்விதமாகத் தோழியிடம் கூறும் தன்மையுடன் துறையைச் சுட்டுவதையும், தன் துன்பங்கண்டு வருந்தும் தோழியின் பரிவு பிறர்க்குப் புலனாகினால் அவர்களுக்குத் துன்பம் விளைவிக்கும் என அஞ்சுந் தலைவியின் கனிவுள்ளமும் இ துறைக்குறிப்புவழி ஆராயப்பட்டுள்ளன.

தலைவியின் ஊடலுக்குக் காரணமாக அமைபவள் பரத்தை, இவ்வூடல் பொருண்மையில், பரத்தையர் தம் எண்ணப்போக்குகளை வெளிப்படுத்தும் பாடல்களின் துறைக்குறிப்புகளும், வாயில் வேண்டல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயில் நேர்வித்தல், வாயிற் புகுதல் போன்ற துறைகளில் அமைந்த பாடல்கள் வகைப்படுத்தப்பட்டிருக்கின்றன. வாயில்புகுதல் இலக்கணங்களில் சுட்டப்படாததாகும்.

பிரிவுப் பொருண்மையிலமைந்த 'செல்வார் அல்லர்' என்றுயான் இகழ்ந்தனனே'(குறுந் -43:1),'நசைநனி கொன்றோர்'(ஐங்குறு -318:3) என்னுந் தலைவியின் மொழிதனில், தலைவன் செலவு சொல்லாது பிரிந்தமை என்பது புலப்பட்டு துறையின் பொருண்மையைச் சுட்டுதல் ஆராயப் பெற்றுள்ளன. 'செயல்படு

மனத்தர் செய்பொருட்கு அகல்வர், ஆடவர் அதுவதன் பண்பே'(நற் -24:8-9)' எனத் தலைவன் பிரிவிற்கு மகிழும் தலைவியின் உணர்வு வெளிப்படும் 'பிரிந்தவழி மகிழ்தல்' துறையும் நோக்கப்பட்டுள்ளது.

மீட்சித் துறையில், தலைவனின் வருகைக்காகக் காத்திருக்கும் தலைவியின் உணர்வு வெளிப்படுத்தப்படுகிறது. 'நீ கண்டனையோ கண்டார்க் கேட்டனையோ' (குறுந் -75) எனக் குறுந்தொகைத் தலைவி கூறும்வழி 'வரவுணர்த்தியாற்கு உரைத்தல்' துறை புலப்படுத்துவது நோக்கப்பட்டுள்ளது. இப்பாடலில் கூறுவோர் தலைவியாக இருக்க, கேட்போராக 'உழையர், தோழி'எனப் பூரணரும் இனியரும் உரைக்க, துறையாசிரியர்கள் 'பாணர்' என உரைத்தமை தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

வாயில் மறுத்தல் துறையில் சமூகக் கடமையாற்றப் பிரிந்த தலைவன் சார்பாக வாயிலாய் வந்த பாணனுக்குத் தன் ஆற்றாமை கூறி வாயில்மறுக்கும் உட்துறையும், கருவுறுங் காலஞ்சுட்டி வாயில் வேண்டிய தோழியிடம், தன் களவுகாலப் பைஞ்சாய்ப் பாவையே போதும், தனக்கு வேறு மகப்பேறு வேண்டாமெனக் கூறும் உட்துறையும் நோக்கப்பட்டுள்ளன.

**தோழி கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை** என்னும் நான்காமியலில், தோழி கூற்றிலமைந்த களவுப் பாடல்கள் 150 துறைகளாகவும், கற்புப்பாடல்கள் 65 துறைகளாகவும் வகைப்படுத்தப்பட்டுள்ளன. தோழியால் கூட்டப்படும் கூட்டம் தோழியிற் கூட்டம் என்றாதலினும், களவொழுக்கத்தை மறைத்த தலைவியிடம் தான் அறிந்து கொண்டதைத் தோழி விளம்பல் 'களவறிதல்' துறையில் நோக்கப்பட்டுள்ளது. மதியுடன்பாட்டுத் துறையிலமைந்த 'இறைவனை நகுதல்' என்னும் உட்துறையில் எம் தலைவியைக் கண்டவரே துன்புறுவர். நீயோ அவள் தோளை அடைந்தனை. நின் துன்பத்திற்கு நீயே காரணம் எனத் தோழி நகைப்பது துறைப் பொருத்தத்திற்குக் காரணமாக அமைந்ததும் ஆராயப்பட்டுள்ளது.

சேட்படுத்துதல் முதன்மைத் துறையிலமைந்த 'பெருமையிற் பெயர்த்தல்' வழிநிலைத் துறையில், நற் -45 ஆம் பாடலில் பொ.வே.சோமசுந்தரனார் 3, 4 ஆம் பாடலடிகளிலும், துறைக்குறிப்பிலும் சிறு மாற்றங்களைச் செய்து துறையை விளக்கியுள்ளமை ஆய்வில் எடுத்துரைக்கப் பெற்றுள்ளது. 'தலைவியின் அருமை உள்ளல்' துறையிலமைந்த நற் -301 ஆம் பாடற்கு ஔவை.சு.துரைச்சாமிப்பிள்ளை

உள்ளிட்ட உரையாசிரியர்களின் உரையிலும் துறைக்குறிப்பிலும் காணப்படும் மாற்றங்களை மொழிந்து, அவை மாறுபடினும் துறையின் பொருண்மை மாறாது அமைந்துள்ளமை குறிப்பிடப்பட்டுள்ளது.

பகற்குறியில் அமைந்த. 'ஏகிடு கிளவி'த் துறையிலமைந்த நற் -58 ஆம் பாடலில் தலைவன் துயரங்கொள்ளாமல் தம்முடன் இருக்க வேண்டும் எனத் தோழி மொழிவதன்வழி துறை புலப்படுவது எடுத்துரைக்கப்பெற்றுள்ளது இரவுக்குறியிலமைந்த பதினெட்டுத் துறைகளில் ஆறு துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. 'வரைவது கிளத்தல்' துறையில் அகநா -10ஆம் பாடலுக்குப் பழைய உரைகாரர் குறிப்பிடும் உள்ளுறையை ஒப்ப நோக்கி துறைப்பொருண்மம் சுட்டப்பட்டுள்ளது.

'ஒருவழித்தணத்தல்' என்னும் முதன்மைத் துறை வரைவுக்குப் பின் நிகழ்தலும் அத்துறை நிகழும் காலம், களவுக்குரிய தலைவியை வருத்தும் பொருண்மைகளிலமைந்த நிகழ்வுகளாகிய குறியிடையீடு, அம்பல், அலர், இற்செறிப்பு, வெறியாட்டு முதலிய துறைகள் நிகழ்வதற்கு ஏதுவான காலங்கள் என்பதும் சுட்டப்பட்டுள்ளது. இவ்வொருவழித்தணத்தல் துறையில் ஐங்குறு -233 ஆம் பாடல் நேரடியாகச் சுட்டுதலையும், ஐங்குறு -297 ஆம் பாடல் குறிப்பாகச் சுட்டுதலும் நோக்கப்பட்டுள்ளன.

. 'வரைவுகடாதல்' என்னும் முதன்மைத் துறை தோழிக்கே உரித்தான துறை. இத்துறைகளில் தோழியின் வரைவு நோக்கம், தலைவனை வரைவு தூண்டச் செய்துள்ளமை நோக்கப்பட்டுள்ளன. 'அறத்தொடுநிற்றல்' முதன்மைத் துறையில் வகைப்படுத்தப்பட்ட இருபது வழிநிலைத் துறைகளில் மூன்று துறைகள் ஆய்வுக்குட்படுத்தப்பட்டுள்ளன. தலைவன் வரைவுடன் வருவதற்கு முன்பே தான் அறத்தொடு நின்றதைத் தோழி உரைக்கும்(குறுந் -374) அறத்தொடு நின்றமை கூறல் வழிநிலைத் துறையும், உடன்போக்குத் துறையில் 'கற்பொடு புணர்ந்த கவ்வை' துறையிலமைந்த குறுந் -15 ஆம் பாடல் தலைவியின் தோழி நோக்கிலும், தாயின் தோழியின் நோக்கிலும் 'தோழி' என்னுஞ் சொல் ஆராயப்பட்டுள்ளது.

மலிவு பொருண்மையில், மணநாளின்போது தலைவன், தலைவிக்கு மலர் சூட்டும் நிகழ்வு கண்டு மகிழ்ந்த தோழி தலைவனை வாழ்த்துதல், பள்ளியிடத்து இனிதே இன்புறக் கூறல் போன்றவை ஆராயப்பட்டுள்ளன. 'ஊடல்' என்னும் முதன்மைத் துறையில் ஐந்து பாக்களை தனியே ஆராய்ந்து,'வாயில் வேண்டல்,

வாயில் மறுத்தல், வாயில் நேர்தல், வாயில் நேர்வித்தல், வாயில் புகுதல்' போன்ற வழிநிலைத் துறைகளாக வகைப்படுத்தப்பட்டு, அவற்றின் உட்துறைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. 'வாயில் வேண்டல்' துறையில் தலைவனின் புறத்தொழுக்கத்தைச் சுட்டியுரைத்தே, அவனிடம் தோழி வாயில் வேண்டுவதும், . 'வாயில் புகுதல்' துறையிலமைந்த குறுந் -359 ஆம் பாடல் நோக்கப்பட்டுள்ளது.

பிரிவுப் பொருண்மையில், தோழி, தலைவியரின் உடன்பாடு பெற்று பிரிந்த நிலையிலும், தலைவி ஆற்றாமை கொள்ளுவதும், தலைவன் பிரிந்த நிலையில் நம்மை நினைவில் கொள்வாரோ? என ஏங்கும் தலைவி உணர்வைத் தோழி வெளிப்படுத்துவதும், மீண்டனன் எனத் தோழியுரைத்தலும், மீண்டபின் இனிதிருப்பதை எண்ணி மகிழ்தலுமாகிய துறைகளும் ஆராயப்பட்டுள்ளன.

**மேலாய்வுக் களங்கள்**

1. தலைவன், தலைவி, தோழி அல்லாத பிறமாந்தர் கூற்று துறைக்குறிப்புவழிப் பாடற்பொருண்மை.
2. நடையியல் நோக்கில் துறைக்குறிப்புகள்.
3. அக இலக்கணங்களும் துறைக்குறிப்புகளும்.
4. துறையாசிரியர்களின்அக இலக்கணக் கோட்பாடு.